# நட்சத்திர சிந்தாமணி

## பாகம் I




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 451

# நட்சத்திர சிந்தாமணி

*(முதல் பாகம்)*

**அசுவினி** *முதல்* **பூரம்** *முடிய*

**பன்மொழிப்புலவர், ஜோதிஷ பானு, பேராசிரியர்**
**டாக்டர். புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார்.,**
*சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்,*
*சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.*




*தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்*

**சரசுவதி மகால் நூலகம்,**

**தஞ்சாவூர்.**

2007 ] [ விலை : ரூ. 200-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | நட்சத்திர சிந்தாமணி (முதல் பாகம்) |
| பதிப்பாசிரியர் | | டாக்டர் புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : | 451 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2007 |
| தாள் | : | TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : | 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : | 512 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : | லேமினேசன் அட்டை |
| பொருள் | : | சோதிடம் |
| விலை | : | ரூ.200-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் அறிவாலயம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூலமாகவும், பன்மொழி நூற்களஞ்சியமாகவும், பன்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது.

இந்நூலகத்தைத் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிற நாட்டினரும் பயன்படுத்தி வருகின்றனர். முன்னைப் பழம்பொருட்டும் முன்னைப் பழம் பொருளாய் பின்னை புதுமைக்கும் புதுமையாய் உள்ள அத்துணை பொருண்மைச் சுவடிகளையும் பதிப்பித்து தமிழ் கூறும் நல்லுகிற்கு நூல்களை அளித்து வருகிறது இந்நூலகம்.

உலகில் காலத்தில் மழைபெய்து நலம் ஏற்படுவதற்காக யாகங்களையும், அறச்செயல்களையும், துதிகளையும் செய்யவேண்டும் என்பதை போதிப்பதற் காகவே வேதங்கள் ஏற்பட்டன என்பதும் அந்த யாகங்களையும், அறச்செயல் களையும் செய்வதற்கான நல்ல சோதிட சாஸ்திரம் ஒன்றுதான் நிர்ணயித்து கூறிவருகிறது என்பதும் நம் முன்னோர்களின் நம்பிக்கையாகும். எனவேதான் இதனை வேதத்தின் அங்கமாக சான்றோர்கள் கூறுவர்.

மேலும் நமது முன்னோர்கள் வானியலில் ஏற்படும் கிரகங்களின் அமைப்பைக்கொண்டு மனிதவர்க்கத்தின் எதிர்காலம் பற்றி அறிந்து கூறும் ஆற்றலைப் பெற்றிருந்தனர். மனித சமுதாயத்தின் ஏற்ற தாழ்வுகளை அவர்களது ஜாதகங்களைக் கொண்டு அளவிட்டுக் கூறுவது இதன் முக்கியப் பிரிவாகும்.

"முன்னது விதி, பின்னது அதை வெல்லும் மதி" என்ற கூற்றுக்கிணங்க தம் நுண்ணுடல் மூலம் வெளிச்சென்று

நுண்ணறிவால் இக்கோள்களைப் பற்றிய தெளிவான திட்டங்களை அணுகி அறிந்து ஆய்ந்து நம் முன்னோர்கள் கோளியல் நூலாக (சோதிட சாஸ்திரமாக) படைத்தளித்தனர். இதனால் கோள்களின் தீய பாதிப்புகள் தொல்லை தராத வண்ணம் மனிதன் தன் வாழ்க்கையை விழிப்புடன் துன்பமின்றி அமைத்துக்கொள்ள இயலும் என்பதும் நம்பிக்கைக்குரியதாகும்.

இப்படிப்பட்ட அரிய பல செய்திகளடங்கிய சுவடிகள் சரசுவதி மகால் நூலகத்தில், மரணகண்டிகை, நட்சத்திர சூடாமணி, நட்சத்திரமாலை, நட்சத்திர பாத பலன், நட்சத்திர நிகண்டு ஆகிய தலைப்புகளில் பதிவாகியுள்ளன. இவற்றின்கண் அமைந்துள்ள கருத்துக்களை ஒருங்கே தொகுத்து நட்சத்திர சிந்தாமணி என்னும் பெயரில் விளக்க உரைகளையும் தந்து முதல் பகுதியை (அசுவினி முதல் பூரம் முடிய) நமது நூலக சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியரும் புலவர் ஜோதிஷ பானு பேராசிரியருமான முனைவர் புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார் அவர்கள் பதிப்பித்து வழங்கியுள்ளார். இது தற்பொழுது இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், இந்நூல் நல்ல முறையில் வெளிவர ஆவன செய்த நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் அச்சில் வெளிவர, கணினி பிரிவில் பணிபுரிந்துவரும் அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்.
*18-3-2007*

**சா. விஜயராஜ் குமார்**, இ. ஆ. ப.,
*மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் இயக்குநர்,*
சரசுவதி மகால் நூலகம்.

# ஆசிரியர் முன்னுரை

நட்சத்திர சிந்தாமணி என்ற இப்பெரு நூல் எனது பஞ்சபட்சி நூற்கோவை என்ற நூலை அடுத்து இரண்டாவதாக இப்பொழுது சரசுவதி மகால் நூலக வாயிலாக வருகின்றது. நட்சத்திரங்களைப் பற்றி அறியாதவர் இலர். இவை மனித வாழ்க்கையில் ஒவ்வொரு பகுதியோடும் பின்னிப் பிணைந்துள்ளது. நாளும் கோளும் செய்வதை நல்லோர் செய்யார் என்பதில் நாள் என்பது நட்சத்திரத்தையே குறிக்கும். வானமண்டலத்தில் ஆயிரக்கணக்கான, கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்பது கோள்களும் செல்லும் பரப்பளவில் அசைவின்றி பதிந்துள்ள 27 தொகுதிகளான நட்சத்திரக் கூட்டங்கள் அசுவினி முதல் ரேவதி ஈறாகப் பெயரிடப்பட்டுள்ளன.

வேதங்களில் முதலில் ராசி மண்டலம் இனம் காணப்படவில்லை. இந்த நட்சத்திரங்களே முக்கியமாக வேள்வி போன்ற சடங்குகளுக்கு பயன்படுத்தப்பட்டன. நட்சத்திரம் என்ற சொல் அழியாதது என்ற பொருளைக் குறிக்கும். ஒவ்வொரு நட்சத்திரமும் 800கலைகளைக் கொண்ட பகுதியில் ராசி மண்டலத்தில் பரவி உள்ளது. இவற்றுள் ஒவ்வொரு மூன்று ராசிகளிலும் 9 நட்சத்திரங்கள் வீதம் 12 ராசிகளிலும் விரவி உள்ளன. வேதகால விற்பன்னர்கள் ஏறக்குறைய கி. மு. 5500 முதல் கி.மு. 4000 வரை இடைப்பட்ட காலத்தில் இந்த நட்சத்திரங்களை இனங்கண்டு பெயரிட்டு பயன்படுத்தி வந்தனர். அப்பொழுது கிருத்திகை நட்சத்திரத்தை முதலாகக்கொண்ட ராசி மண்டலம் கணக்கிடப்பட்டது. வேதத்தின் பிரிவான மைத்திரிய பிரமாணம் காலம் முதற்கொண்டு ராசி மண்டலம் அசுவினி முதலாகக் கொண்டு ஏறக்குறைய கி.மு. 276 முதல் கி.மு. 285 வரை உள்ள காலத்தில் கணக்கிடப்பட்டது.

வேதங்களிலேயே கிருஷ்ண யஜுர் வேதத்தில் 4-வது பிரசனத்தில் வேதம் 4-வது காண்டம். 4-வது பிரசனத்தில் இந்த

நட்சத்திரங்களைப் பற்றிய விவரங்கள் காணக்கிடைக்கின்றன. நமது புராண - வேத பின்னணியில் இந்த 27 நட்சத்திரங்களும் சந்திரனின் 27 மனைவியராக வருணிக்கப்படுகின்றன. சந்திரன் இந்த 27 நட்சத்திரங்களும் ஒருமுறை வலம் வரும் காலம் சந்திரமான மாதமாகக் கருதப்படுகிறது. இந்த மாதங்களில் ஒவ்வொரு மாதத்திலும் பௌர்ணமியில் சந்திரன் கடக்கும் நட்சத்திரத்தின் பெயரில் சந்திரமான மாதங்கள் பெயரிடப்பட்டுள்ளன. கீழே உள்ள பட்டியலைக் கவனிக்கவும்.

| பௌர்ணமியில் சந்திரன் | சந்திரமான மாதத்தின் பெயர் |
|---|---|
| 1. சித்திரை | 1. சித்திரை |
| 2. விசாகம் | 2. வைகாசி |
| 3. அனுசம் | 3. ஆனி |
| 4. கேட்டை | 4. ஆடி |
| 5. பூராடம் | 5. ஆவணி |
| 6. திருவோணம் | 6. புரட்டாசி |
| 7. பூரட்டாதி | 7. ஐப்பசி |
| 8. அசுவினி | 8. கார்த்திகை |
| 9. கிருத்திகை | 9. மார்கழி |
| 10. திருவாதிரை | 10. தை |
| 11. மகம் | 11. மாசி |
| 12. பூரம் | 12. பங்குனி |

பெரும்பாலும் உத்திரத்திலேயே பங்குனி மாதத்தில் பௌர்ணமி ஏற்படுகிறது.

இந்த நட்சத்திரங்களின் பெயர்கள் அவற்றுக்கு வானியலில் ஏற்பட்ட ஆங்கிலப் பெயர்கள் நட்சத்திரங்களின் பொருள், அவை ராசி மண்டலத்தில் பரவி உள்ள பரப்பு இன்னும் பல செய்திகளும் என்னுடைய ஆங்கில நூல் முகத்தில் காட்டியுள்ளேன். மனித வாழ்வில் இந்த நட்சத்திரங்கள் மிகவும் ஐக்கியமாய் உள்ளன. மனை நூல் முதலியவற்றிலும் இவைகளின் ஆட்சி உண்டு. நாள் பார்த்தல்

என்றாலே நட்சத்திரத்தை முதலாகக்கொண்டு பார்த்தல் என்றே பொருள். நட்சத்திரத்தைக்கொண்ட பழமொழிகள் தமிழில் மிக உண்டு. தமிழ் இலக்கியங்களிலும் மிகவும் பழங்காலந்தொட்டு இவைகள் குறிக்கப்படுகின்றன.

தொல்காப்பியத்தில் 27 நட்சத்திரங்களின் பெயர்களும் சொல்லின் இறுதி எழுத்து வகையில் எண்ணி அவற்றோடு பிறசொற்கள் சேரும்பொழுது ஏற்படும் மாறுதலுக்கு புணர்ச்சி விதியே கூறப்பட்டுள்ளது. இன்னும் தொல்காப்பியம், புறத்திணையியல், சிலப்பதிகாரம் கண்ணகி கோவலன் திருமணத்தின் போதும் இன்னும் அவர்கள் மதுரை புறப்பட்டபோதும், அவர்கள் மதுரையை நோக்கி சென்ற நாள் முதலியவை பற்றியும் கூறும்போது நட்சத்திரங்கள் குறிக்கப்படுகின்றன. இன்னும் இது போன்ற விரிவான செய்திகளை என்னுடைய தோற்றுவாய் பகுதியில் காணலாம்.

நட்சத்திரங்கள் தொல்காப்பியத்திலேயே குறிப்பிடப் பட்டதால் தொல்காப்பியத்தின் காலமான கி.மு. 3000 ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர் கணிப்பு நூல்களில் இவை கையாளப்பட்டுள்ளதை அறியலாம். இந்தக் காலமே ஏறக்குறைய வேதகாலத்தோடு சமமாக வருவதால் அதுவும் இந்தக் காலத்தோடு ஒத்துள்ளதைக் காண்க. (எமது ஆங்கில நூன்முகத்தைப் பார்க்கவும்.)

பஞ்சபட்சியை அடுத்து திரு. அ. பஞ்சநாதன் அவர்கள் சரநூல் மேற்கொள்ளும்படி என்னை வேண்டினார். அதற்கு வாசிநூல் மற்றும் யோக செயல்முறை ஞானம் வேண்டி இருந்ததால் இன்னும் அத்துறையில் உள்ள நான் மேற்கொண்டு அனுபவமும் ஞானம் பெறுவதற்காக அடுத்து சிறிது காலம் தள்ளி அதை செய்வதாகக் கூறியபோது நட்சத்திர சிந்தாமணியை இயற்றும்படி வேண்டினார். இதற்கு நான் ஆதாரமாகக் கொண்ட சுவடிகள், இதர நூல்கள் மற்றும் பிற மொழி நூல்களில் இருந்து திரட்டிய செய்திகள் முதலியவை

என்னுடைய தோற்றுவாய் ஆராய்ச்சி உரையில் கொடுக்கப் பட்டுள்ளன. மிகவும் சிறிதாகத் தொடங்கிய இப்பணி, முடிந்த நிலையில் 1200 பக்கங்கள் கொண்ட கையெழுத்துப் பிரதியாக இப்பொழுது விசுவரூபம் எடுத்துள்ளது. இதை அறியும்பொழுது ஒருபக்கம் எனக்கு மகிழ்ச்சியும், வியப்பாகவும் இருக்கின்றது. ஏறக்குறைய ஏழு ஆண்டுக் காலமாக இந்தப் பணி நடந்து முடிந்துள்ளது.

மகாலின் சுவடிகள் மூலம் கிடைத்தச் செய்திகள் மிகவும் குறைவே. ஆங்கிலம், தமிழ், வடமொழி, இந்தி, மராத்தி, தெலுங்கு மற்றும் கேரளநூல் செய்திகள் இவற்றை யெல்லாம் பல ஆதாரங்களிலும், நூல்களில் இருந்தும் திரட்டி இதை ஒரு நட்சத்திரக் கலைக்களஞ்சியம் ஆகவே உருவாக்கியுள்ளேன். இதற்கு நான் ஏற்றுக்கொண்ட உழைப்பு மிகவும் பெரிது.

இத்துணை உழைப்புடன் நான் இதை உருவாக்க அவ்வப்பொழுது எனக்கு ஊக்கம் காட்டி தூண்டுதல் அளித்து வந்த சரசுவதி மகால் நூலக பதிப்பு மேலாளர் திரு. அ.பஞ்சநாதன் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டுள்ளேன். அவருக்கு என் நன்றி உரித்தாகும்.

தற்போதுள்ள நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களும், எனக்கு இந்தப் பணியில் ஆர்வம் கொள்ளச்செய்து வந்தார். அவருக்கும் என் நன்றி உரித்தாகும். எனக்கு ஞானச்சுடர் விளக்கேற்றியவரும், தமிழ் சோதிட நூல் போதகரும் ஆக இருந்து இந்த அளவுக்கு என் தகுதியை உயர்த்தி வந்த எனது ஆசான் காலம் சென்ற மகாவித்துவான் திரு. குப்புசாமி ஆச்சாரியார் அவர்கள் திருவடி நினைவுகளைத் தொழுது நினைவு கூறுகின்றேன். வாழ்க்கையில் மற்ற கவலைகள் எல்லாம் மறக்கச் செய்து என்பணி தடங்கல் இன்றி நிறைவேற, வீட்டு கவலைகளை ஏற்றுக்கொண்டு எனக்கு துணை நிற்கும் எனது வாழ்க்கை துணைவி திருமதி கௌசல்யாவிற்கு என் நன்றி

அளவிலாதது. எல்லாவற்றிற்கும் மேலாக பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியை சங்கப்புலவர் வழிபடு தெய்வம் என்தாய் சித்தர்களின் வாலை திருவடி நிரைகளை நான் எப்பொழுதும் நினைவில் இருத்தி அவள் அருளால் இப்பணி நிறைவு பெற்றதை எண்ணி பெருமகிழ்வு கொள்கின்றேன்.

பழங்கால நூல்கள் தற்கால நூல்கள் ஆக பல மொழிகளில் நூல்களில் இருந்தும் செய்திகள் எனக்கு உதவின. அன்று முதல் இன்று வரை வாழ்ந்தும், வாழ்ந்துகொண்டு இருக்கின்றன. அத்தகைய நூல் ஆசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியும் வணக்கமும் உரித்தாகும்.

பஞ்சபட்சியைப் போலவே இந்த நூலையும் தமிழ்கூறும் நல் உலகம் மகிழ்ச்சியுடன் வரவேற்கும் என்று நம்புகிறேன். பண்பட்ட அளவுக்கு எனக்கு மன நிறைவு ஏற்படும், இந்த நூலில் சில பல செய்திகள் நல்லவை முதலியவை என் ஞானாசிரியரையும், சான்றோர்களையும் சாரும். ஏனைய பிழைகள் குறைகள் இருப்பின் அவை என்னைச் சாரும்.

***குற்றங்களை நீக்கி குறைப் பெய்து வாசித்தல்***
***கற்றறிந்த நூலார் கடன்***

உழுவலன்பன், பன்மொழிப்புலவர்,
ஜோதிஷபானு, வாஸ்து சாஸ்திர
மார்த்தாண்ட மந்திரமூர்த்தி,
பேராசிரியர் டாக்டர்
**புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார்**



# மதிப்புரை

Jyotisha Booshanam-Balajosiyar
**Vidwan V. Lakshmanan,**
National Vice President,
Indian Council of Astrological Sciences,
Editor, Balajothidam-Enngel.

1/5, Reddy Kuppam, Road,
West Mambalam,
Chennai - 600 033,
Phone: 4850043,
Telefax: 00-91-44-4850043.

***சாமி. சிவஞானம்***, எம். ஏ.,
நிருவாக அலுவலர்,
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

அன்புடையீர்,

வணக்கம்.

பொருள்: டாக்டர் புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார் இயற்றிய நட்சத்திர சிந்தாமணி

பதிப்பாசிரியர் டாக்டர் புலிப்பாணி சுந்தர வரதாச்சாரியார் பதிப்பித்த நட்சத்திர சிந்தாமணி என்ற நூலின் தட்டெழுத்துப்படியை முழுவதும் கருத்தூன்றிப் படித்துப் பார்த்தேன். எனக்குத் தெரிந்த வரையில் என்னுடைய 60ஆண்டு அனுபவத்தில் இப்படி ஒரு பெருநூலை நான் பார்த்ததே இல்லை. இதை இவர் பெரிதும் உழைத்து உருவாக்கியிருக்கிறார். இதில் இவர் மிகப் பல விஷயங்களைச் சொல்லியிருக்கிறார். முக்கியமாக,

1. 27 நட்சத்திரங்களைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் ஒரே இடத்தில் அறியமுடிகிறது.

2. 27 நட்சத்திரங்களிலும் பிறந்த ஆண், பெண் பாலாரின் தனித்தனிப் பலன்கள், குணங்கள், ஆரோக்கியம், தொழில், ஏற்படும் கண்டங்கள், ஆயுள் பரிமாணம் முதலியன.

3. நட்சத்திர பாதங்களில் பிறந்த இருபாலாரின் மேற்கண்ட பலன்கள்.

4. நட்சத்திரங்களில் பிறந்த பெண்களைப் பற்றி இப்பொழுது அச்சிலில்லாத மிகப் பழைய கொக்கோக நூல்களிலிருந்து பலன்களைச் சொல்லியிருக்கிறார்.

5. நட்சத்திரங்களின் பாதங்களில் கிரகங்கள் நின்ற பலன். அவற்றை மற்ற கோள்கள் பார்த்த பலன் முதலியவை.

6. சிறப்பாக நட்சத்திரங்களின் ஒவ்வொரு பாதங்களில் பிறந்தவர்களின் காலச்சக்கர தசை வகை, பரமாயுள், நோய்கள், கண்டங்கள் முதலியவை.

7. 27 நட்சத்திரங்களில் ஒவ்வொரு பாதத்திலும் பிறந்தவர்களின் முன் செய்த பாவம், இப்பிறவியில் அனுபவிக்கும் துன்பங்கள், அவற்றிற்குப் பரிகாரம் முதலியவற்றை கர்ம விபாகம் என்ற வடமொழி நூலிலிருந்து பெயர்த்துக் கொடுத்திருக்கிறார்.

8. இதுவன்றி, நட்சத்திரங்களைப் பற்றி ஏராளமான விஷயங்களை முகூர்த்தங்களுக்கு ஏற்றவை முதலியவற்றிலிருந்து, இவற்றில் தோன்றும் நோய்கள், தீரும் நாட்கள், பரிகாரங்கள் முதலியவையும் கொடுத்திருக்கிறார்.

9. பலமொழிகளில் உள்ள நட்சத்திரங்களின் பொதுப்பெயர்கள் சிறப்பாக தமிழ் நிகண்டு நூல்களில் உள்ள பலபெயர்கள் முதலியவற்றைப் பட்டியலிட்டுக் காட்டியிருக்கிறார். ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் உருவப்படங்களும் கொடுத்திருக்கிறார்.

இது புத்தகமாக வெளியிடப்படுவதற்கு எல்லா வகையிலும் தகுதி உடையதே. தமிழ்ச் சோதிடர்களுக்கும், தமிழ் பொது மக்களுக்கும் கூட இது பெரிதும் பயன்படும்.

இதை நட்சத்திர சிந்தாமணி என்று கூறுவதற்குப் பதிலாக நட்சத்திரக் கலைக்களஞ்சியம் என்று பெயரிடும் அளவுக்கு (Encyclopedia) மிகவும் விரிந்துள்ளது. ஆசிரியருக்கு இதனால் ஏற்படப்போகும் பெயரும் புகழும் ஒரு பக்கம் இருக்க. இதற்குமுன் இவர் எழுதிய மகால் வெளியிட்ட பதினெண்சித்தர்கள் பஞ்சபட்சி சாத்திரம், போன்றே தஞ்சை மகாலுக்கே பெருமை சேர்க்கக்கூடியது என்பதே உண்மை. இதை விரைவில் வெளியிட வேண்டும் என்று மகாலுக்கு நான் மகிழ்ச்சியுடன் பரிந்துரை செய்கிறேன். மேலும் இது போன்று பல நூல்களை இவர் பதிப்பித்துத் தரவேண்டுமென்று இவரை வாழ்த்துகிறேன்.

நன்றி,

இப்படிக்கு

**வித்துவான் வே. லட்சுமணன்.**



# PREEFACE

By the Guest Editor Dr. U. S. PULIPPANI

It all started like this soon after publication of my earlier book Panchapakshi Sastra Sri A. Panchanathan publication Manager, Sarasvati Mahal suggested me to take up Sara Nool, since this involves exposition of certain yogic practieces, though I am in the line, I want to gain more experience and do research in this field; so that I may give the world a satisfactory work on this subject based on both tradition and available yogic literature both in Tamil, Sanskrit and Siddha works, which I may take up soon after this one.

As such I suggested Sri A.Panchanathan I will take up a different subject which will be useful for the Astrological world. Rightly Sri A. Panchanathan prompted me to write about Nakshathras. I took up the following manuscripts of Sarasvati Mahal for consideration.

1) Marana Kandigai - Manuscript No. 1500, Ref: No. 2717. 2) Nakshtra Choodamani-Manuscript No. 850. 3)Nakshtra malai - Manuscript NKP collection No. 2294. 4)Nakshtra Pada Pala - Manuscript No./NKP collection No.2294. 5) Nakshtra Nikandu - Manuscript No.888 in Sanskrit.

Mainly the first item has been considered. This given delienations and readings for persons born of each Nakshathra Pada, Nature of persons males, born under Nakshthra, and females. This also contains longivity of persons born of each Nakshthra including the critical period and the nature of disease etc., It also indicates diseases illness met out during the time of death for each Pada and also the Thithi Nakshathra day or the

week etc., of passing away of each person born under each Nakshathra Pada. To these I have added vast information available in Tamil, Sanskrit, Hindi & Marathi regarding all the stars which I have collected with great strain and effort.

This Includes:-

1. Noman Cleature, 2. Nature of person born under each Nakshathra Pada of both Males and Females, 3. Information like Gana, Vriksha, Yoni, Pakshi, etc., for each Nakshathra. 4. Adidevata Remedial Pooja for each Nakshathra. 5. Results of planets occupying each star, results of planets occupying each Pada and reasults of these planets being aspected by other planets etc., 6. Information regarding activities that can be carried out under each Nakshthra and those should not be czrried out. Upto this forms the first part. The introductory part prior to this contains various names of each star according to Tamil Nigandu. The shape (figure) number of stars, coming under group of each stay etc.,

The second part contains misscellaneous information regarding all Nakshathras their classification, nature, gender, bad and good stars, fixed and movable stars, blind stars, blind during day and night stars, lame stars etc., under 130 headings collected from various sources spread over in the Astrological Literature available in the 4 Languages which I have already mentioned. It is for the readers to judge that how great pain and effort should have gone into this. Except the verses which have been included in this work from the manuscript numbers mentioned vide above all the other information have been culled out from hundreds of books and put into different headings by own experience. The information collected in stages was so huge that the manuscript grew to 1200 pages. Probably this is the first kind of work which will be seeing the light of the world for the first time.

Though started casually this has given me a serious follow-up of application of my own intellect at one time when the manuscript got finished I myself was taken aback wondering as to how this has taken shape. As such there is nothing wrong in calling this as an encylopedia on Nakshthra. It took almost 8 years for me to collect information and shape this monument work. Shri. A. Panchanathan has been encouraging me from time to time enquiring about the progress of the work. I thank him very much. I also thank the present Administrative Officer, Sarasvati Mahal, Shri. Sami Sivagnanam for inspiring me time and again;. I thank all the authors ancient and present from whose works much help has been taken up. I remember with reverence my Guru. Lt. Shri Kuppusamy Achari who has intiated me with Astrology as well as Devi Upasana. I also remember with affection and love my wife Smt. S. Kousalya who has been driving force behind and rendered me all help in pursuit of this work taking the burden of family on her self so that I may follow the work without any worries. I thank Shri. Vasudeven my friend. Selvi. S. Manjula my niece who wrote for me portions of the manuscripts, the latter took great effort in numbering the pages, aranging chronologically the subject matter etc.,

Now I am looking forward to take up Sara Nool. I am thankful to my divine mother Valai whose grace has given me much strength and knowledge to serve the mankind by writting such bools.

Lastly I have to thank my readers and would be readers of this book who are always behind me for giving the moral support. I conclude this preface requesting the readers to point out to me any lapes, missing links, errors etc., so that I may correct the same in the second edition.

Jyothisha Banu.
Prof. Dr. PULLIPANI SUNDARAVARADACHARIAR,
T. NAGAR, CHENNAI-600 017.

# பொருளடக்கம்





# தோற்றுவாய்

உலகின் உயிரினங்களுக்கு இயற்கையாய் ஏற்படும் பாதிப்புகளை அறிந்து அந்த இயற்கை மூலங்களைக் கொண்டே அவற்றை மீதூர்ந்து தமக்கு ஆக்கமான வகையில் அமைத்துக் கொள்வதே அறிவுடைமையாகும். பண்டைய மனிதன் இதை நன்குணர்ந்து இயற்கைக்கு இடையே வாழ்ந்து நலம்பெற்று வந்துள்ளான். ஏன் மற்ற உயிரினங்களும், இயற்கையாகவே இவ்வியற்கை அறிவைப்பெற்று மழை, புயல் வருவதை முன்கூட்டி அறிந்து காப்பான இடம் நாடிச்செல்லல், பூகம்பம் முதலியவை ஏற்படுவதை முன்னால் அறிதல் போன்றவற்றில் சிறந்து விளங்கி தம்மைக் காத்துக்கொள்கின்றன. ஆனால் அறிவியலில் விண் வெளியைத் தாவி புறக்கோள்களை எட்டிப்பிடிக்கும் அளவுக்கு முன்னேறிய இன்றைய மனிதன், இயற்கையைக் கூர்ந்து நோக்கி அதனால் ஏற்படும் பாதிப்புகளை முன்னால் அறிந்து இயற்கையையே அவற்றை நீக்கத் துணை கொள்ளத் தெரிந்துகொள்ளவில்லை. இதனாலேயே இன்று வாழ்க்கை பெரும் இன்னல்கள் கொண்டதாக உள்ளது.

இவ்வகையில் உலகின் போக்கையே இயக்கிக் கொண்டிருக்கும் இயற்கையின் போக்கைச் செயல்படுத்தும் ஒன்பது கோளும் அவை செல்லும் பன்னிரு இராசி மண்டலமும் மனிதன் வாழ்வில் பாதிப்பை ஏற்படுத்து பவையே. இராசி மண்டலத்தில் பல்வேறு கோள்களிலிருந்து மேல்நிலைக் கதிரியக்கங்களை வினாடிக்கு வினாடி வேறுபாட்டுடன் உமிழ்ந்துகொண்டிருக்கும் (Cosmic Radio Waves) இக்கோள்கள் மனிதன் தோன்றும்போது அவன் மூளையின் உள்மனப் பகுதியில் ஒரு தனிப்பட்டப் பதிவை (Imprint) ஏற்படுத்துகின்றன. இதனால் உந்தப்பட்டு அதன் போக்கிலேயே மனிதன் வாழ வேண்டியுள்ளது. இந்தப் பதிவின் குறியீட்டு வடிவமே ஒருவன் பிறவி நவக்கோள் குறிப்பாகும். (ஜாதகமாகும்)

சிந்தாமணி-ஆ

தம் நுண்ணுடல் மூலம் வெளிச்சென்று நுண்ணறிவால் இக்கோள்களைப் பற்றிய தெளிவான திட்டங்களை நுணுகி அறிந்து நம் ஆன்றோர்கள் கோளியல் நூலாக (ஜோதிட சாத்திரம்) ஆக்கிவைத்தனர். இதனால் இவற்றின் போக்கால் தன் வருங்கால இயல்பை அறிந்து அதற்கேற்ப தன் வாழ்க்கையை விழிப்புடன் துன்பமின்றி அவற்றின் தீய பாதிப்புகள் தொல்லைதரா வண்ணம் தான் வாழ்ந்து காட்டி இருக்கிறான், நம் மூதாதை மனிதன். முன்னது விதி, பின்னது அதை வெல்லும் மதி.

நவக்கோள் அவை செல்லும் இராசிகள், அவை கடக்கும் நட்சத்திரங்கள் (உடுக்கள்) இவையெல்லாம் சேர்த்து செய்யும் வேடிக்கை வித்தையே நம் விதியாகும். இவற்றில் பொதுவாக இராசி மண்டலம் பன்னிரு இராசிகளில் பரந்து நிலைகொண்ட 27 நட்சத்திரங்களைப் பற்றியும் நாம் இந்நூலில் எழுதவுள்ளோம். இவ்வகையில் வானில் எண்ணற்ற உடுக்கள் (நட்சத்திரங்கள்) இருப்பினும் அவை 12 இராசிகளிலும் ஒரு சீரான பரப்பளவில் 27 நட்சத்திரக் கூட்டங்களே பதிந்து மனிதனின் பிறப்பின் நாள் என்ற பெயிரிலேயே ஒரு தனித்தன்மையை ஏற்படுத்துகின்றன. ஒரு கூட்டத்தில் பல நட்சத்திரங்கள் இருப்பினும் அவைகள் மொத்தமாக தோற்றம், வடிவம் பெற்ற உருவத்தின்படி அவற்றை 27 தனித்தனிப் பெயர்களுடன் நட்சத்திரங்கள் என்று நாம் வழங்குகின்றோம். Galoxy எனப்படும் வான் மண்டலத்தில் ஆயிரக்கணக்கான, கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் பரவியுள்ளன. இவற்றில் கோள்கள் உலவும் பாதையில் 27 தனித்தனி நட்சத்திரக் கூட்டங்கள் நிலைபெற்றுள்ளன. இவையே அசுவினி முதல் ரேவதி வரை பெயரிட்டு எண்ணப்பட்டுள்ளன.

கோள்கள் செல்லும் சுற்றுப் பாதையே இராசி மண்டலமாகும். இது பன்னிரண்டு பகுதியாக 30 பாகை கொண்ட 360 பாகை வட்ட இயல்பான ஒவ்வொரு பகுதியும் ஒரு தனித்தன்மை வடிவம் முதலியவற்றுடன் அமைந்தவை.

கதிரவன் ஒரு நாளில் ஒரு பாகை வீதம் இந்த பகுதிகளை அல்லது ராசியை கடப்பதால் 360 பாகை கொண்ட இராசி மண்டலத்தைச் சுற்றி வருகிறான். 30 பாகை கொண்ட ஒரு இராசியை 30 நாளில் கடக்கிறான். இதனையே அளவு கோலாகக் கொண்டு ஒரு ராசியை சூரியன் கடக்க எடுத்துக் கொள்ளும் காலத்தை மாதம் என்றும், இராசி மண்டலத்தின் மொத்தமாக 12 இராசிகளையும் கடக்க எடுத்துக்கொள்ளும் காலத்தை ஆண்டு அல்லது ஒரு வருடம் என்று கொள்கிறோம். இந்த ராசி மண்டலத்தில் குறிப்பிட்ட இராசிகளை ஒவ்வொரு கோளும் தத்தம் ஆட்சிப் பொருளாகக் கொண்டுள்ளன. இருப்பினும் கோள்களும் சூரியனைப் போல் எல்லா இராசிகளையும் ஒவ்வொரு இராசியையும் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் சுற்றி வருவனவாம்.

இவற்றில் சந்திரன் சுற்றும்போது ஒரு நாளைக்கு ஒரு நட்சத்திரம் வீதம் இராசியைக் கடக்கின்றான். எனவே 27 நாட்களில் ஏறக்குறைய இராசி மண்டலத்தை ஒருமுறை வலம் வந்து விடுகின்றான். இதையும் ஒரு மாதமாகக் கொள்வர். முன்னர் சொன்ன சூரியனுடையது சௌரமான வருடம் என்றும் சந்திரன் ஒரு இராசிமண்டலத்தை 12முறை சுற்றிவரும் காலத்தை சந்திரமான வருடம் என்றும் வழங்குகின்றோம். இப்படி சுற்றும்போது சந்திரன் ஒரு நாளைக்கு ஒரு நட்சத்திரத்தைக் கடக்கும்போது சூரியன் ஒரு நாளைக்கு ஒரு பாகையைக் கடப்பான். சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் ஏற்படும் தொலைவை திதிஅல்லது சந்திரமான தேதி என்றும் கொள்ளப்படும். பொதுவாக காலத்தைக் கணிக்க சௌரமான வருடத்தையும், சந்திரமான திதியையும், முக்கியமான விரதம், பண்டிகைகள், நீத்தார் கடன் செய்யும் நாட்கள், சடங்குகள் செய்யவேண்டியவை போன்றவற்றிற்கும் கொள்ளுகின்றோம். இப்படி சூரிய சந்திரர் உமிழும், ஒளிக்கதிர் கலவையால், இந்த திதிகளுக்கு ஏற்படும் தனித்தன்மைகள் இவை எந்த எந்த காரியங்கள் செய்ய உகந்தவை போன்றவற்றை எல்லாம் விளக்கினால் நூல் விரியும். இதே போன்று ஒவ்வொரு கோளும், ஒவ்வொரு

இராசியில் இருப்பதால், கடப்பதால் ஏற்படும் விளைவுகள் போன்றவை தனித்தனியாகக் கண்டறியப்பட்டுள்ளன. ஒருவன் பிறக்கும்போது கீழ்வானில் உதயமாகும் இராசி மண்டலத்தின் பாகையை அவன் பிறக்கும் இலக்கினமாகக் கொள்வோம். அதிலிருந்து இராசிமண்டலத்தில் அந்த நேரத்தில் கோள்கள் நிலையைக் குறித்து அதையே ஜாதகமென்போம். இராசிமண்டலத்தின் 12 வீடுகளில் ஒன்று ஒவ்வொரு மனிதனுக்கும் பிறந்த அல்லது ஜென்ம லக்கினமாக அமைவதும், அன்று உதிக்கும் நட்சத்திரத்தில் சந்திரன் இருப்பான். அந்த நட்சத்திரத்தை ஜென்ம நட்சத்திரம் என்றும், சந்திரன் நின்ற இராசியை ஜென்ம இராசி என்றும். வழங்குகிறோம். இந்த இராசிமண்டலம் 12ம் லக்கினத்தி லிருந்து தொடங்கி 12 வீடுகளாகக் கணக்கிட்டு, ஒவ்வொரு வீடும் வாழ்க்கையின் இன்னின்ன பகுதியைக் குறிக்கும் என்றும் கொள்ளப்படும். இவை 1-வது இலக்கின பாவம், 2-வதை தனபாவம் என்றும், 3ம் பாவம் சகோதர பாவம் என்றும், 4ம் பாவம் வித்தை என்றும், 5ம் பாவம் புத்திர புத்தி பாவம் என்றும், சத்துரு, நோய் கடன் குறிக்கும் என்றும், 6ம் பாவம் களத்திரம் கணவன் அல்லது மனைவியைக் குறிக்கும். 7-ம் பாவம் ஆயுள் என்றும், முற்பிறவி நல்வினை என்றும், பூர்வபுண்ய பாவம் இது. 10-வது பாவம் தொழில் கர்மம் என்றும், 11-ம் பாவம் ஆதாயம் என்றும், 12-ம் பாவம் செலவு என்றும் விரய பாவம். இப்படி இவை 12-ம் வாழ்க்கை எல்லாத்துறைகளையும் உள்ளடக்கியதை அறியலாம். இதற்குமேல் இந்த பாவங்களின் அதிபர்களான கோள்கள் நின்ற வீடு, நின்ற நட்சத்திரம், இவற்றையும் பார்வை முதலியவற்றையும் கொண்டு வாழ்க்கையின் வெவ்வேறு துறைகள் நிலை பற்றி ஏற்படும் பலனை நாம் அறிகிறோம்.

பிறந்த பின் மனிதன் வளர்ச்சி அடைந்து கொண்டே இருக்கிறான். ஒவ்வொரு வினாடியும் கோள் நிலைகள் மாறிக்கொண்டே இருக்கும். அன்றாடம் ஏற்படும் விளைவுகளை விரைவுக் கோளாம் சந்திரன், பிறந்தபோது இருந்த இடத்தை மையமாகக் கொண்டு அன்றாட

கோள்நிலை அல்லது கோள் சாரத்தைக்கொண்டு அன்றாடம் தற்காலப் பலனை அறிகிறோம். இதையே கோசாரப்பலன் என்போம். முன்னது மனிதனின் (ஜாதகனின்) அடிப்படை இயல்பு. அவன் வாழ்க்கை போக்கு, தரம், ஆயுள், கல்வி, மனைவி, தன்மை, சம்பாத்தியம் போன்றவை எப்படி அமையும் என்பதைக் காட்டும். பின்னது அவை தரும் பலனைக் கூட்டுவிக்கும் என்று சொல்லலாம்.

உயிர் பிறந்த நிலையிலிருந்து மாறாது நிற்பது போல் நிற்பது இலக்கின ஜாதகமாம். ஆனால் அவன் பெற்ற சரீரம் வளர்ந்து மாற்றம் அடைந்து அன்றாட நிலையில் வாழ்வை அனுபவிப்பதை பின்னர்தான் கோசாரம் குறிப்பதாகக் கொள்ளலாம். இப்படி பலகோணங்களில் ஆய்ந்து மனிதனின் எதிர்கால நிலையை அறிய உதவுவதே ஜோதிட சாத்திரமாகும். இப்படி ஜோதிட சாத்திரத்தின் உப கூறுகளை விளக்கிக்கொண்டே போகலாம். ஆய்வு முன்னுரையே ஒரு தனி நூலாகிவிடுமாதலால் நாம் எடுத்துக்கொண்ட நூலின் தொடர்பானவற்றை இப்பொழுது சிறிது விளக்குவோம்.

கோள்கள் 9-ம் இராசி மண்டலத்தை சுற்றிவருவன, நிலைப்பன அல்ல. ஆனால் 27 நட்சத்திரங்களோ இராசிகளால் அவ்வவ்வற்றிற்குரிய பரப்பளவில் நிலை கொண்டவை. இதுவே இவ்விரண்டிற்கும் வேறுபாடாகும். ஒன்பது கோள்களும் இராசிகளில் சஞ்சரிக்கும் போது இந்த நட்சத்திரங்களிலும் சஞ்சரிப்பது இயல்பே. இராசி சஞ்சாரத்தின்படி தனிப்பலனும் நட்சத்திர சஞ்சாரத்தின்படி வேறான பலனும் ஏற்படும். இந்த 27 நட்சத்திரங்களுக்கும், 12இராசிகளுக்கும், 9 கோள்களை அதிபர்களாக தனித் தனியாகப் பகுத்து பலன் கண்டுள்ளனர் நம் சான்றோர். இந்த வகையில் 27 நட்சத்திரங்களை 12 இராசிகளில் 2¼ நட்சத்திரம் ஒரு இராசியாகப் பகுத்துள்ளனர். ஒவ்வொரு நட்சத்திரத் தையும் நான்கு பாகமாகக் கணக்கிட்டு 27 x 4 ஆக 108 பாதங்களை இராசி ஒன்றுக்கு 9 பாகமாகப் பகுத்துள்ளனர். இதேபால் 9 கோளுக்கும் 27 நட்சத்திரங்களை கோள் ஒன்றுக்கு

3 நட்சத்திரங்களை உரிமைப்படுத்தியுள்ளனர். இந்த நட்சத்திரங்களின் தனித்தன்மைகள், இராசிகளின் தனித்தன்மைகள் 9 கோளும் இந்த நட்சத்திரங்களில் சஞ்சரிக்கும் பலனில் வேறுபாடுகள், இன்னும் இது போன்ற நட்சத்திரங்களைப் பற்றிய எல்லா செய்திகளையும் தொகுத்து ஒரு ஆய்வுக் கலைக்களஞ்சியமாகவே (Encyclo-pedia) இந்த நூலை ஆக்க முயன்றுள்ளோம். நட்சத்திரங்களின் இருப்பிடம் இராசிகளாகையால் இராசிகளைப் பற்றியும் முக்கியமான செய்திகளைத் திரட்டி அளித்துள்ளோம்.

இவைகளைத் தஞ்சை சரசுவதி மகாலின் கீழ்கண்ட சுவடிகளை அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட்டுள்ளன. நட்சத்திரங்களைப் பற்றிய சுருக்கமான விளக்கமான செய்திகளைக் கூறும் "மரண கண்டிகை" என்ற பெயரில் ஒரு நூல் அச்சாகி தொன்றுதொட்டு வழங்கிவருகிறது. இதில் இராசி தன்மை, நட்சத்திர பலன், நட்சத்திர பாதபலன் இவை கூறப்பட்டுள்ளன. ஆதலால் ஒவ்வொரு இராசியின் ஒவ்வொரு பாகைக்கும் ஒரு தனித்தன்மை உண்டு. இவை நம் நூல்களில் அவ்வளவாகக் காணக்கிடைக்காமையால் மேனாட்டு பிற நூல்களிலிருந்து அச்செய்திகளையும் இதனுள் கொடுத்துள்ளோம். ஆக கீழ்க்கண்ட விஷயங்கள் இந்நூலுள் விவரிக்கப்பட்டுள்ளன.

1. இராசி சீலம் - இராசிகளுக்குரிய செய்திகள், ஒவ்வொரு பாகையின் விளக்கம் உட்பட 12 இராசிகளின் பொதுத்தன்மைகளும், அந்த 12 இராசிகளும் லக்கினமாக அமையும்போது அந்தந்த லக்கினங்களுக்கு சுபர், அசுபர், பாதகர், மாரகர், காரகர் போன்ற செய்திகளும் இணைந்து விளக்கியுள்ளோம். இது ஜோதிடர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும்.

2. நட்சத்திர பலன் - இதில் பொதுவான பலனுடன் அந்தந்த நட்சத்திரத்தின் காரகத்துவங்கள் எல்லாம் விளக்கப்படும். இதில் ஒவ்வொரு நட்சத்திரத்திலும் கோள்கள் நின்ற பலனும் கூறப்படும்.

*3.* நட்சத்திர பாதபலன் - இதில் ஒவ்வொரு நட்சத்திரத்தின் ஒவ்வொரு பாதத்தில் பிறந்தவர்கள் பொதுத்தன்மை, பலன்களுடன், நட்சத்திரத்தின் பாதத்தின் கால சக்ரதசை பற்றிய குறிப்புகள் பூர்ணாயுள், நோய், கண்டம் முதலியவையும் விளக்கப்படும்.

இனி ஒவ்வொரு இராசியிலும் 9 பாகமாகையால், இது நவாம்ச பாகையால் ஒவ்வொரு கோளும் இந்த நவாம்சங்களில் நின்ற பலன் (நவாம்ச சம்மிதை) இணைத்து விளக்கப்படும்.

*4.* இதுவன்றி ஒவ்வொரு நட்சத்திர பாதத்தில் பிறந்தவர்களின் பாவ புண்ணியங்கள், அவர்கள் அனுபவிக்கும் கர்மம், அதற்கு பரிகாரம் முதலியவை உமாமகேஸ்வர சம்வாதமாக வடமொழியில் உள்ள தன் சாரத்தை இதனுள்ளும் ஒவ்வொரு பாதத்திற்கும் விளக்கப்படும். இது வடமொழியில் கர்மவிபாகம் எனப்படும்.

*5.* மேலே சொல்லப்படாத நட்சத்திரங்களின் பிற செய்திகள் எல்லாவற்றையும் திரட்டி தனியாகத் தொகுத்து எழுதப்படும்.

நட்சத்திர பலன், நட்சத்திர பாதபலன் இவை பெரிதும் மரண கண்டிகை, நட்சத்திர சூடாமணி, நட்சத்திர மாலை போன்ற மகாலின் சுவடிகளை ஆய்ந்து அவற்றின் செய்யுட்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்படும். மற்றவை யாவும் தமிழில் உள்ள பிற நூல்கள், வடமொழி, ஹிந்தி, மராத்தி, தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் உள்ள நட்சத்திரங்களைப் பற்றிய செய்திகளையெல்லாம் நமக்கு கிடைத்தவரை 3-வது ஆய்வுத் திறனையும் கொண்டு உரிய இடத்தில் சேர்த்துள்ளோம். தஞ்சை மகால் சுவடிகளின் செய்யுட்கள் நீங்கலாக மற்றவையெல்லாம் ஆசிரியருடைய உரிமை பெற்றவை.

இவைகள் தஞ்சை சரசுவதி மகாலின் கீழ்க்கண்ட சுவடிகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன.

நட்சத்திரங்களைப் பற்றிய சுருக்கமான, ஆனால் விளக்கமான செய்திகளைக் கூறும் "மரண கண்டிகை" என்ற பெயரில் ஒரு நூல் அச்சாகித் தொன்று தொட்டு வழங்கி வருகிறது. இதில் இராசிகள் தன்மை, நட்சத்திர பலன், நட்சத்திர பாத பலன் கூறப்பட்டுள்ளன. இப்படிச் கூறும்போது ஒவ்வொரு நட்சத்திர பாதத்திற்கும் [illegible] தசை குறிப்பு, நோய், கண்டம் முதலியவை நேரும் வயது, மரணம் நேரும் திதி, பட்சம் முதலியன ஒவ்வொரு பாதத்தின் பரமாயுள் எல்லாம் சொல்லப்பட்டு, பெரும்பாலும் மரணத்தின் மூலகாரணம், ஆயுள் இவற்றைக் கூறுவதால் இது மரண கண்டிகை என்று பெயர் பெற்றது. மகாலில் இதே பெயரில் உள்ள இன்னும் சற்று விரிவான செய்திகளடங்கிய சுவடி எண். 1500 கொண்ட மரண கண்டிகை ஏட்டையும் நட்சத்திரமாலை சுவடி எண். 222 என்ற இதே போன்ற பல செய்திகள் கொண்ட ஏட்டையும் முதன்மையாகக்கொண்டு இது எழுதப்பட்டது. இதுவன்றி மற்ற சில ஏடுகளும் துணையாகக் கொள்ளப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஏட்டிற்கும் குறியீட்டு எழுத்தைக் கொடுத்து அங்கங்கே வரும் பாடல்கள் எந்த ஏட்டிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டது என்பதற்கு அங்கங்கே அடிக்குறிப்பில் காட்டியுள்ளோம். இனி பதிப்புக்கு எடுத்துக்கொண்ட சுவடிகள் விவரம் வருமாறு:

1. மரண கண்டிகை சுவடி எண். 1500 (காப்பீடு எண்.2717)

2. நட்சத்திர சூடாமணி, சுவடி எண். 850 இச்சுவடியில் பிறநூல்கள் சிலவும் இணைந்துள்ளன. இதுவும் மரண கண்டிகை போன்ற சில பல செய்திகளைக் கொண்டுள்ளது. (நட்சத்திரங்களைப்பற்றி)

3. நட்சத்திர மாலை சுவடி எண். 722. இதுவும் மேற்சொன்ன இரண்டாவது எண் சுவடி போன்றதேயாகும்.

*4. நட்சத்திர பாத பலன் சுவடி எண். N.K.R தொகுப்பு காப்பீடு எண். 2294.*

இதில் நட்சத்திரங்களுக்கு ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் ஒவ்வொரு பாதத்தில் பிறந்தவர்கள் தன்மை மட்டும் கூறப்பட்டுள்ளது. சில நட்சத்திரங்களுக்குப் பாடல்கள் இல்லை. செய்யுள் வடிவங்கள் செப்பமாக இல்லை. அவ்வாறு யாம் செப்பம் செய்தும் இல்லாதவற்றிற்கு ஜாதக அலங்காரம் போன்ற பிற நூல்களிலிருந்து இட்டு நிரப்பியும் எழுதியுள்ளோம்.

5. நட்சத்திர நிகண்டு சுவடி எண். *888.* இது வடமொழியில் உள்ள செய்யுள்களை தமிழ் எழுத்தில் எழுதி உரையுடனும் உள்ளது. இதில் நட்சத்திரங்களின் பெயர்கள் ஒரே நட்சத்திரத்திற்குள்ள வெவ்வேறு பெயர்கள், நட்சத்திர தேவதைகள், தேவதைகளுக்குரிய நட்சத்திரங்கள் போன்ற செய்திகள் தரப்பட்டுள்ளன.

இதில் பெரும்பாலும் மனையடி சாத்திரம் (வாஸ்து சாத்திரம்) பற்றிய செய்திகளே அதிகம் கூறப்பட்டுள்ளன. நம் நூலுக்குத் தேவையானவற்றை மட்டும் தனியே எடுத்து எழுதி, இதே பெயரில் தனியாகக் கொடுத்துள்ளோம்.

இது தவிர எந்தெந்தக் காரியங்களுக்கு, எந்தெந்த நட்சத்திரங்கள் உகந்தவை, காலற்ற, உடலற்ற, தலையற்ற, கண்ணற்ற, ஆண், பெண் அலி நட்சத்திரங்கள் போன்ற பலவகை நட்சத்திர இயல்புகளையும் வகைப்படுத்தி கூடியவரை நட்சத்திரங்களைப் பற்றி, முழுச்செய்திகளையும் இதனுள் கூறியுள்ளோம்.

இவ்வளவு கூறியும் இந்த நட்சத்திரங்கள் மனித வாழ்க்கையில் எப்படிப் பின்னிப் பிணைந்துள்ளன என்பதை சிறிதாவது கூறாவிட்டால் இந்த ஆய்வுரை நிறைவுராது. "நாள் பார்த்தல்" என்பது தொன்று தொட்டு வழங்கிவரும் ஒரு தொடர்மொழி. ஒரு காரியத்திற்கேற்ற நல்ல நாள், நேரத்தைத்

தேர்ந்தெடுப்பது என்பதுதான் இதற்குப் பொருளாகும். நாள் என்றே சொல்லே நட்சத்திரத்தையே குறிப்பதாகும். "நாளென்ன செய்யும்" "கோளென்ன செய்யும்" என்ற அலங்காரப்பாடலில் வரும் நாள் என்பது இதுவே. "நாளும் கோளும்" என்ற வழக்கே முதலில் நாள் நட்சத்திரத்தையே குறிக்கும். நாள்மீன் என்றே இவற்றை இலக்கியத்தில் குறிப்பிடுவர். இவை மனிதன் நாகரிகத்தையும் அறிவியலையும் கண்டு கொண்ட நாட்களிலிருந்தே வழங்கி வருவதாகும். "பரணி பிறந்தான் தரணி ஆள்வான் " "ஆண் மூலம் அரசாளும்", "பெண் மூலம் நிர்மூலம்", "அவிட்டப் பெண் தவிட்டுப்பானையெல்லாம் பொன்","உத்திராடத்தில் ஒரு பிள்ளையும் ஊர்க்கோடியில் ஒரு வீடும்", "மகத்து மங்கையும் பூரத்து புருஷனும்", "பூராடம் நூலாடாது", "கேட்டை ஜேஷ்டனுக்காகாது" என்றெல்லாம் மனித வாழ்க்கையில் இணைந்த பழமொழிகள், நட்சத்திரங்களைப் பற்றி வழங்கி வருவதைக் காணலாம். சம்பந்தர் பாடிய தேவாரத்தில்,

"*ஒன்பதோடு ஒன்றோடேழு பதினெட்டோடாறும்*
*உடன் ஆய நாள்கள் அவைதாம்* "

என்று 27 நட்சத்திரங்களைக் கோளறு பதிகத்தில் குறிக்கின்றார். "மகத்தில் புக்க சனியது போல", "மகத்தில் புகுந்ததோர் சனியெனக்கானாய்" என்றும் முறையே மணிவாசகரும், சுந்தரரும் "மகத்தில் கோசாரச் சனி வந்தால் மிகக்கெடுதி" செய்யும் என்பதைக் குறித்துள்ளார்கள். இலக்கியத்தில் இன்னும் முன்னோக்கிச் சென்றால், நட்சத்திரம் எவ்வளவு வேர் கொண்டுள்ளது என்பது புரியும்.

தொல்காப்பியத்தில் 27 நட்சத்திரப் பெயர்களும் சொல்லின் இறுதி எழுத்து வரையில் எண்ணி அவற்றோடு பிற சொற்கள் சேரும் போது ஏற்படும் மாறுதலுக்கு புணர்ச்சிவிதியே சொல்லப்படுகிறது.

"*நாள் முன் தோன்றும் தொழில் நிலைக் கிளவிக்கு*
*ஆன் இடை வருதல் ஐயம் இன்றே*" (தொல். எழுத்து.உயிர்மயங்-45)

இதுபற்றியே இன்னும் 2சூத்திரங்கள் தொல்காப்பித்துள் வருகின்றன. நல்ல நாள் பார்க்கும்போது நட்சத்திரம் முக்கியமாகப் பார்க்கவேண்டும் என்ற கருத்தைத் தொல்காப்பியம் வற்புறுத்துகிறது.

*"நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்*
*காலம் கண்ணிய ஓம்படை உட்பட*
*ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்*
*காலம் மூன்றொடு கண்ணிய வருமே."* (தொல். புறத் 36)

இங்கே நாள் என்றது நட்சத்திரமேயாகும். இதுவன்றி, சங்ககால முதல் இலக்கியங்களில் நட்சத்திரங்களைப் பற்றிய குறிப்புகள் நிறைய கிடைக்கின்றன. அவற்றில் ஒன்றிரண்டை மட்டும் இங்கு கவனிப்போம்.

*"வான் ஊர் மதியம் சகடணைய வானத்துச்*
*சாலி ஒரு மீன் தகையானைக் கோவலன்."* (சிலப். மங்கல. 5053)

அதாவது சந்திரன் அகடான ரோகிணி நட்சத்திரத்தில் இருந்த போது கோவலன் கண்ணகியைக் கரம் பற்றினான் என்று கூறுவது காண்க.

*"ஆடித்திங்கள் பேரிருள் பக்கத்து*
*அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று"*

என்று ஆடி மாதம் கிருஷ்ண அட்டமி அன்று, பரணி, கார்த்திகை சேர்ந்த நாளில் மதுரையை தீ எரிக்கும் என்று மதுரை காவல்தெய்வம் கண்ணகியிடம் கூறுவதாக உள்ளது. இங்கே அழல்சேர் குட்டம், பரணி கார்த்திகையைக் குறிக்கும்.

சிலம்புக்கும், மணிமேகலைக்கும் பின் வந்த இலக்கியங்களிலும் மலைபடுகடாம், அகநானூறு, புறநானூறு போன்ற பதினெண் மேல் கணக்கு, கீழ்க்கணக்கு ஆகிய சங்க இலக்கியம், தனிப்பாடல் முதலியவற்றிலும் 27 நட்சத்திரங்களின் பெயர்களும், பலன் முதலியவையும் பல்கி வருவதைக் காணலாம்.

கதிரவன் கதி, சந்திர சூரியரிடையுள்ள பாகை தொலைவு முதலியவற்றின் அடிப்படையில் சில நட்சத்திரங்கள் தமிழ் மாதங்களில் பௌர்ணமியன்று எப்பொழுதும் ஒரே மாதிரி வருவதையும் காணலாம்.

சித்திரை மாதத்தில் சித்திரையையும் பௌர்ணமியும் கூட வருவது சித்திரா பௌர்ணமி, வைகாசி மாதத்தில் விசாகமும் பௌர்ணமியும் சேர்வதால் மாதத்திற்கே வைகாசி என்று பெயராயிற்று. ஆவணி பௌர்ணமி திருவோணம் சேருவது ஆவணி அவிட்டமாகிறது. மார்கழி மாதம் திருவாதிரை வருவது பௌர்ணமிதான். அன்றே இறைவன் சிவபெருமான் நட்சத்திர நாளாகக் கொண்டாடுவர் மக்கள். தை மாதம் பௌர்ணமியும், பூச நட்சத்திரமும் சேர்வது தைப்பூசம் என்று புண்ணிய தினமாக வழங்கப்படுகிறது. மாசி மாதம் பௌர்ணமி மகம் சேருவது மாசி மகம் என்ற பண்டிகையாகவும், பங்குனியும் உத்திரமும் கூடி பங்குனி உத்திரம் என்று இறைவன் திருமண நாளாகக் கொண்டாடப்படுகிறது.

அதே போன்று ஆவணித் திருவோணம் திருமாலின் (பௌர்ணமி கூடியபோது) நாளாகக் கொண்டாடப்படுகிறது. இப்படி ஏறக்குறைய 12 மாதங்களிலும் ஒவ்வொரு மாதமும் பௌர்ணமியன்று ஒரு நட்சத்திரம் வருவதிலிருந்த காலக்கணிப்பும், அவை நல்ல காலக் கட்டங்களுக்கு நட்சத்திரங்கள் சேரும் நற்செய்தியும் நமக்கு கிடைப்பதும் இது அறிவியலுக்கு பொருந்திய உண்மை என்பதும் புலனாகும்.

மேலும் வைணவ, சைவ, ஆழ்வார் நாயன்மார் களுடைய பிறந்த நாளை அவர்கள் பிறந்த நட்சத்திரங்களைக் கொண்டே கணக்கிலிடுவர். வைணவத்தில் ஆயுளையே இத்தனை திருநட்சத்திரங்கள் இவர் வாழ்ந்தார் என்றெல்லாம் குறிப்பிடுவர். ஏன் தமிழ் முறைப்படி ஒருவன் எந்த தமிழ் மாதம் நட்சத்திரத்தில் பிறந்தானோ, அடுத்து வரும்

ஆண்டுகளில் இதே தமிழ்மாதத்தில் அதே நட்சத்திரம் கொண்ட நாளையே பிறந்த நாளாக பெரும்பாலும் கொண்டாடுகிறோம். ஒருவன் சித்திரை மாதம் ரேவதி நட்சத்திரம் வரும் நாளில் பிறந்திருந்தால் எல்லா ஆண்டுகளிலும் அதே சித்திரை மாதம் ரேவதி நட்சத்திரம் வரும் நாள்தான் பிறந்த நாளாகக் கொள்ளப்படுகிறது. அறுவதுக்கறுவது, 1000 பிறை காணும் சதாபிஷேகம், போன்ற திருநாள் மங்கலமும் அந்தந்த வயதில் தமிழ் மாதத்தில் ஒருவர் பிறந்த நட்சத்திரத்தைக் கொண்டே கணக்கிடப்படுகிறது.

இனி இந்த நட்சத்திரங்கள் வேறு வகையிலும் கையாளப்படுகின்றன. தமிழுக்கே உரிய தமிழ் சித்தர்களால் உருவாக்கப்பட்ட பஞ்சபட்சி சாத்திரம் என்று ஒன்று உண்டு. இதே தலைப்பில் 14 சுவடிகளின் அடிப்படையாகக்கொண்டு நூற்றுக்கணக்கான புத்தகங்கள் ஆய்வுகளுடன் தஞ்சை மகால் மூலமாக நமது நூல் ஏற்கனவே வெளியாகியுள்ளது.

இதில் ஒருவர் பிறப்பு நட்சத்திரத்தின்படி அவர் பட்சியை அறுதியிட்டு 5 பட்சிகளுக்கு 5 தொழில்களை நிர்ணயம் செய்து அவற்றின் தாரதம்மியப்படி ஒருவரை ஒருவர் வெற்றி கொள்ளும் வகை எடுத்து விளக்கப் பட்டுள்ளது. இதைத் தெளிவாகக் கற்றவனுக்கு வாழ்க்கையில் தோல்வியே ஏற்படாது என்பதே உண்மையாகும். இதற்கும் அடிப்படை, ஒருவன் பிறந்த ஜன்ம வாழ்க்கை. அதில் ஏற்படும் இன்பமே தலையாய இன்பமாகும். இது சிறப்பாக அமையவேண்டுமானால் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதற்கு ஒருவர் பிறந்த ஜென்ம நட்சத்திர அடிப்படையில் 10 வகைப் பொருத்தங்கள் பார்க்கப்படுவது பண்டைய காலத்திலிருந்தே வழக்கிலுள்ளது. இது ஆண் பெண்ணின் உடற்கூறு, மனப்பாங்கு, நுகர்திறன் (Sexual appitite and efficiency) அதற்கு இயைய அமையும் உடல்வாகு போன்ற அறிவியல் உண்மைகள் அடிப்படையிலேயே அமைக்கப்பட்டுள்ளன. இதற்கு முதன்மையான அடிப்படை ஒருவர் பிறந்த ஜென்ம நட்சத்திரமேயாகும் என்று முன்னரே

கூறியுள்ளோம். இந்த திருமணப் பொருத்தங்கள் பற்றியும் நட்சத்திரங்களைக் கொண்டு நூலுள் தனியாக விளக்கப்பட்டுள்ளது

நட்சத்திரங்களைக் கொண்டே பெயர் வைக்கும் வழக்கம் பண்டை இலக்கியங்களில் காணப்படுவதொன் றாகும். மணிமேகலையில் ஆதிரை என்பவள் எல்லோருக்கும் பிச்சை இட்ட பகுதி ஆதிரை பிச்சை இட்ட காதை என்று தனியாக பாடப்பட்டுள்ளது. ஆதிரை என்பது இவள் பிறந்த நட்சத்திரம் திருவாதிரையைக் குறிக்கும். இதுபோல் ஆதிரையான் ஓணத்தான் என்று திருவாதிரை, திருவோணம் நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் பெயரும் அவர்கள் நட்சத்திரங்களாலேயே வழக்குகள் இலக்கியங் களில் காணப்படும் . இன்றும் பெண்களின் பெயர்கள், ரேவதி, அஸ்வினி, ரோகிணி, சித்திரா, சுவாதி போன்ற நட்சத்திரங்களாலேயே வழங்கப்பெறுவதைக் காணலாம். இதே போல கிருத்திகை நட்சத்திரத்தைக் குறிக்கும் கார்த்திக் என்று பெயர். ஆண்கள் வைத்துக் கொள்வதைக் காணலாம். பரணி ஸ்டூடியோ, கார்த்திக் சுவாதி, அஸ்வினி, ரோகிணி என்டர்ப்ரைஸஸ் என்று நிறுவனங்களின் பெயர்களும் நட்சத்திரங்களைக் கொண்டே வழங்கி வருவதைக் காணலாம். இதுவன்றி போரில் வெற்றிகொண்ட தலைவனைப் பாடும் இலக்கியம் பரணி என்ற பரணி நட்சத்திரத்தால் கலிங்கத்துப் பரணி போன்றவை புகழ்பெற்றவை.

இப்படி நட்சத்திரங்கள் மனித வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் அவனுடன் பின்னிப் பிணைந்துள்ளதை எல்லோரும் அறிவர். இவைபற்றி ஏறக்குறைய எல்லா விளக்கங்களையும் நூலினுள் எல்லாரும் கண்டு பயன் பெறலாம்.

வாசகர்களின் கவனத்திற்கு: இந்த நூலினுள் செய்திகளைக் கீழ்க்கண்ட முறைப்படி வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன.

# பகுதி -1

நூலின் பெயர் "நட்சத்திரக்கோவை" என்று வைக்கப் பட்டாலும் நட்சத்திரங்கள் 27-ம் 12 இராசிகளிலும் சமமாகப் பகுக்கப்பட்டு ஒரு இராசிக்கு 2 நட்சத்திரம் 9 பாதங்களாக பதிந்துள்ளதால் முதலில் 12 இராசிகளில், ராசிகள் ஒவ்வொன்றைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.

1. இராசி என்பது ஒருவர் பிறந்தபோது சந்திரன் நின்ற இராசியைப் பொதுவாகக் குறிக்கும். அடுத்து இதுவே சூரியன் நின்ற இராசியையும் குறிக்கும். முதலில் சொன்னதைக் கொண்டு இராசிகளைப் பற்றிய செய்திகள் சொல்லப் பட்டுள்ளன.

2. சரசுவதி மகாலின் நாம் ஆதாரமாகக்கொண்ட ஏட்டு வாக்கியப் பாடலை முதலில் கூறி, இராசி பற்றிய விளக்கம் காணப்பட்டுள்ளது. அடுத்து ஆபலதீபிகை வடமொழி நூலின்படி இராசியின் தன்மைகள் சொல்லப்பட்டுள்ளன. அடுத்து நாம் பல நூல்களிலிருந்து (தமிழ், வடமொழி, ஆங்கிலம் போன்றவை) இராசிகளைப் பற்றிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

3. இதன்பின் ஒவ்வொரு இராசியின் ஆக்கமாக பண்புகள், திருத்தப்படவேண்டிய குணங்கள் சொல்லப் பட்டுள்ளன.

அதன்பின் ஒவ்வொரு இராசியும் லக்கினமாக அமைந்தால் ஏற்படும் குணநலன் முதலியவை கூறப்பட்டுள்ளன. இதுவும் பல மூலங்களிலிருந்து திரட்டியவையே. ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு இராசி லக்கினமாக அமையும். லக்கினமென்பது ஒருவன் பிறக்கும்போது கீழ்கதுவாயில் (Eastern horaizon) உதயமாகும் ராசிமண்டலத்தின் பாகையாகும். இதை முதலாகக் கொண்டுதான் ஒரு ஜாதகத்தில் எல்லா விஷயங்களையும் அறிந்துகொள்ள வேண்டும். அடுத்து ஒவ்வொரு

லக்கினத்திற்கும் நல்ல கெட்ட கோள்கள் யார் யார் என்று கூறப்பட்டுள்ளது. வாழ்க்கையில் உயர்வை ராஜயோகம் என்று சொல்லக்கூடிய சிறப்பான நல்லதைச் செய்யும் கோள்கள் நல்லவர் அல்லது யோக காரர் எனப்படுவர். இவர்களில் யார் யார் கூடினால் நன்மை அல்லது ராஜயோகம் என்பதை எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது. அடுத்து ஒவ்வொரு லக்கினத்திற்கும் கெட்டவர்கள், எந்த கோள்கள் யார் யார் என்று கூறப்பட்டுள்ளன. கெட்டவர்கள் இருவகைப்படுவர். முதலாவது வெறும் கெடுதியை மட்டும், பாதக விளைவை மட்டும் செய்பவர் இவர்கள் பாதகஸ்தானாதிபதி, இவர்கள் ஸ்தானம் பாதகஸ்தானம் எனப்படும். ஸ்திர ராசிக்கு 9க்குடையவரும் சக ராசிக்கு 11க்குடையவரும் உபய ராசிக்கு 7-க்குடையவரும் பாதகஸ்தவராவர். இந்த இடங்கள் பாதகஸ்தானங்கள் ஆகும். மாரகர் எனப்படுபவர் தங்கள் தசாபுத்தி முதலிய காலங்களில் ஆயுர்த்தாயப்படி நிர்ணயித்த வயதும் முடிந்தால் இறப்பைத் தரக்கூடிய கோள்களாகும்.

## பகுதி - 2

அடுத்து ஒவ்வொரு இராசியின் உள்ளும், அந்தந்த ராசியில் வரும் ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் விவரம் கூறப்பட்டுள்ளது.

1. நட்சத்திரம் முழுவதற்கும் மகால் சுவடி பாடலைக் கொடுத்து முதலில் விளக்கப்பட்டுள்ளது. அடுத்து அதன் செய்திகள் சுவடியில் தரப்பட்டபடி கொடுக்கப்பட்டுள்ளது.

2. இரண்டாவதாக பல நூல்களிலும் அந்தந்த நட்சத்திரங்களைப்பற்றி இதுவரை தமிழ், வடமொழி, இந்தி, மராத்தி, ஆங்கிலம் ஆகிய மொழி நூல்களில் கண்ட செய்திகளையெல்லாம் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. அடுத்து ஒவ்வொரு நட்சத்திரத்திலும் 9 கோள்கள் நின்ற பலன், வேறு நூல்களிலிருந்து எழுதப்பட்டுள்ளது.

## பகுதி - 3

இதை அடுத்து ஒவ்வொரு நட்சத்திரத்தின் ஒவ்வொரு பாதத்திற்கும் தஞ்சை மகாலின் சுவடியின் பாடலுடன் விளக்கம் தரப்பட்டுள்ளது. இதன் கீழ் மற்ற நூல் செய்திகளும் அடுத்து தரப்பட்டுள்ளன.

இதை அடுத்து, ஒவ்வொரு நட்சத்திர காலின் காலசக்கர தசை அதன்படி பரமாயுள் வருஷம், இறப்பு காரணம் முதலியவை தரப்பட்டுள்ளன. பொதுவாக ஸ்திர லக்கினத்திற்கு *3, 8*-க்குடையவரும் சர லக்னத்திற்கு *11*-க்குடையவரும் உபய லக்கினத்திற்கு *7*-க்குடையவரும், மாரகர் ஆவார். இவையும் சொல்லப்பட்டுள்ளன. பாதகர், பதகஸ்தானம், மாரகர், மாரகன் தானம் இந்த இரண்டு வகைக்கும் வேறுபாடு உண்டு. பாதகர் என்பவர் வெறும் கெடுதி, கண்டம், கஷ்டம், நோய் போன்றவற்றை மட்டும் செய்வர். இவர்கள் கொல்வதில்லை. மாரகர் இருந்த ஜாதக பாவம் குறிக்கும் வாழ்க்கைப்பகுதி பாழாகும். அதே போல் பாதக ஸ்தானத்தில் இருக்கும் கோளின் ஜாதகத்தில் எந்த வீட்டுக்குடையவரோ அந்த பாவம் பெரும். ஆனால் மாரகர் என்பவர் முன்சொன்னபடி இறப்பை மட்டும்தான் தருவர். இதனால் இவரே சில சமயம் ராஜயோகம் தருபவராகவும் அமையலாம். இதுதான் இந்த இரண்டுக்கும் மாறுபாடு ராசியைப் பற்றி மூன்று முக்கிய அம்சங்கள் சொல்லப்பட்டுள்ளன.

### முதல் அம்சம்

**இராசி பொதுப்பலன்:** இராசி லக்கினமாக அமைந்தால் அந்த லக்கின பொதுப்பலன், பாதகர், மாரகர் முதலியன.

இதை அடுத்து ஒவ்வொரு நட்சத்திர பாதமும் அந்தந்த ராசியின் நவாம்சம் பாகையால் பிற நூல்கள் துணைகொண்டு ஒவ்வொரு கோளும் நவாம்சம் பெற்ற ராசிப்படி நட்சத்திர பாதப்படி இருக்கும் பலன் விளக்கப்பட்டுள்ளது. இதை நவாம்ச சம்ஹிதை எனலாம்.

சிந்தாமணி-இ

## இரண்டாம் அம்சம்

இதில் தசா புக்தி, பலமாகும். இதில் நட்சத்திர தாரதம்ய பலன் விளக்கப்படும்.

அடுத்து கோசாரத்தில் நட்சத்திர சம்பந்தம் பற்றி விளக்கப்பட்டுள்ளது. அடுத்து முகூர்த்தம் முதலியவற்றிற்கு நட்சத்திரத்தன்மை பற்றி விளக்கப்பட்டுள்ளது.

## மூன்றாம் அம்சம்

இதில் நட்சத்திரங்களைப் பற்றி பல நூல்களில் மலிந்து கிடக்கும் செய்திகளையெல்லாம் அதாவது முதல் மூன்று பகுதிகளில் வராதவற்றைத் தொகுத்துத் தரப்பட்டுள்ளது. இதில் நட்சத்திரங்களைப் பற்றிய பலவகை பாகுபாடுகள் எல்லாம் திரட்டிச் சேர்க்கப்பட்டுள்ளன. மூலம், பூராடம், கேட்டை, ஆயில்யம், விசாகம், ரோகிணி போன்ற நட்சத்திரங்களைப் பற்றிய தவறான கருத்துக்களைக் காரணத்துடன் மறுத்து விளக்கப்பட்டுள்ளது. ஒருவகையில் முதல் இருபகுதிகளில் வாராத நட்சத்திரங்களைப் பற்றிய செய்திகளை எல்லாம் இங்கே காணலாம். இப்படி பலவகைக் குறிப்புகளையும் கொடுத்து ஒரு நட்சத்திர களஞ்சியமாக (Encyclopedic work) இதைப் பெரிதும் உழைத்து உருவாக்கியுள்ளோம். இது முக்கியமாக ஒரு கையேடாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

## இந்நூலுள் வரும் தசாபுத்தி பலன்களைப் பற்றிய குறிப்பு

### உடுமகா தசை அல்லது நட்சத்திர தசை

27 நட்சத்திரங்கள் அடிப்படையாகக்கொண்டு 9 கோள்களும் அதிபதிகளாக தசை நடத்துவது விம்சோத்தரி தசை அல்லது நட்சத்திர தசை அல்லது உடுமகாதசை எனப்படும். இதுதான் பெரும்பாலும் நடைமுறையில் உள்ளது. பராசரமுனிவர் வகுத்த இந்த தசாபுத்தி முறை மிகவும்

பயனுடையதாகவும், எளிதாகவும் கையாளத்தக்கதாக இருக்கிறது. இது எல்லாரும் அறிந்ததாகையால் வெறும் குறிப்பு மட்டும் காட்டப்படுகிறது. இதன்படி

1. அஸ்வினி, மகம், மூலம், இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் முதல் தசை - கேது தசை 7 வருடம்.

2. பரணி, பூரம், பூராடம் இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தசை - சுக்கிரதசை 20 வருடம்.

3. கார்த்திகை, உத்திரம், உத்திராடம் இந்த நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் ஆரம்ப தசை - சூரியதசை 6வருடம்.

4. ரோகிணி, ஹஸ்தம், திருவோணம் இந்த நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் முதல் தசை - சந்திர தசை 10வருடம்.

5. மிருக சீரிஷம், சித்திரை, அவிட்டம் இந்த நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் ஆரம்ப தசை - செவ்வாய் தசை 7 வருடம்.

6. திருவாதிரை, சுவாதி, சதயம் இந்த நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் ஆரம்பதசை - ராகு தசை 18 வருடம்.

7. புனர் பூசம், விசாகம், பூரட்டாதி இந்த நட்சத்திரங் களில் பிறந்தவர்கள் ஆரம்ப தசை - குருதசை 16 வருடம்.

8. பூசம், அனுசம், உத்திரட்டாதி இந்த நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் ஆரம்ப தசை - சனி தசை 19 வருடம்.

9. ஆயில்யம், கேட்டை, ரேவதி இந்த நட்சத்திரங்களில் பிறந்தவர்கள் ஆரம்பதசை-புதன் தசை 17 வருடம்.

ஆக மொத்தம் பரமாயுள் 120 வருடம்.

அந்தந்த நட்சத்திரங்களுக்கு அந்தந்த தசாதார்களாகிய கோள்களே அதிபர்கள். அதாவது அசுவினி, மகம், மூலம்

இவற்றிற்கு கேது அதிபன். இதுபோல மற்றவற்றிற்கும் கொள்க. ஒருவர் பிறந்த ஜென்ம நட்சத்திர தசையை அடுத்து மேற்சொன்ன வரிசையில் மற்ற தசைகள் தொடர்ந்து நடக்கும். ஒவ்வொரு தசையிலும் 9 கிரகங்களின் புத்திகளும், ஒவ்வொரு புத்தியிலும் 9 கிரகங்களின் அந்தரமும், அதேபோல் தொடர்ந்து ஒவ்வொன்றையும் சூக்குமம், பிராணன் என்றும் பிரித்து கணக்கிடுவர். இது சோதிடம் தெரிந்த ஆரம்பநிலையில் உள்ளவர்கள் கூட அறிந்து வைத்துள்ளனர். ஆகையால், விளக்கம் யாவையும் வேறு தசாபுத்தி பலன் கூறும் நூல்களிலிருந்து அறிந்துகொள்க. இனி காலச்சக்கர தசையைப் பற்றிப்பார்ப்போம். இந்த நூலுள் அந்தந்த நட்சத்திரங்களின் கீழ் அதற்குரிய தசையின் 9 புத்திகளுக்கு மட்டும் மகாலின் மரண கண்டிகை ஏடு அ என்றதன்படி பலன்கள் பாடல்களுடன் விளக்கப் பட்டுள்ளன.

## காலச்சக்கர தசை

காலச்சக்கர தசை நட்சத்திர தசையை விட வேறுபட்டது. இதுவும் ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் 4 பாதங்களுக்கும் தனித்தனியாக இந்நூலில் கூறப்பட்டுள்ளது. நட்சத்திர தசை முழு நட்சத்திரத்திற்கும் உரியது. காலச்சக்கர தசை ஒவ்வொரு நட்சத்திர தசை 4 பாதங்களின் ஒவ்வொரு பாதத்திற்கும் உரியது. நட்சத்திரத்தசை அந்தஸ்து நட்சத்திர தசாதிபன் பெயரால் அதாவது கிரகத்தின் பெயரால் நடக்கும். ஆனால் காலச்சக்கிர தசை அந்தந்த நட்சத்திர பாதம் இருக்கும் ராசி மற்றும் அதன் கோளாக இரண்டையும் இணைத்துக் கணக்கிடப்படும். உதாரணத்திற்கு அசுவனி முதல் தசை பாதத்திற்குரிய தசை மேஷ அங்காரக தசை அசுவனி முதல் பாத நவாம்சத்திற்கு அதிபன் அங்காரகன். அதன்படியே இது மேஷ செவ்வாய் தசையாகும். இதைத் தொடர்ந்து ரிஷப சுக்கிரதசை, இது புதன் தசை என்ற வகையில் தனுசு குரு தசையோடு இந்தத் தொடர் முடியும். இதிலும் ஒவ்வொரு தசையிலும் புத்திகள் பிரிக்கப்படும். ஆனால் இதற்குமேல்

அந்தரம் சூக்குமம் பிராண தசை என்பது முதலான உட்பிரிவுகளும் பலனறிதலும் இதில் கிடையாது. இந்த தசைகளின் வரிசைக்கிரமமும் அதைப் பகுத்தறிந்து பலன் அறிவதும் சற்று கடினமானது. நட்சத்திர தசைகளில் கிரகங்களின் கணக்குப்படி 9 தசைகள்தான் உண்டு. ஆனால் இதில் நட்சத்திரங்கள் 27ஐயும் சவ்வியம் (வலவோட்டு) அபசவ்யம் இடவோட்டு என்று இருவகையாகப் பிரித்து மொத்தம் 24 தசைகள் சொல்லப்படும். ஒவ்வொரு நட்சத்திரத்தின் ஒவ்வொரு பாதத்திற்கும் இவை உரியவையாதலானும், ஒவ்வொரு நட்சத்திர பாதமும் ஒரு நவாம்சத்தையும் காட்டுவதால் ஏறக்குறைய இதை நவாம்ச தசை என்றே கொள்ளலாம்.

பெரும்பாலும் ஜோதிஷத்தின் மற்றொரு பிரிவை ஏற்படுத்தியவரான ஜெமினியின் கொள்கைக்கு ஏறக்குறைய ஒத்து வருவதாகும். அப்பொழுது இதன் வகைகளையும் பிரிக்கும் வழி முதலியவற்றையும் தொடர்ந்து கவனிப்போம்.

காலச்சக்கிர தசை விளக்கம்-காலம் என்பது ஒரு குறிப்பிட்ட தசை காலத்தைக் குறிக்கும். சக்கரம் என்பது வட்டம் அல்லது சுழற்சி (Cycle) என்று கொள்ள வேண்டும். இன்னின்ன தசைக்குப்பின் இன்னின்ன தசை வரிசையாக வட்டமாக ஒரு சுழற்சியாக வரவேண்டி இருப்பதால் இது காலச்சக்கிர தசையாயிற்று. காலம் என்பதை நாள் என்று கொள்க. நாள் என்பது நட்சத்திரத்திற்கு பெயரானதால் இது காலச்சக்கிர தசையாயிற்று என்று கொள்ளலாம்.

இந்த காலச்சக்கிர தசைக்கு அதிபராகும் நட்சத்திரங்கள் அவற்றின் 4 பாதங்களின் தனித்தனி அடிப்படையில் இது நடக்கும். இந்த நட்சத்திரங்கள் இருவகையாகப் பிரிக்கப்பட்டு அந்த வகையிலே இந்த காலவட்டம் என்ற காலச்சக்கிர தசை நடக்கும். இவற்றில் ஒன்று வலமாக நடக்கும். இப்படிப்பட்ட தசைகளின் காரணமாக நட்சத்திரங்கள் வலவோட்டு நட்சத்திரங்கள் எனப்படும்.

மற்றொன்று இடமாக நடக்கும். இதற்கு காரணமான தசையை நடத்தும் நட்சத்திரங்கள் இடவோட்டு நட்சத்திரங்கள் எனப்படும். இந்த வகையில்27 நட்சத்திரங்களும் பின் சொன்ன வகையில் பிரிக்கப்படும்.

### 1. வலவோட்டு நட்சத்திரங்கள்—15

அசுவினி, பரணி, கார்த்திகை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், அஸ்தம், சித்திரை, சுவாதி, மூலம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி ஆகியவை.

### 2. இடவோட்டு நட்சத்திரங்கள்—12

ரோகிணி, மிருகசீரிஷம், திருவாதிரை, மகம், பூரம், உத்திரம், விசாகம், அனுஷம், கேட்டை,திருவோணம், அவிட்டம், சதயம் ஆகியவை இந்த இருவகையும் முதல் இடை கடை என நன்நான்காக அல்லது ஐந்தைந்தாகப் பிரிக்கப்படும். இந்த வகையில்

### 3. வலவோட்டு நட்சத்திரங்கள் —15

*1. முதல் நாள்கள்-அசுவினி, புனர்பூசம், அஸ்தம், மூலம், பூரட்டாதி.*

*2. இடை நாள்கள்-பரணி, பூசம், சித்திரை, பூராடம், ரேவதி.*

*3. கடைநாள்கள் - கிருத்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி.*

### 4. இடவோட்டு நட்சத்திரங்கள் — 12

*1. முதல் நாள்கள்-ரோகிணி, மகம், விசாகம், திருவோணம்.*

*2. இடைநாள்கள் - மிருகசீரிடம், பூரம், அனுஷம், அவிட்டம்.*

*3. கடை நாள்கள் - திருவாதிரை, உத்திரம், கேட்டை.*

**இந்த அடிப்படையில் காலச்சக்கிரதசை 24 வகைப்படும்.**

**வலவோட்டு தசைகள் -12** அவையாவன: விருச்சிக செவ்வாய்த் தசை, ரிஷபச் சுக்கிரதசை, மிதுன புதன் தசை, கடக சந்திரன் தசை, சிம்ம சூரியன் தசை, கன்னி புதன் தசை, துலா சுக்கிர தசை, விருச்சிக செவ்வாய் தசை, தனுசு குரு தசை, மகர சனி தசை, கும்பசனி தசை, மீனகுரு தசையாம்.

**இடவோட்டு தசைகள் 12** அவையாவன: விருச்சிகச் செவ்வாய்த் தசை, துலா சுக்கிர தசை, கன்னி புதன் தசை, சிம்ம சூரியன் தசை, கடக சந்திரன் தசை, மிதுன புதன் தசை, ரிஷப சுக்கிர தசை, மேஷ செவ்வாய் தசை, மீன குரு தசை, கும்ப சனி தசை, மகர சனி தசை, தனுசு குரு தசை ஆகியவையாம்.

**இந்த தசைகளுக்கு வருஷங்கள் வருமாறு:**

| | |
|---|---|
| மேஷச் செவ்வாய் தசை | 7 வருடம் |
| ரிஷபச் செவ்வாய் தசை | 16 வருடம் |
| மிதுன புதன் தசை | 9 வருடம் |
| கடகச் சந்திரன் தசை | 21 வருடம் |
| சிம்ம சூரியன் தசை | 5 வருடம் |
| கன்னி புதன் தசை | 9 வருடம் |
| துலாம் சுக்கிர தசை | 16 வருடம் |
| விருச்சிகச் செவ்வாய் தசை | 7 வருடம் |
| தனுசு குரு தசை | 10 வருடம் |
| மகரச் சனி தசை | 4 வருடம் |
| கும்பச் சனி தசை | 4 வருடம் |
| மீன குரு தசை | 10 வருடம் |
| ஆக | 118 வருடம் |

ஆக 12 தசைகளுக்கு 118 வருடமாகும் (நட்சத்திர தசைகள் மொத்தம் 120 வருடம் என்று எல்லோருக்கும் தெரிந்ததே)

இப்படி 12 தசைகள் வலவோட்டு நட்சத்திரங்களுக்கும் 12 தசைகள் இடவோட்டு நட்சத்திரங்களுக்கும் சொல்லப் பட்டன.

ஆனால் இதில் ஒவ்வொரு தசைக்கும் ஒன்பது புத்திகள் தான் என்றறியவேண்டும்.

சவ்வியம் (வலவோட்டு) மற்றும் அபசவ்வியம் (இடவோட்டு) நட்சத்திரங்களின் ஒவ்வொரு தசையும் ஒன்பது புத்திகளை கொண்டதானாலும் அவைகள் ஒரு ராசியில் தொடங்கி சீராக 9-வது ராசியில் முடிவதில்லை. முன்னோ அதாவது நேராகவோ பின்னோ அல்லது தலைகீழாகவோ தொடர்ந்து சீராக நடப்பதுண்டு. இதுவன்றி இதே வகையில் நேராகவோ தலைகீழாகவோ இடைவெளி விட்டு விட்டு ராசிகளைக் கடந்து வேறு ராசிகளில் தொடர்வதுண்டு. இப்படி வருவனவற்றிற்குக் கதி, பாய்ச்சல், தத்து, அல்லது தாண்டல் என்பன பெயராகும். இவற்றின் வகைகள், பெயர், பலன் முதலியவை பின்வருமாறு காண்க.

**1. சிங்காவலோகன கதி அல்லது சிங்கப்பாய்ச்சல் எனப்படும் இது இருவிதம்**

1. மீனத்திலிருந்து விருச்சிகத்திற்கு பாய்வது.

2. தனுசிலிருந்து மேஷத்திற்குப் பாய்வது.

**இதன் பலன்:**

1. மீனத்திலிருந்து விருச்சிகத்தில் பாயும்போது அக்கினி பயம், ஆயுத பயம், விஷபயம், ராஜபயம், வயிற்றிலே வெப்பு, வலிப்பு முதலிய பீடை.

2. தனுசிலிருந்து மேஷத்தில் பாயும்போது மரண பயம், பிதிர் கண்டம், தகப்பன் வழி கிலேசம், இடம் பிரிதல், பொருள் விரையும் இவை உண்டாகும்.

**2. துரக கதி அல்லது குதிரைப்பாய்ச்சல் - இது இருவிதம்**

1. விருச்சிகத்திலிருந்து மீனத்தில் பாய்தல்

2. மேஷத்திலிருந்து தனுசில் பாய்தல் துரககதி.

*இதன் பலன்:*

1. விருச்சிகத்திலிருந்து மீனத்தில் பாயும்போது சுரபீடை, சோரபயம், திரவிய நாசம், அலைச்சல், பயம் முதலியவை ஏற்படும்.

2. மேஷத்திலிருந்து தனுசில் பாயும்போது பிதிர் பந்து பீடை, தன்னைக் குறித்து வீண் பயம், கவலை, ஆயுத பயம் முதலியவை உண்டாகும்.

**3. சர்ப்பகதி அல்லது பாம்புப் பாய்ச்சல் – கடகத்திலிருந்து சிம்மத்தில் பாய்வது சர்ப்பகதியாகும்**

***இதன் பலன்:*** ஜாதகனுக்கு வேண்டியவர்களுக்கு வயிற்றுப்புசம், சுவாச காசம், கபம் சம்பந்தமான கூடிய ரோகம், கண்டம் இவை உண்டாகும்.

**4. மர்க்கட கதி அல்லது குரங்குப் பாய்ச்சல் – சிம்மத்திலிருந்து கடகத்திற்குப் பாய்வது குரங்குப் பாய்ச்சலாகும் அல்லது மயிலின் பாய்ச்சலாகும்.**

***இதன் பலன்:*** வாகனங்களால் பீடை, காசம், க்ஷயம் போன்ற நோய்களும் உண்டாகும்.

**5.குக்குட கதி அல்லது கோழிப்பாய்ச்சல் இது இருவிதம்**

1. சிம்மத்திலிருந்து மிதுனம்.

2. மிதுனத்திலிருந்து சிம்மம் பாய்தல்.

*இதன் பலன்:*

1. பிதிர் பந்து பீடை, குடும்பப்பணி, வியாதி, மனக்கிலேசம், சித்தப்பிரமை முதலியவை சிம்மத்திலிருந்து மிதுனத்தில் பாயும்போது ஏற்படும்.

2. மிதுனத்திலிருந்து சிம்மத்தில் பாயும்போது மனக்கவலை, பிதிர் பந்து பீடை, தேகத்திலே தழும்பு முதலியவை உண்டாகும்.

**6. மண்டூக கதி அல்லது தவளைப் பாய்ச்சல் – இதுவும் இருவகை**

1. கன்னியிலிருந்து கடகத்தில் பாய்தல்.

2. கடகத்திலிருந்து கன்னியிலே பாய்தல்.

**இதன் பலன்**

1. கன்னியிலிருந்து கடகத்தில் பாய்தல்-வைசூரி முதலிய பிணி, களத்திர பீடை, மாதா, மாமன் முதலிய உறவினர் பீடை.

2. நேராகவோ முன்னாகவோ கீழாகவோ வரிசையாகத் தாண்டுதல் ஜலகதி எனப்படும்.

**பொதுவாக இந்த கதிகளின் லட்சணம் வருமாறு:** நேராக முன்னோ பின்னோ வரிசைத் தாண்டல் ஜலகதி.

ஒரு ராசி விட்டு தாண்டல் மண்டூக கதி. இரண்டு ராசி விட்டு தாண்டுதல்.மார்க்கடகதி, ஐந்தாம் ராசியில் இருந்து ஒன்பதாம் ராசியில் தாண்டுதல் மற்றும் ஒன்பதாம் ராசியிலிருந்து ஐந்தாம் ராசியில் தாண்டுதலும் சிம்மாவலோகன கதியாகும். திரமகதி, ஜலகதி அல்லது சர்ப்பகதி எனப்படும். ஒன்றுக்குத் தாண்டி மீண்டும் இருந்த இடத்திற்குத் தாண்டுதல் குக்குடகதியாகும். பக்கத்தில் மட்டும் தாண்டுதல் மயூரகதி எனப்படும்.

மேலே சொன்னபடி ஜலகதியுடன் சேர்ந்து இவை 7வித கதி பேதமாகிறது என்பதை அறியவும்.

**இவற்றுள் வலவோட்டு நட்சத்திர தசை புத்திகளில் வரும் கதிகள்**

1. ஆற்றொழுக்கு ஜலகதி.
2. சிங்க கதி.
3. தவளை மண்டூக கதி
4. சர்ப்பம் அல்லது பாம்பு கதி
5. குக்குடம் அல்லது கோழி கதி

இவற்றுள் இடவோட்டு நட்சத்திர தசை புத்திகளுக்கு வரும் கதிகள் வருமாறு

1. குதிரை அல்லது அசுவகதி
2. குக்குடம் அல்லது கோழி கதி
3. மயூரம் அல்லது மர்க்கடம் குரங்கு கதி
4. தவளை மண்டூகம் கதி
5. ஆற்றொழுக்கு ஜலகதியாகும்.

இந்த கதிகள் எல்லாம் தசையில் வரும் புத்திகளுக்குத் தானே அன்றி தசைகளுக்குக் கிடையாது.

நட்சத்திர தசையான விம்சோத்தரி தசையில் ஒரு கிரகத்தின் தசை அதில் ஒன்பது புத்திகள், ஒவ்வொரு புத்திக்கும் 9 அந்தரம், இந்த அந்தரம் ஒவ்வொன்றுக்கும் சூக்குமம் (9) இந்த ஒன்பது சூக்குமங்களுக்கு 9 பிராண தசை என்று சில நாள் அல்லது நாழிகை மட்டும் கொண்ட அதி நுட்பமான பிரிவுகள் உண்டு.

ஆனால் நட்சத்திர பாத தசையான கால சுக்கிரதசையில் ஒவ்வொரு தசைக்கும் ஒன்பது புத்திகள் மட்டும்தான் உண்டு. இதற்குமேல் உட்பிரிவுகள் கிடையாது.

வலவோட்டு நட்சத்திரங்களுக்கு 12 தசைகள் என்றும், இடவோட்டு நட்சத்திரங்களுக்கு 12 தசைகள் என்றும் ஏற்கனவே சுட்டிக் காட்டியுள்ளோம். ஒவ்வொரு தசை மற்றும் புத்திகளின் பட்டியலையும் அந்தந்த தசை புத்திகளில் வரும் பாய்ச்சல்களையும் இனி தொடர்ந்து எழுதுவோம்.

இப்படி காலச்சக்கர தசைகளின் 24 தசைகளின் புத்திகளைப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் காட்டப்பட்டது.

இவற்றில் ஒவ்வொரு நட்சத்திர பாதத்திற்கும் 9 தசைகள் வரும் இவற்றில் எல்லா நட்சத்திரங்களுக்கும் பரமாயுள் பின்வருமாறு அறியவேண்டும்.

## அபசவ்ய நட்சத்திரங்கள்

பரமாயுள் அதாவது 9 தசைகளின் மொத்த வருஷங்கள் முதல் பாதம் 100, இரண்டாம் பாதம் 85, மூன்றாம் பாதம் 83, நான்காம் பாதம் 86.

பரமாயுள் அதாவது 9 தசைகளின் கூட்டு வருஷங்கள் முதல் பாதம் 86, இரண்டாம் பாதம் 83, மூன்றாம் பாதம் 85, நான்காம் பாதம் 100.

## தசைகளின் சுற்றுக் கிரமம்

சவ்ய நட்சத்திரங்கள் மற்றும் அபசவ்ய நட்சத்திரங்கள் எவை என்று இப்பகுதி முகப்பில் சொல்லியுள்ளோம். இவற்றின் ஒவ்வொரு பாதத்திலிருந்து ஆரம்பிக்கும் அந்தந்த பாதத்திற்குரிய தசைகளில் நடக்கும் தசைகளின் கிரமம் வருமாறு. சவ்ய நட்சத்திரங்கள் தசை கிரமம். இவற்றில் சவ்ய நட்சத்திரங்களின் முதல் கடை நாட்களாகிய அசுவினி, கிருத்திகை, புனர்வசு, ஆயில்யம், ஹஸ்தம், சுவாதி, மூலம், உத்திராடம், பூரட்டாதி, ரேவதி இவற்றின் தசைகள் அதாவது 8 நட்சத்திரங்களுக்கும் சேர்ந்து 72 தசைகள் ஆகின்றன. (ஒவ்வொரு நட்சத்திரத்தின் பாதத்திற்கும் 9 தசை ஆகின்றன) இவை ராசி மண்டலத்தின் 12 ராசிகளில் கீழ்க்கண்ட வரிசையில் நடக்கின்றன.

மேஷத்தில் ஆரம்பித்து (மேஷ செவ்வாய் தசை, ரிஷப சுக்கிர தசை என்ற முறையில்) வரிசையாக மீனம் வரையில் முடியும். மீண்டும் பின் விருச்சிகத்தில் ஆரம்பித்துத் தலைகீழாக நகர்ந்து விருச்சிக செவ்வாய் தசை, துலா சுக்கிர தசை தலைகீழாய் நடந்து தனுசு குரு தசையில் முடியும். மீண்டும் மேஷத்தில் பாய்ந்து வரிசையாக மீனம் வரை முடியும். ஆக இந்த 10 நட்சத்திரங்களிலும் மொத்த ராசி மண்டலத்தில் 6 சுற்றுகள் முடிகின்றன. ஆக 72 தசைகள் ஆகின்றன. எனவே 10 நட்சத்திரங்களுக்கும் தசைகளா கின்றன. அடுத்து 5 நட்சத்திரங்களான பரணி, பூசம், சித்திரை,

பூராடம், உத்திரட்டாதி ஆக 5 நட்சத்திரங்களுக்கு அந்தந்த நட்சத்திர முதல் பாதத்தில் விருச்சிக குஜ தசையில் ஆரம்பித்து தலைகீழாக தனுசு வரை வரிசையாக வந்து அடுத்து மேஷத்தில் பாய்ந்து வரிசையாக மீனம் வரை வரிசையாக நடந்து அடுத்து விருச்சிகத்தில் பாய்ந்து மீண்டும் தலைகீழ் வரிசையில் தனுசு குருவரை முடிந்து 3 சுற்றுகள் 36 தசைகள் ஆகும். இதை 5 நட்சத்திரங்களுக்கும் சேர்ந்தால் 180தசைகள் ஆகின்றன. ஆக 15 நட்சத்திரங்களின் 60 பாதங்களுக்கும் 54 தசைகள் ஆகின்றன.

## அபசவ்ய நட்சத்திர தசை கிரமம்

அப சவ்ய நட்சத்திரங்களான மற்ற 12 நட்சத்திரங்கள் ரோகிணி, மகம், விசாகம், திருவோணம், திருவாதிரை, உத்திரம், கேட்டை,சதயம், மிருகசீரிஷம், பூரம், அனுஷம், அவிட்டம், ஆகியவற்றின் தசை கிரமம் வருமாறு. இவற்றில் ரோகிணி, மகம், விசாகம், திருவோணம் ஆகியவற்றின் தசைகள் பாதவாரியாக தனுசில் ஆரம்பித்து தனுசு குரு, மகரச்சனி என்று நேராக வலமாக விருச்சிகத்தில் முடிந்து திரும்பி மீனத்தில் பாய்ந்து தலைகீழாக இடமாக மேஷம் வரை வந்து மீண்டும் தனுசு ராசியில் பாய்ந்து வலமாக நேராக விருச்சிகம் வரை சென்று 36 தசைகள் முடியும். இவை மேற்படி 4 நட்சத்திரங்களுக்கும் 144 தசைகள் ஆகின்றன. அடுத்த அபசவ்ய நட்சத்திரங்களின் மீதி மிருக சீரிஷம், திருவாதிரை, பூரம், உத்திரம், அனுஷம், கேட்டை, அவிட்டம், சதயம் ஆகிய 8 நட்சத்திரங்களின் தசைகளின் பாதவாரி தசைகள் வருமாறு.

மீன குருவில் ஆரம்பித்து தலைகீழாக இடமாக சுற்றி மேஷம் வரை வந்து அதன்பின் தனுசில் பாய்ந்து நேராக வலமாக விருச்சிகம் வரை வந்து மீண்டும் மீனத்தில் பாய்ந்து தலைகீழாக இடமாக சுற்றி மேஷத்தில் முடியும். இப்படி 8 நட்சத்திரங்களுக்கும் 6 சுற்றுகள் அதாவது 72 தசைகள் ஆகின்றன. ஒரு நட்சத்திரத்திற்கு 36 வீதம் 8க்கும் 288 தசைகள்

ஆகின்றன. எனவே மேலே சொன்ன 144 தசைகளையும் சேர்த்து அபசவ்ய நட்சத்திரங்களுக்கு மட்டும் 432 தசைகள். இதனுடன் 15 சவ்ய நட்சத்திரங்களின் 540 தசைகளையும் கூட்ட மொத்தம் 972 தசைகள் ஆகின்றன.

## ஜீவ ராசி தேஹராசி

மேற்சொன்ன தசைகள் ஒவ்வொன்றுக்கும் ஜீவராசி, அதிபன், தேஹராசி அதற்கதிபனான தேஹாதிபன் (உயிர் இராசி, உடல் இராசி) என்பவை சொல்லப்பட்டுள்ளன. இவற்றில் ஒவ்வொரு தசையின் முதல் புத்தியின் ராசி அதற்கதிபன் ஆகியவையே தேஹராசி அதற்கதிபன் ஆகும். கடைசி புத்தியின் ராசி அதிபர்களே ஜீவ ராசி மற்றும் அதற்கதிபன் ஆகும். இவை, வலவோட்டு சவ்ய நட்சத்திர தசைகளின் புத்தியே தலைகீழாய் இடவோட்டு நட்சத்திர தசைகளின் புத்திகள் வருவதால் வலவோட்டு தசைகளின் உடலாகவும் உயிராகவும் இருப்பவையே. இடவோட்டு நட்சத்திர புத்திகளின் உயிர் இராசியாகவும், உடல் இராசியாகவும் மாறி வருகின்றன என்பதை அறியவேண்டும்.

## தேகம் ஜீவனின் பயன்

தேக ராசியில் அசுபர் இருந்து அசுபர் பார்த்து இப்படி பலவகை பாப சம்பந்தம் ஏற்பட்டாலோ அதற்கு அதிபனான கோள் அப்படி அசுபராசி அசுப கோள் பார்வை சேர்க்கை பெற்றாலோ உடலுக்கு நலிநோய், விபத்து, ஆயுட் பிரமாணம் முடிவு மாரகம் ஒத்து வந்தால் இறப்பு முதலியவை ஏற்படும். அந்த தேகராசி அதிபன் சம்பந்தப்பட்ட புத்திகளில் உடலைப் பற்றிய குறை கண்டம் துன்பம் முதலியவையே நடக்கும்.

மேலே சொன்னது போல் ஜீவராசி அல்லது அதிபனான கோள்கள் அதேபோல் பாப சம்பந்தம் மனதிற்கு கஷ்டம், புத்தி தடுமாற்றம் ஓயாத மனோதுக்கம் பிற வேண்டியவர் களுடன் மனப்பகை கடைபட்சத்தில் மாரகம் எல்லாம் ஏற்படும்.

மேற்படி இரண்டுவிதமான உடல், உயிர் இராசி அதிபர்கள், இராசிகள் சுப சம்பந்தம், பார்வை சேர்க்கை பெற்றால், உடல் இராசி சம்பந்தப்பட்ட புத்திகளில் ஆரோக்கியம், சுக சொகுசு சாதனங்கள், போக பாக்கியம் முதலியவை ஏற்படும்.

உயிர் சம்பந்தப்பட்ட ராசி, ராசி அதிபர்களின் புக்திகள் மேற்படி அமைந்தால் உல்லாசம், சந்தோஷம் எந்த நிலையிலும் மனதிருப்தி, விவாகம், உல்லாசப்பயணம், தனதான்ய சௌக்யம் எல்லாம் ஏற்படும். இப்படி உடல் சம்பந்தப்பட்ட புக்திகளில் சரீர சௌக்யம் அல்லது அசௌக்யம் இவையும் உயிர் சம்பந்தப்பட்ட புக்திகளில் மனதைப்பற்றிய நன்மை, தீமை, கவலை, சந்தோஷம் இவைகள் ஏற்படும்.

இதேபோல் கோசாரத்தில் கோள்கள் உடல் ராசி, இராசியதிபதி உயிர் இராசியதிபதி, பிறவி ஜாதகத்தில் இருக்கும் இடம், தற்கால கோசார காலத்தில் இருக்கும் இடம் இவற்றை சுபபலம் தரும் இடத்தில் (உதாரணத்திற்கு குரு ராசிக்கு 5ம் இடம் செல்லும் போல் அவன் ஜீவ சரீர அதிபர்களின் ராசி, தற்காலம், ஜென்ம கால நிலைகளைக் கடக்குமானால்) கோள்கள் கடக்குமானால் உடல் பற்றியோ உயிர் பற்றியோ தீய பலன்கள் நடக்கும். இதில் 7½ ஜன்ம சனி, அல்லது 3ல் அல்லது ஜென்ம குருவான காலத்தில் அசுப மாரகாதிபதிகள் கடக்குமானால் மரணம் வரை தீமைகள் நடக்கும் என்று எதிர்பார்க்கலாம். இதன் விரிவை எல்லாம் இன்னும் நுட்பமாக தனி நூல்களில் கண்டு கொள்ளலாம்.

ஒவ்வொரு காலச்சக்கர தசைகள் ஒவ்வொன்றின் புத்தி வாரியாக ஜோதிடக்களஞ்சியம், வடமொழி குரு நாடி, முதலியவற்றில் எல்லா தசை புத்திகளுக்கும் பலன் கூறப்பட்டாலும், மகாலின் மூலம் காலச்சக்கரம் என்ற கால சக்கர தசைக்குப்பலன் கூறும் நூல் வந்துள்ளமையால் வேண்டுவோர் அதன் மூலம் விரிவான பலனைக்கண்டு கொள்ளலாம்.

## கர்ம விபாகம்

கர்ம விபாகம் என்று ஆய்வு முன்னுரையில் குறிப்பிட்டுள்ள செய்தியின் வரலாறு. கர்மம் என்பது ஒருவன் முற்பிறவியில் செய்த தீவினையைக் குறிக்கும். விபாகம் என்பது அதனால் இப்பிறவியில் எப்படி அவன் அதற்கான துன்பம் பலன் பெறுகிறான் என்பதையும் அதற்கு எப்படி எவ்வகையான பரிகாரம் செய்து போக்கிக் கொள்ளும் வகையையும் குறிப்பதாகும்.

வடமொழியில் சிவபெருமான் பார்வதிக்கு உபதேசித்த வகையில் கர்மவிபாகம் என்ற நூல் உண்டு. இதில் ஒவ்வொரு நட்சத்திரத்தின் ஒவ்வொரு பாதத்தில் பிறந்தவர்கள் தன்மை முதலியவையும், அடுத்து ஒவ்வொரு பாதத்திலும் பிறந்தவர்கள் முற்பிறவியில் செய்த பாவம் முதலியவையும், அவற்றால் பரிகாரங்களும் கூறப்பட்டுள்ளன. இதில் நட்சத்திர பாதவாரியாக அவரவர் வரலாறு எல்லாமே ஒன்றாக இராது. இருப்பினும் அந்த வகையில் அவர்கள் வேறு தீவினை செய்திருப்பார்கள். ஆனால் அந்தந்த நட்சத்திர பாதத்திற்குச் சொல்லப்படும் பரிகாரங்களை மட்டும் பண்ணினால், அந்தந்த நட்சத்திர பாதக்காரர்கள் நலம்பெறுவர் என்று கொள்ள வேண்டும். எனவே எல்லோரும் இவ்வகையில் பயன் பெறவே கர்ம விபாகத்தின் சாரமான பகுதிகள் இங்கு எழுதப்பட்டுள்ளன.

## மாதர் சாதகப்படி நட்சத்திர பலன்

இப்பகுதியும் இதுவரை வெளிவராத குறிப்புகளைக் கொண்டு வெளிவருகிறது.

வடமொழியில் உள்ள ஸ்திரீ ஜாதகம் நூலிலிருந்து மற்ற பிற நூல்களிலிருந்தும் 27 நட்சத்திரங்களில் பிறந்த பெண்களுக்கும், பொதுவான பலன் எழுதப்பட்டுள்ளது. இதுவன்றி அதிவீரராம பாண்டியனார், வடமொழியில் சங்கராச்சாரியார் எழுதியதாகக் கூறப்படும் மதனநூல்

என்பதனைத் தமிழ்ப்பாடல் வடிவில் பாடியுள்ளார். இந்த சிறப்பான பலனையும் அந்தந்த நட்சத்திரப் பெண்களுக்குப் பாடலுடன் விளக்கியுள்ளோம். அந்த மதனநூல் பற்றி சில முக்கிய செய்திகளையெல்லாம் வாசகர்களும் பொதுவாக அறியவேண்டி உள்ளதால் அவற்றை இங்கு ஆராய்ச்சி முன்னுரையில் கூறுகிறோம்.

## மதன நூல்

**சங்கராச்சாரியார், அதிவீரராம பாண்டியனார் பாடியது.**

இது அதிவீரராமபாண்டியனும் அவர் தமையனார் வரதுங்க ராமபாண்டியனார் பெயராலும் வழங்கும் கொக்கோக நுட்பம், கொக்கோக சாத்திரம், மதன நூல் என்ற பல நூல்கள் தமிழில் (இப்பொழுது அச்சில் இல்லாதவை) காணப்படுவதிலிருந்து, நட்சத்திரங்களுக்கு மட்டும் கூறியவற்றை இங்கு எழுதப்படுகிறது.

## கொக்கோக மதன நூல்

**கலி விருத்தம்**

இயல்பி னால்வரு மெண்வகை தத்துவப்
பயனையும் வருநாளிற் திதியையும்
வியனில் மெல்லியர் விகற்பம் யாவையும்
பயனுறுவார்கள் பார்த்திடக் கூறுவாம். (1)

27 நட்சத்திரங்களில் பிறந்த பெண்களின் இயல்பு குணம் இவை அவற்றிற்கேற்ப எட்டுவகை தத்துவங்களில் பிறந்தவராகக் கருதப்பட்டு பிரிக்கப்பட்டுள்ளது. இப்படிப் பட்ட பெண்களின் இயல்பையும் இவர்களைச் சேர்தலால் வரும் இன்பக் கூறுபாடுகள் முதலியவற்றையும் இப்பொழுது கூறுவேன்.

தெய்வ மாமுனி யோடு சிறந்தசீர்
ஒய்வில் நாகம் புகழ்காந் தருவமும்

வெய்ய பூதம் அரக்கி இயக்கிபேய்
தையல் தத்துவம் எட்டெனச் சாற்றுவாம். (2)

பெண்கள் பிறந்த நட்சத்திரப்படி தெய்வ தத்துவம், முனி தத்துவம், நாகதத்துவம், கந்தருவ தத்துவம், பூதத் தத்துவம், அரக்கி தத்துவம், இயக்கி தத்துவம், பேய் தத்துவம் ஆகிய இவ்வெட்டு தத்துவங்களின் கீழ் பிறக்கின்றனர்.

உத்திர மோணமுத் திரட்டா திதெய்வ
மத்த மாதிரை ரோகணிமக சிரமுனி
ஒத்த புராடம் சோதிவிசாக மாயிலியம் நாகம்
கைத்த அசுபதி அவிட்டநாள் காந்தருவ மாதே. (3)

27 நட்சத்திரங்களில் உத்திரம், திருவோணம், அனுஷம், உத்திரட்டாதி இந்த நான்கு நட்சத்திரங்களும் தெய்வ தத்துவமாகும். அஸ்தம், திருவாதிரை, ரோகிணி, மிருகசீரிஷம் இந்த நான்கும் முனி தத்துவமாகும். பூராடம், சுவாதி, விசாகம், ஆயில்யம் இவை நான்கும் நாக தத்துவமாம். அசுவினி, அவிட்டம், சதயம் இம்மூன்றும் காந்தர்வ தத்துவமாகும்.

பூரண நாளுடனே மூலம் ரேவதி பூதமாகும்
சீரிய பரணியோடு சித்திரை மகம ரக்கி
காரிய கேட்டை பூரட் டாதிகார்த்திகை இயக்கி
பாரிய புனர்பூசம் பகரு முத்திராடம் பேயே. (4)

மூலம், பூரம், ரேவதி இம்மூன்றும் பூத தத்துவமாகும். பரணி, சித்திரை, மகம் இம்மூன்றும் இயக்கி தத்துவமாகும். கேட்டை, பூரட்டாதி, கார்த்திகை இம்மூன்றும் அரக்கி தத்துவமாகும், புனர்பூசம், பூசம், உத்திராடம் இம்மூன்று நட்சத்திரங்களும் பேய் தத்துவமாகும். இதில் செம்மையான திறம் கொண்டவை தெய்வ தத்துவமாம். மாநிறம் முனி தத்துவத்துக்குரியது. பூத தத்துவமும் இதே நிறமாம். நாகம், காந்தருவம், இயக்கி ஆகிய தத்துவப் பெண்கள் கருநிறமுள்ளவர்கள் ஆவர்.

## மேலே சொன்ன பாடல்களின்படி தத்துவ வகையும் நட்சத்திரங்களும்

1. தெய்வ தத்துவம்: உத்திரம், திருவோணம், அனுஷம், உத்திரட்டாதி ஆக நான்கு

2. முனி தத்துவம்: அஸ்தம், திருவாதிரை, ரோகிணி, மிருக சீரிஷம் ஆக நான்கு.

3. நாக தத்துவம்: பூராடம், சுவாதி, விசாகம், ஆயில்யம் ஆக நான்கு.

4. காந்தருவ தத்துவம்: அசுவினி, அவிட்டம், சதயம் ஆக மூன்று.

5. பூத தத்துவம்: மூலம், பூரம், ரேவதி ஆக மூன்று.

6. அரக்கி தத்துவம்: பரணி, சித்திரை, மகம் ஆக மூன்று.

7. இயக்கி தத்துவம்: கேட்டை, கார்த்திகை, பூரட்டாதி, ஆக மூன்று.

8. பேய்த் தத்துவம்: பூசம், புனர்பூசம், உத்திராடம் ஆக மூன்று.

## தெய்வ தத்துவப் பெண்களின் பொது லட்சணம்

வில்லெனப் புருவம் கண்கள் வேலெனக் கூர்மை யாகும்
கல்லென நெஞ்சாம் வலிவி காயமே சிவந்தி ருக்கும்
மெல்லென நடையும் பார்வை மெத்தெனக் கீழே நோக்கும்
இல்லையா மிடை யு முற்ற இவள்தெய்ப் பெண்ண தாமே. (5)

வேலெனும் கூர்மையான பார்வையும், வில்லைப் போன்ற வளைந்த புருவமும் உள்ளவள். கல்லென அசைக்க முடியாத தைரியமான நெஞ்சம் கொண்டவள். இவள் சிவந்த நிறமுள்ளவளாக இருப்பாள். மென்மையான அசைந்த நடையும், நாணத்துடன் கீழ்நோக்கு பார்வையுமுடையவள். இவளுக்கு இடுப்பு இல்லையோ என்னும்படி மெல்லிதாக இருக்கும். இவள் தெய்வ தத்துவத்தைச் சார்ந்தவள்.

திருவினாள் உருவ மொத்த சிவந்த பொன் நிறத்த
பருகுதேன் அமுத மொத்த பயன்பெறும் இனிய சொல்லாள்
வெருகுரு புணர்ச்சி செய்யு மெல்லிய வல்லி யாகும்
தெரிவுறு புணர்ச்சி செய்யும் தெய்வதத் துவத்தி னாளே. (6)

மேலும் இவள் திருமகள் போன்று அழகிய உருவமுள்ளவள். சிவந்த பொன்னொத்த மேனி உள்ளவள். பருக இனிக்கும் தேன் போன்ற ஆனால் பயனுள்ள வார்த்தையுள்ளவள். (வீண் வம்பு, பயனற்று வளவள எனப் பேசமாட்டாள் என்பதாம்) களவுப் புணர்ச்சியிலும், கலியாணமான பின் மதன லீலையாம் காம கரண வகை புணர்ச்சியிலும் விருப்பமும் மகிழ்ச்சியும் தருபவள்.

செய்யவாய் சிவந்த கைகால் தேனமு தனைய சொல்லாள்
நொய்யவே மேனி நேர்ந்து நுண்ணிடை வடிவேற் கண்ணாள்
மெய்யன்றி பொய்யை மேவாள் மெய்யையும் பரும னல்லாள்
செய்வினை திருந்தச் செய்யும் தெய்வதத் துவத்தி னாளே. (7)

இவள் சிவந்த வாயும், சிவந்த கை கால்களும் உடையவள். தேனும் அமுதமும் போன்ற சொல்லாள் இனியவள். எளிமையும் மென்மையும் கலந்தவள். நுண்ணிய வேல் போன்ற கண்கள். சத்தியமே பேசுபவள். பருமனும், தடிமனுமல்லாத கச்சிதமான உடல் வாகுள்ளவள். செய்வதை எல்லாம் திருந்தச் செய்யும் இயல்பினையுடையவள்.

## முனி தத்துவ நட்சத்திரங்களில் பிறந்த பெண்களின் இலட்சணங்கள்

சாலவே கால்க ளொத்து சடக்கென எழுந்தி ருக்கும்
வேலவே விழிகள் கொல்லும் மெல்லிய வல்லியாகும்
மாலவே விளிக்கும் போது வசியமே உடைய ளாகும்
கோலமாம் சிவப்பு மேனி கூர்முனி இன்பப் பெண்ணே. (8)

முனி தத்துவத்தில் பிறந்தவள் கால்கள் ஒரு அளவாக எழுந்தும், விரைந்தும் நடப்பவள். இவள் பார்வையின்

மயக்கம் ஆணைக் கொல்லுவதாகும். இளங்கொடி போல் இருப்பாள். தன் கணவனைக் கொஞ்சி அழைக்கும்போது, தான் அவனை வசப்படுத்திக் கொள்வாள். அழகான மேனி வாகு கொண்டவள். சென்னிறமும் உள்ளவள்.

**மாந்தளிர் அனைய மேனி மதிமுகம் வடிவம் தூய்யான்**
**ஏந்திய நளினக் கொங்கை இடைமெலிந் தொட்கச் சோரும்**
**காந்தளின் மலர்கள் போலக் கைவிரல் கழுத்து நீளும்**
**மாந்தரின் இச்சை யாகும் மாமுனி மங்கை தானே. (9)**

இவள் மாந்தளிர் போல் சிவந்த மெல்லிய மேனி உள்ளவள். பூரண சந்திரன் போன்ற முகமும், புனித வடிவழகும் உள்ளவள்.மேல் நிமிர்ந்த செழிப்பான மார்பகங்களும் அதைத் தாங்கிய வாடி மெலிவது போன்ற மெல்லிய இடையுடையவள். காந்தள் மலர் போல் கைகால் விரல்கள் எல்லாம் மெல்லிதாக உடையவள். நீண்ட கழுத்துள்ளவள். எந்த ஆண் பார்த்தாலும் இச்சைப்படும் அளவுக்கு அழகியவள்.

**செவ்விளந் தளிர்போல் மேனி திரண்டதாள் உருண்ட தோளால்**
**கோவ்வைவாய் குமிழின் மூக்கும் குனிசிலை புருவ மாகும்**
**நவ்விபோல் நவின்ற கண்ணாள் நளினமொட் டனைய கொங்கை**
**இவ்வுரு வுடைய ளாகும் இருடிதத் துவத்தி னாளே. (10)**

முனி தத்துவத்தில் பிறந்தவள் இளந்தளிர் போல் மேனி மென்மையானவள். திரண்டுருண்ட தொடை கால்கள் உடையவள். கொவ்வைக் கனி போன்ற சிவந்த இதழுடையவள். குமிழ் போன்ற சிறிய மூக்குடையவள். வளர்ந்து குவிந்த தாமரை மொட்டைப் போன்ற இளம் மார்பகமுடையவள். இப்படி பெண்ணின் அழகெல்லாம் பலவகையிலும் பெற்றவள்.

**சிவந்தவாய் சிவந்த கண்கள் செந்தளிர் மாவின் மேனி**
**குவிந்தவெண் முலையாள் கூந்தல் சுருண்டிரும் குணத்த ளாகும்**
**அவம்பட உரையாள் என்றும் அரும்பிய அழுத்து சொல்லாள்**
**தவமென விரும்பி நிற்பாள் தவமுனி மங்கை தானே. (11)**

இவள் வாய் கண் இவை சிவந்திருக்கும், மாந்தளிர் போன்ற மேனியள். அப்பொழுது தான் பருவத்தால் வளர்ந்து குவியும் அழகிய மார்பகத்தாள், சுருண்ட கூந்தல் உள்ளவள். பயனற்ற சொற்கள் எதையும் பேசமாட்டாள். இவளை அடையும் ஆண்மகன் என்ன தவம் செய்தானோ என்று வியக்கும் வண்ணம் இப்படி பெண்மையின் நலமெல்லாம் ஒருங்கே பெற்றவளாய் முனி தத்துவத்தில் (நட்சத்திரங்களில்) பிறந்தவளாவாள்.

மங்கையும் மெய்பூ ரித்து வளர்கொங்கை தெங்கு நேர்ந்த
நங்கையும் உடைய தாகி சருவுதல் மிகவும் வேண்டி
பங்கயக் கைகக ளுற்று பரவிய கிரண முற்ற
திங்கள்போல நுதலே யுள்ளாள் சிறுமுனி மங்கை தானே. (12)

இவள் பூரித்த உடலும், அதற்கேற்ப அளவில் உருவிற் பெரிதான இளநீர் போன்ற உருண்டு திரண்ட மார்பகம் உடையவளாகவும், காமப் புணர்ச்சியில் அதிகம் விருப்பமுடையவளாகவும், சந்தேகப் பிராணியாகவும், கைகால்கள் தாமரை போன்றவளாகவும், உடலில் ஒருவகை ஒளி வீசும் நெற்றியுடையவளாகவும் முனி தத்துவ நட்சத்திரங்களில் பிறந்தவள் இருப்பாள் என்பதாம்.

மிக்குறு வளர்ச்சி கொண்டு மிகைபட உரையாள் மேனி
சிக்கெனத் தெளிந்த சிந்தை சிறுநகை செய்யும் கோரி
தக்கவர் கூட்டம் பேணும் சற்குரு நோக்கா துண்ணார்
இக்குண முடைய ளாகும் இருடிதத் துவத்தி னாளே. (13)

இவள் நல்ல செழித்த வளர்ந்த தேகமுள்ளவள். அளவுக்கு மேல் பேசமாட்டாள். நல்ல சிக்கறுத்து தெளிவு காணும் சிந்தையுள்ளவள். பெரியோருடைய நட்பை விரும்புபவள். சிறுநகை கொண்ட முகமுள்ளவள். ஆனால் சிறிது கோபமும் உள்ளவள். கடவுளையும் குருவையும் வணங்காமல் உண்ணமாட்டாள். இப்படிப்பட்டவளே முனி தத்துவ நட்சத்திரங்களில் பிறந்தவளாவாள். இவள் தனக்கு தகுதியான கணவனுடன் சேரும் தன்மையுள்ளவள்.

## நாக தத்துவ நட்சத்திரங்களில் பிறந்த பெண்களின் லட்சணங்கள்

**அங்கமும் விரலும் நீளம் அரைவெகு நுண்ணி தாகும்**
**கொங்கையும் குரும்பை தானே குமிழென மூக்கும் செவ்வாய்**
**இங்கிவை உடைய ளாகி தளர்நடை கண்சு ழற்றும்**
**நங்கையும் நகைக்கும் பண்பாள் நாகதத் துவத்தி னாளே. (14)**

நாக தத்துவ நட்சத்திரத்தில் பிறந்தவள் கைகால் விரல்கள் நீண்டவை. இடை மெலிதாக இருக்கும். மார்பகம் தென்னங்குரும்பை போல் சிறிதாக அழகானவை. இவள் நடை தளர்ந்து அசைந்து நடக்கும். கண் எல்லா பக்கமும் சுழலும், புன்முறுவல் செய்யும் முகத்தினாள் இவள்.

**பொன்தரும் முலையும் தோளும் பொலிவின நகையும் மெய்யும்**
**உன்றிய திரட்சி யுண்டாம் யோனியும் பெரிய தாகும்**
**தன்தலைக் குனிந்து பாரில் நடக்கும்கண் சுழற்றி நோக்கும்**
**நன்னுசேர் புலவர் சொன்ன நாகதத் துவத்தி னாளே. (15)**

இவள் மார்பகம் தங்கச் செப்பு கவிழ்ந்தது போன்ற பொன்னிறமும் மென்மையும் கொண்டவையாகும். ஒளிவீசும் உடலும், புன்முறுவலும் உடையவள். இவள் யோனி (குறி) மெத்தென உயர்ந்து பெரிதாக இருக்கும். குனிந்த தலை நிமிராமல் நடப்பவள். சுழன்று பார்க்கும் மருட்சியான கண்களையுடையவள் நாக தத்துவத்தினளாகும்.

**குறிப்பு:** ஆணுக்கு இன்பம் தரும் பெண்ணின் உறுப்பு இவளுக்கு உயர்ந்து சதைப்பற்றுடன் பெரிதாக இருக்கும் என்பதால், மற்ற தத்துவ பெண்களைக் காட்டிலும் இந்த விதத்தில் இவள் ஆணுக்கு அதிக இன்பம் பயப்பவள் என்று கொள்ளவேண்டும். மற்ற தத்துவங்களில் இவ்வருணனை இல்லை என்பது காண்க.

அருகிய மழலைச் சொல்லாள் அகங்கண் டஞ்சாள கூசாள்
உருகிட நேர்ந்திட் டொல்கி உள்ளுற வளைந்த கண்டம்
சொரிகுழல் நெகிழும் நீளும் துள்ளிய நடைய ளாகும்
உருகிடாள் மெய்யும் பேசாள் உரகதத் துவத்தி னாளே. (16)

இவள் கொஞ்சிப் பேசும் மழலையுள்ளவள். வீட்டில் யாரிடமும் அஞ்சமாட்டாள். இவளைக் கண்ட பிறர் உருகும் வண்ணம் அசைந்து கழுத்தை நீள அசைத்து நடப்பவள். இதனால் இவள் நடை அசைவுக்கேற்ப இவளுடைய கூந்தல் நெகிழ்ந்து நீண்டு பின்பாகம் எடுப்பாகத் தோன்ற இருபக்கமும் ஆடி அசையும் தன்மையுடையதாம். இவள் நடை துள்ளி நடனமிடும், கவரும் வகையில் இருக்கும். உண்மை அதிகம் பேசுபவள். இரக்கம் இராது.இவளே நாக தத்துவ நங்கையாகும்.

உறக்க மிக்கவள் நெட்டுயிர்ப் பாக்குவள்
மிறைதுச் சோம்பி கொட்டாவி விடுகுவாள்
இறைக்கணும் நிலையின்றி சுழலுவாள்
சிறக்கும் நாகர்தம் சேயிழை என்பவே. (17)

இவள் அதிகம் தூங்குபவள். நெடுமூச்சு விடுபவள். கையை நீட்டிமுறித்து கொட்டாவி விடுபவள். ஒரு கணமேனும் நிலை கொள்ளாமல் சுழன்ற நடையும், தன்மையும் உடையவள். இவளே நாக தத்துவப் பெண்ணாகும் என்பதாம்.

## காந்தருவ தத்துவ நட்சத்திரங்களில் பிறந்த பெண்களின் லட்சணங்கள்

ஒருமுலை பருத்தி ருக்கும் ஒருமுலை சிறுத்தி ருக்கும்
சருகவள் கலபால் தின்றும் தாவியே கிட்டிச் செல்வாள்
முருகவிழ் குழலா ளாகும் முன்பின்நேர் அறியா ளாகும்
கரமது நெரித்து நிற்கும் காந்தருவத் தன்மை யாளே. (18)

காந்தருவ தத்துவத்தில் பிறந்தவளுக்கு ஒரு மார்பகம் பெரிதும், மற்றது சிறியதாகவும் இருக்கும். கீரை வகை உணவில் மிகப் பிரியம் உள்ளவள். யாரிடத்திலும் ஒரு கணத்தில் அச்சமின்றி விரைந்து செல்பவள். வாசம் வீசும் மெல்லிய கூந்தல் உள்ளவள். முன்னும் பின்னும் நேராகவும் யார் இருக்கிறார்கள் என்பது தெரியாமல் அச்சமின்றி செல்பவள். அடிக்கடி கை கால்களை நெரித்து சோம்பல் முறிப்பவள் என்பதாம்.

சுரும்புறுங் குழல்க ளொல்கி சுருண்டுடல் நயனம் நீண்டு
குரும்பைபோல் பணைத்த கொங்கை கொடியர விந்த மல்குல்
பெருந்துடை பெரிய ளாகும் பெரும்பிடி நடைய ளாகும்
கரும்புபோல் இனிதாய்ப் பேசும் காந்தரு வத்தி னாளே. (19)

வண்டு மொய்க்கும் வாகுக் கூந்தல் அசைய நடப்பவள். நடக்கும்போது உடல் நெளிய நடப்பாள். கண்களைச் சுழற்றி நடப்பாள். தென்னைக் குரும்பை போல் பருத்த மார்பகம் உள்ளவள். இவள் பெண் குறி தாமரை மொட்டு போன்று திரண்டு மெத்தென்றிருக்கும். தொடை பெரிதாகவும் உடல் வாகும் செழுமையானதாகவும் பெரியதாகவும் (மருவும் ஆணுக்குப் பெரிதும் இன்பம் செய்யும் வகையில்) இருக்கும். இவள் நடை பெண் யானை நடந்து வருவது அசைந்து அசைந்து நகருவதாக இருக்கும். இவள் பேச்சு கரும்பு போல் இனிப்பதாக இருக்கும். இவளே காந்தருவ வகை மாதாவாள்.

**குறிப்பு:** நாக தத்துவப் பெண்ணுக்குச் சொன்னது போலவே இவள் உறுப்பும் பெரிதாக இல்லாமல் மெத்தென்று மென்மையாக ஆணுக்கு அதிக இன்பம் செய்வதாக இருக்கும் எனப்பட்டது.

சிறுநுதல் புருவ நோக்கில் சிலையெனக் குனித்தி ருக்கும்
செறிதரு மழலை இன்சொல் செவ்விள நீர்போல் கொங்கை
அறுதிகள் உடையாள் சால அன்பருக் கன்பு நல்லாள்
கறிநெய்பால் அணைய உண்பாள் காந்தரு வத்தி னாளே. (20)

இவள், வில் போன்று சிறிய வளைந்த புருவம் உள்ளவள். பார்வை கவர்ச்சி உண்டு. அடுக்கடுக்காகக் கொஞ்சிப் பேசும் மழலை போன்றவள். செவ்விளநீர் போல் சிவந்த பெருத்த ஆனால் மென்மையான சதைப்பற்றுள்ள மார்பகமுடையவள். எதிலும் கண்டிப்பானவள். தன் கணவனுக்கு அதிக இன்பம் தருபவள். பலவகை காய்கறி, நெய், பால் முதலியவற்றுடன் வகை வகையாக உண்பவள். இவள் காந்தருவ மாதாவாள்.

## பூத தத்துவ நட்சத்திரங்களில் பிறந்த பெண்களின் லட்சணங்கள்

**பருந்தலை உயர்ந்த பல்லும் பணைமுலை பருத்தி ருக்கும்**
**உருமிக பெருங்கண் நோக்கும் ஊணது குறைய உண்ணாள்**
**கருகிடப் பருத்த கைகால் காணவே வளைந்தி ருக்கும்**
**பெறுமைதான் சிறிது மில்லை பூதத்த் துவத்தி னாளே. (21)**

பூத தத்துவத்தில் பிறந்த பெண் பெரிய தலையும், தூக்கிய பல்லும் உடையவள். இவள் மார்பகங்கள் பருமனாய் அழகற்றவையாம். பயமுறுத்தும் பெரிய கண்ணால் பார்ப்பவள். நிறைய குறையாமல் உணவு உண்ணும் பெருந்தீனிக்காரி இவள். கை, கால்கள் நிறம் கருத்து வளைந்தவையாக இருக்கும். பொறுமை என்பது கொஞ்சம் கூட இல்லாதவள் இவள் என்பதாம்.

**பிடித்திடும் அடிக்கும் பேசும் பெருகிடப் பிணங்கும் கொண்கன்**
**கடித்திடும் கலவிக் காகாள் கண்டது களவாய் கொள்வாள்**
**நடித்திடும் நயந்த சொல்லாள் நயப்பில்லாள் பொய்யும் பேசும்**
**தடித்திடும் துக்கத் தோடே தன்மையை ஒழிய என்றாள். (22)**

இவள் கணவன் உட்பட அருகில் உள்ளவரை அடித்து வெடிப்பாள். உரக்கப் பேசிச் சண்டை செய்வாள், பிணங்கிடுவாள். கணவன் சேர வரும் போது கடித்து குதறுவாள். கலவிக்கு இவள் பயன்படமாட்டாள். வீண் நடிப்புதான். உண்மையில் இவளுக்கு நயம், மென்மை,

இரக்கம் என்பவை இல்லை. இவள் பேசும் குரலும் ஓங்கி இருக்கும். தடித்தனமுள்ளவள். இவள் பூதத்தத்துவ பெண்ணாவாள் என்பதாம்.

கண்கள் பெருக குறடுயர்ந்த
கால்தான் குறுகி உடல் பருத்து
வெண்பல் உயர்ந்து வாய்குறுகி
மெல்லப் பேசாள் குரல் முழக்கி
உண்ப தளவில் குறையா தாள்
உடுக்க வரிசை இல்லாதாள்
பெண்கள் உறவே இல்லாதாள்
பெரிய பூத தத்துவமே. (23)

இவள் கண்கள் பெரிதானவை குதிகால் உயர்ந்து (குதித்து நடப்பாள்) பல் உயர்ந்து வெளித்தோன்றும். ஆனால் வாய் சிறிதாகும். மெதுவாகப் பேசமாட்டாள். இடிபோல் குரல் முழக்குவாள். அளவில் குறையாமல் உண்ணும் பெருந்தீனிக்காரி. பெண்களிடமே சண்டை போட்டு உறவை முறித்துக்கொள்பவள். உடை வக்கணை யாக அணியமாட்டாள். பொருந்தாத உடை அணிபவள்.

## இயக்கி தத்துவ நட்சத்திரத்தில் பிறந்த பெண்களின் லட்சணங்கள்

அறவெளு உறக்க முள்ளாள் ஆக்கையும் நெடிய ளாகும்
குறைவிலா வடிவே யாகும் கொங்கையும் செப்பே யாகும்
மறமிக உடைய ளாகும் வார்த்தையும் இனிதாய்ப் பேசும்
மிறைவிரல் மிகவும் நீளம் இயக்கிதத் துவத்தி னாளே. (24)

இவள் அதிகம் தூங்குபவள். வளர்ந்த உடல் வாகு உள்ளவள். வடிவம் குறைவின்றி அழகாய் இருக்கும். இவள் மார்பகம் குடம் போன்று உருண்டு திரண்டிருக்கும். தர்ம சிந்தனை உடையவள். இனிதாய்ப் பேசுபவள். நீண்ட விரல்கள் உள்ளவள். இயக்கி தத்துவப் பெண் என்றறிக.

மறுவுறு மேனி நல்லாள் வந்தடைந் தாரைப் பேணும்
பெருகிய புருவ மோடு பிணக்குகள் உரைப்ப ளாகும்
வெருவுறு உருவ மிக்காள் வெளிப்படும் தந்த முள்ளாள்
இருநிதி ஏதும் வேண்டாள் இயக்கித்த் துவத்தி னாளே. (25)

கணவன் அணைத்து மருவ இனிக்கும் உடல் மென்மை உடையவள். தன்னிடம் வந்தாரை இவள் பாதுகாப்பாள். பேசுவதில் சண்டையும் முரண்பாடுகளும் இருக்கும். புருவங்கள் பெரிதானவை. பார்த்தால் அஞ்சத்தக்க பெரிய உருவமுடையவள். வாயிலிருந்து நீட்டிக்கொண்டு தோன்றும் பற்கள் உள்ளவள். பணம் செல்வத்தில் ஆசை வையதாவளாகவும் இருப்பவள் இயக்கி தத்துவத்தில் பிறந்தவளாவாள்.

செறியளி ஒலித்த குஞ்சி செய்திடும் தவம்கெ டுப்பாள்
நெறிநரு முல்லை யாம்பல் நொய்யவாய் பவள மொப்பாள்
செறிவிலாள் புறமு ரைக்கும் சிறுமுழங் காலும் கையும்
எறிகனல் மெழுகை யொப்பாள் இயக்கித்த் துவத்தி னாளே.(26)

செறிந்த வண்டினம் ஒலிக்கும் கூந்தலும் அழகும் உள்ளவள். முல்லையைப் போல் வரிசைப் பல்லும், ஆம்பல் போலும் வாயும், பவளம் போல் இதழும் உள்ளவள் இவள். தன் அழகால் தவம் செய்வோர் தவத்தையும் கெடுக்கும் வண்ணம் மயக்குவாள். திடமான மனத்திண்மை இல்லாதவள். பிறரைப் பற்றிக் கோள் சொல்பவள். கை, கால், முழங்கால் இவை குட்டையாய் இருக்கும். எரியும் கனல், மெழுகை உருக்குவது போல கோபத்தால் பிறரை பாதிப்பாள். இப்படிப்பட்டவள் இயக்கி தத்துவத்தினைச் சேர்ந்த பெண் என்பதாம்.

## அரக்கி தத்துவ நட்சத்திரத்தில் பிறந்த பெண்களின் லட்சணங்கள்

நகைபல உடைய ளாகும் நடையில்ஆங் காரம் பேசும்
வகைதனை அறிய மாட்டாள் மடந்தையும் உயர மாகும்

பகைதனை அறிந்தும் மிக்க பயந்தனை அறியாள் வேற்கை
தகைமையும் பொறுக்க மில்லாள் தத்துவ அரக்கி தானே. (27)

அரக்கி தத்துவத்தின் நட்சத்திரத்தில் பிறந்த பெண் பல காரணங்களால் சிரிப்பாள். கர்வத்துடன் நடப்பாள். ஆங்காரத்துடனும் பேசுபவள். உயரமாக இருப்பாள். பகையினை அதன் வலுவினை அறிந்தும் அஞ்சாதவள். பிறர் கொடுமையை சிறிதும் பொறுக்காதவள் என்பதாம்.

கரங்களும் நெடிய தாகும் கையோடு காலும் சால
பரல்களும் பெரிய தாகும் பணைத்தெழும் கொங்கை விம்மி
நிரங்களிற் புருவ மாகும் நெற்றி முன் உயர்ந்தி ருக்கும்
அரியமுன் னெதிரே நோக்கும் அரக்கித் துவத்தி னாளே. (28)

நீண்டு பருத்த கை கால்கள், உப்பிய புறங்கால் பாதங்கள் உடையவள். அளவுக்கு மீறி பணைத்து நிமிர்ந்து பருத்த மார்பகமுடையவள். நெருங்கிய புருவமும் உயர்ந்த முன்னெற்றியும் உடையவள். தைரியமாக எதிரே நோக்கி நிமிர்ந்து நடப்பவள். இவ்வகையாள் அரக்கி தத்துவத்தாள் ஆகும்.

அரக்கியே கடின மாகும் அலறிய குரல்கள் செய்யும்
விருப்பமாய் பிறரை நாடும் வீரபோ கந்தான் முந்தக்
கரிந்திட அடங்காள் கூசாள் கருதுவாள் சதிராம் காலம்
கருத்துடன் தனக்கு வல்லாள் கருமமே நாடிச் செய்வாள்
அருக்கியங் குறவு செய்யும் அரக்கிதத் துவத்தி னாளே. (29)

குறிப்பு: இச்செய்யுள் ஒரு அடி அதிகமாக இலக்கணம் மீறி வந்தது காண்க.

இவள் உண்மையில் அரக்கியேயாவாள். அலறிப் புடைக்கும் குரல் உள்ளவள். தான் விரும்பியபடி பிறரை ஏற்பாள். புருஷனுடன் கலவியில் தான் திருப்தி படாவிட்டால், சகிக்கமாட்டாள். (ஆண் முதலில் உச்சகட்டம் அடைந்து ஓய்ந்துவிட்டால்) கூச்சம் இல்லாதவள்.

தன்னிஷ்டப்படியே நடப்பாள். தன்னிச்சைப்படியே எதையும் செய்ய முற்படுவாள். தானே முன்னால் மேல் விழுந்து பிறருடன் கூச்சமின்றி உறவு, சினேகம் பாராட்டுவாள் என்பதாம்.

**கரியவாய் பெரிய ளாகும் கருணையங் கொடுபா வில்லை**
**பரியென நடைய ளாகும் பணைத்தெழு கடிகைக் கொங்கை**
**நெரியவேல் புருவ மாகும் நெற்றியு முயர்ந்தி ருக்கும்**
**அரியைப்போல் இடைய ளாகும் அரக்கித்த் துவத்தி னாளே. (30)**

இவள் வாய் இதழ் (சிவப்பன்றி) கருத்திருக்கும். பருத்த பெரிய உருவமுடையவள். பருமனான மென்மையற்ற கடினமான மார்பகம் கொண்டவள். நெருங்கிய வேல் போன்ற கண்களும் புருவமும் உடையவள். உயர்ந்த நெற்றியும் சிங்கத்தின் இடுப்பைப் போன்று (தடித்த) இடுப்புமுடையவள்.

**அரியசை வலம்போல் கூந்தல் அலறிய குதலை பேசும்**
**விரல்கள்கால் அறவு நேர்த்து வெகுமோகம் அடங்காள் அஞ்சாள்**
**சரசங்க ளாலே தானும் காமுகம் தனக்கு வல்லாள்**
**அரிஇருள் வேகம் தீராள் அரக்கித்த் துவத்தி னாளே. (31)**

இவள் கூந்தல் பாசி போன்று இருக்கும். இவள் கொஞ்சிப் பேசுவதே அலறலாக இருக்கும். விரல்கள் கால்கள் மெலிந்திருக்கும். காமமும் மோகமும் மிகவும் உடையவள். இரவில் தனக்கு நிகரான வலிமையான காமமுள்ள புருஷனாக இருந்தால் தான் அடங்கி இன்பம் அளிப்பாள். இரவில் இருளில் கூட வேகமாக நடப்பாள். இப்படிப்பட்டவள் அரக்கித் தத்துவ நட்சத்திர பெண்ணாவாள் என்பதாம்.

**குறிப்பு:** இவை அடிப்படை செய்திகளாகும். இனி 27நட்சத்திரங்களிலும் பிறந்த பெண்களின் குணம் முதலியவை அந்தந்த நட்சத்திர அத்தியாயங்களில் தனியாகச் சொல்லப்படுகிறது.



மேஷம்





ரிஷபம்

மிதுனம்



# நட்சத்திர சிந்தாமணி

## *1. விநாயகர் காப்பு*

### நேரிசை வெண்பா

**எண்ணும் கருமங்கள் எல்லாம் முடித்தெனக்கு**
**நண்ணும் கலையனைத்தும் நல்குவாய் - கண்ணுதலின்**
**முண்டத்தான் அண்டத்தான் மூலத்தான் ஆலம்சேர்**
**கண்டத்தான் பெற்ற களிறு.** (31)

*ஆசிரியர் தான் செய்ய எடுத்துக்கொண்ட இந்த நூல் இனிது இடையூறின்றி நிறைவேற விநாயகப்பெருமானை துதிக்கிறார்.*

**(இதன் பொருள்)** *நான் எண்ணும் காரியங்கள் எல்லாம் நிறைவேறவும், உலகில் இதுவரை தோன்றிய இனித் தோன்றப் போகும் கலைகளும் மற்ற எல்லாக்கலைகளையும், நெற்றியில் கண்ணுள்ளவனும் (முக்கண்ணனான ஈஸ்வரன்), முண்ட மாலையாகிய தலைமாலையை அணிந்தவனும், உலகங்கள் எண்ணற்றவற்றை உள்ளடக்கிய அண்டங்களுக் கெல்லாம் அதிபதியும், எல்லாவற்றிற்கும் மூலமான ஆதி காரணமாக தானே ஆனவனும், நஞ்சைத் தன் கழுத்தில் நிறைத்து வைத்துக்கொண்டிருப்பவனுமான சிவபெருமான் பெற்ற மகனான யானை முகக் கடவுளே. நீ நான் முன்பு சொன்ன கலைகளை எல்லாம் நான் முழுவதும் தெரிந்து கொள்ளும்படி எனக்குத் தந்தருள்வாயாக (என்றவாறு)*

நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒ...
பெயர்கள் உண்டு. இவற்றைத் தொகுத்துக்கூறும் நூல...
நிகண்டு எனப்பெயர். (செய்யுள் வடிவில் உள்ள அகராதி, தமிழ் மொழி நிகண்டுகளில் சொல்லப்பட்ட நக்ஷத்திரங்களின் பெயர்களை பின்வரும் பக்கங்களில் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

# 2. நக்ஷத்திர உருவம் மற்றும் குணங்கள்

ஜோதிஷ ரத்னமாலாவில் சொல்லப்பட்ட 27 நக்ஷத்திரங்களின் உருவம் மற்றும் நாரதீயம் என்ற கிரந்தத்தில் சொல்லப்பட்ட 27 நக்ஷத்திரங்களில் பிறந்தவர்களின் குணங்களும் அடுத்து எடுத்து எழுதப்பட்டுள்ளன. ஜோதிஷ ரத்ன மாலா, நாரதீயம் இவற்றில் சொல்லிய நக்ஷத்திர உருவம் குணம் முதலியவை.

*(ஜோதிஷ சித்தாந்த சாரத்தில் காண்பது)*

## 1. அசுவினி

இது குதிரைத் தலையைப் போன்று வடிவம் 3 நக்ஷத்திரக் கூட்டமும் கொண்டதாகும். ஒரு மனிதன் குதிரை சவாரி செய்வது போன்றும் கருதப்படும். அஸ்வினி தேவர்கள் அதி தேவதைகள், வைசியன், ஆண்பால், பிரிதிவி தத்துவம். இது வடதேசத்தையும் உடலில் பாதத்தில் மேல்பாகத்தையும் குறிக்கும். இது கருடனால் சுட்டப்படும்.

(கருடன் அசுவினியைக் குறிக்கும்)

அழகாகப் பிறந்தவன், ஆடை, ஆபரணப் பிரியன், அழகான தோற்றமும், பொதுமக்களிடம் புகழும் உள்ளவனாவான். திறமை உள்ளவன், புத்திசாலி.

**சுலோகம்** - குணங்கள் முதலியன - இந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பணிவுள்ளவன், திறமை உள்ளவன், எல்லா வகையிலும் முன்னேற்றம், செல்வம் உடையவன், ஆடை ஆபரண அலங்காரப் பிரியன். இவன் தன் மக்களால் போஷிக்கப்படுவான்.

## 2. பரணி

இது மூன்று நக்ஷத்திரங்களை கொண்டது. முக்கோண வடிவமுள்ளது. இதன் தேவதை யமன், சண்டாள சாதி, பெண்பால், பிரித்திவி தத்துவம், வடகிழக்கில் ஆதிக்க

முள்ளது. இது உள்ளங்காலிலும் ஆதிக்கம் உள்ளது. இது காக்கைப் பறவையால் குறிக்கப்படும்.

**சுலோகம்** - குணம்:- இதில் பிறந்தவன் நன்கு வெற்றி பெறுவான். உண்மையானவன். இவன் பெரும்பாலும் நோயின்றி வாழ்பவன். கவலை இராது. இவன் சில சமயம் சுபசீர்டத்தி அதாவது பழிபட பொல்லாதவனாக வாழ்பவன். சில சமயம் மற்றவர்கள் கண்டனத்திற்குள்ளாவன். பலவகை இன்பங்களை அனுபவிப்பன். நீர் விளையாட்டில் பிரியமுள்ளவன். சில சமயம் சபல புத்தியுடையவன்.

## 3. கார்த்திகை

**சுலோகம்:** இது ஆறு நக்ஷத்திரங்களையுடையது. தீக்கொழுந்துகள் சுடர்விட்டு எரிவது போன்ற தோற்றம் உள்ளது. இதன் அதிதேவதை அக்கினி. அந்தண வகுப்பைச் சேர்ந்தது. பெண்பால், பிரித்திவி தத்துத்தைச் சேர்ந்தது. இது நடுப்பகுதியைச் சேர்ந்தது. உடலில் தலையைச்சார்ந்தது. இது பறவையில் மயிலைச் சார்ந்தது. நெருப்பு, பாத்திர வடிவமைப்பு, இரும்பு சாமான் உற்பத்தி விபசாரி போன்ற தொழில்களைச் செய்பவனாக இருக்கலாம். இவன் ஒரு பெருந்தீனிக்காரனாக இருக்கலாம். பிறர் மனைவியர்மேல் மோகமுள்ளவன். நல்ல தோற்றமும் பேரும் புகழுமுள்ளவன்.

இவன் பசி பொறுக்காதவன். வறுமையுள்ளவன். உண்மையற்றவன், குறிக்கோளின்றி ஊர் சுற்றுபவன், நன்றியற்றவன். பிறருக்கு தீமை தரும் செயல்களையே செய்பவன்.

**குறிப்பு:** இருவிதமாக எதிரிடையான குணங்கள் கூறப்பட்டதால், இரண்டு தன்மையான குணங்களும் உள்ளவனாக இருப்பான் இக்கிருத்திகை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் என்று கொள்ளவேண்டும்.

## 4. ரோகிணி

இந்த நக்ஷத்திரம் மீனின் வடிவமுள்ளது. இதன் அதி தேவதை பிரம்மா. இது வேளாள வகுப்பைச் சேர்ந்தது. இது பிருதிவி தத்துவத்தைச் சார்ந்தது. இது நடுப்பகுதியைச் சேர்ந்தது. உடலில் இது நெற்றியைச் சார்ந்தது. இந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பணக்காரனாக இருப்பான். மலை பிரதேசத்திலிருந்து வந்த பொருள்களைச் சம்பாதிப்பவன். விவசாயம், கால்நடை இவற்றின் மூலமும் பொரு ளீட்டுவான். இவன் உண்மையானவன், பிறர் பொருள்மேல் பற்றில்லாதவன், இவன் நல்ல குணம் உள்ளவன். இவன் இனிய பேச்சுள்ளவன். திட நிர்ணயமும் அழகிய தோற்றமும் உள்ளவன்.

**சுலோகம்:** இவன் திறமையுள்ளவன். நற்செய்கை களைச் செய்வதிலும் வல்லவன். உடல் அங்கங்கள் யாவும் இலக்கணப்படி அமைந்த அழகிய தோற்றமுள்ளவன். இவன் அதிக இச்சையும், காமமும் உள்ளவன். இவன் பணக்காரனாகவும், கௌரவம் உள்ளவனாகவும் இருப்பான்.

## 5. மிருகசீரிஷம்

இது மானின் தலை போன்ற தோற்றமுள்ள 3 நட்சத்திரங் களால் ஆனது. சிலர் இதனை பூனைப் பாதம் போன்றுள்ளது என்றும் கூறுவர். இதன் அதிதேவதை சந்திரன். இது ஊழியஞ் செய்யும் வகுப்பைச் சார்ந்தது. இதுவும் பிரிதிவிதத்துவம் சார்ந்தது. உடலில் இது கண் புருவங்களைக் குறிக்கும். 4 கால் சீவன்களைக் குறிக்கும். யாகம் செய்தல், ஓவியம், எழுத்துத் தொழில் போன்ற தொழில்களைச் செய்பவன். இவன் இசை வல்லவன். வாசனைப் பொருள், ஆடையாபரணங்கள் மேலும் ஆசையுள்ளவன். பாதம், மலர்கள், ரத்தினங்கள், வன விலங்குகள், மான், பறவைகள் போன்றவற்றிலும் பற்றுள்ளவன். இவன் ஸ்திர புத்தி உள்ளவன். திறமையுள்ளவன். வெகுளியான குணமுள்ளவன்.

சுறுசுறுப்பானவன். இனிமையாகப் பேசுபவன். நல்ல செயல்கள் உள்ளவன். செல்வந்தன். நல்ல பால்வினைச் சுகம் உள்ளவன்.

**சுலோகம்:** இவன் தேர்ந்த வில்லாளி, பண்புள்ளவன், அன்புள்ளவன், நற்குணவான், எல்லாரிடமும் பணிவும் விசுவாசமுள்ளவன் என்பதாம்.

## 6. திருவாதிரை

ஒற்றை நட்சத்திரம். ஒரு ரத்னம் போலவும், தாமரை மொட்டு போலவும் வடிவமுள்ளது. இதன் அதிதேவதை ருத்ரன் அல்லது சிவன். இது கசாப்புத் தொழில் உள்ளது. இது பெண்பால் நட்சத்திரம். இது நீர் தத்துவம் சார்ந்தது. கிழக்கு திக்கைக் குறிப்பது. உடலில் கண்களையும் இடுப்புப் பகுதியையும் குறிக்கும். இதில் பிறந்தவர்கள் எண்ணெய் வியாபாரம், சலவைத்தொழில், களவுத்தொழில், ஏவல், சூனியம் போன்ற தொழில்களிலும் ஈடுபடுபவன். சிலசமயம் இரக்கமற்ற, கொடுமையான செயல்களையும் செய்பவன். இதில் பிறந்தவன், உண்மையானவன், பொறுமை சிறிதும் அற்றவன். சிலசமயம் நன்றி மறந்தவன்.

**சுலோகம்:** இவன் பெருந்தீனிக்காரன். சிவந்த நிறமுள்ளவன். சண்டை சச்சரவுகளில் பிரியமுள்ளவன். பொறுமையற்றவன். உண்மையற்றவன், தனக்குத்தீங்கு இழைத்தவர்களை மன்னிக்காதவன்.

## 7. புனர் பூசம்

இது வில்லைப் போன்று வடிவமுடையது. ஐந்து நட்சத்திரங்களைக் கொண்டது. இதன் அதிதேவதை அதிதி. இது வைசிய வகுப்பைச் சார்ந்தது. ஆண். நீர் தத்துவம். கிழக்கே ஆதிக்கம், உடலில் மூக்கைக் குறிக்கும்.

இதில் பிறந்தவர்கள் உண்மையாகவும், தாராள சிந்தை உள்ளவர்களாகவும், மரியாதைக்குரியவர்களாகவும், தூயவர் களாகவும், செல்வந்தர்களாகவும், தன்னை எப்பொழுதும் அழகுபடுத்திக் கொள்வதில் ஊக்கம் உள்ளவர்களாகவும், சிற்பிகள், ஓவியர்கள், ஆகிய கலைஞர்களிடையே பெரும்பாலும் நண்பர்கள் அதிகம் உள்ளவர்களாக இருப்பர். ஆன்மீக நூல்கள் படிப்பதில் ஆர்வமுடையவர்கள். ஆடை அணிகலன்களில் ஆர்வமுடையவர்கள்.

## 8. பூசம்

இந்த நட்சத்திரம் ஒருவில்லின் அம்பைப் போன்ற உருவமுடையது. ஒரே நட்சத்திரமுடையது.பிரஹஸ்பதி அதிதேவதை. க்ஷத்திரியகுலம், ஆண், நீர் தத்துவம், கிழக்கே ஆதிக்கம். இது உடலில் முகத்தைக் குறிக்கும். அரசமரத்தைக் குறிக்கும்.

இதில் பிறந்தவர்கள் ஆள்பவர்களாகவும், மந்திரி களாகவும் இருப்பர். சாதுக்கள், வியாபாரிகள், முக்கியமாக கரும்பு, சர்க்கரை, நெல் முதலிய நஞ்சை தானியங்கள், கோதுமை, பார்லி போன்ற வாணிபமுடையவர்கள். ஆடல் பாடல் விழாக்களில் ஈடுபாடு, சடங்குகளில் உண்மையான ஈடுபாடு உடையவர்களாகவும் இருப்பர். பூக்களில் அதிக விருப்பம் உண்டு. இவர்களுக்கு ஆசைகளை அடக்கும் திறமை உண்டு. பொதுவாக படித்தவர்கள், சாஸ்திரங்கள் அறிந்தவர்கள். பணக்காரர்களாகவும், தானம் செய்பவர் களாகவும் இருப்பர்..

பூசத்தில் பிறந்தவர்கள் பெரும்பாலும் அதிர்ஷ்ட முள்ளவர்கள். பார்க்க அழகான தோற்றமுடையவர்கள். பெற்றோர்களுக்கு உண்மையானவர்கள். ஒழுக்கம், கடமை தவறாதவர்கள். பிறரால் மதிக்கப்படுபவர்கள். மற்றும் சிறந்த வாகனங்களும், செல்வமும் உடையவர்கள்.

## 9. ஆயில்யம்

இது சுழலும் சக்கரம் போன்ற வடிவமுள்ள ஆறு நட்சத்திரங்களைக் கொண்டது. இதன் அதிதேவதை பாம்பு (ஆதிசேஷன் அல்லது ராகு) சண்டாள வகுப்பைச் சேர்ந்தது. பெண் நட்சத்திரம் நீர் தத்துவத்தைச் சேர்ந்தது. தென்கிழக்கு திக்கைச் சேர்ந்தது. மனித அங்கத்தில் இது காது என்னும் உறுப்பாகும். இது பாம்புகள், நீர் வாழ் உயிரினங்கள் இவற்றைக் குறிக்கும். இதில் பிறந்தவர்கள் மருத்துவம் வல்லவர். பிறர் சொத்தை அபகரிக்கும் தன்மை உண்டு. சுகந்த பரிமளப்பிரியர். பழங்களில் ஆசை உண்டு.

இவர்கள் எந்த காரியமும் இன்றி வீணாக அலைந்து கொண்டிருப்பர். அளவுக்கு மீறி கெட்ட எண்ணம் கொண்டவர். காரணமின்றி பிறரைத் துன்புறுத்துவர். முரட்டுத் தன்மை உடையவர். சுயகாரியப் புலி.

## 10. மகம்

இது ஓர் ஏர் உருவம் உடையது. ஐந்து நட்சத்திரங்களை உடையது. இதற்கு பித்ரு தேவதை அதிதேவதையாகும். இது நான்காம் வருணத்தைச் சேர்ந்தது. பெண் நட்சத்திரம். நீர் தத்துவம். தென்கிழக்கு திசை இதற்குரியது.

மனித உடலில் உதடுகளையும், கீழ் உதட்டுக் குழியையும் குறிக்கும். அது ஆலமரத்தையும் குறிக்கும். தன் பெற்றோர்களுக்குரிய கடமை தவறாதவர். சடங்குகளிலும் மத ஒழுக்கத்திலும் பற்றுள்ளவர். யானைகள், குதிரைகள் உடையவர் (வாகனங்கள்.) வீரமும், செல்வமும் உடையவர். பெண்கள் மேல் வெறுப்புள்ளவர். ஊன் உணவில் பிரியம் உள்ளவர். ஆள் அடிமை உண்டு. பணக்காரர், சுக சௌக்யம் உள்ளவர். தேவ, பித்ரு பூஜை செய்பவர். முக்கியமான செயலை முடிப்பவர். கடின சித்தம் உள்ளவன். அழுத்தமான உணர்ச்சிகள் உண்டு. அறிந்து கொள்வதில் ஊக்கமுண்டு, (கல்வி முதலியவை). அதிகம் துன்புறுத்துவதில் பிரியம் அதிகம்.

## 11. பூரம்

இது ஒரு கட்டிலின் உருவமுள்ளது. இரண்டு நட்சத்திரங்கள் கொண்டது. இது அந்தண வகுப்பைச் சேர்ந்தது. இதுவும் பெண் நட்சத்திரம். இதன் அதிதேவதை பகர். தென்கிழக்கு திக்கைச் சார்ந்தது. இது வலது கரத்தைக் குறிக்கும். இது பலா மரத்தைக் குறிக்கும்.

இதில் பிறக்கும் சில பெண்கள் விபசாரக் கன்னிகளாக இருப்பர். இப்பெண்கள் நடனம், இசை, வண்ணப்படம் வரைதல், சிற்பக் கலையில் பற்று, இளமை சுகத்தை முழுவதும் அனுபவிப்பர் (பெண்களன்றி ஆண்களுக்கும் இவை பொது) எண்ணெய், பஞ்சு, உப்பு, சம்பந்தப்பட்ட தொழில்களில் ஈடுபடுவர்.

இனிமையாகப் பேசுபவர், தாராள சிந்தை உடையவர். அழகிய தோற்றம் உண்டு. அலையும் குணம் உண்டு. அரசுத்துறை பணியாளராகவும் இருப்பர். எதிலும் தைரியமாக ஈடுபடுவர். தைரியசாலி, வீரர், பொறுமையற்றவர். கடின, கொடூரர். திறமைசாலி. அதிகம் வாயுத்தொல்லையால் அவதிப்படுவர்.

## 12. உத்திரம்

இந்த நட்சத்திரமும் படுக்கை தாங்கி என்னும் (Bed Stand)கட்டில் உருவை நிகர்த்தது. இரண்டு நட்சத்திரங்களால் ஆனது. இதன் அதிதேவதை ஆர்யமா . இது சத்திரிய வகுப்பைச் சார்ந்தது. தேஜஸ் என்னும் ஆகாய தத்துவத்தைச் சார்ந்தது. இது தென் திசையைச் சார்ந்தது. இடது கையைக் குறிக்கும். இத்தி மரத்தைச் சார்ந்தது.

இதில் பிறந்த பெண்கள் கற்புடையவர்கள். பொதுவாக ஆண், பெண்கள், துறவிகள், அரசர்கள், வீரர்கள். இவர்கள் சுத்தமானவர்கள். சாது, தாராளமுள்ளவர். அறிவாளி, ஒழுக்கமுள்ளவர், பணக்காரர், பெரும்புள்ளிகளின் துணை

உண்டு. இவர்கள் தானியம், வெல்லம், உப்பு, தண்ணீர் சம்பந்தப்பட்ட தொழிலைச் செய்வார்கள்.

பாசம் தாராளம், குடும்பத்தில் அக்கறை, உறவினர் மேல் பற்று இவை உண்டு. இவன் நல்ல பேரும் புகழும் இவர்களுக்குண்டு. நல் குணசாலி. சாது ஆனால் வீரமுண்டு.

## 13 . ஹஸ்தம்

ஹஸ்த நட்சத்திரம் கை போன்ற உருவம் மற்றும் ஐந்து நட்சத்திரங்களைக்கொண்டது. இதன் அதிதேவதை கவிதா. இது வணிக வகுப்பைச் சேர்ந்தது. ஆண் நட்சத்திரம். தேஜஸ் தத்துவத்தை சார்ந்தது. உடலில் இது கை விரல்களைக் குறிக்கும். இதன் மரம் அத்தி.

கிணறு வெட்டல், முடிதிருத்தல், மலையில் வேலை செய்பவர்கள். கள்வர். யானைப்பாகர். சிலர் வியாபாரிகள், தேரோட்டிகள் (Car Drivers) வணிகர், முதல் மந்திரி போன்ற பதவி உள்ளவர்,சாத்திரம் தெரிந்தவர், நல்ல ஒளியான தோற்றம். இதில் பிறந்தவர்கள் சுறுசுறுப்பானவர்கள். மிகவும் அதிகமாக வாழ்க்கைக்காக தேவைகள் நிரம்பியவர், சந்தோசமற்றவர், இரக்கமற்றவர், களவும், குடியும் கூட இருக்கலாம்.

இதில் பிறந்தவன் தாராளமானவன். புகழ் உள்ளவன். கடவுளுக்கு சேவை செய்பவன், (அர்ச்சகர்) அரசுப் பணியாளன். யாகத்தில் பிரியம் உண்டு. அதிக முயற்சி இன்றி நிறைய பணம் தேடுபவன்.

## 14. சித்திரை

இது முத்து போன்ற வடிவுள்ள ஒற்றை நட்சத்திரத்தாலானது. இதன் அதிதேவதை விஸ்வகர்மன் என்ற தேவதச்சன். இது தொண்டர் வகுப்பைச் சார்ந்தது. இது

பெண் நட்சத்திரம். தேஜஸ் தத்துவத்தைச் சார்ந்தது. தென் திசையைச் சார்ந்தது. உடலில் இது கழுத்தைக் குறிக்கும். மரம் வில்வ மரமாகும்.

இதில் பிறந்தவர்கள் பெரும்பாலும் எழுத்தாளர்கள். இசைக்கலைஞர்கள், நுண்கலை வல்லுனர்கள், படம் வரைபவர், சில பெண்கள் விபசாரத்தில் ஈடுபடுபவர், வேத விற்பன்னர், பொன் வணிகர், இரத்தின வியாபாரி, நகை பாத்திரம், உயர் ரக ஜவுளி, சுகந்த பரிமள வியாபாரிகள், பரிமளப் பொருள் வியாபாரிகள், கணிதத் திறன் உள்ளவர். நெசவாளர், அறுவை மருத்துவர் போன்றவர்கள்,தன் சத்துருக்களை ஜெயிப்பதில் வல்லவர், திறமைசாலி. நல்ல சாணக்யர், பலவகை ஆடை அணிபவர், பல கலையும், மொழிகளும் கற்றுத் தேரும் அறிவும் உண்டு.

## 15. சுவாதி

இது குங்கும பரணியைப் போன்ற வடிவமும் ஒற்றை நட்சத்திரமும் கொண்டது. இதன் அதிதேவதை வாயு. இது கசாப்பு தொழில் செய்யும் வகுப்பைச் சேர்ந்தது. தேஜஸ் தத்துவத்தைச் சாரும். பெண்பால் நட்சத்திரம். தென்மேற்குத் திசையைச்சார்ந்தது. இது உடலில் மார்பைக் குறிக்கும். இதில் பிறப்பவர்கள் பணியாளர்,வாணிகர், படகோட்டி, தேரோட்டிகள் (Drivers), பத்திரிகை நிருபர்,செய்தியாளர், கப்பலோட்டிகள், நடனக்காரர்கள்,கைவினைக் கலைஞர் போன்ற நிலைகளில் இருப்பார்கள்.

இவர்கள் நட்பு உறுதி இல்லை. சினமுள்ளவர். பறவைகள், மான், கலைமான், வீட்டுத் தரகு, தானியங்கள், இவைகளுடன் சம்பந்தப்பட்டவர்களாகவும் இருப்பர். சாதுத்தனம் உண்டு. நிதானமும் உண்டு. தன் இச்சையை அடக்கும் வலிமை உண்டு. வாணிபம் செய்வர். இரக்கம் உண்டு. இனிய பேச்சும் ஈகைக்குணமும் உண்டு.

பிறரைக்கவரும் வடிவம், பெண்களிடையே நாயகன் அறிவாளி, வாழ்க்கையில் பல சிறந்த காரியங்களில் வெற்றிபெற்றுப் பயனடைவர்.

## 16. விசாகம்

இது நான்கு நட்சத்திரங்கள் கொண்ட தோரணம் போன்ற வடிவமுடையது. இதன் அதி தேவதைகள் இந்திரனும் அக்கினியும் ஆவர். இது சண்டாள வகுப்பைச் சார்ந்தது. பெண்பால். தென்மேற்குத் திக்கைச் சார்ந்தது.

இதில் பிறந்தவர்கள் ரத்தச் சிவப்பு மெரூன் என்ற கத்திரிப்பூ வண்ணப் பொருட்கள், சிவந்த பூக்கள் பூக்கும் மரங்கள், அந்த நிறப்பழமரங்கள் சம்பந்தப்பட்டவராக இருக்கலாம். பஞ்சு, இஞ்சி, உளுந்து, துவரை, குங்குமப்பூ போன்ற பொருள்களுடனும் இவர்களுக்குத் தொடர்பு இருக்கலாம். பிறர் சொத்தில் பொறாமை, நல்ல பொலிவான தோற்றம், நறுக்கான பேச்சு, பணம் சம்பாதிக்கும் சாமர்த்தியம், சண்டை சச்சரவுகளை விலைக்கு வாங்கும் குணம் இவை இவர்களுக்குண்டு.

இவர்களுக்குப் பல காரியங்களைச் செய்யும் ஊக்கம் உண்டு. பொற்கொல்லர், நகை வியாபாரிகளால் விரும்பப் படுவார்கள். யாருக்கும் இனிய நண்பரே, ஆனால் இவரை அதிகம் நம்ப முடியாது.

## 17. அனுஷம்

இது 7 நட்சத்திரங்களைக் கொண்ட குடை வடிவ முடையது. இதன் அதிதேவதை மித்ரன். இது நான்காம் வருணத்தைச் சார்ந்தது. ஆண்பால் திசை உடலில் இது வயிறு. இதில் பிறப்பவர்கள் மற்றவர்களுடன் நட்புள்ளவர்கள். வீரர், சாதுக்கள் சகவாசம் உண்டு. கட்சித்தலைவர்கள், மந்திரிகள், ஓட்டுனர்கள் போன்ற தொழில்களில் இருக்கலாம். வாகனங்கள் மற்றும் அனைத்துத் தானிய வகைகளும் இவர்கள் தொடர்புள்ளவையே.

இவர்கள் பணக்காரர்கள் மற்றும் வெளிநாடுகளில் வாழ்பவர்கள். இவர்கள் பசி பொறாதவர்கள். இடத்துக்கிடம் அலைந்து திரியும் குணம் உள்ளவர். இவர்கள் பெரும் புள்ளிகளாவர். எப்பொழுதும் இவர்கள் விழா விருந்துகளிலேயே பொழுது கழிப்பவராகலாம். பகைவர்களை வெற்றி கொள்பவர்கள். நுண்கலைகளில் தேர்ச்சி உண்டு. சொத்து விஷயமான தகராறுகள் மற்றும் சில துன்பங்களுக்கும் இவர்கள் ஆளாவதுண்டு.

## 18. கேட்டை

இந்த நட்சத்திரம் வட்ட வடிவமுள்ளது. மூன்று நட்சத்திரங்களைக் கொண்டது. பணியாளர் வகுப்பைச் சேர்ந்தது. பெண்பால், வாயு தத்துவம், இதன் அதிதேவதை இந்திரன். மேற்குதிசை, இது உடலில் வலது உடலின் மேற்பகுதியைச் சாரும். இது பலாமரம் சார்ந்தது. இதில் பிறந்தவர்கள், ஆள்பவர்கள், வீரப்படைத் தொழிலாளி, வீரர், அழகர், பணக்காரர், பிறர் சொத்தில் மோகம் உண்டு. பயணத்தில் ஆர்வமுண்டு. மழை தானியம் இவை. இந்த நட்சத்திரத்தைக் குறிக்கும். இவர்களுக்கு மிகச்சிலரே நண்பர். எப்பொழுதும் உற்சாகம் ஒழுக்க சீலர். இவரை எளிதில் கோபம் கொள்ளவைக்க முடியாது.

இவர்களுக்கு பேரும் புகழும் உண்டு. நல்ல சந்ததி உண்டு. செல்வம், வீரம், தைரியம் எல்லாம் உண்டு. வாழ்க்கையில் ஒருவகையில் நல்ல அந்தஸ்து ஏற்பட்டாலும், கொஞ்சம் நடத்தை கெட்டவராவர்.

## 19. மூலம்

இது ஒரு சிங்கத்தின் வால் போன்ற வடிவமும் 9 நட்சத்திரங்களும் கொண்டது. இதற்கு அதிதேவதை நிருதி. இது கசாப்பு தொழில் செய்யும் வகுப்பைச் சார்ந்தது. வாய் தத்துவம் அயு. மேற்குதிசை . இது உடலின் இடது மேற்பாகத்தைக் குறிப்பது. இதில் பிறந்தவர்கள், மருந்து

செய்பவர், விற்பவர், மூலிகைத் தாவர நிபுணர், மக்கள் தலைவர், படைவீரர் போன்றவர்கள்.

இவர்கள் பணக்காரர், தோட்டம், பழவகை, வேர், விதைகள் தொடர்பு. எப்பொழுதும் மகிழ்ச்சியாக இருப்பவர்கள். பெரும்பாலும் பிறர் மனத்தையோ, உடலையோ துன்புறுத்தாதவர். திடமான கொள்கைகளையும் சுகபோக வாழ்க்கையையும் உடையவர்கள். இவர்கள் பெரும்பாலும் குடும்பத்தில் துரதிர்ஷ்ட முள்ளவர்கள் என்று கருதப்பட்டாலும் உண்மையில் இவர்கள் தங்கள் குடும்பத்திற்கு நல்லதே செய்பவர்கள். இவர்கள் வளமுடன் தீர்க்காயுளுடனும் வாழ்பவர்கள்.

## 20. பூராடம்

இது பெரும்பாலும் ஒரு ஜன்னலின் வெளிச்சட்டம் அல்லது யானைத் தந்தத்தின் உருவமுள்ளது. 4 நட்சத்திரங்களைக் கொண்டது. இதன் அதிதேவதை வருணன். இது மேற்கு திக்கைச் சார்ந்தது. அந்தண வகுப்பு. பெண்பால். வாயு தத்துவம். உடலின் முதுகு மற்றும் பின்புறத்தைக் குறிக்கும். இதன் மரம் வன்னி. இதில் பிறந்தவர்கள் நேர்மையானவர்கள்.

பணவசதி உள்ளவர்கள். தூய்மையானவர்கள். பல வகையிலும் தண்ணீரில், கடலில் செல்பவர்கள், படகோட்டிகள், தண்ணீரில் விளையும் பழம், பூ முதலியவை வியாபாரம். சதுப்பு நிலம், கிணறு முதலியவற்றுடன் தொடர்பும், தொழிலும் உள்ளவர்கள். இதில் பிறந்தவர்களுக்கு ஐக்யமான மனைவியும், நண்பர்களும், கௌரவமானவர்களாக இருப்பார்கள்.

இவர்கள் தங்கள் புகழ் பாடுபவர்களை விரும்பு பவர்கள். தேவதா பக்தி உடையவர்கள். உறவினர்களால் மதிக்கப்படுபவர்கள். திறமைசாலிகள், பகைவர்களுக்கு இவர்கள் சிம்ம சொப்பனம் தான்.

## 21. உத்திராடம்

இது ஒரு கட்டில், யானைத்தந்தம் அல்லது பாம்பின் வடிவமும் 8 நட்சத்திரங்களும் கொண்டது. இதன் அதிதேவதை விஸ்வன். க்ஷத்திரிய வகுப்பு, பெண்பால், வாயு தத்துவம், வடமேற்கு திசையைச்சாரும். உடலில் இது இடையைக் குறிக்கும். பலாமரம் அதனுடையது. இவர்கள் பொலிவான தோற்றம் உள்ளவர்கள். மகிழ்ச்சி உள்ளவர்கள். தமக்கெனக் கொள்கை உள்ளவர்கள். முதல் மந்திரி, படைவீரர், யானைகள், குதிரைகள் உள்ளவர்கள்.

இவர்கள் கீழ்ப்படியும் தன்மையும், குத்துச்சண்டை, மல்யுத்தம் வல்லவர். நேர்மையான பல நண்பர்கள் உள்ளவர்கள். பிறரிடம் தாங்கள் பெற்ற உதவிக்கு பதில் உதவி செய்பவர்கள். நன்றி உள்ளவர்கள். பிறரால் பெரிதும் விரும்பப்படுவார்கள். இதில் பிறந்தவர்கள் தாராள சிந்தை உள்ளவர்கள். பாசமும் பணிவும் உள்ளவர்கள். நல்ல காரியங்களில் நாட்டம் உள்ளவர்கள். வாழ்க்கையில் எல்லா வசதிகளும் உள்ளவர்கள். இவர்கள் கையில் எல்லா வசதிகளும் உள்ளவர்கள். இவர்கள் தன் மனைவி மக்களுடன் சுகமாக வாழ்பவர்கள்.

## 22. திருவோணம்

திருவோண நட்சத்திரம் ஒரு அம்பின் வடிவமும், மூன்று நட்சத்திரங்களும் கொண்டது. இதன் அதிதேவதை விஷ்ணு. சண்டாள வகுப்பு. ஆண், இது உடலில் பிறப்புறுப்புகளைக் குறிக்கும். (மர்ம உறுப்பு), வாயு தத்துவம், இது இக்கு என்ற மரவகையைச் சார்ந்தது.

இதில் பிறந்தவர்கள் தைரியசாலிகள், தூய குண முள்ளவர்கள். தேவதா பக்தியுள்ளவர்கள். உண்மை யானவர்கள். சுறுசுறுப்பாகச் செயல்படுபவர்கள், பொதுத்துறை அலுவலர்கள். அர்ச்சகர், பூசாரிகள், தங்கள்

வேலையில் திறமை உள்ளவர்கள். மருத்துவர்களாகவும் இப்படி பல நிலைகளிலும் இருக்கலாம்.

இதில் பிறந்தவர்கள், மதம், தெய்வீகம் தொடர்புள்ள நூல்களில் விருப்பமுள்ளவர்கள். பல நண்பர்கள் உண்டு. இவர்களுக்குக் குழந்தைகளும் அதிகம் உண்டு. இவர்கள் புத்திரர்கள் இவனுக்கு விசுவாசமுள்ளவர்கள். இவர்கள் பகை வெல்பவர்கள். புராணம் இதிகாசங்களைக் கேட்பதில் பிரியமுள்ளவர்கள். வாழ்க்கையில் சாதனைகள் படைப்பவர்கள்.

## 23. அவிட்டம்

இந்த நட்சத்திரம் மத்தள வடிவமுடையது. 5 நட்சத்திரங் களைக்கொண்டது. இதன் அதிதேவதை அஷ்டவசுக்கள் ஆவர். இது பணியாளர் அல்லது வேளாண் வகுப்பைச் சார்ந்தது. வடமேற்கு திசை உடலில் இது குதம் அல்லது ஆசன வாயைக் குறிப்பது. பெண்பால். வன்னி மரத்தைக் குறிக்கும்.

இதில் பிறந்தவர்கள் பணக்காரர்கள், தாராள மானவர்கள். ஆசைத்தூண்டுதல் (Temptations) இல்லாத வர்கள். பெண்களை வெறுப்பவர்கள் அல்லது தூற்று பவர்கள். நாயகர்கள், நண்பர்கள் அரிது. பெரும்பாலும் பொக்கிஷ அலுவலர்கள். (Treasurer) பிறருக்குக் கொடுப்பதில் வள்ளல், பணக்காரர்,வீரர் இசையில் பற்று. சிலசமயம் கஞ்சத்தனம் உள்ளவர்கள்.

இவர்கள் குணநலம், நடத்தை இவற்றால் உயர்ந்தவர்கள். இதனால் பிறரால் பாதிக்கப்படுபவர்கள். பெரும் பணக்காரர். தயவு, கருணை உள்ளவர்கள். பெரும் பதவி அல்லது நிலையை,அந்தஸ்தை வாழ்வில் அடைபவர்கள்.

## 24. சதயம்

இந்த நட்சத்திரம் வட்ட வடிவமும், நூறு நட்சத்திரக் கூட்டமும் கொண்டது. இதன் அதிதேவதை வருணன், இது காப்புத் தொழில் வகுப்பைச் சார்ந்தது. இது அலி, ஆகாய தத்துவம், வடதிசை, இது உடலில் வலது தொடை.

இதில் பிறந்தவர்கள் மருத்துவர், கவிஞர், மந்திரிகள், வணிகர், சலவைத் தொழிலர், கள் விற்பனை, மீன், பன்றி, பறவைகள் இவை சம்பந்தப்பட்ட தொழிலும் செய்பவர். கடுஞ்சொல்லாளர், உண்மையானவர்கள், சிலசமயம் வருத்தமுள்ளவர்கள். பகைவர்களை வெல்பவர்கள். எதையும் யோசிக்காமல் வேலைகளில் இறங்குவர். தன் இச்சைப் படியே எதையும் செய்பவர்கள். மிகவும் அளவுக்கு மீறி தைரியத்துடன் எதிலும் ஈடுபடுபவர்கள். வெட்டிப் பேசுபவர்கள். கெட்டிக்காரர். தன் பகைவர்களிடம் அதிகம் கொடுமையாக நடப்பவர்கள்.

## 25. பூரட்டாதி

இந்த நட்சத்திரம் ஒரு கட்டில் வடிவமுள்ள 2நட்சத்திரங்களைக் கொண்டது. இதன் அதிதேவதை அஜைக பாதன். அந்தண வகுப்பைச் சார்ந்தது. ஆண், ஆகாயதத்துவம், வடதிசை, உடலில் இது இடது தொடையைக் குறிக்கும். தென்னை மரத்தைக் குறிக்கும்.

இதில் பிறந்தவர்கள், இடையர், திருடர், கெட்ட எண்ணமுள்ளவர்கள். கீழ்த்தன்மையுள்ள, கொடுமையாளர், ஏமாற்றுபவர்கள். இவைகளில் ஒருவராக இருப்பார்கள். மதச்சடங்குகளில் நம்பிக்கை இல்லாதவர்கள். யுத்தம் அல்லது சண்டை செய்பவர்கள். இதில் பிறந்தவர்கள் வாழ்வில் வருத்தமுள்ளவர்கள். தன் சம்பாத்யத்தை மனைவியிடமே தருபவர்கள். நல்ல வாக்கு வன்மை உள்ளவர்கள். கஞ்சத்தனர்கள். சுயகட்டுப்பாடுள்ளவர்கள். எல்லாக்

கலைகளிலும் வல்லவர்கள். தன் பகைவர்களை வெற்றி கொள்பவர்கள். வாழ்க்கையில் பெரும் அச்சத்தை அடைபவர்கள்.

## 26. உத்திரட்டாதி

இது ஒரு புருஷ வடிவமுடையது. புருஷார்த்த பாதம் என்றும் சொல்லப்படும். 8 நட்சத்திரங்களைக் கொண்டது. இதன் அதிதேவதை அஹிர்புந்த்யன் ஆகும். சத்திரிய வகுப்பு. ஆண், ஆகாய தத்துவம், வடதிசை. இது உடலில் பாதத்திற்கும் முழங்காலுக்கும் இடைப்பகுதியைக் குறிக்கும்.

இதில் பிறந்தவர்கள் நடனக் கலைஞர்கள், பயணக்காரர் ஆளும் துறையைச் சேர்ந்தவர். அரிசி, பழம், கிழங்கு வகை மற்றும் தங்க வாணிகர் போன்றவர்கள். தாராளமும், பக்திமானும் ஆக இருப்பவர்கள். மத நூல்களில் சொல்லும் விதி உள்ளவர்கள். நல்ல பேச்சாளர். மகிழ்ச்சி உள்ளவர்கள். புத்திரர், பேரப்பிள்ளைகள் உள்ளவர்கள். நன்னடத்தைப்படி நடப்பவர். பகைவர்களை வெற்றியும் கொள்பவர்கள். இவர்கள் பணக்காரர். நல்ல குலத்தில் பிறந்தவர்கள். செயலில் திறமை உண்டு. அரசர்களால் மதிக்கப்படுபவர்கள். நல்ல உடல் வலிமை, பொலிவான தோற்றமும் உள்ளவர்கள். நல்ல செயல்களில் பற்றும் குடும்பத்தோடு ஒட்டிய சுபாவமும் உள்ளவர்கள்.

## 27. ரேவதி

இது மீன் வடிவமுள்ளது. 32 நட்சத்திரங்கள் கொண்டது. இதன் அதிதேவதை பூஷா என்ற ஆதித்தன் ஆர்யமா ஆகும். நான்காம் வருணம். பெண்பால், ஆகாச தத்துவம், வடதிசை, கணுக்கால்களைக் குறிக்கும். இந்திய தேக்கு மரத்தைக் குறிக்கும்.

இதில் பிறந்தவர்கள், பயணிகள், பணியாட்கள், அரசு அலுவலர், படகோட்டிகள், தண்ணீரில் வளரும் பூக்கள்

பரிமளப் பொருள், உப்பு, இரத்தின வாணிபம், சங்கு, முத்து, தண்ணீர் ஜந்துக்கள் இவை சம்பந்தமான தொழிலுள்ளவர்கள். நல்ல அளவான அங்கமுள்ள உடலுள்ளவர்கள். எல்லாராலும் விரும்பப்படுபவர்கள். போரில் வல்லவர். பிறர் சொத்துக்கு ஆசைப்படாதவர்கள். இதில் பிறந்தவர்கள் நன்னடத்தையில் பெயர் பெற்றவர்கள் தன்னடக்கம். புலனடக்கம் உள்ளவர்கள், நல்ல குடும்பத்தைச் சார்ந்தவர்கள் குடும்பத்துடன் மிகவும் பற்றுள்ளவர்கள் அரசன் போல வாழ்பவர்கள்.

## 3. நட்சத்திர நிகண்டு

### 1. அசுவனி

**தமிழ் நிகண்டு நூல்கள்**

**சேந்தன் திவாகரம்**: இரலை, ஐப்பசி, யாழ், ஏறு, தலைநாள், புரவி, மருத்துவ நாள், அசுவினி நாள், அசுவினி.

**பிங்கலம்**: இரலை, ஐப்பசி, யாழ்,ஏறு, தலை, நாள், புரவி, மருத்து நாள்.

**சூடாமணி**: பரி, மருத்துவ நாள், வாசி, ஐப்பசி, யாழ், ஏறு, இரலை, முதல் நாள், சென்னி.

**ஆசிரிய நிகண்டு**: இரலை, ஐப்பசி, புரவி, யாழ், ஏறு, தலைநாள், பரி, வசி, சென்னி, மருத்துவ நாள்.

**சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு**: முன்னாள், யாழ், ஏறு, இரலை, ஐப்பசி, மருத்துவன், நாள், சென்னி, பரி, அசுவதி.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: இரலை, ஏறு, ஐப்பசி, சென்னி, பரி, புரவி, மருத்துவ நாள், முதல் நாள், யாழ், வாசி.

**ஜாதக சிந்தாமணி** : பரி, மருத்துவன், நாள், யாழ், ஏறு, சென்னி, வாசி, ஐப்பசி , முதல் நாள், இவுளி, குதிரை.

**விமேசுர உள்ளமுடையான்** : அயம், வாசி, மா, புரவி, கார்க்கி, பரி, தேசி, கோடகம், சென்னி.

**அனுபோக ஜாதக ரகசியம்** : பரி, மா, வாசி, புரவி, துரகம், சென்னி, குதிரை, முன்னாள்.

## 2. பரணி

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: தாழி, பூதம், தருமநாள், காடு, கிழவன், அடுப்பு, பெருஞ்சோறு, போதம், பரணி.

**பிங்கலம்**: காடு, கிழவோன், பூதம், அடுப்பு, நாழி, சோறு, உத்தம நாள், அடுப்பு, பூதம், தாசி, முக்கூட்டு, பரணி.

**சூடாமணி**: கிழவன், சோறு, பகலவான், தராசி, தாழி, தருமனாள், அடுப்பு, பூதம், தாசி, முக்கூட்டு, பரணி.

**ஆசிரிய நிகண்டு**: தாழி, பூதம், தரும நாள், காடு, கிழவன், பகலவன், சோறு, தாசி, முக்கூட்டு, அடுப்பு, தராசு.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: பரணி, அடுப்பு, கிழம், பூதம், தாசி, சோறு, தராசு.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: அடுப்பு, காடு, கிழவன், சோறு, தரும நாள்.

**ஜாதக சிந்தாமணி** : பகலவன், தாழி, முக்கூட்டு, கிழவன், பூதம், சோறு, அடுப்பு, தரும நாள்.

**விமேசுர உள்ளமுடையான்** : தாழி, தராசு, அடுப்பு, பூதம், கங்குல், கிழவன், சோறு.

**அனுபோக ஜாதக ரகசியம்** : தாழி, பூதம், அடுப்பு, தராசு, கங்குல், கிழவன்.

## 3. கார்த்திகை

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: அங்கி, ஆரல், அளக்கர், அதை, இறால், நாடன், நாவிதன், வாணன், ஆறு, மீன், தழல்நாள், கார்த்திகை.

**பிங்கலம்**: அறுமீன், அங்கிநாள், அளக்கர், எரிநாள், அளகு, இறால், நாவிதன், வாணன், தழல், ஆரல்.

**சூடாமணி**: எரிநாள், ஆரல், இறால், அறுவாய், அளக்கர், நாவிதன், அங்கி, அளகு, கார்த்திகை.

**ஆசிரிய நிகண்டு**: அளகு, அறுவாய், அளக்கர், எரியின் நாள், ஆரல், அறுமீன், நாடன், நாவிதன், இறால், வாணன், அங்கி, தழல், கார்த்திகை.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: அறுவாய், தீ, அழகு, இறால், கார்த்திகை.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: அங்கி, அளகு, அளக்கர், அறுமீன், அறுவாய், ஆரல், இறால், எரிநாள், தழல், நாடன், நாவிதன், வாணன்.

**ஜாதக சிந்தாமணி**: எரிநாள், நாவிதன், அங்கி, இறால்.

**விமேசுர உள்ளமுடையான்** : ஆரல், அங்கி, அளகு, இறால், அடில், அறுமீன், அளதன், அன்பன்.

அநுபோக ஜாதக ரகசியம் : ஆரல், அழல், அங்கி, அளகு, இறால், அறுமீன், ஆவி.

### 4. ரோஹிணி

## தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்:** பண்பு, பார், சகடு, சாகாடு, வையம் உருள், தேர், அயன் நாள், ரோஹிணி.

**பிங்கலம்:** சகடு, விமானம், சதி, மாற்றால், அயல் நாள் வையம், ரோஹிணி.

**சூடாமணி:** பிரமன் நாள், சகடு, பண்டி, சதி, வையம், உருள், விமானம், தேர், மாற்றால் 2 ரோஹிணி ஊற்றால் 2ரோஹிணி.

**ஆசிரிய நிகண்டு:** பண்டி, பார், சதி, சகடு, தேர், வையம், அயன் நாள், உருள், விமானம், கோணம், உருள்.

## சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

நாமதீப நிகண்டு: ரோஹிணி, விமானம், அயன்நாள், சதி, தேர் விற்றால், 2 ரோஹிணி.

வீரமாமுனிவர் சதுரகராதி: சகடு, தேர், ஊற்றால், பிரமன் நாள், சதி, பண்டி, வையம், விமானம், ரோஹிணி.

ஜாதக சிந்தாமணி: பண்டி, தேர், உருளை, ஐம்மீன், வையம், பாறு, சகடு.

விமேசுர உள்ளமுடையான்: தேர், அயன் நாள், வையம், பார், சகடு

அநுபோக ஜாதக ரகசியம்: அயன், நாள், உருளி, உருள், 2ரோகிணி, ஊற்றால், சகடம், சகடு, சதி, தேர், பண்டி, டார், விமானம், வையம், சாலி (சிலப்பதிகாரம்)

## 5. மிருக சீரிஷம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்:** மாழ்கு, பேராளன், மான்தலை, இந்திரன், மார்கழி, நரிப்புறம், மதிநாள், மும்மீன், பாலை, வெய்யோன், மிருக சீரிடம்.

**பிங்கலம்:** மாழ்கு, மான் தலை, மார்கழி, நரிபுறம், மதிநாள், மும்மீன், பாலை, வெய்யோன், ஐந்தானம்.

**சூடாமணி:** திங்கள் நாள், மதி, பேராளன், மான்தலை, மாழ்கு, மார்கழி, மும்மீன், நரிப்புறம், பாலை, மிருக சீரிடம்.

**ஆசிரிய நிகண்டு:** மதி நாள், மகம், சிரம், பாலை, மார்கழி, மான் தலை, இந்திரன், மதி, மான், பேராளன், நரிப்புறம், மும்மீன், மிருக சீரிடம்.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு:** மதி, மாழ்கு, நரிப்புறம், மும்மீன், மகயிரம், பாலை, மிருகசீரிடம், மான்தலை, மார்கழி.

**வீரமா முனிவர் சதுரகராதி:** இந்திர நாள், ஐந்தானம், நரிப்புறம், பாலை, பேராளன், மதி நாள், மார்கழி, மான் தலை, மும்மீன், வெய்யோன்.

**ஜாதக சிந்தாமணி:** மகம், சிரம், மும்மீன், மதிநாள், மார்கழி, மாழ்கு, பேராளன், நரிப்புறம், பாலை, மிருகசீரிடம்.

**விமேசுர உள்ளமுடையான்:** மான் தலை, தேங்காய், ஐந்தானம், மும்மீன்.

**அனுபோக ஜாதக ரகசியம்:** மான்தலை, ஐந்தானம், மார்கழி, மதி, பேராளன், நரிப்புறம்.

## 6. திருவாதிரை

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்:** மூதிரை, செங்கை, யாழ், ஈசர் தினம், ஆதிரை.

**பிங்கலம்:** அரன் நாள், செங்கை, மூதிரை, ஆதிரை.

**சூடாமணி:** செங்கை, மூதிரை, யாழ், ஈசற்தினம், திருவாதிரை.

**ஆசிரிய நிகண்டு:** செங்கை, மூதிரை, ஈசர், தினம், திருவாதிரை.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு:** செங்கை, யாழ், மூதிரை, ஈசன்தினம், ஆதிரை.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** ஆதிரை, ஈசன்நாள், செங்கை, மூதிரை, யாழ்.

**ஜாதக சிந்தாமணி:** செங்கை, யாழ், மூதிரை, சிவன்தினம், திருவாதிரை.

**விமேசுர உள்ளமுடையான்:** செங்கை, யாழ், மார்கழி.

**அனுபோக ஜாதக ரகசியம்:** இரை, திரை, யாழ், செய்கை, வில்.

## 7. புனர் பூசம்

### தமிழ் நூல்கள் நிகண்டு

**சேந்தன் திவாகரம்:** அதிதிநாள், மூங்கில், கரும்பு, ஆவணம், எரி, புணர்தம், புனர்பூசம்.

**பிங்கலம்**: அதிதிநாள், மூங்கில், ஆவணம், கழை, எரி, புணர்தம், கரும்பு, புனர்பூசம்.

**சூடாமணி**: அதிதி நாள், கழை, பூ, வணம், எரி புணர்தம், கரும்பு, புனர்பூசம்.

**ஆசிரிய நிகண்டு**: அதிதி நாள், கரும்பு, பூவணம், பிண்டி, மூங்கில், ஓடு, பாலை, புணர்தம், புனிதம், புனர் பூசம்.

**சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு**: அதிதிநாள், ஆவணம், புனர்தம், கரும்பு, பிண்டி, புனிதம், புனர் பூசம்.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: ஆதிதிநாள், ஆவணம், எரி, கரும்பு, கழை, பாலை, பிண்டி, புணர்தம்.

**ஜாதக சிந்தாமணி**: அதிதி நாள், புனர்தம், பிண்டி, ஆவணம், எரி, கழை.

**விமேசுர உள்ளமுடையான்**: கரும்பு, புனர், பாலை, ஆவணம்.

**அனுபோக ஜாதக ரகசியம்**: மிண்டி, கார், திரள், மூங்கில், மாலை, கரும்பு, ஆவணம், வீண்டல்.

## 8. பூசம்

**தமிழ் நிகண்டு நூல்கள்**

**சேந்தன் திவாகரம்**: கொடிறு, கார்குளம், சுரர் குரு நாள், வண்டு, பூசம், புணர்தை.

**பிங்கலம்**: குருநாள், காற்குளம், கொடிறு, வண்டு,

**சூடாமணி**: குருநாள், காற்குளம், வண்டு, கொடிறு.

**ஆசிரிய நிகண்டு**: குருநாள், காற்குளம், கொடிறு, வண்டு, பூசம்.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

நாமதீப நிகண்டு: பூசம், காற்குளம் வண்டு, குருநாள், கொடிறு.

வீரமாமுனிவர் சதுரகராதி: காற்குளம், குருநாள், கொடிறு, தை, வண்டு,

ஜாதக சிந்தாமணி: தருவின் நாள், கொடிறு, வண்டி, காற்குளம்.

வீமேசுர உள்ளமுடையான்: காற்குளம், போது, தை, கொடிறு, குருநாள்.

அனுபோக ஜாதக ரகசியம்: குடம், தரா, கொடி, தையம், மதி.

## 9. ஆயில்யம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்:** அரவின் நாள், கௌவை, ஆயில்யம்.

**பிங்கலம்:** அரவின் நாள், கௌவை, ஆயில், ஆயில்யம்.

**சூடாமணி:** அரவின் நாள், கௌவை, பாம்பு, ஆயில், ஆயில்யம்.

**ஆசிரிய நிகண்டு:** அரவின் நாள், கௌவை, ஆயில், ஆயில்யம்.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

நாமதீப நிகண்டு: ஆயில்யம், பாம்பு, கௌவை, ஆயில்.

வீரமாமுனிவர் சதுரகராதி: அரவுநாள், ஆயில், கௌவை, பாம்பு.

**ஜாதக சிந்தாமணி**: அதிசயம், பாம்பு, அரவு நாள், கௌவை.

**விமேசுர உள்ளமுடையான்**: கௌவை, பணி.

**அனுபோக ஜாதக ரகசியம்**: பணி, கௌவை, பாம்பு.

## 10. மகம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: வேட்டுவம், கொடுநுகம், எழுவாய், எழுஞ்சனி, வாய்க்கால், பிதிர்நாள், மாசி, மகம்.

**பிங்கலம்**: வேள்வி, கொடுநுகம், வேட்டுவன், வாய்க்கால், ஆதியெழும், சனி, பிதிர்நாள், மாகம், மாசி, எழுவாயெழும் சனி.

**சூடாமணி**: கொடுநுகம், வேள்வி, வாய்க்கால், வேட்டுவன், மாசி, முதலில் வரும் சனி.

**ஆசிரிய நிகண்டு**: மாசி, கொடு நுகம், வெள்ளி, பிதிர் நாள், மாதம், முதலில் எழும் சனி.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: மகம், முற்சனி, வேட்டுவன், கொடுநுகம், வாய்க்கால்.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: சூதிச்சனி, எழுவாய், எழுஞ்சனி, கொடுநுகம், பிதிர்நாள், மாசி, வாய்க்கால், வேட்டுவன், வேள்வி.

**ஜாதக சிந்தாமணி**: வேள்வி, பிதிர் மாசி, வாய்க்கால், வேட்டுவன், சனியன் நாள், மகம்.

**விமேசுர உள்ளமுடையான்**: கொடுநுகம், எஞமலி, மாசி, வாய்க்கால், வேட்டுவன்.

**அனுபோக ஜாதக ரகசியம்**: முரசனி, வாய்க்கால், வேட்டுவன், எழில், நமலி, வாசி

## 11. பூரம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: எலி, நாவிதன், இடையெழும் சனி, துர்க்கை, பகவதி நாள், கணை, பூரம்.

**பிங்கலம்**: இடையெழும் சனி, எலி, துர்க்கை, பகவதி நாள், கணை, நாவிதன், பூரம்.

**சூடாமணி**: இடையெழும் சனி, துர்க்கை, எலி, பகவதி நாள், நாவிதன், கணை, பூரம்.

**ஆசிரிய நிகண்டு**: எலி, நாவிதன், இடையெழும் சனி, துர்க்கை, பகவதி நாள்.

### சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: துர்க்கை, கணை, எலி, இடைச்சனி, பூரம்.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: இடையெழும் சனி, எலி, கணை, நாவிதன், பகவதிநாள்.

**ஜாதக சிந்தாமணி**: எலி, பகவதி நாள், எழுஞ்சனி, துர்க்கை, கணை, நாவிதன், பூரம்.

**வீமேசுர உள்ளமுடையான்**: இடைச்சனி, துர்க்கை, நாவிதன்.

**அனுபோக ஜாதக ரகசியம்**: துர்க்கை, நாவிதன், எலி, இடைச்சனி, பூரம்.

## 12. உத்திரம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: பங்குனி, கடைச்சனி, பாற்குனி மானேறு,கதிர்நாள், உத்திரம்.

**பிங்கலம்**: பங்குனி, கடைச்சனி, பாற்குனி, மானேறு, கதிர்நாள், மாரிநாள், உத்திரம்.

**சூடாமணி**: பங்குனி, கடைச்சனி, பாற்குனி, பரிதிநாள்.

**சோதிட நூல்களில் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு**: சுடர் நாள், பிற்சனி, பங்குனி, உத்திரம்.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: கடைசனி, கதிர்நாள், செங்கதிர் நாள், பங்குனி, மானேறு.

**ஜாதக சிந்தாமணி**: பலிகொள் சனி, கதிர் நாள், பங்குனி.

**வீமேசுர உள்ளமுடையான்**: பாற்குளம், கடைச்சனி, பங்குனி.

**அனுபோக ஜாதக ரகசியம்**: பாற்குனி, பங்குனி, கடைச்சனி.

## 13. அஸ்தம்

**தமிழ் நிகண்டு நூல்கள்**

**சேந்தன் திவாகரம்**: கைம்மீன், தாமரம், களிறு, கௌத்துவம், நவ்வி, கன்னி, ஐவிரல், சுத்தம்.

**பிங்கலம்**: கைம்மீன், கைனி, கனவிநாள், ஐம்மீன், காமரம், களிறு, சுத்தம்.

**சூடாமணி**: தாமரம், அங்கிநாள், கௌத்துவம், கைம்மீன், களிறு, நவ்வி, ஐவிரல், சுத்தம்.

**ஆசிரிய நிகண்டு**: கௌத்துவம், களிறு, கைம்மீன், நவ்வி, காமரம், சுத்து, அங்கிநாள், ஐவிரல்.

**சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு**: அத்தம், நவ்வி, முன், கை, களிறு, ஐவிரல், காமரம், கவுத்துவம்.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** அங்கி நாள், ஐமான், ஐவிரல், களிறு, கன்னி, காமரம், கைமீன், கைனி , கௌத்துவம், நவ்வி.

**ஜாதக சிந்தாமணி:** களிறு, காமரம், அங்கி, விருக்கை மீன், கவுத்துவம், நவ்வி, நலிகை, மீன், ஐவிரல், சாந்திநாள்.

**வீமேசுர உள்ளமுடையான்:** அங்கை, ஐமீன், கைம்மீன், செவ்வி, களிறு.

**அனுபோக ஜாதக ரகசியம்:** களிறு, நவ்வி, கவுத்துவம், கைமீன்.

## 14. சித்திரை

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்:** நெய், வான் மீன், சுவை, பயறு, நேர்வான் துவட்ட நாள், சித்திரை.

**பிங்கலம்:** நெய், மீன், அறுவை, நேர்வான், பயறு, நடுநாள், தச்சன், சித்திரை.

**சூடாமணி:** நெய், பயறு, மீன், அறுவை, ஆடை, தூசு, நடுநாள், தச்சன், துவட்டநாள், சித்திரை.

**ஆசிரிய நிகண்டு:** அறுவை, நெய், பயறு, தச்சன், ஆடை, நேர்வான், சுவை, துட்டநாள், நடுநாள், சித்திரை.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு:** தச்சன், உடை, நடுநாள், நெய், பயன், அளக்கு சித்திரை, நடுநாள்.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** அறுவை, ஆடை, சுவை, செவ்வி, தச்சன், துவட்டநாள், தூசு, நெய், பயறு, மீன்.

**ஜாதக நிந்தாமணி:** அளக்கு, நெய், பயறு, தூசு, மீன், தச்சன், ஆடை, அறுவை, சித்திரை.

**வீமேசுர உள்ளமுடையான்:** நெய், மீன், பயறு, அம்பரன், செவ்வி, ஆடை.

**அனுபோக ஜாதக ரகசியம்:** கன்னி, ஆடை, ஆடம்பரம், பயறு, நெய், மீன்.

## 15. சுவாதி

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்:** விளக்கு, வீழ்த்தை, வெறுநுகம், மரக்கால், அனிவநாள், சோதிநாள்.

**பிங்கலம்:** விளக்கு, மரக்கால், வெறுநுகம், வீழ்க்கை, துளக்கம், காற்றின் நாள், சோதி.

**சூடாமணி:** விளக்கு, மரக்கால், வீழ்க்கை, வெறுநுகம், காற்றின் நாள், காற்று, தீபம், சோதி.

**ஆசிரிய நிகண்டு:** மரக்கால், வீழ்க்கை, வெறுநுகம், காற்றின் நாள், தீபம், விளக்கு, பதுமம்.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு:** சோதி, காற்று, வீழ்க்கை, நுகம், விளக்கு, மரக்கால்.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** அனிவநாள், காற்று, தீபம், துணி, துளக்கம், மரக்கால், விளக்கு, வீழ்க்கை, வெறுநுகம்.

**ஜாதக சிந்தாமணி:** விளக்கு, மரக்கால், காற்று, காட்டீபம், வெறு நுகம், வீழ்க்கை, சோதி.

**வீமேசுர உள்ளமுடையான்:** மரக்கால், தீபம், பதுமம், சோதி.

**அனுபோக ஜாதக ரகசியம்:** மரக்கால், தீபம், பதுமம்.

## 16. விசாகம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: முறம், முற்றில், வைகாசி, சுளகு, விசாகம்.

**பிங்கலம்**: அனில நாள், முற்றில், முறம், வைகாசி, சுளகு, விசாகம்.

**சூடாமணி**: முற்றில், வைகாசி, காற்றின் நாள், முறம், சுளகு, சேட்டை, விசாகம்.

**ஆசிரிய நிகண்டு**: முறம், முற்றில், சுளகு, சேட்டை, காற்றின் நாள், விசாகம்.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

நாமதீப நிகண்டு: விசாகம், சுளகு.

வீரமாமுனிவர் சதுரகராதி: அனலநாள், காற்று, முந்து நாள், சுளகு, சேட்டை, முறம், முற்றில், வைகாசி.

ஜாதக சிந்தாமணி: வைகாசி, முந்து நாள், காற்று, சுளகு, முறம்.

வீமேசுர உள்ளமுடையான்: வைகாசி, முற்றில், முறம், சேட்டை.

அனுபோக ஜாதக ரகசியம்: வைகாசி, முறம், முற்றில், சுளகு.

## 17. அனுஷம்

### தமிழ் நிகண்டு நூல்கள்

**சேந்தன் திவாகரம்**: பனை, தேன், பெண்ணை, புல், தானி, போந்தை, மித்திர நாள், அனுடம்.

**பிங்கலம்**: பனை, தேன், பெண்ணை, புல், தாளி, போந்தை, மித்திர நாள், அனுடம்.

**சூடாமணி**: புல், தாளி, பெண்ணை, தேன், போந்தை, மித்திரநாள், அனுடம்.

**ஆசிரிய நிகண்டு**: புல், தாளி, பெண்ணை, தேன், போந்தை, மித்திரநாள்.

**சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு**

**நாம தீப நிகண்டு**: தேன், பனை, மித்திரநாள், அனுடம்.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: தாளி, தேன், பனை, புல் பெண்ணை, போந்தை, மித்திரநாள்.

**ஜாதக சிந்தாமணி**: பாந்தை, மித்திர நாள், போந்தை, தேன்.

**விமேசுர உள்ளமுடையான்**: புல், தேன், புனை.

**அனுபோக ஜாதக ரகசியம்**: புற்றாணி, புற்றேன், சுனை.

## 18. கேட்டை

**தமிழ் நிகண்டு நூல்கள்**

**சேந்தன் திவாகரம்**: சேட்துளங்கொளி, வல்லாரை, வேதி, எரி, தழல், இந்திர நாள், கோட்டை.

**பிங்கலம்**: துளங்கொளி, வல்லாரை, வேதி எரி, தழல், இந்திர நாள், சேட்டை, கோட்டை.

**சூடாமணி**: சேட்டை, இந்திரநாள், வேதி, தழல் எரி, வல்லாரை, சேட்டை.

**ஆசிரிய நிகண்டு**: சேட்டை, வல்லாரை, துளங்கொளி, இந்திரன் நாள், வேதி தழல்.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டுகள்

**நாமதீப நிகண்டு**: வேதி, இந்திர நாள், கேட்டை, சேட்டை, வல்லாரை.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: இந்திரநாள், எரி, செந்தழல், சேட்டை, வல்லாரை, வேதி.

**ஜாதக சிந்தாமணி**: சேட்டை, எரி தழல், வேதி, சித்திரை, நாள், கேட்டை.

**வீமேசுர உள்ளமுடையான்**: வல்லாரை, ஒளி, நாழி.

**அனுபோக ஜாதக ரகசியம்**: வல்லரை, வாளி, துளங்கொளி.

## 19. மூலம்

### தமிழ் நூல் நிகண்டுகள்

**சேந்தன் திவாகரம்**: கொக்கு, தேட்கடை, குருகு, வில், அன்றில், ஆனி, அசுர நாள், மூலம்.

**பிங்கலம்**: கொக்கு, தேட்கடை, குருகு, வில், அன்றில் ஆனி, அசுர நாள்.

**ஆசிரிய நிகண்டு**: சிலை, குருகு, கொக்கு, அன்றில், அசுர நாள், ஆனி, ஒடு, தேட்கடை.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: தேட்கடை, கொக்கு, ஆணி, அன்றில், வில், மூலம், அசுரநாள்.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: அசுரநாள், அன்றில், ஆனி, குருகு, கொக்கு, சிலை, தேட்கடை, வில்.

**ஜாதக சிந்தாமணி**: கொக்கு, தேட்கடை, குருகு, சிலை, அன்றில், ஆனி, வில்.

வீமேசுர உள்ளமுடையான்: தேட்கடை, கொக்கு, ஆவணி.

அனுபோக ஜாதக ரகசியம்: குருகு, கொக்கு, தேட்கடை, ஆனி.

## 20. பூராடம்

### தமிழ் நூல் நிகண்டுகள்

**சேந்தன் திவாகரம்:** உடைகுளம், முற்குளம், நீர்நாள், நீர், பூராடம்.

**பிங்கலம்:** உடைகுளம், முற்குளம், மாரி, நீர் நாள், நீர், பூராடம்.

**சூடாமணி:** உடைகுளம், முற்குளம், நீர்நாள், பூராடம்.

**ஆசிரிய நிகண்டு:** முற்குளம், நீர்நாள், ஓடு உடை குளம், மாரி, நீர்நாள், பூராடம்.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

நாமதீப நிகண்டு: முற்குளம், நீர்நாள், பூராடம்.

வீரமாமுனிவர் சதுரகராதி: உடைகுளம், முற்குளம், நீர்நாள்.

ஜாதக சிந்தாமணி: உடைகுளம், முற்குளம், நீர்நாள்.

வீமேசுர உள்ளமுடையான்: பொய், பாவி, உடைகுளம்.

அனுபோக ஜாதக ரகசியம்: குளம், பொய்கை, பாவி.

## 21. உத்திராடம்

### தமிழ்நூல் நிகண்டுகள்

**சேந்தன் திவாகரம்:** ஆடி, ஆனி, கடைக்குளம், விச்சுவ நாள்.

**பிங்கலம்:** ஆடி, விச்சுவ நாள், கடைக்குளம், ஆனி.

**சூடாமணி:** கடைக்குளம், ஆனி, விச்சுவநாள், ஆடி.

**ஆசிரிய நிகண்டு:** கடைக்குளம், ஆனி, ஆடி, விச்சுவ நாள், உத்திராடம்.

**சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு:** விச்சுவநாள், பிற்குளம், ஆடி.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** ஆடி, ஆனி, கடைக்குளம், விச்சுவநாள்.

**ஜாதக சிந்தாமணி:** கடைநீர், குளம், ஆனி, விச்சுவநாள், ஆடி.

**வீமேசுர உள்ளமுடையான்:** ஊர்தி, மணி தானம், முடி.

**அனுபோக ஜாதக ரகசியம்:** குளம், உடவல்மணி, முடி, ஆடை, ஊர்தி.

## 22. திருவோணம்

**தமிழ் நூல் நிகண்டுகள்**

**சேந்தன் திவாகரம்:** நலக்கு, வயிரம், நள், சிரவணம், உலக்கை, சோனை, மாயோன், நாள், ஓணம்.

**பிங்கலம்:** சோனை, மாயோன், நாள், முக்கோல், சிரவணம், உலக்கை.

**சூடாமணி:** மாயோன், நாள், உலக்கை, முக்கோல், சிரவணம், சோனை, திருவோணம்.

**ஆசிரிய நிகண்டு:** உலக்கை, முக்கோல், சோனை, மாயன் நாள், சிரவணம்.

**சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு:** முக்கோல், உலக்கை, மால்நாள், சிரவணம், ஓணம் நாள்.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** உலக்கை, ஓணம், சிரவணம், சோனை, நள்ளு, மாயோன்.

**ஜாதக சிந்தாமணி:** உலக்கை, சிரவணம், அரித்தினம்.

**விமேசுர உள்ளமுடையான்:** சோணம், உலக்கை.

**அனுபோக ஜாதக ரகசியம்:** சோனை, சிரவணம், உலக்கை.

## 23. அவிட்டம்

**தமிழ்நூல் நிகண்டுகள்**

**சேந்தன் திவாகரம்:** புள், பறவை, ஆவணி, காக்கை, வசுநாள், ஆவணி அவிட்டம்.

**பிங்கலம்:** காகப்புள், வசுக்கள்நாள், ஆவணி, பறவை.

**சூடாமணி:** காகப்புள், வசுக்கள்நாள், பறவை, புள், ஆவணி.

**ஆசிரிய நிகண்டு:** புள், பறவை, வசுநாள், ஆவணி.

**சோதிடநூல்கள் சொல்லிய நிகண்டு**

**நாதீப நிகண்டு:** வசுநாள், ஆவணி, புள், காகம், அவிட்டம்.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** ஆவணி, காகப்புள், பறவை, புள், வசு நாள்.

**ஜாதக சிந்தாமணி:** காகம், வசுநாள், பறவை, புள், ஆவணி.

**விமேசுர உள்ளமுடையான்:** பறவை, காக்கை, புள்.

**அனுபோக ஜாதக ரகசியம்:** புள், பறவை, காக்கை, ஆவணி.

## 24. சதயம்

### தமிழ்நூல் நிகண்டுகள்

**சேந்தன் திவாகரம்**: குன்று, போர், சுண்டன், பெரும் செக்கு, வருணன்நாள், உதயம்.

**பிங்கலம்**: குன்று, வருணன்நாள், செக்கு, சுட்டன், போர், சதயம்.

**சூடாமணி**: செக்கு, சுண்டன், போர், குன்று, வருணன் நாள், சதயம்.

**ஆசிரிய நிகண்டு**: கூட்டு, சுண்டன், செக்கு, வருணன் நாள், போர்.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

நாமதீப நிகண்டு: நன்று, செக்கு, சுண்டன், வருணன்.

வீரமாமுனிவர் சதுரகராதி: குன்று, கண்டன், செக்கு, வருணன் நாள், போர்.

ஜாதக சிந்தாமணி: சுண்டன், செக்கு, வசுநாள், போர், குன்று, வருணன்நாள்.

வீமேசுர உள்ளமுடையான்: சுண்டில், செக்கு.

அனுபோக ஜாதக ரகசியம்: சுண்டன், குண்டில், செக்கு.

## 25. பூரட்டாதி

### தமிழ்நூல் நிகண்டுகள்

**சேந்தன் திவாகரம்**: பூரட்டாதி, முற்கெழுங்கோல், பூரட்டாதி, நாழி.

**பிங்கலம்:** பூரட்டாதி, முற்கெழுங்கோல், நாழி, பாதநாள், பூரட்டாதி.

**சூடாமணி:** முற்கெழுங்கோல், நாழி, புரட்டை, பூரட்டாதி.

**ஆசிரிய நிகண்டு:** பூரட்டாதி, பாதநாள், முற்கெழுங் கோல், நாழி.

**சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு**

**நாமதீப நிகண்டு:** முற்கெழுங்கோல், புரட்டை, நாழி, பூரட்டாதி.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** நாழி, பூரட்டாதி, முற்கொழுங் கோல்.

**ஜாதக சிந்தாமணி:** முற்கெழுங்கோல், புரட்டாசி, நாழி, பூரட்டாதி.

**வீமேசுர உள்ளமுடையான்:** ஞானி, கொழுக்கோல், புட்டை.

**அனுபோக ஜாதக ரகசியம்:** கொடுங்கோல், நாழி, புரட்டை.

## 26. உத்திரட்டாதி

**தமிழ்நூல் நிகண்டுகள்**

**சேந்தன் திவாகரம்:** முரசு, பிற்கொழுங்கோல், மன்னன், அறிவன்நாள், உத்திரட்டாதி.

**பிங்கலம்:** முரசு, பிற்கொழுங்கோல், மன்னன், தீபம், அறிவன், உத்திரட்டாதி.

**சூடாமணி:** முரசு, பிறகொழுங்கோல், மன்னன், உத்திரட்டாதி.

**ஆசிரிய நிகண்டு**: மன்னவன், முரசு, பிற்கொழுங்கோல், அறிவன் நாள்.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: மன்னவன், பிற்கொழுங்கோல், முரசு, உத்திரட்டாதி.

**வீரமாமுனிவர் சதுரகராதி**: அறிவன்நாள், தீபம், பிற்கொழுங்கோல், மன்னன், முரசு.

**ஜாதக சிந்தாமணி**: முரசு, பிற்கோல், மன்னவன்.

**வீமேசுர உள்ளமுடையான்**: சீர், அறிவன், முரசு, வேந்தன்.

**அனுபோக ஜாதக ரகசியம்**: முரசு, வேந்தன், அறிவன், தினம்.

## 27. ரேவதி

### தமிழ்நூல் நிகண்டுகள்

**சேந்தன் திவாகரம்**: தொழு, நாவாய், தோணி, சூலம், பஃறி, புரடநாள், கடைமீன், ரேவதி.

**பிங்கலம்**: தொழு, நாவாய், தோணி, சூலம், பஃறி, புரட, நாள், கடைமீன், இரேவதி.

**சூடாமணி**: இரவிநாள், கலம், தோணி, தொழு, நாவாய், கடைநாள், சூலம், பெருநாள், இரேவதி.

**ஆசிரிய நிகண்டு**: ஆவம், பெருந்தோணி, பஃறி, நாவாய், இரவிநாள், புரநாள், கடைமீன், தொழு.

### சோதிட நூல்கள் சொல்லிய நிகண்டு

**நாமதீப நிகண்டு**: கடைநாள், குலம், தோணி, ரேவதி.

**வீரமாமுனிவர் சதுரகராதி:** இரவி நாள், கடைநாள், கலம், குலம், சூலம், தொழு, தோணி, நாவி, பஃறி, புருடன், பெருநாள்.

**ஜாதக சிந்தாமணி:** இரவி நாள், கலம், தோணி, தொழு, நாவாய், கடைநாள், பெருநாள்.

**வீமேசுர உள்ளமுடையான்:** தோணி, கடைமுன், மரக்கலம், நாவாய்.

**அனுபோக ஜாதக ரகசியம்:** கடை மீன், தோணி, மரக்கலம், நாவாய்.



# மேஷ இராசி பலன்

## அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல்பாதப் பலன் முடிய

### 1. அறுசீர் ஆசிரிய விருத்தம்

வடிவது சால நல்லான் வஞ்சகம் பேச வல்லான்
கடுவுரை கேடு சொல்வான் கல்வியே மிகவும் வல்லான்
உடை யோடு பூசும் சாந்தும் உண்மையாய் அணிய வல்லான்
அடை வயது ஞான மெத்த அசுபதி மேடத்தானே.-32 (சுவடி1500)

**(இதன் பொருள்)** மேஷ இராசியில் பிறந்தவன் வடிவ அழகானவன் அல்லது அழகிய வடிவமுடையவன். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் வஞ்சக முடையவன். சுடுசொல், கசப்பான சொல் பேசும் குணமுள்ளவன். கல்வி கேள்விகளில் வல்லவன். ஆடை வகைகளும், நறுமணச் சந்தனம் முதலியவை (தற்கால Cosmatics என்ற வாசனைப் பொருள்கள்) பூசி அழகுபடுத்திக் கொள்ளுபவன். நல்ல ஞானத்தை அடைந்து ஞானியுமாவான். அசுபதி நட்சத்திரத்தை முதலாகக் கொண்ட மேஷ இராசிக்காரர்கள் இந்த குணநலன்களை உடையவர்களாம், (என்றவாறு).

### மந்த்ரேசுவரர் பலதீபிகைப்படி மேஷ ராசிக்காரர் இயல்பு

இவர் உருண்ட வட்டவிழிகள் உள்ளவர். முழங்கால் பலஹீனமுள்ளவர். முரட்டு, சினம் கொண்ட இயல்பினர். தண்ணீர் அதாவது நீர்நிலைகளைக் கண்டு அஞ்சுவர். சஞ்சல சித்தமும், ஊர்சுற்றித் திரியும் பழக்கமும் உள்ளவர். காமுகர், ஆனால் குறைந்த அளவு உண்பவர். குறைவாகவே பேசுபவர்.

### ஏனைய தமிழ், ஆங்கில நூற்கொள்கைப்படி இராசிக்காரர்

இது இராசிகளின் முதலாவது. பூதங்களில் நெருப்பு, சரம் என்னும் நகரும் இராசி. ஆண் இராசி. ஆட்டுக்கிடா, முரட்டுத்தனம், அவசரம், கோபம், போட்டி, சண்டை எல்லாம் உள்ளது இந்த இராசி. இவர்கள் குணமும் இப்படியே.

**வடிவம்**

நடுத்தர உயரமும், குள்ளமும் இல்லாத மெலிந்த உருவம், நெருப்பின் செந்நிறம். உடம்பில் வெட்டு, ரண காயங்கள், வடுக்கள் எப்பொழுதும் சுறுசுறுப்பு, தைரியம், அஞ்சாமை, பிடிவாதம் இவை உள்ளவர்.

**குணங்கள்**

தலைமைப் பீடத்திலேயே இருக்க விருப்பம். பணி செய்யமாட்டார். தன் தீர்மானமே பெரிது, பிறர் அறிவுரை விரும்பார். அவசரத் தீர்மானம். ஆனால் சரியாய் இருக்கும் பிறரை ஆட்டிப்படைப்பவர். அடிக்கடி மாறுவார். அலைவார், ஊர்சுற்றிகள். சதா குமுறும் உள்ளம். சந்தர்ப்பங்களுக்குக் காத்திராமல் வரவழைத்துக் கொள்வார். அவசர முடிவுகளை சரியாக தீர்மானிப்பதில் வல்லவர். சண்டைக்காரரர் அல்ல. ஆனால் வரும் சண்டையை விடமாட்டார். விட்டுக்கொடுக்கமாட்டார். தான் என்ற கர்வம் அதிகம். அதை நிலைநாட்டுவார். ஆனால் அதில் கவர்ச்சி உண்டு. குரூரமும், பழிவாங்கும் குணமும் உண்டு. ராசிக்கு பாவக்கோள் சம்பந்தம் அதிகமானால் கொலையும் செய்யத்துணிவர்.

**காதல், கல்யாணம்**

எளிதில் கவரப்படுவர். அவசரக்குடுக்கை, கண்டதும் காதல், அவசர மோதல், இல்லையேல் சாதல். இது இவர்கள் வேகம். ஆணாயினும் பெண்ணாயினும் தான் அடங்காமல்

மற்றவரை அடக்கி ஆளவே விருப்பம். இவர்கள் இஷ்டப்படிதான் நடக்க வேண்டும். பெண் மேஷ ராசிக்காரர், தாங்களாகவே காதலில் முதன்மையை ஏற்பர். அதில் வெட்கமில்லை. எதிராளி அடக்கினால் உதறிவிடுவர். முடிவை மாற்றியும்கொள்வர். இது ஆண் ராசியாகையால் இந்த ராசி பெண்களுக்கு கவர்ச்சி உருவம் எல்லாவற்றிலுமே ஒரு ஆண் தன்மை உண்டு.

**பெண்கள்**

மேஷராசிக்காரி, ரோஷக்காரி. இவள் கணவனைப் பகைத்துக் கொள்வது சகஜம். இந்த இராசிப்பெண்கள் எப்படியும் கணவனை அடக்கிக் கைக்குள் வைத்துக் கொள்வர். இவர்கள் தாம் தம் கணவர்களைத் தனியாக விட்டுவிட்டுத் திரைப்படம், நாடகம், பொது அலுவல் "லேடீஸ்க்ளப்" போன்றவற்றுக்குச் செல்லும் பெருந்தனக் காரிகள், இந்த இராசி ஆண்களோ பெண்களை மலரென மதியாமல், கசக்கி நுகரும் இயல்பினர். அதிலே இவர்களுக்கு ஒரு "இரசனை", தன் காரியமே குறி. இப்பெண்கள் அடிக்கடி சண்டை இடுவர். ஆனால் குடும்ப ஈடுபாடு உண்டு. குடும்பத்தைத் தாமே நிருவகிப்பார்கள். குழந்தைகளை அடித்து வளர்ப்பர். விலக்க வரும் தாய்க்கும் பங்கு உண்டு. மேஷத்தாயோ இதைப் போல் செய்துவிட்டு பாசத்தைக் காட்டாமல், தனியா இருக்கும்பொழுது தாய்மைப் பாசத்தால் தவித்துப் பொறுமுவார்கள். அடித்துக்கொள்ளுதலும், உடனே கூடிக்குலவி சிரித்தலும், இரவில் கூண்டில் அடைபட்ட கோழிபோல் இவர்கள் வேகம் அமுங்கிவிடும். இதில் இவர்களுக்கு வெட்கமில்லை.

**தொழில்**

செவ்வாய், சனி சம்பந்தப்பட்டவை எல்லாம், காவல் தொழில், மருத்தவம் அதிலும் சிறப்பாக அறுவை மருத்துவம், ரசாயன, மின், தீ சம்பந்தமானவை, சமையல், இரும்பு சம்பந்தமான தொழில், முடிதிருத்தல், கடிகாரம்

பழுது பார்த்தல், தையல் தொழில், பீங்கான், சுண்ணாம்புக் காளவாய்த் தொழில், சிராமிக் என்னும் கனிமப்பொருள் சம்பந்தப்பட்டவை. மருந்துகள். புடம் வைத்த செய்யும் சித்த மருத்துவம் முதலியன இவர்கள் தொழிலாக அமையலாம்.

**இந்த இராசியின் ஆக்க பூர்வமான (Positive) பண்புகள்**

தலைமை, திறமை, தானே முன் நிற்றல் எல்லா சூழ்நிலைகளிலும், சங்கடங்களை சமாளிக்கும் வலிமை, மிக உயர்ந்த குறிக்கோள், பேராவல்.

**இந்த இராசியின் சரி செய்துகொள்ள வேண்டிய பண்புகள்**

கோபம், சிடுமூஞ்சித்தனம், சுயநல, பொறுமை யின்மை, தன் உணர்ச்சி வேகங்களை அடக்கிக் கொள்ள முடியாமல் வெடித்தல்.

**நோய்:**

பொதுவாக நல்ல ஆரோக்கியம் உண்டு. வெட்டின காயம், தீப்புண், சீரான தலை நோய், கூரான ஆயுத காயம், உஷ்ண காங்கை, மூளை ரத்தநாள வெடிப்பு முதலியன.

அதிர்ஷ்ட எண்: 3, 6, 5. அதிர்ஷ்ட நிறம்: இரத்தச்சிவப்பு. அதிர்ஷ்ட மணி: (இரத்தினம்) பவளம். அதிர்ஷ்ட நாள்: வியாழன், வெள்ளி, திங்கள். இராசி அதிபதி செவ்வாய் ஆயினும், வியாழக்கிழமை தீமையே. (செவ்வாயும்)

**இந்த மேஷராசி லக்னமாக அமைந்தால்**

செம்பு நிறமுள்ளவர். கோழை, அதாவது கப பிருக்கிரிதி உள்ளவர். சீக்கிரம் முன்கோபம் வரும். மந்த புத்தி ஸ்திர மற்ற தன்மை, பெண்போகப் பிரியர். குணசாலி, பந்து ஜன உபகாரர். தன் முயற்சியால் புகழ் அடைபவர். தேஜஸ்வி யாவார். ஆவேசம் பெறும் குறிக்கோள் உள்ளவர். எதிர்க்கும் தன்மை, எடுத்த முயற்சியை முடிக்கும் தன்மை. போரில் திறமை. பேசுவதை விட எழுதுவதில் வல்லவர். மத்திம உடல் வாகு, இவை எல்லாம் மேஷ லக்கனமே.

*ராஜ பூஜிதர். பொதுமக்கள் தொடர்பால் புகழ் பெறுபவர். தைரியம், பிடிவாதம், முரட்டுத்தனம், சாமர்த்தியம் எல்லாம் உள்ளவர். அடிமைகள் உள்ளவர், மெலிந்த தேகம், அறிவு, அழகு மன உறுதி இவை உள்ளவர். இருதாரங்கள் அமையும் வாய்ப்பு உண்டு. ஆயுதம், துப்பாக்கிச்சூடு, கல்லடி, மரத்திலிருந்து விழுதல், வெட்டு, குத்து இவை போன்றவற்றால் காயம் ஏற்படலாம். தன் குலத்தில், தான் புகழுடன் விளங்குவார். அற்ப சந்ததி உள்ளவர். 4. 5, 7, 10, 20, 22, 25 இந்த வயதுகளில் அக்கினி காய்ச்சல், சொறி சிரங்கு, வைசூரி, விஷம், பீடை போன்றவை ஏற்படலாம்.*

*மேஷ லக்கனத்திற்கு சுபர்: குரு, சூரியன், செவ்வாய். பாபர்: சனி, சுக்ரன், புதன். கிரகசேர்க்கை பலன்: யோககாரகர்-சனி குரு கூட்டு, அசுபம். சூரிய சந்திரர், யோககாரகர். பாதகர்-சனி, மாரகர்-சுக்ரன். இவன் கொல்லான். புதன், சனி கொல்வார்கள்.*

**விளக்கம்:** *ரேமர் பிறை சந்திரன் பாவி - அதனால் லக்னத்திற்கு நல்லவன் என்ற வகையில் சாதாரண சுப பலன் தருவான். வளர்பிறை சந்திரனால் அதிக சுப பலன் ஏற்படும்.*

*1, 8க்குடையவன் என்ற வகையில் செவ்வாய் லக்னாதிபன் என்ற வகையில் சுபன். சுக்ரன் 2, 7க்குடையவன் என்ற வகையில் சுபாவ மாரகன் இருமாரக ஆதிபத்தியம் உள்ளவன். மாரகம் செய்யான் என்பது கொள்கை. "த்வி மாரகோ ந மாரக" எனவே மத்தம சுபன்.*

**3, 6க்குடைய புதன் அசுபன்**

*4, 5க்குடையவர் சூரிய சந்திரர். இதில் சந்திரனுக்கு கேந்திராதிபத்திய தோஷம் கிடையாது. எனவே சுபன் சூரியன் 5க்குடையவன் என்ற வகையில் சுபனே. யோகக்காரகன் குரு 9,12க்குடையவன் 12க்குடையவன் என்ற வகையில் அசுபனே.*

ஆயினும் 9க்குடையவன் என்ற வகையில் நல்லவன். யோககாரகன். அந்த இலக்னத்திற்கு புதனும், சனியுமே மாரகர்ஆவர்.

## இந்த லக்னத்திற்கு சுபயோக சேர்க்கை

1. சூரியன் + சந்திரன்
2. சூரியன் + செவ்வாய்
3. சூரியன் + குரு
4. செவ்வாய் + குரு
5. செவ்வாய் + சந்திரன்
6. குரு + சனி

## இந்த லக்னத்திற்கு ஆகாத விம்சோத்தரி திசைகள்

புதன் திசை முழுவதும் சனி திசை, பிற்பாதி லாபம் தரினும் மாரகன் என்ற வகையில் தீங்கு செய்யும்.

லக்னம் - லக்னாதிபதி ஆயுள்காரகர். ஆயுள் ஸ்தானாதிபதி இவர்கள் வலுத்தால் 100 வயது வரை வாழ்வார்.

பௌர்ணமி, வியாழன், ரோஹிணி நக்ஷத்திரம் கூடிய நாளில் இரவு நேரத்தில் தலைவலியால் இறந்துபோவார்.

## தொடர்பு விளக்கம்

### மேஷ ராசியில் உள்ள நட்சத்திரங்கள் பலனும் பாத பலன் முதலியவையும்

இந்தப் பகுதியில் தஞ்சை மகால் ஏட்டுப்பாடலில் (மரண கண்டிகை) சொல்லப்பட்ட நட்சத்திரம் ஒவ்வொன்றுக்கும் பலனும் அதையடுத்து பலமொழி நூல்களில் சொல்லியுள்ள அந்தந்த நட்சத்திர பலன்களும் தொகுத்து கூறப்பட்டுள்ளன. இதையடுத்து அந்தந்த நட்சத்திரங்களில் ஒன்பது கோள்களும் ஒவ்வொன்றும் இருந்த பலனும் கூறப்படும்.

இதனையும் அடுத்து ஒவ்வொரு நட்சத்திரத்தின் 4 பாதங்களில் ஒவ்வொரு பாதத்திலும் பிறந்தவர் பலனும், அதேபோல் தஞ்சை மகால் ஒட்டு வாக்கியப்படிக் கூறப்படும். அடுத்த வேறு நூல்களில் இப்படிக் கூறப்பட்ட நட்சத்திரப் பாதப்பலன்கள் தொகுத்துக் கூறுவோம். இதையடுத்து இந்த ஒவ்வொரு பாதத்திலும் 9 கோள்கள் நின்ற பலன் கூறப்படும். இது நவாங்கிச பலனாகும். ஒவ்வொரு பாதமும் ஒரு ராசியின் 9ல் ஒரு பங்கு ஆகையால் இது நவாம்சம் எனப்படும். எனவே இதில் ஒவ்வொன்றிலும் இருக்கும் கோள்கள் பலனும் தனித்தன்மை வாய்ந்தவை.

இதை அடுத்து ஒவ்வொரு நட்சத்திரத்தின் ஒவ்வொரு பாதத்திலும் பிறப்பதால் வாழ்க்கையில் பொதுவாக ஏற்படும் கஷ்டங்களுக்கு பரிஹாரங்கள் "கர்ம விபாகம்" என்ற நூலில் இவையும் ஒவ்வொரு பாதத்திற்கும் சொல்லப்படும்.

இப்படி நட்சத்திரப் பாத பலன் சொல்லும் போது ஒவ்வொரு பாதத்தில் பிறந்தவர்களுக்கு ஏற்படும் கால சக்கிர திசை பரமாயுள், ஏற்படும் நோய்கள் வாழ்க்கையில் எந்தெந்த வயதில், கண்டம், அதிஷ்டம், நோய் முதலியவை ஏற்படும். இறக்கும் காரணம் இவை மகாலின் "மரண கண்டிகை" (ஏடு எண். 1500) என்ற ஏட்டின் அடிப்படையில் நாமும் பிற நூல்களில் சொல்லப்பட்டுள்ளவை எல்லாவற்றையும் தொடர்புபடுத்தித் திரட்டி எழுதியுள்ளோம். ஒவ்வொரு நட்சத்திர காலச்சக்கிர திசைப்பலனும் ஒவ்வொரு பாதத்திற்கும் சுருக்கமாகக் கொடுத்துள்ளோம். இதுபோன்ற முழு நட்சத்திரத்திற்கு அந்தந்த நக்ஷத்திரத்திற்குரிய உருமஹாதிசை (தசாபுத்தி பலன் இதுதான் பெருவழக்கில உள்ளது) பலனையும் சுருக்கமாக அங்கங்கே கூறியுள்ளோம். இவ்வளவு பல முனை விரிவாக்கத்தால் இந்த நூல் இதுவரை தமிழில் எழுதப்படாத ஒரு நட்சத்திர ராசி மண்டல கலைக்களஞ்சியம் தொடர்புகளுள்ள பல செய்திகள், அவற்றில் சொல்லப்பட்டுள்ளன. இவற்றை எல்லாம் தொகுத்து அந்தந்தப்பாடலின் கீழ் சேர்க்கப்பட்டுள்ளன. இப்போது நட்சத்திரப் பலனைப் பார்ப்போம்.

## அத்தியாயம் - 1

# 1. அஸ்வினி நட்சத்திரம்

இது முதலாவது நட்சத்திரம். மேஷராசியில் முதல் 13 பாகை-20 வரை பரந்துள்ளது. அசுவினி குமாரர்கள் என்ற தேவ மருத்துவர் பெயரில் இது வழங்குகிறது. இவர்களே இதற்கு அதிதேவதைகள்.

இந்தியப்பெயர்: **அசுவினி**

கிரேக்கப்பெயர்: (Castor and Pollux) **கேஸ்டர் மற்றும் போலெக்ஸ்.**

அரபுப்பெயர்: **அஷ் - விரடன்** (இரு அடையாளங்கள்)

சீனப்பெயர்: **ஸியு** (Sieu)

இது இரண்டு நட்சத்திரங்களைக் கொண்டது. இது நமது நாட்டு கந்த காடக - சாகல்யர்களின் கருத்தாம்.

### அஸ்வினியின் பலன்

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

(குறிப்பு: இந்நூலில் வரும் பாடல்கள் யாவும் அறுசீர் ஆசிரிய விருத்தங்களே. மாறாக வந்தால் குறிப்பிடுவோம்.)

**செய்வன திருந்தச் செய்யும் சேயிழை யார்க்கு நல்லன்**
**மெய்யுற மணியும் பொன்னும் மகிழ்ச்சியாய் அணிய வல்லான்**
**பொய்யுரை ஒன்றும் சொல்லான் புகழ் பெற வாழ வல்லான்**
**அய்ய மிட்டுண்ணும் நல்லோன் அசுபதி நாளி னானே !** (33)

(இ-ள்.) அசுவினி நட்சத்திரத்தில் பிறந்தவன் தான் செய்யும் காரியங்கள் எல்லாம் செம்மையாகத் திருத்தமுறச்

செய்வான். பெண்களுக்கு நல்லவன். அவர்களால் விரும்பப்படுபவன். தன் மேனியை எப்பொழுதும் தொட்டுக் கொண்டிருக்கும் அணிகலன்களை அணிவான். (பொன்னும் மணியும் பூண்பான்) பொய் கூறான். புகழுடன் சிறந்து விளங்குவான் என்பதாம்.

**விளக்கம்:** இந்த நட்சத்திரம் ஆணினுடையதாயின் அலங்காரப்பிரியன். கல்வி வல்லவன், பசி பொறுக்கமாட்டான். முகத்தில் அல்லது முன் தொடையில் மரு உண்டு. முன்கோபி, மிகவும் அழகன், மூக்கு உயர்ந்திருக்கும், மாறுகண்ணும் இருக்கலாம். அகன்ற தோளும் உயர்ந்த நெற்றியும் உள்ளவன். இதில் பிறந்த பெண்களும் பெரும்பாலும் இக்குணம் உடையவர்களாவர். மற்ற சுவடிகளில் சொல்லப்பட்டவை உரைப்பகுதி (நட்சத்திர மாலை, நட்சத்திர சூடாமணி, மரண கண்டிகை) மற்ற இடங்களிலும் இப்படியே இந்த பகுதி தரப்பட்டுள்ளது.)

இவனுக்குத் தெய்வம்-ஈஸ்வரன், சாதி-பிராமணன், கோத்திரம்-பரத்துவாசம், யோனி-குதிரை, பட்சி-இராஜாளி, விருட்சம் (மரம்)-எட்டி மரம், நட்சத்திர வடிவம்-குதிரை தலை போன்றிருக்கும், இராகு-மேஷம், சூனிய மாதம்-சித்திரை, தின சுத்தி-50 நாழிகைக்குமேல் 4 நாழிகை விஷம்.

## இந்த நட்சத்திரத்தில் செய்யத்தக்கவை:

மனைகோலல், விவாகம், பொன்பூணல், கோடி (புத்தாடை) உடுத்தல், அன்ன பிராசானம் (குழந்தைக்குப் புதிதாக சோறூட்டல்) விதை விதைக்க, வாழைமரம் வைக்க, நெற்பயிர் வைக்க, சூதக மனை புகுதல், வித்யாரம்பம், உபநயனம், முடிசூட்டல், புது பதவி ஏற்றல், தானியம் வாங்க, வாகனம் வாங்க, கடல் பயணம் செய்ய, மாங்கல்யம் செய்ய பும்சவனம், சீமந்தம், நோயாளி மருந்துண்ண. இந்த நாளில் பால் சோறுண்டு பயணம் செய்தால் ஜெயம், காரியம்

கைகூடும். இந்த நாளில் வியாதி தோன்றில் 9 நாளில் குணமாகும். இந்த நட்சத்திரத்தில் வருஷம் பிறக்கில் தானிய விலை ஏறாது, இறங்காது, சரிசமானமாக நிற்கும்.

**பரிகாரம்:** அரசங்கொழுந்தும், வேப்பஞ்சாறும் கலந்து ஓமம் பண்ணவேண்டும்.

மந்திரம்: அசுபதி நட்சத்திரத்தை நினைத்து விஷ்ணுவின் அஷ்டாக்ஷரம் ஓதவும். அன்றி வீரபத்திர மந்திரம் ஓதவும். மற்ற நூல்களில் கூறப்பட்டதன் சாரம்.

**பிறர் மதம் – இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் குணநலன்கள் – ஆண்**

**1. உடலமைப்பு:** அழகன், பெரிய நீண்ட மூக்கு, உயர்ந்த நெற்றி.

**2. குணநலன்கள்:** அமைதியாக இருந்தாலும் காரியவாதி, தன் முடிவை மாற்றிக்கொள்ளாதவர். தன்னை விரும்புபவர்களிடம் பாசமுள்ளவர். அவர்களிடம் உண்மையாக நடந்துகொள்பவர். எந்த ஆபத்து நிலையிலும் அமைதியை இழக்கமாட்டார். சாதனை புருடன், துன்பத்தில ஆறுதல் சொல்லுவதில் சமர்த்தர். எளிதில் யாருக்கும் பணிந்து கொடார். ஆரம்பித்த வேலையைச் செய்யாமல் விடமாட்டார்கள் அவசர முடிவே கிடையாது. கடவுள் நம்பிக்கை திடமாக உண்டு. பழைய மதவாதி. ஆனால் அதை புதிதாய் அமைத்து நடப்பவர். சிலசமயம் சிறியதை பெரிதுபடுத்தி கஷ்டப்படுவார்கள். மற்றும் சில சமயங்களில் மன அமைதி இன்றி தவிப்பார். அதிக செல்வமிருந்தும் சில சமயம் அனுபவிக்கமுடியாது. இவரால் குடும்பத்திற்கு கெட்டபெயரும் ஏற்படாலாம்.

**3. குடும்பம்:** தன்குடும்பத்தை உண்மையுடன் நேசிப்பர். தகப்பனால் இவர் அவ்வளவு லாபம் அடைவதில்லை. தாய் வழி, அம்மான் வழியில் இருக்கும்

உதவிகள் கிட்டலாம். வெளியார்களிடமிருந்தும் அதிக உதவிகள் பெறுவர்.

**4. தொழில்:** சகல கலாவல்லவர், எல்லாம் தெரிந்த ஏகாம்பரம் - இலக்கிய ஆர்வமும் உண்டு. 30 வயது வரையில் வாழ்க்கையில் ஒரு சீரான முன்னேற்றம் உண்டு. இவர் கஞ்சன்தான். இருந்தாலும் தன் வரையில் தடபுடலாக டம்பச்செலவுகள் செய்வார். 25 வயதுக்குமேல் 30 வயதுக்குள் திருமணம் நடக்கும். இவருக்கு ஆண் குழந்தைகளே அதிகம்.

**5. ஆரோக்கியம்:** பொதுவாக ஆரோக்கியம் நல்லபடியாக இருக்கும். முதல் பாதத்தில் பிறந்தவர்களுக்கு ஒருதலை நோய், இதய நோய் முதலியவை ஏற்படலாம்.

**பெண்கள்:**

மேலே ஆண்களுக்குச் சொல்லப்பட்டவை எல்லாம் பொருந்தும். அதனுடன் சிறிய அழகிய ஆளை சுண்டி இழுக்கும் கண்கள் படைத்தவர். நல்ல அழகி. அசுவினியில் ருதுவானால் நல்ல தனம், செல்வம், மக்களுடன் வாழ்வர்.

**1. குணம்:** தன் வார்த்தை ஜாலத்தால் எளிதில் வசப்படுத்துவர். அதிக பொறுமையும், அதிக பாலுணர்வும் உண்டு. மாசற்ற மனமும் பழைய பாரம்பரியத்தில் அதிக பற்றும் உள்ளவர்.

**2. கல்வி-தொழில்:** பணியில் இருந்தால் 50 வயதுக்கு தானே ராஜினாமா செய்து விடுவார். நல்ல பொருளாதார நிலை இவரை வேலைக்குப் போகவிடாது. தன் குடும்பத்துக்கு நேசமுடன் உழைப்பவர். சமூகப்பணியிலும் ஈடுபடுவர். நிருவாக வேலைகள்(Administrative) இவரைத் தேடிவரும். 23 வயது முதல், 25, 26க்குள் விவாகம் ஆனால் சுகமுண்டு. இளம் வயதில் 18க்கு முன் நடந்தால், கணவனைப் பிரிதல் அல்லது விவாகரத்து ஏற்படலாம்.

**ஆரோக்கியம்:** பொதுவாக நன்றாக இருந்தாலும், கவலை, வருத்தம் இவற்றால் உடல் நலம் கெடும். அதிக பட்ச நிலையில் இஸ்டீரியா போன்ற மனநிலை ஏற்படலாம். சமைக்கும் போது எச்சரிக்கை தேவை. தீவிபத்து ஏற்பட்டு கஷ்டப்பட வேண்டி வரலாம். வாகன விபத்துக்களும் ஏற்படலாம். வலிப்பு நோய்கள், மாதவிடாய்க் கோளாறுகள் ஏற்படலாம்.

### *மற்ற நூல்கள்*

**தமிழ் ஜாதகாலங்காரம்:** இவன் மேற்சொன்ன குணங்களுடன் தனவான், தர்மசீலன், கொடையாளி, தைரியவான், புகழ் உள்ளவன், சிவந்த கண்கள் உள்ளவன். சாமர்த்தியம், சுத்தம் உள்ளவன், சாந்த சுபாவன்.

**யவன ஜாதகம்:** வல்லவன், நேத்திர ரோகி, நல்ல உடல் வாகுள்ளவன்.

**பிருகத் ஜாதகம்:** பிரியமாய் பேசுபவன், சர்வ ஜனப்பிரியன், புத்திமான்.

### *மற்ற நூல்கள்*

இதற்கதிபன் கேது, ராசி என்ற வகையில் செவ்வாய், அதிபன். அசுவினி நட்சத்திரம் தலைமூளைப் பகுதிகளைக் குறிக்கும். சிலசமயம் ஊதாரியாகவும், பேராசைக்குரியவ ராகவும் இருப்பார்.

வணிகன், மருத்துவனும் ஆவதுண்டு. கார், டாக்சி போன்ற டிராவல் ஏஜன்சி தொழில்களும் அமையலாம்.

சாத்திர ஞானம், தத்துவ ஞானம் உண்டு. சஞ்சல சித்தம், விரைந்த நடை உள்ளவன், நெடுங்காலம் வெளியூர் அல்லது வெளிநாட்டில் தங்குபவன். விரைவாக எழுத வல்லவன். எந்த செயலையும் உடன் செய்பவன். உலகத்துக்கே சீரியத்

தொழில் செய்ய வல்லவன். பொதுஜன சேவை செய்யக் கூடியவன். உஷ்ண தேகமுள்ளவன். லக்ன தசம் திரிகோண பாவலையம் இந்த நட்சத்திரத்தில் அமைந்தால் உயர்வு.

இந்த நட்சத்திரம் யாத்திரையைக் குறிப்பதால் இவர்களுக்கு பயணங்கள் இருந்து கொண்டே இருக்கும். ஞான அஞ்ஞானம், பிறப்பு, இறப்பு, ஒளி இருள் எல்லாவற்றையும் (அசுவினி குமாரர்கள் இரட்டையர் ஆகையால்) குறிக்கும்.

தலையில் விபத்துகள் மூலம் காயம், மூளை இரத்தநாளக் கோளாறுகள் மயக்கம், தலைவலி, இவை ஏற்படலாம். இவர்களுக்கு போலீஸ் படை, அறுவை மருத்துவம், யந்திர வகை, குற்ற இயல் துறை (Criminal) போன்ற தொழில்களும் அமைவதுண்டு.

உத்தியோகம் அல்லது தொழில் பல ஏற்பட்டு, கடைசியில் ஸ்திரமான தொழில் அமையும். திருமணம் தாமதமாகும். காதல் அவ்வளவு சரிப்படாது. பெண் சந்ததி அதிகமாக அமையலாம். வீடு வாசல் போன்ற சொத்துக்கள் அந்திய காலத்தில் தான் அமையும். உடன்பிறப்புக்கு இவர்கள் மிகவும் உதவி செய்வார்கள். இவர்களுக்கு நல்ல நண்பர்கள் அமைவர். ஜாதகம் நன்றாக அமைந்தால் வெளிநாட்டுப் பயணங்கள், அங்கு தொழில்கள் வாய்க்கும். இவர்கள் கணவன் அல்லது மனைவி சாதாரண குடும்பத்தை சேர்ந்தவராகத்தான் இருப்பர்.

இவர்களுக்கு 8, 12-வது வயதுகளில் கண்டம் ஏற்படும். ஆரம்ப வாழ்க்கை சுகமிராது. எதிர்காலப்பலன் அறிவதிலும் புத்தி செல்லும்.

**பெண்களைப்பற்றி** (ஸ்திரீ ஜாதகம் என்ற வடமொழி நூல்):

அசுவினியில் பிறந்த பெண் பிறர் எண்ணத்தை எளிதில் அறிபவள், பணக்காரி. இனிய பேச்சுள்ளவள்.

எல்லோரையும் புகழ்ந்து பேசுபவள். மிகவும் அழகி. தெய்வம், குருவை போற்றுபவள், பலசாலி, அகங்கார முள்ளவள், திறமையுள்ளவள், எல்லா சுகமும் உள்ளவள்.

**பெண்களைப்பற்றி**: வடநூல்படி சங்கராச்சாரியார் பாடிய மதனநூல், அதிவீரராமபாண்டியனார் பாடிய கொக்கோக நூலில் அசுவினி நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணின் தன்மை.

*இந்த நட்சத்திரப்பெண் காந்தர்வ தத்துவத்தைச்சார்ந்தது.*

**குரும்பைபோல் பணைத்த கொங்கை குளிமதி முகமும் செவ்வாய்**
**சுருண்டு நீண் டணைந்த கூந்தல் துய்கால கரமும் நொய்யாள்**
**கரும்புபோல இனிய சொல்வாள் காதலர்க் கன்பு செய்வாள்**
**அரும்பிய முல்லை யாவாள் அசுபதி நாளி னாளே. (34)**

அழகிய தென்னங்குரும்பை பிஞ்சு போன்ற கொங்கையுள்ளவள், நெருங்கி இருண்ட சுருண்ட கூந்தலுள்ளவள். மெல்லிய ஒல்லியான உடல்வாகும், மெல்லிய கை, கால்களும் அமையப்பெற்றவள். முல்லை அரும்பு போன்ற (மலராத நிலை போல்) என்றும் இளமையாக இருப்பவள். தன் காதலன் (கணவன்) மேல் மிகுந்த பாசமும் அன்பும் உள்ளவள் என்பதாம்.

***அசுவினி நட்சத்திர சாந்தி:***

இதில் காய்ச்சல் ஏற்பட்டால், இந்த நட்சத்திரத்தின் சந்திரனுடன் பாபக்கோள்கள் இணைந்து இருந்தாலோ ஏற்படும் அரிஷ்டங்களுக்கு சாந்தி செய்யும் முறை வருமாறு. இது மதன ரத்னம் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

இதன் தேவதை ஸ்த்ரீ, குதிரை முகம், குறுக்குப்பார்வை மஞ்சள் நிறமுள்ளது. கனகபட்சி, அசுவினௌ என்ற இரண்டு தேவதைகள். இந்த நட்சத்திரத்தில் யாத்திரை செய்ய நேரிடில் பயத்தம் பொங்கல் சாப்பிட்டு கிளம்பலாம்.

அசுவினி தேவதைக்கு குங்கலிய தூபம் காட்டி பூஜை செய்து, பால், லட்டு, நைவேத்தியம் செய்து சரசுவதி மந்திரத்தால்,அரசம் சமித்து கொண்டு ஹோமம் செய்து, தயிர்சாதம், பலி நிவேதனம் செய்யவும். இப்படி செய்தால் முதல் 25 நாளைக்குள் நிம்மதி ஏற்படும்.

### அசுவினி நட்சத்திரத்தில் கோள்கள் நின்ற பலன்

1. சூரியன் இருக்க, சாம்பல் நிறமான கண்கள், சிவந்த நிறம், உயர்ந்த அந்தஸ்துள்ளவன் , நல்ல செல்வாக்கான பதவியில் உள்ளவன் தலைவன், நல்ல உடற்கட்டு மாறாத குணம், தந்திரசாலி, முரடன், மூக்கு நோய், ரத்தக்கசிவு இவற்றால் வருந்துபவன்.

இந்த நட்சத்திரத்தில் உள்ள சூரியனைச் செவ்வாய் பார்த்தால் அதிக முரடன். புதன் பார்த்தால் நல்ல அக சௌக்யம் (சூரியனும், புதனும் பெரும்பாலும் அடுத்தடுத்து சஞ்சாரம் பண்ணுமானதால் பார்வை சாத்யமில்லை) குரு பார்த்தால் இவன் தாட்சிணியவாதி அன்புள்ளவன். அரசு பதவியும் செல்வாக்கையும் அனுபவிப்பவன்.

சுக்கிரன் பார்த்தால் சிற்றின்ப ஈடுபாடு அதிகம் (இதுவும் அவ்வளவாக சாத்தியமில்லை), ஏன் என்றால் சுக்கிரனும் பெரும்பாலும் சூரியனுக்கு நெருக்கமாகவே சஞ்சரிப்பவன்.

சனி பார்த்தால் இவன் ஏழையாக இருப்பான். சோம்பேறி, உழைப்பதில் ஈடுபாடு இராது.

### அசுவினி நட்சத்திரத்தில் சந்திரன் நின்றால்

சஞ்சலன், சபலசித்தன், நல்ல எழுத்தாளன், பொதுநலத் தொண்டு செய்பவன், வித்துவான், அதிகநாள் வருடம் வெளியூர் அல்லது வெளிநாட்டில் தங்குபவன். சுறுசுறுப்பானவன். தலைமையேற்று நடத்துபவன். வளைந்து கொடுப்பவன். காற்றில் கோட்டை கட்டும்

கனவுள்ளவன், நல்ல உயர்ந்த எண்ணங்கள் உண்டு. விரைந்து நடப்பவன், நீண்டகடல் பயணங்கள் செய்பவன்.

**பார்வை:**

அசுவினியில் உள்ள சந்திரனை, சூரியன் பார்த்தால், தன்னை நாடியவர்க்கு உதவி செய்வான். ஆனால் முரடன், அரசு செல்வாக்கு பதவி வகிப்பவன்.

செவ்வாய் பார்த்தால்-பல், காது நோய்கள் இருக்கும், சமுதாயத்தில் பிறரை நம்பி வாழ்பவன்.

புதன் பார்த்தால் - பேரும் புகழும் அனுபவிப்பவன், எல்லா சுகசௌக்யமும் அனுபவிப்பவன்.

குரு பார்த்தால்-மிகுந்த கல்வி உடையவன். மெத்தப் படித்தவன், பிறருக்கு போதகன்.

சுக்கிரன் பார்த்தால்-அழகிய பெண்களுடன் சகவாசம் உள்ளவன், பணக்காரன்.

சனி பார்த்தால்-ஏழை, பிறரிடம் இரக்கமற்றவன், நல்ல சந்ததி அற்றவன். அதாவது இவன் மக்கள் சிறப்பாக அமைவதில்லை.

### *அசுவினி நட்சத்திரத்தில் செவ்வாய் நின்ற பலன்*

அகங்காரி, உற்சாகமுடையவன், சிவந்த சொர சொரப்பான மேனி உள்ளவன். உஷ்ண தேஹி. தலையில் கணச்சூடு அதிகம், தன்னம்பிக்கை அதிகம். பேராசை (குறிக்கோள்) உள்ளவன். எதையும் நடத்திக்காட்டுபவன். சுயமாக எல்லாவற்றையும் நிறைவேற்றிக்கொள்பவன், எந்த கஷ்ட காலத்திலும் கலங்காதவன். கணிதக்கலை வல்லுனன். படையில் பணி. பெரிய அதிகாரி. சமூகத்தில் உயர் நிலையில் உள்ளவர்களால் மதிக்கப்படுபவன். சர்வாதிகாரம் செலுத்தும் அதிகாரி.

### அசுவினி நட்சத்திரத்தில் உள்ள செவ்வாயை

1. சூரியன் பார்த்தால்-அவன் மெத்தப்படித்தவன். தன் பெற்றோர்களிடம் மதிப்பு வைப்பவன்.

2. சந்திரன் பார்த்தால்-பிறபெண்டிரிடம் அன்பு பற்றுள்ளவன். பிறரிடம் இரக்கம் அற்றவன். சில சமயம் களவிலும் ஈடுபடுவான்.

3. புதன் பார்த்தால்-வேசியர் போகம் உள்ளவன். அதிக ஆடம்பரமுள்ளவன்.

4. குரு பார்த்தால்-தன் குடும்பத்திற்கு மதிப்புள்ள தலைவன். பணக்காரன், செல்வாக்கு தலைமையுள்ளவன்.

5. சுக்கிரன் பார்த்தால்- நல்ல உணவு கிடைக்காது. பிறர் பெண்டிர் மேல் மோகத்தால் சிலசமயம் சிக்கல்களில் மாட்டிக்கொள்பவன். ஆனால் சமூகத்திற்கு நல்லது செய்வான்.

6. சனி பார்த்தால்-தன் குடும்பத்தை விட்டு விரட்டப் படுவான். தாய் அன்பும் பாசமும் இவனுக்குக் கிடைப்பதில்லை.

**அசுவினி நட்சத்திரத்தில் புதன் இருந்தால்:** நல்ல எழுத்தாளன், நூலாசிரியன், வித்துவான், தலைவன், கணக்கன் (ஆடிட்டர்), ஷேர் மாக்கெட், கமிஷன் ஏஜென்சி போன்றவற்றால் சம்பாதிப்பவன்.

பொக்கிஷதார், பொருளாதார அதிகாரி (Financial Executive) எல்லாவற்றிலும் குறித்த நேரப்படி தவறாமல் நடத்துபவன். வியாபாரத்தில அதிர்ஷ்டமுண்டு.

### அசுவினி நட்சத்திரத்தில் உள்ள புதனை

1. சூரியன் பார்த்தால்-உறவினரால் மிகவும் விரும்பப் படுபவன். உண்மை விளம்பி, அரசாங்கத்திடமிருந்து நிறைய சலுகைகள் அனுபவிப்பவன்.

2. சந்திரன் பார்த்தால்-இசை, நுண்கலைகளில் வல்லவன். இவற்றால் சம்பாத்தியம் உண்டு. பெண்களிடம் நிறைந்த சுகம் அனுபவிப்பவன். வாகன யோகமும், நல்ல வீடும் உண்டு.

3. செவ்வாய் பார்த்தால் - அரசினரிடம் நெருக்கமும் அதனால் ஆதாயமும் உள்ளவன்.

4. குரு பார்த்தால் - நல்ல மனைவி, மக்கள், குடும்பம், செல்வம் உண்டு.

5. சுக்கிரன் பார்த்தால் - இவன் பழகும் எல்லோராலும் நன்கு விரும்பப்படுவான். செல்வமும் பேரும் புகழும் உண்டு.

6. சனி பார்த்தால் - சமூகத்திற்கு நல்ல தொண்டு செய்பவன். நல்ல உறுதியான உடல், தன் குடும்பத்தாருடன் பூசலிடுபவன்.

அசுவினி நட்சத்திரத்தில் குரு இருந்தால்: எழுத்தாளன், நூலாசிரியன், வித்துவான், தலைவன், உலகத்திற்கு வழிகாட்டி, தத்துவஞானி, தர்ம சாஸ்த்திரப் பண்டிதன்.

அறிவாளி, தாராளமானவன். நல்ல நிருவாகத் திறனுள்ளவன். அச்சமற்றவன். உண்மையானவன். மொழி பெயர்ப்பாளன். பழம்பெரும் நூல்களைப் புதிதாக உருவாக்கித் தருபவன். வேதாந்த ஞானி. பல சமயக்கோட் பாடுகளையும் ஒப்பாய்வு செய்பவன்.

### அசுவினி நட்சத்திரத்தில் இருந்த குருவை

1. சூரியன் பார்த்தால் - நீதிக்குப் புறம்பாக எதையும் செய்ய அஞ்சுபவன், தேவதாபக்தியுள்ளவன். பொது ஜன சேவை செய்பவன்.

2. சந்திரன் பார்த்தால் - பெயர், புகழ், செல்வம் எல்லாம் பெருகும்.

3. செவ்வாய் பார்த்தால் - கொடூரன், மற்ற முரடர்களை அடக்கி ஆள்பவன், அரசாங்கத்தால் வருமானம் உள்ளவன்.

4. புதன் பார்த்தால் - நன்னடத்தை இராது. எப்பொழுதும் வலுச்சண்டை பூசல்களில் ஈடுபாடும், அக்கறையும் உள்ளவன்.

5. சுக்கிரன் பார்த்தால் - பரிமள வாசனாதிப் பொருள்களை வியாபாரம் பண்ணுபவன். பெண்கள் பயன்படுத்தும் பொருட்கள் வியாபாரம். பல பெண்களை அனுபவிப்பவன்.

6. சனி பார்த்தால் - குடும்ப சுகம், நிம்மதி இல்லாதவன். கடின சித்தமுள்ளவன், கொடூரன்.

**அசுவினி நட்சத்திரத்தில் சுக்கிரன் இருந்தால்:** அதிகப் பயணம் செய்பவன். நகைச்சுவையுடன் பேசுபவன். பொறியாளன், கலைஞன். சிரித்த முகம். எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பவன். மொழி பெயர்ப்பாளன். நாவலாசிரியன். இவனுடன் பழகுபவர்கள் இவனை மிகவும் விரும்புவர். நாடகம், கவிதை வல்லவன். சமூகத்தில் பெருமதிப் புள்ளவன்.

***அசுவினி நட்சத்திரத்தில் உள்ள சுக்கிரனை***

1. சூரியன் பார்த்தால் - அழகிய குணவதியான மனைவி உள்ளவன். நிலபுலன், வீடு வாசல், சொத்துள்ளவன்.

2. சந்திரன் பார்த்தால் - தாய் மிகவும் உயர்ந்த அந்தஸ்துள்ளவள். இவனும் சமூகத்தில் அதிக மதிப்புள்ளவன்.

3. செவ்வாய் பார்த்தால் - திருமண வாழ்க்கை பாழாகும். பெண்களால் தனம், சொத்தழியும்.

4. புதன் பார்த்தால் - எப்பொழுதும் மகிழ்ச்சியும் அதிர்ஷ்ட பாக்கியமுள்ளவன்.

5. குரு பார்த்தால் - நல்ல மனைவியுள்ளவன், நல்ல சந்ததி, செல்வம் உண்டு.

6. சனி பார்த்தால் - மகிழ்ச்சி என்பது சிறிதளவும் இராது. தன் மனைவியிடமே இவன் மிகவும் துன்பப்படுவான். உறவினரும் மனைவியும் சேர்ந்து இவனைத் துன்புறுத்து வார்கள்.

**அசுவினி நட்சத்திரத்தில் சனி இருந்தால்:** மந்த புத்தியுள்ளவன், எல்லா புலன்களும் மெதுவாகத்தான் வேலை செய்யும். தெற்றுவாயன். படிப்பு குறைவு. சாதாரண குமாஸ்தா அல்லது கீழ்நிலை உத்தியோகத்தில் இருப்பவன். சட்டம் கட்டுப்பாடு இவற்றைக் கண்மூடிக்கொண்டு மதிப்பவன். குழந்தைச் செல்வம் இராது. 36 வயதுக்கு மேல் வரலாறு முதலியவற்றில் நூலாசிரியனாக வாய்ப்புண்டு. அதிர்ஷ்டக்கட்டை. பாக்கியக்குறைவு. வறுமை, ஆனால் பெரும் வித்துவான்.

*அசுவினி நட்சத்திரத்தில் நின்ற சனியை*

1. சூரியன் பார்த்தால் - மெத்தப்படித்தவன். வேத சாஸ்திர வித்தகன், ஆனால் வாழ்க்கையில் தன் பிழைப்புக்குப் பெரும்பாலும் பிறரையே நம்பி இருப்பான்.

2. சந்திரன் பார்த்தால் - அரசியலில் பெரும்பதவி அடையலாம். அல்லது ஏதாவது ஒரு நிறுவனத்தின் தலைவனாகவோ, முதன்மை அதிகாரியாகவோ இருப்பான்.

3. செவ்வாய் பார்த்தால் - படை அல்லது போலீஸ் துறையில் பெரிய அதிகாரியாகலாம்.

4. புதன் பார்த்தால் - பெண்களின் கீழ் வேலை செய்ய வேண்டி வரும். பல சட்டவிரோதமான செயல்களில் ஈடுபடுவான்.

5. குரு பார்த்தால் - பிறர் சுக துக்கங்களில் பங்கேற்பான். கஷ்டப்படுபவர்களுக்கு உதவி செய்ய எப்பொழுதும் முன் இருப்பான்.

6. சுக்கிரன் பார்த்தால் - மதுவையும், மங்கையரையும் பெரிதும் அனுபவித்து மகிழ்வான். அரசு தலைமைக்கு மிகவும் வேண்டியவனாக இருப்பான்.

சுவடிகளில் ஒன்றான **மரணகண்டிகை** சுவடி எண் 1500ல் அசுவனிக்குரிய விம்சோத்தரி தசையான கேது தசையின் ஒன்பது புத்திகளுக்கும் தனிப்பலன் கூறப்பட்டுள்ளன. இவை பெரிதும் பிற நூல்களில் இருப்பதால் இங்கு விளக்கப்படவில்லை.

**அசுவினிக்குரிய விம்சோத்தரி தசைகள் வருமாறு**

1. கேது தசை 7 வருஷம், 2. சுக்கிர தசை 20 வருஷம், 3.சூரியன் தசை 6 வருஷம், 4. சந்திர தசை 10 வருஷம், 5. செவ்வாய் தசை 7 வருஷம், 6. ராகு தசை 18 வருஷம், 7. குருதசை 16 வருஷம், 8. சனி தசை 19 வருஷம், 9.புதன் தசை 17வருஷம் . ஆக தசைகளுக்கும் பரமாயுள் 120 வருஷமாகிறது.

இதுவே நட்சத்திர தசை அல்லது உடு மகாதசைகள் எனப்படும். எல்லா நட்சத்திரங்களுக்கும் இவை பொது. பிறந்த நட்சத்திரத்தைக் கொண்டு ஆரம்ப தசை மாறும் அதிலிருந்து மேற்சொன்ன முறையிலேயே தசைகள் தொடரும். ஆனால் நட்சத்திர பாதத்திற்குரியவை காலச்சக்கர தசை எனவும், அவை பாதத்திற்கேற்பவும், சவ்விய அல்லது அபசவ்விய நட்சத்திரத்தின் வகைக்கேற்ப தசைகள் மாறுபடும். இதில் 12 ராசிகளைக் கொண்டே தசைகள் வழங்கும். விரிவை முகவுரையில் காண்க.

இனி இந்த நட்சத்திரக்காரர்களுக்கு சுவடியில் கண்டுள்ளபடி நோய், கண்டம் முதலியவை காணும் வயது முதலியவை வருமாறு.

*5ஆவது வயதில் வெப்புநோய், 8ஆவது வயதில் வயிற்றுநோய், 13ஆவது வயதில் கண்நோய், 19ஆவது வயதில் நீர்கண்டம், 20ஆவது வயதில் விடத்தால் கண்டம், 27ஆவது வயதில் பெண்களால் மருந்தீடு முதலியவற்றால் கண்டம், 30ஆவது வயதில் கால்நடை முட்டுதல் முதலியவற்றால் ஆபத்து. 42ஆவது வயதில் ராஜகோபம், 45ஆவது வயதில் வாதநோய், 50ஆவது வயதில் சத்துருவாலும், 83ஆவது வயதில் வெதுப்பு, வயிற்றுக்கடுப்பு இவற்றாலும் 100ஆவது வயது ஆரம்பித்த உடன் சித்திரை மாதம் வளர்பிறை திரயோதசி ரோகிணி நட்சத்திரம் கூடிய நாளில் செவ்வாய்க் கிழமையில் சூரியன் உதித்த 7ஆவது நாழிகையில் மிருகம் முட்டி இவன் இறந்துபோவான்.*

***குறிப்பு:*** *உடுதசைப்படி பரமாயுள் 120 வருஷமானாலும், இது யாவருக்கும் பொது. ஆயினும் அசுவினி நட்சத்திரக் காரனுக்கு பரமாயுள் 100 தான் என்று கொள்ள வேண்டும்.*

*அசுவினி நட்சத்திரத்தில் நோய் காணில், தீரும் காலமும் பரிகாரமும் (பழைய நூல் ஒன்றில் கண்டது)*

*அசுவினி முதல் பாதத்தில் நோய் காணில் 9 நாள் இருக்கும். 2ம் பாதத்தில் நோய் காணில் 10 நாளில் கடுமையாகிக் கொல்லவும் கூடும். 3ம் பாததத்தில் நோய் காணில் 15 நாட்களில் தீரும். 4ம் காலில் நோய் காணில் உடனே மாரகமும் செய்யலாம்.*

**இதற்குச் சாந்தி பரிகாரம்**

**ஆவதோர் அசுவனியில் அன்றுதித் திரு மம்சுரம்**
**போவதும் பத்து நாளில் போகா - தென்னில் சாந்தி கேளாய்**
**ஈவதும் நவதான்யம் இங்கவர் தலையைச் சுற்றி**
**கோவதற்கு வைத்தி டத்தான் குணமாகும் நோய்கள் தாமே. (35)**

அசுவினியில் யாருக்காவது நோய் காணில் (4பாதங்களுக்கும் பொது) அது விடாமல் பீடித்தால், பெரும் பாலும் 10நாளில் தீரும், தீராமல் வாட்டினால் நவதானியத்தைக் கொண்டுவந்து அந்த நோயாளி தலையை சுற்றி ஒரு பசுமாட்டிற்கு வைத்து உண்ணச்செய்தால் நோயாளிக்கு மருந்து பிடிக்கும். தீரும்.

**அசுவினி நட்சத்திர பாத பலன்**

*சீர்பெறு கோளன் சஞ்சலன் பாவி*
*செறிந்திடும் ரூபமே இல்லான்*
*செப்பிய பிலுக்கன் அந்நியர்க்கு அன்பு*
*செய்குவன் அசுவதி முதற்கால்*
*தார்செறி பிறரின் குணத்தினை அறிவான்*
*சவுந்தரியன் வான் நலம் புரிவான்*
*சாத்திரம் உரைக்கும் ஞானத்தின் பார்வை*
*தரும் இரு காலினில் செனித்தான்*

*ஏர்பெறு கணித வித்தையில் பிரியன்*
*இனிதுள புத்தியே புகல்வான்*
*இசைந்திடும் மூல ரோகிநற் கருமம்*
*எண்ணுவன் மூன்றதாம் காலன்*
*போர்செறி உடம்பு வளைவதாம் அதிக*
*புத்திமான் சோதிடம் அறிவான்*
*புரந்தரன் காமி சத்திய வானாம்*
*புகழும் நால் காலினில் உதித்தோன்.* *(30)*

அசுவினி நட்சத்திரத்தில் முதல் பாதத்தில் பிறந்தவன் புறம் கூறுபவன். மனக்கவலை உள்ளவன். கொடியவன். சிறந்த வடிவமில்லாதவன். ஆடம்பரம் உடையவன். பிறரிடம் அன்புள்ளவன் என்பதாம்.

அசுவினி இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் அன்னியர் மனதை அறிபவன். அழகன், நன்மை செய்பவன். சாத்திரங்கள் கற்றவன். அறிவில் நோக்கமுள்ளவன் ஆவான்.

மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கணிதத்தில் மேதையாவான். மேன்மையான அறிவு போதகன். மூலரோகமுள்ளவன். நல்ல செயல்களையே மனதில் எண்ணுபவன் என்பதாம்.

நாலாம்பாதத்தில் பிறந்தவன் வளைந்த சரீர முடையவன். இந்திரபோகமுள்ளவன். சிற்றின்பத்தில் பிரியமுள்ளவன். உண்மை நெறி உடையவன்.

**ஜாதக சார தீபம் கூறும் அசுவினி நட்சத்திர பாதபலன்**

அசுவினி முதல் பாதத்தில் பிறந்தவன் திருட்டுத்தனம் உள்ளவன். களவு புரிவான்.

இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் அற்பமான காரியங்களைச் செய்பவன்.

மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் நல்ல ஞானம், தேஜஸ் பாக்கியமுள்ளவன்.

நாலாம் பாதத்தில் பிறந்தவன் போகவான். (பெண் போகமுள்ளவன்) தீர்க்காயுள் உள்ளவன் என்பதாம்.

## இனி மற்ற 3 சுவடிகளின்படி நட்சத்திர பாதபலன்

*(சுவடி எண். 1500)*

### அசுபதி முதல் பாத பலன்

(இதற்கு நவாம்சம் மேஷ செவ்வாய் ஆகும். எனவே செவ்வாய் அங்கிசத்தில் பிறந்தவன் இவன் என்று சொல்லப்படும்)

குறுகிய உருவ மெய்யன்
குவளைசேர் குதலை வாயன்
மறுகிய மனத்தன் பெண் மேல்
மனமது சார நல்லன்
முறுவலிற் கொடுமை செய்வான்
முதுகினில் மறுவுண் டென்றும்
செறிதரு கூந்தல் பேணும்
சேமினங் கிசத்தினானே. (30)

இவன் குறுகிய உருவமான உடல் வாகு கொண்டவன். குவளை மலர் போன்று சிறிய வாயும் வடிவம் பெற்ற, மழலைச் சொல்லையும் உடையவன். பெண்கள் மேல் மனம் பறிகொடுப்பவன். அவர்கள் விஷயத்தில் நல்லவன். சிரித்துக் கொண்டே கொடுமைகள் செய்பவன். இவன் முதுகில் சுழியோ மறுவோ இருக்கும். இவன் அழகிய தன் மனைவியை பேணிப்பாதுகாத்து வைத்துக்கொள்வதில் கருத்தாய் இருப்பவன்.

**மற்ற நூல்கள்**

## அசுவினி முதல் பாதத்தில் பிறந்தவர்கள் குணங்கள்

இவர்களிடம் செவ்வாயின் பண்புகள் அதிகமாக இருக்கும். புத்திசாலித்தனம், சில சமயம் குறுக்கு வழியிலே செல்லும், விரைவாக சம்பாதித்துவிட வேண்டும் என்ற பரபரப்பு உண்டு. சுகபோக ஈடுபாடு அதிகம். சொந்த முயற்சியால் எல்லா வசதிகளையும் தேடிக்கொள்வார்கள். வலுச்சண்டைக்குச் செல்வான். கெட்ட சகவாசத் தொடர்புகளும் உண்டு. முரடன், களவு மனப்பான்மை உண்டு. எல்லாவற்றையும் ரசித்து வாழ்வர். படைவீரனின் இயல்பும் பிற பெண்கள் மேல் ஆசையும் உள்ளவன்.

**இந்த பாதத்திற்குக் காலச்சக்கர தசைகள் வருமாறு:**

| | |
|---|---|
| 1. மேஷச் செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 2. ரிஷப சுக்கிர தசை | 16 வருஷம் |
| 3. மிதுன புதன் தசை | 9 வருஷம் |
| 4. கடக சந்திரன் தசை | 21 வருஷம் |
| 5. சிம்ம சூரியன் தசை | 5 வருஷம் |
| 6. கன்னி புதன் தசை | 9 வருஷம் |
| 7. துலாம் சுக்கிர தசை | 16 வருஷம் |
| 8. விருச்சிக செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 9. தனுசு குரு தசை | 10 வருஷம் |
| ஆக பரமாயுள் | 100 வருஷம் |

இந்த பாதத்திற்கு மேஷச்செவ்வாய் தசை ஆரம்பம். ஒருவர் பிறந்த அசுவினியின் 4ல் வகுத்து அந்த பாத பிரமாணத்திற்கு மேஷச் செவ்வாய் என்று கொண்டு பிறக்கும் போது 1ம் பாதத்தில் சென்ற நாழிகையின் விகிதாசாரத்தில் இந்த தசையின் மொத்த வருஷம் 7ஐ பங்கிட்டு மிச்சமான வருஷம் மாதம் நாட்களை ஜெனன கால இருப்பு முதல் நாழிகையில் இருப்புப்படி கணித்துக் கொள்ள வேண்டியது. ஒருவர் இந்த 9 தசை காலத்தை மீறி வாழ்ந்தால் அசுவினி 2ம் பாத நட்சத்திர ஆரம்ப தசையைத் தொடரவேண்டும். மற்ற இடங்களிலும் இப்படியே.

## *அசுவினி முதல் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** பருமனான உடல் உள்ளவன். வாதத்தில் வல்லவன். தன்னம்பிக்கை உள்ளவன். தீர்க்காயுள் உள்ளவன், பணக்காரன். தன் குழந்தைகள் மூலம் நிறைய நன்மை அடைபவன். பித்த ரத்த சம்பந்தமான நோய்கள் உள்ளவன்.

**சந்திரன் நின்றால்:** தாராள புத்தி, நல்ல செல்வாக்குள்ளவன். பிறரிடம் கருத்து பரிமாற்றத்தால் நன்மை அடைபவன். அரசு அல்லது தனியார் துறையில் உயர்பதவி வகிப்பவன். இவன் பித்ததேகி. இதில் லக்னம் இருந்து குருவும் இருந்தால் 83 வயதுக்கு மேல் வாழ்பவன்.

**செவ்வாய் நின்றால்:** குள்ள வடிவம். தொழிலிலும் சமூகத்திலும் உயர்மட்டம் வகிப்பவன். ஆரோக்கியம் உள்ளவன். இவனைத் தன் முன்னேற்றியாக (Gob Jakher) பலரும் மதித்து நேசிப்பார்கள். கணிதம் அல்லது பொறியியலில் பெரும் பட்டம் பெறுவான்.

**புதன் நின்றால்:** இவன் நாத்திகனாக இருப்பான். பெரும்பாலும் தொழிலில் சமூகத்தில் கீழ் நிலையிலேயே இருப்பவன். மது, மாது இவற்றில் பெரும் ஆசை உண்டு. களவாணித்தனம் உண்டு. இந்த பாதத்தில் உள்ள புதனை குரு

பார்த்தால் நல்ல பலன்கள் வாழ்க்கையில் நடக்கும். இந்த நிலையில் இவன் பெருங்கல்வி அறிவு இவை உடையவனாவான். வேதாந்தியாகவும் இருப்பான். இரகசிய (occult power ) சாதனை உடையவனுமாவான்.

**குரு நின்றால்:** வெகு புத்திசாலி, மெத்தப்படித்தவன். மதப்பற்று, கடவுள் நம்பிக்கை, வேதாந்தம் இவற்றில் அதிக ஈடுபாடும் சாதனையும் உண்டு. நாவன்மையில் பேச்சுக் கவர்ச்சி உண்டு. இவன் சொற்பொழிவில் மக்கள் தேனில் ஈ விழுவது போல் மயங்கி வருவர். 35 வயதுக்கு மேல் வாழ்க்கையில் முன்னேற்றம் உண்டு. நண்பர் உறவினர் மூலம் அதிக நன்மை பெறுபவன்.

**சுக்கிரன் நின்றால்:** பருமனான உடல் வாகு. சிரித்த முகமுள்ளவன். ஆயுள் குறைவு. (8ம் இடம் ஆயுள் தாயம் இவற்றையும் பொருத்தது) தீர்க்காயுள் ஏற்பட்டால் அந்தஸ்துள்ளவன். கடல் வாணிபம், கடல் பொருட்கள் மூலமும் லாபமும் அடைபவன். இவன் கடல் கப்பல் பொறியாளனாகவும் ஆவதுண்டு.

**சனி நின்றால்:** இளமையில் வறுமை, பிற்காலத்தில் மகிழ்ச்சி செல்வம் உண்டு. மந்தபுத்தி, எதிலும் நிதானம். திக்குவாயன். நீடித்த ஆயுள் உள்ளவன். வரலாற்றுத் துறையில் ஆர்வம் உண்டு. பிற்காலத்தில் எழுத்தாளனாவதுண்டு.

**ராகு நின்றால்:** புத்திசாலி, பலவான். தந்தையிடம் அதிகம் பற்று பாசம் உள்ளவன். தன் மேலிருப்பவர்கள் பிறரிடமிருந்து உரிய நேரத்தில் உதவிகள் அடைபவன். முகத்தில் நன்றாகத் தோன்றும் மச்சம் உண்டு. இந்த ராகுவை அசுபகோள்கள் பார்வை அல்லது சம்பந்தம் ஏற்பட்டால் அடிக்கடி வாகன, பிற விபத்துக்கள் ஏற்படும். ஆனால் உயிருக்கு ஆபத்து இராது.

**கேது நின்றால்:** நல்ல படிப்பு உண்டு. இவன் நன்றாக செயல்பட்டு இறுதியான ஆக்கமான முன்னேற்றம் அடைவான். மக்களிடையே பிரபலம் அடைபவன். பொறியியல் வல்லுனனும் ஆக வழி உண்டு. (Machanical Engineer)

***இனி, முதல் பாதம் கால சக்கர தசை***

அசுவினி நட்சத்திரத்தில் முதல் பாதத்திற்குரிய கால சக்கர தசைகளில் முதல் தசையான மேஷச்செவ்வாய் தசையின் புத்தி வாரி பலன் வருமாறு.

**மேஷச் செவ்வாய் தசை (வலவோட்டு)**

**1. மேஷச் செவ்வாய் புத்தி 5 மாதம் 16 நாள் 15 நாழி**

அரசர், திருடரால் உபத்திரவம், கத்தி, நெருப்பு முதலியவற்றால் விபத்துக்கள், அதிக தனவிரயம் இவையும் உண்டாகும்.

**2. ரிஷப சுக்கிர புத்தி 1 வருஷம் 1 மாதம் 13 நாள்**

ரோக பீடை, ரகசிய ஸ்த்ரீ வியாதி, சிலேசம், மித மிஞ்சிய வீண் செலவு, நஷ்டம் இவையும் உண்டாகும்.

**3. மிதுன புதன் புத்தி 7 மாதம் 17 நாள்**

காய்ச்சல், மார்வலி, உறவினர் நண்பர்களால் தன்னையறியாமல் பணமெல்லாம் செலவாதல், மனக் கஷ்டம் பயம் முதலியவை உண்டாகும்.

**4. கடக சந்திர புத்தி 7 மாதம் 9 நாள் 15 நாழிகை**

முத்து, வைரம் முதலியவைகளால் லாபமும், புத்திரனுக்கும் ஜாதகனுக்கும் ஆடையாபரணாதிகள் கிடைத்தலும், உத்தியோகம் கிராமாதிகாரம் வாகனாதி யோகமும் உண்டாகும்.

**5. சிம்ம ரவி (சூரியன்) புத்தி 4 மாதம் 4 நாள்**

வலது கண்ணில் கோளாறு, சொறி சிரங்கு முதலிய மேகநீர் சம்பந்தமான ரோகங்களும், தந்தை வழி அரிட்டம் துச்சமும், உணவு ருசிகொள்ளாமையும், அகால போஜனமும் இப்படி கெட்ட பலனாக நடக்கும்.

**6. கன்னி புதன் புத்தி 10 மாதம் 16 நாள் 45 நாழிகை**

பலவகை நோய், சோராக்கினி பயம். விடத்தால் சோகம், களவு போதல் முதலியவை நேரும். திடீர் கலகம், நண்பர் பகை, அதிக தாக நோய், ஏவல், செய்வினை, அபச்சாரத்தால் கஷ்டமும், பலவித கவலை, உடன் பிறப்பு புத்திரர் மரணமும் நேரும்.

**7. துலா சுக்ர புத்தி 1 வருஷம் 1 மாதம் 13 நாள் 15 நாழிகை**

சுப சோபனங்கள், ஆடை அணிகலன் கிடைத்தல். பதவி, பிரமாதிகாரமும், வீட்டில் தனவரவும், புத்ர மித்ர களத்ர சௌக்கியமும், பல விதத்தில் மகிழ்ச்சியும் ஏற்படும்.

**8. விருச்சிக செவ்வாய் புத்தி 5 மாதம் 26 நாள் 15 நாழிகை**

அரசர், களவாணிகளால் நட்டமும், மனைவி வகை வாதம் சண்டையும், பீடையும் ரத்த பித்த நோய்களும் சகோதர அரிஷ்டமும் கழுத்துக்கு மேல் உள்ள பாகத்தில் நோயும். மந்தரோகம் முதலியவையும் உண்டாகும்.

**9. தனுசு குரு புத்தி 8 மாதம் 12 நாள்**

அரசர், உயர் மட்டத்திலுள்ளவர் நட்பு. அவர்களால் லாபமும், புத்தி முடிவில் நல்ல சௌபாக்கியமும், களத்திர புத்திர சுகமும், கால்நடைச் செல்வம், பால் பாக்கியம், குதிரை முதலிய வாகனாதி லாபம் (கார், ஸ்கூட்டர் போன்றவை) மொத்தத்தில் நன்மையும் ஏற்படும்.

இந்த பாதத்திற்கு வரும் அடுத்த தசை புத்திகளின் பலன்களை அடுத்து வரும் நட்சத்திர பாதங்களில் உரிய இடத்தில் விளக்கப்படும். அங்கு பார்த்துக்கொள்க.

## அடுத்து அசுவினி 2ம் பாதம்

(அசுவினி 2ம் பாதப் பலன், இதன் அம்சம் ரிஷபன் - அதிபன் சுக்ரன்)

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

தெள்ளிய தியாகி நல்லன்
சேயிழை யாரைப் பேணும்
ஒள்ளிய கண்ணன் வேளான்
ஒண்பொருள் உடைய னாகும்
பள்ளியும் பலவும் கற்கும்
பாக்கியம் பலவு முள்ளான்
வெள்ளிஅங் கிஷத்தில் வந்த
விருப்புடைக் காளை தானே.

இவன் தெளிந்த சிந்தனை உள்ளவன். தியாகி. பெண்களிடம் நேசமும், இவர்களைப் பாதுகாக்கும் திறனும் கொண்டவன். ஒளி பொருந்திய கண்கள் உள்ளவன். வேளாண்மைத்(விவசாயம்)தொழிலால் நிறைய செல்வம் படைத்தவன். பலவகை கல்வியைப் பள்ளிதோறும் சென்று நன்கு தேர்ச்சிபெறுபவன். பலவகையிலும் போகப் பொருட்கள் படைத்த பாக்கியசாலி. இவனே சுக்கிரனின் அம்சத்தில் பிறந்த காளையாவான்.

இவன் ரிஷப நவாம்சத்தையுடையவன். இதனால் இவன் விவசாயத்தில் ஈட்டிய பொருள் உள்ளவன் என்றும் காளை என்ற அடைமொழியுடன் கூறப்பட்டது.

### மற்ற நூல்களின்படி

இவன் செல்வம் சேர்ப்பவனும் தர்மவழி நடப்பவனும் ஆவான். கலைகள் பல வல்லவன். அதனால் புகழ் படைத்தவன். சுகம், வசதிகள் பல உண்டு. உருவத்தில் தனிக்கவர்ச்சியுண்டு. தன தான்ய சௌக்கியம், வாகனாதி யோகம், பெண்களிடம் அதிக ஆர்வம், இப்படி இவன் குணங்களாகும்.

## *இந்த இரண்டாம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**1. சூரியன் நின்றால்:** அவ்வளவு நல்லதல்ல. ஆயுள் கூட குறைவாக இருக்கலாம். (8ம் இடம் சனி இவற்றையும் பொறுத்தது) 8 வயது வரை பாலாரிஷ்டம் உண்டு. வறுமை மேலிடலாம். சந்திரனுடனும் இணைந்தால் அதிக கெட்ட பலனாகும். சூரியனையும் அல்லது சந்திரனையும், செவ்வாய் பார்த்தால் மட்டும் சுப பலன் உண்டு.

**2. சந்திரன் நின்றால்:** அதிக காரம் முதலியவை கொண்ட உணவை விரும்புபவன். மதுப்பிரியன். பெண்களால் சிக்கல்கள் ஏற்படலாம். வறுமை மிகும். சுயநலவாதி. அதிக பேராசை உண்டு. செவ்வாய் ராகு இந்த சந்திரனை 7ம் பார்வை பார்த்தால் இந்த 2ம் பாதம் பெண்ணுக்கு வைதவ்யம் ஏற்படலாம். இந்த 2ம் பாத சந்திரனை சுக்கிரன் பார்த்தால் பாக்கியம் உண்டு. இவனுக்கு நல்ல ஆண் குழந்தையும் நல்ல மண வாழ்க்கையும் உண்டு. இதே 2ம் பாத சந்திரனை சனி பார்த்தால் இவன் பொருமைக் காரனும், சோக வாழ்க்கையுள்ளவனுமாவான்.

**3. செவ்வாய் நின்றால்:** இப்பாதத்தில் செவ்வாயைச் சூரியன் பார்த்தால் பெரும் கல்விமானாவான். பெற்றோர்களை மிகவும் விரும்புவான். சில சமயம் இவன் வறுமை அடைவான். குழந்தையற்றவனாகவும் இருக்கலாம். பழி வாங்கும் குணம் உள்ளவன். நெருப்பு விபத்துக்கள் ஏற்படலாம். மற்ற வகை விபத்துக்கள். காய்ச்சல் முதலியவை ஏற்படும். தலையில் வடுவுள்ளவன்.

**4. புதன் நின்றால்:** குழந்தைகளால் பாக்கியம் சுகம் உண்டு. பல கலையிலும் வல்லவனாவான். பாதி வயதுக்கு மேல் துறவியாகலாம். இந்த புதனைச் சூரியன் பார்த்தால் புகழ் பெற்ற மருத்துவன் (டாக்டர்) ஆவான். தாராள சிந்தையும், உயர் பண்புள்ளவனாகவும் இருப்பான்.

**5. குரு நின்றால்:** கவர்ச்சியான ஈர்க்கும் தோற்றம். குணநலன் கொண்டவன். புத்திசாலி, நேர்மையானவன். எழுத்தாளன், ஆசிரியனுமாவான். பிறர் இவனிடம் அன்பு, மதிப்பு, மரியாதை கொள்வார்கள். ஆனால் எப்பொழுதும் கடனாளியாவான்.

**6. சுக்ரன் நின்றால்:** நல்ல வலுவான உடல்கட்டும் பருமனான உடலும் பழக இனியவனுமாவான். குடும்பத்தில் அதிக பாசம் உண்டு. அதிர்ஷ்டத்தாலேயே அதிக செல்வம் படைப்பவன். நாவலாசிரியன். கலைஞன் இவனே. பொறியியல் துறையில் சில சமயம் வல்லவன் ஆவான்.

**7. சனி நின்றால்:** கரிய நிறம் முடி உள்ளவன். ஒல்லியான உடல் உள்ளவன். காட்டுப்பொருட்களால் பிழைப்பு வியாபாரம் செய்வான். அதில் கெட்டிக்காரன். ஆனால் சில சமயம் பொது அறிவு குறைவாக இருக்கும். இதனால் பணமுடையில் சிக்கிக் கொள்வான். முற்போக்கு வாதி, முன்கோபி. சில சமயம் சமூக விரோத செயல்களில் ஈடுபாடு உண்டு.

**8. ராகு நின்ற பலன்:** மத சம்பந்தமானவற்றில் பற்றுள்ளவன். அடிக்கடி வெளிநாட்டுப் பயணங்கள் உண்டு. வறுமையும் கையேந்தும் குணமுமுண்டு. அடிக்கடி எண்ணங்கள் திட்டங்களை மாற்றுபவன். சிலசமயம் மூளைப்பாதிப்பு நோய் உண்டு.

**9. கேது நின்றால்:** சமூகத்தில் பெரும்பாலும் கீழ்மட்டத்தில் இருப்பவன். பொதுமக்களுடன் நல்லுறவு உண்டு. பெண்களிடம் அதிகம் மோகம் பற்றுண்டு.

**இதற்கு கால சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| 1. மகரசனி தசை | 4 வருஷம் |
| 2. கும்பசனி தசை | 4 வருஷம் |
| 3. மீன குரு தசை | 10 வருஷம் |

4. விருச்சிக செவ்வாய் தசை 7 வருஷம்
5. துலாம் சுக்ரன் தசை 16 வருஷம்
6. கன்னி புதன் தசை 9 வருஷம்
7. சிம்ம சூரியன் தசை 5 வருஷம்
8. கடக சந்திரன் தசை 21 வருஷம்
9. மிதுன புதன் தசை 9 வருஷம்

ஆக பரமாயுள் 85 வயதாகும்.

## அசுவினி 2ம் பாதத்தின் முதல் தசையான மகர சனி தசை பலன்

**1. மகர சனி புத்தி - 2 மாதம் 7 நாள் 45 நாழிகை**

அரசர் திருடர் அக்கினியால் பயம். உத்தியோக பங்கம், மான கௌரவபங்கம், தனவிரயம், வாதசுரம், புத்திர கள்ளத்திர பீடை, அபிசார பிசாசபாதையும், குஷ்டரோக பீடிதம் முதலியவையும் ஏற்படும்.

**2. கும்ப சனி புத்தி - 2 மாதம் 7 நாள் 45 நாழிகை**

களத்திர நாசம் கலகம். படிப்புத்தடை. கடன், அரச, சத்ரு பீடை, தேசாந்திர யாத்திரை. அதில் வழியில் களவு. பயிர்ச்சேதம் ஆனால் வியாபார லாபம் இவையும் ஏற்படும்.

**3. மீன குரு புத்தி**

தேவதாபக்தி, வித்தை, கல்வி, லாபம், சுகம், ஆடையாபரணாதி லாபம், புத்திர வழியில் திருமணம், புத்திர விருத்தி, கடைசியில் அகால போஜனமும் கஷ்டம் இவை நடக்கும்.

**4. விருச்சிக செவ்வாய் - புத்தி -3 மாதம் 28 நாள் 30 நாழிகை**

கழுத்துக்கு மேல் பாகத்தில் வியாதியும், மார்வலி, கால் கைகளில் ரோகம், ரத்தபித்தம், மூலரோகம், களத்திர புத்திர பீடை இவை உண்டாகும்.

**5. துலா சுக்கிர புத்தி - 9 மாதம் 1 நாள்**

பிதாவுக்கு தேக பீடை. பெண், புத்திரர்களுடன் விவாதம், தன தான்ய குறை, பயிர் விளைச்சலால் லாபம், நண்பர்கள் உதவி, இப்படி மத்திய பலனாக நடக்கும்.

**6. கன்னி புதன் புத்தி - 5 மாதம் 2 நாள் 30 நாழிகை**

பாக்கிய விருத்தி. எண்ணிய காரியம் வெற்றி. பல திசைகளிலும் காரியானுகூலம். பந்து ஜன விரோதம், துக்கம், புத்திர நாசம், பயம், சோர பயம், அக்னி கண்டம், வைசியர் மூலம் தன நஷ்டம் இப்படி நடக்கும்.

**7. கடக சந்திரன் புத்தி - 2 மாதம் 25 நாள் 45 நாழி**

தாய்க்கு அல்லது அவள் வழி உறவினர் கண்டம். பிதுர் வழி ஜன சௌக்கியம் புத்திர விவாகம், தசையின் (புத்தியில்) மாரக பயம். (சுபநோக்கும் இருந்தால் பயமில்லை)

**8. சிம்ம சூரியன் புத்தி - 2 மாதம் 24 நாள் 15 நாழிகை**

பிசாச பாதை சோர, ராஜ பயம், சீத வாத ஜுரம், குடும்பக்கலகம், வறுமை, துக்கம், தன வாகன நாற்கால் ஜீவன் நஷ்டம், ரத்த ரோகம், அகால போஜனம் முதலியவை நேரும்.

**9. மிதுன புதன் புத்தி 2 மாதம் 2 நாள் 30 நாழிகை**

புத்திர சோகம், களத்திர மூலம், தனலாபம், உடலில் பலவகை நோய், தலைவலி, வயிற்று நோய், கிரக பீடை இவை உண்டாகும்.

இதில் மீன குரு புத்தி (3) விருச்சிக செவ்வாயில் பாய்ந்தது சிங்க கதியும் வேறு கன்னி புதன் 7 கடக சந்திரனில் பாய்ந்தது மர்கட கதியும் அடுத்து 8 சிம்ம சூரியன் மிதுனத்தில் பாய்ந்தது தவளை கதியுமாகும்.

இந்த கதிகளுக்குப் பலன் ஆய்வு முன்னுரையில் கூறியுள்ளோம். அங்கு பார்க்கவும்.

## அடுத்து அசுவினி 3ம் பாதம்

அசுவினி 3ம் பாதத்தில் பிறந்தவர் பலன் - இதன் அம்சம்-மிதுனம், அதிபதி-புதன்.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

(இனி வரும் பாடல்கள் யாவையும் இந்த யாப்பே யாகும். வேறுபடுமிடத்தில் குறிப்பிடப்படும்)

**மேதையன் அழகன் சால வேந்தரால் விருப்ப முண்டாம்**
**மாதுமால் உருவ மாகும் மனம்பிறர்க் கறிய ஒண்ணான்**
**தாதுசேர் குழலார் தம்மேல் தன்பொருள் சார நில்லான்**
**மீதுயர் வலக்கை யெள்ளான் மிதுனஅங் கிசத்தி னானே.(39)**

(சுவடி எண். 1500)

மிதுன அங்கிசத்தினைச் சேர்ந்த அசுவினி 3 ம் பாதத்தில் பிறந்தவன் அறிவாளி. அழகன், அரசர் உயரதிகாரிகளால் போற்றப்படுபவன். இலக்குமியை உடைய திருமால் போல் ஆஜானுபானனான உருவமுடையவன். அவன் மன ஆழத்தை, கருத்தைப் பிறரால் அறியமுடியாது. பெண்கள் மேல் தன் பொருளை வீணாகச் செலவழிக்கமாட்டான். (சிக்கனமானவன்) அல்லது அவர்கள் மேல் அதிக இச்சை இல்லாதவன். அவர் கருத்தைச் சார்ந்து நடக்காதவன். உயர்ந்த வலது தோளை உடையவன். பிறரை இகழமாட்டான் என்பதாம்.

***பிறநூல்கள்:*** இது புதனின் அம்சம், சாமர்த்தியம் அதிகம், அறிவாளி, நிறைய நண்பர்கள் உண்டு. படிப்பதில் ஆர்வம், கல்வியில் தேர்ச்சி, சுகபோக வாழ்க்கை அமையும். பகை போட்டிகளை வெற்றிகொள்ள வல்லவன். வாதம், பேச்சு, பட்டிமன்றம், வழக்காடல், இவற்றில் தேர்ச்சி உண்டு. கணிதம், வங்கித்துறை இவற்றில் வாய்ப்புகள் உண்டு.

## *இனி அசுவினி 3ம் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன் வருமாறு*

**1. சூரியன் நின்றால்:** பணக்காரனாக இருப்பான். ஆனால் கீழ்மட்ட சமூகத்திலேயே இருப்பான். ஆரோக்கியக் குறை உண்டு. முரடனாகவும், கெட்ட எண்ணம் உள்ளவனாகவும் இருப்பதுண்டு.

**2. சந்திரன் நின்றால்:** அதிகம் படித்தவன், அறிவாளி, பல கலைகளில் விஞ்ஞானத் துறைகளில் தேர்ந்தவன். மத சார்பானவற்றில் ஈடுபாடுடையவன். சமயப்பற்றுள்ளவன். சுறுசுறுப்பானவன். இவனுக்குப் பிடிப்பு ஏற்பட்டால் நண்பர்களுக்கு மிக நல்லவன். இந்த சந்திரனைச் செவ்வாய் பார்த்தால் கண் கெடும் அல்லது பல் பாதிக்கப்படும்.

**3. செவ்வாய் நின்றால்:** வெளியில் அலைந்து திரியும் வியாபாரம் செய்பவன். அவனைச் சூரியன் பார்த்தால், தனம், உடல் நலம், மகிழ்ச்சியான மண வாழ்க்கை எல்லாம் அமையும். சிறுவயதில் அன்னையை இழக்க நேரலாம். குரு பார்த்தால் அவனுக்கு தீர்க்காயுள் அதிகம். சிற்றின்ப சுகமனுபவிப்பவன்.

**4. புதன் நின்றால்:** இவனுக்குக் கடவுள் அனுக்கிரகம் நிறைய உண்டு. தன் கடமைகள் பொறுப்புகள் எல்லாவற்றையும் முழுவதும் நிறைவேற்றுவான். அதிக ஆண் குழந்தைகள் உண்டு. ஆரோக்கியக்குறை இருக்கலாம். வயதும் 60க்குக் கிட்ட தட்டத்தான் உண்டு.

**5. குரு நின்றால்:** புத்திசாலி. கல்வி செல்வம் இரண்டும் நிறையப்பெற்றவன். அதிக புகழ் உண்டு. அரசபோகம் அதாவது ராஜயோகம் உண்டு. சிலருக்கு ஆயுள் குறைவாக இருக்கலாம்.

(ஆயுள் ஸ்தானம், காரகன் இவை வலுத்தால் இது இராது) உயர் அந்தஸ்தான வாழ்க்கை உண்டு.

**6. சுக்கிரன் நின்றால் :** மிகவும் கெட்டிக்காரன். இரக்க முள்ளவன். சிறந்த மருத்துவனாகவோ அரசியல் தலைவனாகவோ பெயரெடுப்பான். சிலசமயம் காலோ கையோ இழக்கும் அங்க ஈனம் ஏற்படலாம். சுபத்துவம் பெற்றால் இக்குறை இராது. இவனைப் பற்றித் தொடர்பவர்கள் யாவருமே இவனை விரும்புவர்.

**7. சனி நின்றால்:** வியாபாரத்தில் நல்ல திறமை சாமர்த்தியம் உண்டு. நிறைய பணம் செய்வான். தன் கீழ்ப்பணியாளரிடம் இரக்கமுடன் நடப்பவன். அவர்கள் நலத்தில் அக்கறையுள்ளவனாக இருப்பான். ஆனால் பேராசையும் பொறுமையற்றவனாகவும் இருக்கலாம்.

**8. ராகு நின்றால்:** இவன் மிகவும் வறுமை யுடையவன். நல்லது கெட்டது எந்த காரியத்திலும் அக்கறை இராது. சித்தம் போக்கு சிவன் போக்கு என்று பிடிப்பின்றி வேடிக்கையான நடத்தை, பற்றற்ற வேதாந்தியாகவும் இருக்கலாம். தன் மனைவி அல்லது கணவனால் மணவாழ்க்கையில் தொல்லை இருக்கும்.

**9. கேது நின்றால்:** கீழ் நிலையில் உள்ளவர் களோடேயே காலம் கழிப்பான். இவனுக்கு ஒரு பெண் குழந்தை மாற்றானுக்குப் பிறக்கலாம். எவ்வளவு கஷ்டமான நிலையில் இருந்தாலும், பிறர் செய்த உதவியை நினைவில் கொண்டு நன்மையே பதிலுதவியும் செய்வதில் கருத்தாய் இருப்பான்.

**அசுவினி 3ம் பாதத்திற்குரிய காலச்சக்கர தசைகள்**

| | |
|---|---|
| *1. ரிஷப சுக்கிர தசை* | *16 வருஷம்* |
| *2. மேஷ செவ்வாய் தசை* | *7 வருஷம்* |
| *3. மீன குரு தசை* | *10 வருஷம்* |
| *4. கும்ப சனி தசை* | *4 வருஷம்* |
| *5. மகர சனி தசை* | *4 வருஷம்* |

| | |
|---|---|
| 6. தனுசு குரு தசை | 10 வருஷம் |
| 7. மேஷச் செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 8. ரிஷப சுக்கிர தசை | 16 வருஷம் |
| 9. மிதுன புதன் தசை | 9 வருஷம் |
| ஆக பரமாயுள் | 83 வருஷம் |

*(குறிப்பு: அசுவினி 3ம் பாத காலச்சக்கர தசை புத்திகளுக்கு பலன் எழுதப்படவில்லை)*

## அசுவினி 4ம் பாத பலன்

**இது கடக நவாம்சம் - அதிபன் சந்திரன்.**

**தலையது தடிய னாகும் தனம்பெரி துடைய னாகும்**
**மலைதரு வல்ல பத்தன் வடிவுடன் சிறந்த மேனி**
**கலைபல கல்வி கற்பான் கடிமதக் காளை யாகும்**
**மலையென வளர்ந்த தோளான் மதியினங் கிசத்தி னானே. (40)**

*(சுவடி எண். 1500)*

பெரிய தலை உள்ளவன். அதிக பணமுள்ள தனவான். யாரும் மலைத்துப்போகும் அளவுக்கு வல்லமை சாமர்த்தியம் உள்ளவன். அழகிய வடிவமும், செம்மை நிறமான மேனியுள்ளவனுமாவான். பல கலை, கல்வி மேம்பட்டவன், அடங்காத காளை போன்று வலிமை உடையவன். மலைபோல வளைந்த உயரமான அகலத் தோள்கள் உள்ளவன். இவையெல்லாம் பொருந்தியவனே சந்திரனின் நவாம்சத்தில் பிறந்தவனாவான்.

### மற்ற நூல்கள்

இந்த 4ம் பாதத்திற்குச் சந்திரன் அதிபதி. அதனாலேயே இவர்கள் அழகர்கள். தர்ம சிந்தனையும் கடவுள் நம்பிக்கையும் சமயப்பற்றும் இருக்கும். நிறுவனங்களை இயக்கும் தலைமை நிர்வாகத்திறன் உண்டு. இளகிய மனம் உண்டு. எல்லாருக்கும் உதவும் மனமுண்டு.

## இந்த அசுவினி 4 ம் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன்

**1. சூரியன் நின்றால்:** புகழ் அடைபவன். நல்ல புத்திசாலி, செல்வம் சேரும். தன் மக்களிடையே தலைவன், சர்வாதிகாரியும் ஆவதுண்டு. (தன் கடமை பொறுப்புகளை ஒழுங்காகச் செய்து முடிப்பவன்.) அதிகமாகப் பயணம் செய்பவன். கடைசி காலத்தில் நல்ல அதிர்ஷ்டம், பாக்கியம் உண்டு. இது 10 முதல் 11ஆவது பாகைகளுக்குள் இருந்த சிறந்த பலன்.

**2. சந்திரன் நின்றால்:** பெருங்கல்வி, பலதுறைக் கல்வி உண்டு. அரசாங்க பெரும் பதவிகள் வகிப்பதற்கு ஏற்ற வாய்ப்பு உண்டு. பெரிய மருத்துவர்கள் உயர்மட்ட அதிகாரிகளும் இவர்களாவதுண்டு.

**3. செவ்வாய் நின்றால்:** அதிக நல்ல சந்ததி உண்டு. கடமையுணர்வதிகம். மெல்லிய மேனி, 13, 15 வயதுக்குள்ளே நல்ல பொறியாளனாவதுண்டு. இந்த செவ்வாயை குரு பார்த்தால் நல்ல பூர்வீக சொத்து கிடைக்கும்.

**4. புதன் நின்றால்:** ஏழ்மை அதிகம். நல்ல நடத்தை இராது. தன் தொழில், வாணிபத்தில் தோல்விதான் அதிகம். குரு பார்த்தால் எழுத்தாளன், நூலாசிரியன் ஆவதுண்டு.

**5. குரு நின்றால்:** வாழ்க்கையை முழுமையாக அனுபவிப்பவன். பேரும் புகழும் பாக்கியமும் தனமும் ஏற்படும். இவன் கீழ் வெகு மக்கள் பணிபுரிவர். கடமை உணர்வுள்ள நன்மக்கள் உண்டு. போட்டி, பந்தயம், லாட்டரி முதலியவற்றில் சில சமயம் வெற்றி ஏற்படும்.

**6. சுக்கிரன் நின்றால்:** சிறந்த திரைப்பட நடிக நடிகை ஆவதுண்டு. இசைக்கலைஞன், பாடகன், வாத்திய கலைஞன் ஆவதுண்டு. நல்ல எழுத்துத் திறன் உண்டு. சூரியன் பார்த்தால் மணவாழ்க்கை கெடும். திருமணம் மிக இளம் வயதிலேயே நடக்கும்.

**7. சனி நின்றால்:** பொதுவாக மகிழ்ச்சி நிறைந்த வாழ்க்கையுண்டு. அதிக சமயப்பற்று, ஆசாரம் இவற்றைப் பின்பற்றுவான். சூதாட்டப் பழக்கம் ஏற்படும். சூரியன் பார்த்தால் பயிர்த்தொழில் மூலம் லாபம். மிராசுதார் ஆவான். ஆனால் திருமணத்தடை அல்லது திருமணம் மூலம் துன்பம் உண்டு.

**8. ராகு நின்றால்:** தைரியம், வலிமை உண்டு. மெல்லிய உடல் உள்ளவன். வாயு தொல்லை, செரியாமை உண்டு. சூரியன் பார்த்தால் அதிர்ஷ்டம், எந்தப் பொறுப்பையும் நிறைவேற்றுவான்: எந்த சிக்கலான சூழ்நிலைகளிலும் இவனைக் காப்பாற்ற ஆள் வரும்.

**9. கேது நின்றால்:** தன் பிறந்த ஊர் விட்டு ஓடுபவன். பிறர் சாப்பாட்டைப் பங்கு போட்டுக்கொள்வான். ஆயுள் பாவம், காரகன் வலுக்காவிட்டால் 30 வயதுக்குள் தான் வாழ்வான்.

**அசுவினி 4 ம் பாதத்தில் காலச்சக்கர தசைகள்**

| | |
|---|---|
| 1. கடக சந்திர தசை | 21 வருஷம் |
| 2. சிம்ம சூரியன் தசை | 5 வருஷம் |
| 3. கன்னி புதன் தசை | 9 வருஷம் |
| 4. துலா சுக்கிரன் தசை | 16 வருஷம் |
| 5. விருச்சிக செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 6. தனுசு குரு தசை | 10 வருஷம் |
| 7. மகர சனி தசை | 4 வருஷம் |
| 8. கும்ப சனி தசை | 4 வருஷம் |
| 9. மீன குரு தசை | 10 வருஷம் |

ஆக பரமாயுள் 86 வருஷம்

## இதில் முதல் தசை புத்திகளின் பலன் வருமாறு

**1. கடக சந்திர புத்தி - 5 வருஷம் 1 மாதம் 16 நாள் 2 நாழிகை**

மேலதிகாரிகள், அரசர்கள் ஆதரவு, தனலாபம், நல்ல அறிவுள்ள மகன் பிறத்தல், மனைவி மூலம் சுகம். புகழும், பேரும், மகிழ்ச்சியும் அதிகமாதல்.

**2. சிம்ம சூரிய புத்தி - 1 வருஷம் 2 மாதம் 19 நாள் 39 நாழிகை**

பகைவர் நாசம், புகழ் அதிகமாதல், நல்ல ஆரோக்கியம், தனலாபம் ஆனால் பயம், எந்த செயலையும் புரிந்துகொண்டு செம்மையாய் செய்யமுடியாமை.

**3. கன்னி புதன் புத்தி - 2 வருஷம் 2 மாதம் 11 நாள் 9 நாழிகை**

திடீர் தனலாபம், சொத்து அடைதல். கால்நடை வாணிபம், குடும்பவிருத்தி, பொதுவாக எல்லாவற்றிலும் நன்மை.

**4. துலா சுக்கிர புத்தி - 3 வருஷம் 10 மாதம் 26 நாள் 30 நாழிகை**

பெரிய கௌரவ பட்டம், மரியாதை கிடைத்தல், பெரும் பதவிகள் கிடைத்தல், பல பெண்களுடன் சகவாசம், அகம், தங்கம், ரத்தினம் போன்றவை அடைதல் ஆக எல்லாம் நற்பலனே நடக்கும்.

**5. விருச்சிக செவ்வாய் புத்தி-1 வருஷம் 8 மாதம் 15 நாள் 20நாழிகை**

விஷ ஜந்துக்கடியால் ஆபத்து. விஷ வாயு, விபத்து, பலவற்றாலும் மனக்கவலை, தனநாசம், படிப்பில் தடங்கல், ஆடை அணிகலன் களவு, நெருங்கிய உறவினர் மறைவு முதலியன நடக்கும்.

**6. தனுசு குரு புத்தி - 2 வருஷம் 5 மாதம் 11 நாள் 9 நாழிகை**

மிக நீடித்த தொல்லைகள், கஷ்டங்களுக்கு விடுதலை நீங்கப்பெறல், மனோதிடம், எதையும் எதிர்நோக்கி ஏற்கும்

தைரியம், குடும்பத்தினரால் எந்த நேரமும் விரும்பப்படல், கல்வி முன்னேற்றம் மகிழ்ச்சி எல்லாம் ஏற்படும்.

**7. மகர சனி புத்தி - 11 மாதம் 21 நாள் 37 நாழிகை**

உடலில் வாத ரோகம், சூலைநோய், வழக்கு விவகார தோல்வி, திடீர் கலகம், ரண உபாதை, புத்ர களத்திர அரிஷ்டம் நாசம், இப்படி அதம பலனாகவே நடக்கும்.

**8. கும்ப சனி புத்தி - 11 மாதம் 21 நாள் 37 நாழிகை**

பந்து மரணம், தன நஷ்டம், புத்ர ரோகம், மாடு முட்டல் போன்ற தொல்லை. இராஜ தண்டனை, உறவினர் பகை, முடிவில் முஸ்லீம் மக்களால் லாபம், கால்நடை பால் பாக்கியம் முதலியவை ஏற்படும்.

**9. மீன குரு புத்தி - 2 வருஷம் 5 மாதம் 9 நாள் 4 நாழிகை**

வித்துவான்கள் உறவு, புத்திர லாபம், பெண் சுகம், நினைத்த காரிய ஜெயம், தொழில் வியாபார விருத்தி, முடிவில் கண்நோய். இப்படி உத்தம மத்திம பலன் இரண்டும் நடக்கும்.

**வாசகர்கள் கவனத்திற்கு**

சுவடியில் காலச்சக்கர தசைக்கு பலன் கூறப்பட்ட விதம் எப்படி என்பதை ஒருவாறு வாசகர்கள் புரிந்துகொள்ளவே அசுவினி நட்சத்திரத்தின் 4பாதங்கள் ஒவ்வொன்றுக்கும் மட்டும் எமது குருநாடி, சோதிடக் களஞ்சியம் இவற்றின் துணையும் கொண்டு, முதல் தசையின் 9 புத்திகளுக்கும் பலன் கூறப்பட்டது. மற்ற நட்சத்திரங்கள், அவற்றின் பாதங்கள் யாவற்றிற்கும் மகாலின் காலசச்சக்கரம் என்ற நூலில் விரிவாகக் கண்டுகொள்க.

**அசுவினி நட்சத்திரக்காரர்கள் பிறக்கும் போது உதய லக்னத்தில் கோள்கள் நின்ற பலன்** *(சுவடி எண். 1500)*

சூரியன் உதயமாகில் சீமானாவான்.

சந்திரன் உதயமாகில் அமுதவாக்குடையவனாவான்.

செவ்வாய் உதயமாகில் அழகும் கல்வியும் வெகு வித்தையும் அறிந்தவன். பண்டிதனும் பிரபுவுமாகவும் இருப்பான்.

புதன் உதயமாகில் கல்வியுடையவனாக இருப்பான்.

குரு உதயமாகில் மந்திரியாவான்.

சுக்கிரன் உதயமாகில் தரித்திரன், நேசமுடையவன், கள்ளன்.

ராகு உதயமாகில் தரித்திரன்.

கேது உதயமாகில் விஷதரியாவான். அதாவது விஷவைத்தியனாவான்.

இங்கு ஒவ்வொரு நட்சத்திரக்காரருக்கும் இப்படி லக்கினத்தில் கோள்கள் உதயமாவது அரிதாகும். ஆகையால் இவன் பிறக்கும்போது எந்த லக்கினமோ, அந்த லக்கினத்திற்கு நட்சத்திரம் எதுவோ, அதன் அதிபனே உதயமாகும். கோள் என்று கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. ஒருவன் அசுவினியில் பிறந்து, அவன் லக்னம் மிதுனமாகி, அதில் லக்கினத்தின் பாதசாரம் திருவாதிரை யானால், அதற்கு அதிபனாகிய ராகு உதயமாவதாகக் கொள்ளவேண்டும். இப்படி இருந்தால்தான், உதய பலன் சரிவரும். இல்லை என்றால் பலருக்கும் உதய லக்கினத்தில் கோள்கள் இராகு. அப்போது உதயபலன் பார்க்கமுடியாது. ஆக நம் கருத்தே சரியாகலாம். இது மேலும் ஆராய்ச்சிக்குறியது.

## கர்ம விபாகப்படி அசுவினியின் பலன்

1. அசுவினி முதல் பாதத்தில் பிறந்தவன் முற்பிறவியில் மத்தியப்பிரதேசத்தில் அந்தணனாகப் பிறந்தவன்.

2. அசுவினி 2ம் பாதத்தில் பிறந்தவன் முற்பிறவியில் அயோத்திக்குக் கிழக்கே அரசகுலத்தில் பிறந்தவன். அப்போது இவனுக்கு மக்கட்செல்வம் இல்லை.

3. அசுவினி மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் முன்பிறவியில் நோயாளியாகவும், அழகற்றவனாகவும், தனக்குப் பிறந்த குழந்தைகள் எல்லாம் இறந்து போனவனாகவும், ஆண்மையின் வீரியம் அற்ற வணிக குலத்தில் பிறந்தவனாகவும் இருந்தான்.

4. அசுவினி 4ம் பாதத்தில் பிறந்தவன் முற்பிறவியில் தனக்குப் பிறந்த குழந்தைகள் எல்லாம் இறப்பனவாகவும், நோயாளியாகவும் சிறிது நிறம் கறுமையுள்ளவனாகவும் இருந்தான். இவன் வேளாண் குலத்தினனாக இருந்தான்.

## *இனி அசுவினி முதல் பாதத்தின் முற்பிறவியின் பாவமும் பரிகாரமும்*

இனி முற்பிறவியில் தன் நண்பன் ஒருவனின் நகை செல்வங்கள் எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டு அவனைக் கொன்றுவிட்டவன். தான் கவர்ந்த செல்வத்தில் 6ல் ஒரு பங்கை இறக்கும்முன் தானம் செய்தான். செய்த பாவத்தின் காரணமாக நரகமும், தாழ்ந்த யோனிகள் பலவற்றிலும் துன்பங்களை அனுபவித்து இப்பிறவியில், போன ஜன்ம பாவத்தால் இவனுக்கு மக்கட்செல்வம் இல்லை. இதற்கு பிராயச்சித்தமாக 5 லட்சம் காயத்திரி ஜபமும், மகாம் ருத்யுஞ் ஜெயமந்திரமும் ஜெபம் செய்யவேண்டும். 40 பொன் உருவங்கள் செய்து, சதுர ஹோம குண்டம் அமைத்து முறைப்படி ஓமம் பண்ணி ஒரு நல்ல அந்தணனுக்குத் தானம் செய்து, கடவுளைத் தனக்கு மக்கட்செல்வம் அருளும்படி வருந்திக்கேட்டு வழிபட வேண்டும். 10 நிறமுள்ள பசுவையும், நல்ல காளை ஒன்றையும் தானம் செய்ய

வேண்டும். நல்லவர்களுக்கு உணவு அளிக்கவேண்டும். இதனால் கடவுள் அருளால் இவனுக்கு மக்கட்பேறு உண்டாகும்.

**குறிப்பு:** இதனால் நாம் தெரிந்துகொள்வது அசுவினிக் காரர்களுக்கு புத்திரதோஷம் ஏற்படும் என்றும் அதற்குப் பரிகாரம் செய்து கொள்ளவேண்டும் என்றும் ஏற்படுகிறது. மூலத்தில் இச்செய்திகள் எல்லாம் கதை போலவும் விரிவாகவும் மட்டும் அதாவது முற்பிறவி பாவம் இப்பிறவியில் அதற்குப் பரிகாரம் என்ற வகையில் இங்கே எழுதியுள்ளோம்.

## அசுவினி 2ம் பாதத்தின் முற்பிறவியின் பாவமும் அதற்குப் பரிகாரமும்

அசுவினி 2 ம் பாதத்தில் பிறந்தவன் முற்பிறவியில் தன் மனைவியுடன் சுகமாக வசித்து வந்தபோது, இவன் வீட்டில் இவன் பணக்கார மாமன் (அம்மான்) நிறைய பொன் முடிப்புடன் வந்து தங்கினான். ஒரு மாதம் வரை இவன் அவரை சந்தோஷப்படுத்தி, அவரை ஒரு நாள் கொன்று, பிணத்தை புதைத்து விட்டு, அவருடைய பொன் முடிப்பை யெல்லாம் செலவு பண்ணி உல்லாசமாக வாழ்ந்து இறுதியில் இறந்து போனான். இவன் செய்த பாவத்தால் நெடுங்காலம் நரகம் அனுபவித்தும், பின் கழுதையாகவும் பிற தாழ்ந்த பிறவிகளையும் எடுத்துக் கஷ்டம் அனுபவித்துக் கடைசியில் மனிதப்பிறவி எடுத்தான். போன ஜன்ம மனைவியே இப்பொழுதும் காசம், ஜுரம் பிடித்த நோயாளியாக வந்து வாய்த்தாள். இதனால் இப்பிறவியில் இவனுக்கும் புத்திர தோஷத்தால் குழந்தை இல்லாமல் போயிற்று.

**இதற்கு பரிகாரம்:** இவன் பத்து பசுமாடுகளை நல்லவர்களுக்குத் தானம் செய்யவேண்டும். பக்தியுடன் ஹரிவம்ச புராணம் படிக்கவேண்டும். பொன்னால் வட்ட வடிவான உருவம் செய்து பூசிக்க வேண்டும். இதன் பின் லட்சம் தடவை காயத்திரி ஜபம் பண்ணி முறைப்படி ஓமம், தர்ப்பணம் செய்து அறவழி வாழ்பவர்களுக்கு உணவளிக்க

வேண்டும். படுக்கை தானம் பண்ணவேண்டும். ஏழு கடவுள் உருவங்கள் களிமண்ணால் செய்து 16 அங்குல சதுரமுள்ள ஓம குண்டம் செய்து விஷ்ணு, சிவன், இருவரையும் குறித்து ஓமம் பண்ணவேண்டும். இதை முடித்து உருவங்களை உரிய தட்சிணையுடன் குருமார்களுக்கு தானம் செய்யவேண்டும். அதன் பின் இவர்களைச் சுற்றி வந்து தன் மனைவியுடன் புனித நீராடவேண்டும். இப்படிப் பிராயச் சித்தம் செய்தால் இவனுக்கு பாபம் விலகும். மனைவியின் நோய்தீரும். ஆண் சந்ததி உண்டாகும்.

## அசுவினி 3ம் பாதத்தில் பிறந்தவனின் முற்பிறவி பாவமும் அதன் பரிகாரமும்

**பாவம்:** முற்பிறவியில் இவன் அரசகுமாரன். இவன் நெறிதவறா சத்தியசந்தன். இவனுக்குக் கடமை தவறாத அந்தண நண்பன் ஒருவன் இருந்தான். இருவரும் ஒருமுறை வேட்டையாட காட்டுக்குச் சென்று ஒரு மானை வேட்டையாடினர். அதன் ஊனுக்கு இருவரும் சண்டை செய்ய அந்த பூசலில் அரசகுமாரன் அந்தணனைக் கொன்று விட்டான்.

ஆத்திரத்தில் செய்த தவற்றை எண்ணி வருந்தி வீடு திரும்பி அந்தணனுக்கு இறுதிக் கடன்கள் எல்லாம் முடித்தான். இதன் பின் பல காலம் சென்று இவன் மனைவியுடன் பிரயாகை சென்று நீராடி அதிலேயே மூழ்கி மனைவியுடன் பிராணத்தியாகம் செய்தான்.

இவன் செய்த பாவம், பிரம்மஹத்தி. இதனால் இவன் ஏழு யுகம் சுவர்க்கம் அனுபவித்த பின் மறுபிறவி. தனமான்ய முள்ள பணக்கார குடும்பத்தில் பிறந்தான். போன ஜன்மத்தின் பிரம்மஹத்தி தோஷத்தால் இப்பிறவியில் இவனுக்கும் புத்திர தோஷம் உண்டாகி மக்கட்செல்வம் இல்லை.

**பிராயச்சித்தம்:** இந்த பாவம் அகல இவன் சாலை யோரங்களில் குளம், கிணறு ஏற்படுத்தவேண்டும். ஹரிவம்ச புராண பாராயணம் செய்ய வேண்டும். பத்து நிறமுள்ள

பசுக்களையும், தங்கமும், உரியவர்களுக்குத் தானம் செய்ய வேண்டும். இதனால் இவனுக்கு புத்திர சந்தானம் ஏற்படும். நோய்கள் எல்லாம் விலகும்.

## அசுவினி 4 ம் பாதத்தில் பிறந்தவர்களின் பாவமும் பரிகாரமும்

போன பிறவியில் இவன் ஒரு சத்திரியனாக இருந்தான். இவன் மனைவி விபசாரம் செய்பவளாக இருந்தாள். இவன் ஜவுளியும், நகை வியாபாரமும் செய்துவந்தான். சில காலம் கழித்து இவன் ஒரு அந்தணனுடைய நிறைந்த தனத்தைக் கவர்ந்துகொண்டான். பணம் போன துக்கம் தாளாமல் அந்தணன் இறந்தான். இவனும் பல காலம் சென்ற பின் இறந்தான்.

இந்த பாவத்தால் இவன் ஆயிரம் வருஷம் நரகம் அனுபவித்து, மாடாகவும் பிறந்து, பின் இந்த மனிதப் பிறவியை அடைந்தான். இவன் போன பிறவியில் அந்தணனை ஏமாற்றியதால் இப்பிறவியில் இவனுக்கு ஒரே மகன் பிறந்து இறந்தான். அதன் பின் சந்ததி இல்லை.

**பிராயச்சித்தம்:** அந்த பாவம் நீங்க இவன் காயத்திரி ஜபம் ஒரு லட்சம் பண்ணவேண்டும். ஒரு தேங்காயை துளையிட்டு அதன் பெரும் குடுக்கையுள் தங்கக் காசுகளால் நிறப்பி புதிய துணியால் சுற்றி, கங்கை தண்ணீரில் நடுவில் நின்று, எளியவனுக்குத் தானம் பண்ண வேண்டும். இதனால் இவன் பாவம் விலகும். காயத்திரி ஜபம் செய்தபின், வட்ட வடிவமான ஹோம குண்டம் அமைத்து ஓமம் முறைப்படி செய்யவேண்டும். இந்த ஓமம் பண்ண, பின் தங்கக்கொம்பும் வெள்ளிக்குளம்புகளும் அமைத்த, செப்புப் பீடத்தில் நிறுத்திய கன்றுடன் கூடிய பால் கறக்கும் பசுவை, பால் கறக்கும் பாத்திரத்துடனும், உரியவருக்குத் தானம் பண்ணவேண்டும். இதனால் இவன் பாவம் விலகி இவனுக்குப் புத்திரதோஷம் நீங்கி ஆண் சந்ததி ஏற்படுகிறது. அதன் பின் வாழ்க்கையும் சகல பாக்கியங் களுடன் அமையும்.

## அத்தியாயம் -2

# பரணி நட்சத்திரத்தின் பலா பலன்கள்

இது இரண்டாவது நட்சத்திரம். ராசி மண்டலத்தில் 13பாகை 21 முதல் 26. பாகை 40 வரை பரந்துள்ளது. இதற்கு யமதர்மன் தான் அதிதேவதை.

| | |
|---|---|
| இந்தியப் பெயர் | பரணி |
| அரபுப்பெயர் | அல்புனடன் |
| கிரேக்கப்பெயர் | Ariestis or Muscace<br>அரிஸ்டிஸ் அல்லது முஸ்கேஸ் |
| சீனப்பெயர் | OSI ஓஸி |

இது மூன்று நட்சத்திரங்களைக் கொண்டது. முக்கோண வடிவம். பெண்ணின் யோனி போன்று ஒத்திருப்பது.

ஞானங்கள் விரும்பிக் கற்கும் நற்றமிழ் விரும்பிக் கேட்கும்
தானங்கள் விரும்பிச் செய்யும் தந்தைதாய் மிகவும் பேணும்
மானமு துடைய னாகும் வருநிதி பொருந்தி வாழும்
போனகம் செல்வ முண்டாம் புகழ்பெறும் பரணி யானே.(41)

(சுவடி எண். 1500)

பரணி நட்சத்திரத்தில் பிறந்தவன் ஞானம் அதாவது ஆத்மீகம் உலகாயுதம் இரண்டும் பற்றிய கல்வியை விரும்பிக் கற்பான். தமிழில் அதிக நாட்டமுடன் கற்பான். அதாவது தனது தாய்மொழியில் நல்ல பயிற்சி, தேர்ச்சி உடையவனாக இருப்பான். தன் தாய் தந்தையரை வயோதிக காலத்தில் நன்றாகப் பணிவிடை முதலியவை செய்து பாதுகாப்பான். இவன் பெரும் மானம் உடையவன். இவன் சம்பாதிக்கும் பொருளை (வருநிதி-தனக்கு வரும் பணம்) அதிகம் செலவு

செய்யாமல் சேமித்து வாழ்வான். இவனுக்கு என்று சாப்பாட்டுக்குப் பஞ்சமிராது என்ற பொருளாம்.

**சுவடிகளில் சொல்லிய மற்ற செய்திகள்**

இவனுக்குத் தெய்வம் ஆதித்தன்

பூதம் - பிரிதிவீ - மண்

கோத்திரம் - விசுவாமித்திரம்

சாதி - க்ஷத்திரியன் - அரசன்

யானி - யானை

பட்சி - காக்கை

விருட்சம் - நெல்லி மரம்

கணம் - மனித கணம்

சித்திரை மாதம் - சூனியம்

இவன் முன்கோபி. வித்தையுடையவன். வழிபாடுடையவன். அதிகம் அழகுடையவன். மூக்கு உயர்ந்திருக்கும். இவன் தான தருமம் செய்வான். இந்த நட்சத்திரத்தினத்தன்று சில காரியங்கள் தான் செய்யலாம். விதை விதைக்கலாம். பெண் திரண்டால் பெண் பெறுவாள். இந்த நட்சத்திரத்தில் பெண் பிறக்கில் உலகையாளும் (உயர்தர வாழ்க்கை உண்டு).

இந்த நட்சத்திரத்தில் 25 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம் 40 நாளில் (இதில் பிறந்தவனுக்குக் கண்டமுண்டு. முதல் 9வது நாளிலும் கண்டம்) இதற்கு நெய்யால் பரிகார ஓமம் பண்ணவேண்டும். அதனால் 3 நாட்களில் சரியாகும்.

**இவன் பிற குணங்கள்:** இவன் ஐசுவரியவான். புத்திசாலி. போஜனப் பிரியன். வேகமாக நடக்க வல்லவன். முகமும் வாயும் சிவந்திருக்கும். பல குழந்தைகளுண்டு. பாலில் பிரியமுண்டு, அதிகம் பொய் சொல்வான்.

இந்த நாளில் வருஷம் பிறக்கில், தானிய விளைச்சல் அதிகமாக இருக்கும். வியாதி தோன்றில் ஒன்பது நாளில் குணமாகும். இவன் எதற்கெடுத்தாலும் ஆச்சரியப்படுவான். இவன் தேகம் சிக்கெனக் கச்சலாக பலமுள்ளதாகும். தீரனாக இருப்பான். பலவகை கல்வி கேள்விகள் உடையவன்.

இந்த நட்சத்திரத்திற்கு வாரம் - செவ்வாய்க்கிழமை

இந்த நட்சத்திரத்தில் செய்யத்தக்கவை.

கதிரருக்க, மாடு வாங்க, ஆயுதப் பிரயோகம், மூலிகை உபயோகிக்க. மருந்துண்ண, அடுப்பு வைக்க, தானியம் களஞ்சியத்தில் சேர்க்க, வியாதிஸ்தர் குளித்தல் போன்றவற்றிற்கு நல்லது.

**இதற்கு பரிகாரம்:** இந்த நட்சத்திரத்திற்கு எழுத்து இ மற்றும் ஈ காரமாம். இதனுடன் புதன்கிழமை சப்தமி திதி சேர்ந்தால், விஷயோகம். இதில் காய்ச்சல் முதலியவை கண்டால் தீருவது கடினம். ஜாதக ஆயுர்பாவம் சரி இல்லையானால் மரணமும் நேரலாம்.

**பரிகாரம்** : மிருத்யுஞ்ஜெய ஜபம். அரிசி மாவு, வெல்லத்தால் செய்த அப்பம், நைவேத்தியம். ஏகாதச ருத்திரம் செய்வது சிறப்பு. திரயம்பக மந்திரத்தால் நெய், தேன், எள் இவற்றால் ஓமம் செய்து ஐந்து நாள் கழித்து காயத்திரியினால் 108 முறை ஓமம் பண்ணினால் சுகமுண்டாகும். 21 நாளைக்குப் பின் சுகம் ஏற்படும்.

**மந்திரம்:** காயத்திரியும், திரியம்பக மந்திரமும்.

**பிறர் மத நூல்களின்படி:** உடலமைப்பு முதலியவை நடுத்தர உடலமைப்பு, மயிர் அடர்த்தியாக இராவிட்டாலும், சுருண்ட மயிர். பெரிய உயர்ந்த நெற்றி. அழகான வெண்மையான வரிசைப் பற்கள். உயர்ந்த கழுத்து. நண்பகல் பிறப்பானானால் உயர்ந்த நெடிய தோற்றம், தலை முன்

நெற்றி அகன்றும் கீழ் உதட்டில் படிப்படியாக குறுகியும் இருக்கும். அடர்ந்த புருவம், சிவந்த நிறம்.

**குணங்கள்:** பரணியில் பிறந்தவனை நல்ல மனசு காரணமாக எல்லாரும் விரும்புவார்கள். தன் கருத்துக்களை பிறரைப் பாதிக்கும் என்ற கவலை சிறிதுமின்றி வெளியிடுபவன். சரியோ, தப்போ, தன் மனசாட்சிப் படியே நடப்பவன். தன் கருத்து வேற்றுமைகளால் சில சமயம் எல்லோரையும் எதிர்த்துக்கொள்ள அல்லது பகைத்துக் கொள்ள வேண்டி வரும். ஆனால் சுட்டிக்காட்டப்பட்டால் தன் தவற்றை உணர்ந்து மீண்டும் நட்பை மேற்கொள்வான்.

(பரணிக்குச் சுக்கிரன் அதிபதி) சுக்கிரன் பெண் கோள். நயமானவன். ஆதலால், மேற்கண்டவை பெரிதும் பொருந்தா. மாறாக தன் நடத்தை, அழகு, உருவ பாதிப்பு இவற்றால் எல்லோரையும் தன்பால் இழுத்துக்கொள்வான். இவன் பிறரைப் பாதுகாக்கக் கூடுமானாலும் இவனைப் பார்த்துக்கொள்ள வேறு நபர் வேண்டும் என்பதும் உண்மையே.

**கல்வி, வருவாய் மூலம் - தொழில்:** இவனுக்குக் கல்வி நிறைய உண்டு. இருப்பினும் வாழ்க்கையில் 33 வயதுக்கு மேல் தான் முன்னேற்றம் உண்டாகும். வாசனைப் பொருள் வியாபாரம். ஜவுளி நாகரிக அழகுக்கலை சாதனங்கள் வியாபாரம். பெரிய உணவகம் வைத்து நடத்தி முன்னேறல். நுண்கலை, நடிப்பு, திரைப்படத்துறை போன்றவற்றில் நல்ல லாபம் வரும். பரணி பிறந்தான் தரணி ஆழ்வான் என்ற பழமொழிப்படி இவனுக்குப் பெருத்த ராஜயோக வாழ்க்கை அமையும்.

**குடும்பம்:** இளம் வயதில் திருமணம். அன்யோன்ய அதி சுகமான தாம்பத்திய வாழ்க்கை. இவன் மனைவி உணவிலிருந்து அந்த உணர்வு வரை நிரப்பி நன்றாக இவனைச் சுகமாக வைப்பாள். முதல் அல்லது 2ம் பாதத்தில்

பிறந்திருந்தால், தகப்பன் இளமையில் மரணமாகலாம். இவன் வீட்டுக்கு வெளியே இருக்க விரும்பமாட்டான். குடும்பத்தின் மேல் அதிக பாசம்.

**உடல் நலம்:** சுகபோக உல்லாசன். ஆகையால் பால்வினை நோய் வரலாம். நீரிழிவு, உடல்வலி முக்கியமாக காணப்படும். இவனுக்கு நீர்க்கண்டம் உண்டு. முன்னெற்றியில் தாக்கப்படலாம். தொடர்ந்து புகை பிடிக்கும் கெட்ட பழக்கம் உண்டு. எனவே இதயநோய் வரலாம்.

**பெண்கள்:** பரணிப்பெண்கள் அமைதியான குணம், அழகிய சுண்டிக்கவரும் நளினத்தோற்றம், தன் கருத்துப் படியே நடப்பாள். சிறிது வணங்காமுடி.

**கல்வி தொழில்:** தன் வாழ்க்கைக்குத் தானே தேவையானவற்றை சம்பாதிப்பாள். நல்ல முதிர்ந்த மறுவற்ற பண்பு. தனக்கு மூத்தவர்கள், பெற்றவர்கள் இவர்களிடம் நல்ல மரியாதை, பணிவுடன் நடந்து கொள்வாள்.

**குடும்ப வாழ்க்கை:** 23 வயதளவில் திருமணம்-குடும்பத்தில் இவள் கையே ஓங்கி இருக்கும். தன் கணவனின் அன்பு, பாசம், அரவணைப்பு எல்லாம் இவளுக்கே உரிமையாகும். கணவன் குடும்பத்தினரால் (மாமியார், நாத்தனார்) போன்றவர்களால் பெரிதும் தொல்லைகளுக் காளாகலாம். 2வது பாதத்தில் பிறந்தவளானால் மாமியார் இறக்க நேரலாம். தன் குடும்பத்தைப்பற்றி அதிகம் பெருமைப்படுவாள். தான் விரும்பும் ஆண் ஒருவருக்கே அடங்கிப்போவாள். தன்னை விட அந்தஸ்து குறைவான கணவனானால் அவனை அடக்கி ஆட்சி செலுத்துவாள்.

**ஆரோக்கியம்:** பொதுவாக நன்றாக இருக்கும். அடிக்கடி மாதவிலக்குக் கோளாறுகள் ஏற்படலாம்.

## *பரணியைப்பற்றிய மற்ற நூல்கள்*

**தமிழ் ஜாதகாலங்காரம்:** தாய் தந்தையர்க்கு இனியவன், ஞானி, தூக்கம் குறைவு, தர்ம சிந்தனை உள்ளவன். தனவான், மானம் புகழ் உள்ளவன். கோபி. தாம்பூலப்பிரியன், சொல் சாதுரியவான், உடலில் வலது பக்கம் மறு உள்ளவன். வல்லமை உள்ளவன். மனைவி சொற் கேட்பவன். சிறிய மோவாய்க் கட்டையுடையவன்.

**யவன ஜாதகம்:** சாஸ்த்திர பண்டிதன், நோயற்றவன். தைரியசாலி, பல செய்திகளை அறிந்தவன், புத்திசாலி, உண்மை விளம்பி. திடமான விரதமுடையவன்.

**பிருகத் ஜாதகம்:** தொடங்கிய காரியங்கள் நிறைவேறும் வரை முயற்சியுடையவன். யதார்த்தவாதி. நோயற்றவன், சதுரன், துக்கமற்றவன்.

**பிற நூல்கள்:** நிச்சய புத்தியுள்ளவன். சுகபுருஷன். சர்வாங்க லட்சணமுள்ளவன். மனஉறுதி உள்ளவன். வசதியான வாழ்க்கை, செல்வாக்கு உண்டு. நீண்ட ஆயுள் உண்டு. பகையை அதிகம் வளர்த்துக்கொள்ளும் குணம் உண்டு. நீண்ட மூக்கு, சுருண்டமயிர், சிவந்த கண்கள் உடையவன். சம்போகப்பிரியர்.

இது கீழ்நோக்கு நாள். இதில் பூப்படையும் பெண்கள் வாழ்க்கையில் தொடர்ந்து பல சிரமங்களை அனுபவிப் பவர்கள். இது உபய குல நட்சத்திரம். அதாவது தன் முயற்சி, பிறர் உழைப்பு இரண்டாலும் வரும் ஊதியத்தை அனுபவிப்பவன். கஷ்டம் எதுவந்தாலும் கலங்காமல் தைரியமாக தெளிந்த சிந்தையுடன் இருப்பவர். சாமர்த்தியசாலி. வனாதி பிரதேசங்களில் சஞ்சரிக்கின்றவர். வாக்குப் பலிதம் உடையவர். வாழ்வின் முற்பகுதி சிரமம். சொந்தவீடு அமைவது அரிது. பிறருக்கு உழைப்பவர், குற்றமற்றவர், பாக்கியவான்.

கடின சிந்தை உடையவன். இந்த நட்சத்திரம் உடலில், நெற்றி, பருத்த பிருஷ்டபாகம் அமைவது இவற்றைக் குறிக்கும்.

போதைப் பொருள், புகை பிடித்தல் முதலியவற்றில் அதிக ஈடுபாடுடையவன்.

**பெண்கள்-வடமொழி ஸ்த்ரீ ஜாதகம்:** எப்பொழுதும் பல ஆண்களுடன் சல்லாபம் செய்பவள், வெளியாரைப் பகைத்துக் கொள்வாள். சர்வாங்க சௌந்தர்யம் உடையவள். நகைச்சுவையுடன் சிரித்துப் பேசுபவள்.

கொக்கோகம், மதன நூல் வசனம், மதன நூல் பரணியை இயக்கி தத்துவமாக வகைப்படுத்தியுள்ளது. இதன்படி பரணி நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணின் குணம்.

**வடிவம துடைய ளாகும் வந்தடைந் தாரைப் பேணும்**
**கடியதை விரும்பும் காமக் களத்தினில் களவு காட்டும்**
**வடிவுறு புணர்ச்சிக் கெல்லாம் மருளுடை புரிந்த சிந்தை**
**படிதனில் சொன்னோம் இந்தக் குணமெலாம் பரணி யாளே.(42)**

பரணியில பிறந்தவள் நல்ல அழகான வடிவம் உடையவள். தன்னிடம் வந்தவர்களை ஆதரிப்பாள், தன் கணவன் கடினமாகக் கலவி செய்தாலும் தானும் ஈடுகொடுத்து இன்பம் செய்வாள். அவனுடன், அவன் எதிர்பாராமல் வஞ்சமாக வகை வகையாகக் கலவி செய்து இன்பம் தருபவள் இவள் என்பதாம்.

## பரணி நட்சத்திர சாந்தி

**பழைய நூல்களில் சொன்னவை:** 1) இந்த நட்சத்திரம் முதல் பாதத்தில் நோய் கண்டால் 3 நாளையில் தீரும்.

2) 2ம் காலில் நோய் கண்டால் 7 நாளையில் தீரும்.

3) 3ம் காலில் நோய் தோன்றினால் 15 நாளில் தீரும்.

*4) 4ம் காலில் தோன்றினால் 15 நாளில் தீரும். தீராவிடில் 16வது நாள் மாரகம் பண்ணும்.*

**குறிப்பு:** *பரணிக்கு அதிதேவதையே காலனாகிய இயமன். ஆகையால் இதில் நோய் கண்டால் தீருவது கடினமாகும்.*

## *இதற்கு சாந்தி*

**பரணியில் நோயு திக்க பாரைந்து நாளில் வீடும்**
**விரைவினில் விடாது போனால் எள்ளடிசில் தலையைச் சுற்றி**
**நிரையதாம் ஊரின் மேற்கில் நிலைத்தநால் சந்தி தன்னில்**
**பரவவைத் திடவே அங்கே பரந்திடும் நோய தாமே. (43)**

*பரணி நட்சத்திரத்தில் நோய் கண்டால் 5 நாளில் தீரும். தீராவிடில் எள்ளின் சாதம்செய்து நோயாளியின் தலையைச் சுற்றி ஊருக்கு வெளியே மாடு மந்தை மடக்கும் இடத்திற்கப்பால் நாற்சந்தியில் வைத்துவிட்டால் அந்த நோய் நீங்கும் என்பதாம்.*

### பரணி நட்சத்திரத்தில் இதர காரகங்கள்

| | |
|---|---|
| *இந்த நட்சத்திர ராசி அதிபதி* | **செவ்வாய்** |
| *இந்த நட்சத்திர அதிபர்* | **சுக்கிரன்** |
| *சரீரத்தின் பாகம்* | **நெற்றி** |

**நோய்கள்:** *தலையில் அடிபடல், அதிக சம்போகத்தால் வெக்கை நோய், (சூட்டினால் ஏற்படுவது) சளி, இருமல், இரத்த நாளக் குறைபாடு, அடைப்பு. உணவில் ருசி இன்மை, அதிக உணர்ச்சி, வேகப்படல் முதலியன.*

*நண்பகலில் இந்த நட்சத்திரத்தில் மேகம் தோன்றினால் 16 தினங்களில் மழை உண்டாகும். பங்குனி மாதம் சூனியம், புதன்கிழமை இதனுடன் சப்தமி சேர்ந்தால் விஷயோகம். பரணி மட்டும் புதன்கிழமையில் வரில் விஷயோகம்.*

ஞாயிறு சேர்ந்தால் எமகண்ட நாள். இதன் கடைசி அம்சம் மரணயோகம் அல்லது தின மிருத்யு எனப்படும்.

## இந்த நட்சத்திரத்தில் கோள்கள் நின்ற பலன்

**1. சூரியன் நின்றால்:** பணத்தின் மேல் அதிக மோகம் - சந்தோஷமான குடும்ப வாழ்க்கை உண்டு. தானாக முயற்சித்து எந்தக் காரியமும் செய்ய, பிறரிடம் பணம் பெறுவதிலும் கொடுப்பதிலும் தயக்கம் இல்லை. அழகன், ஸ்த்ரீலோலன்.

**2. பரணி நட்சத்திரத்தில் சந்திரன் நின்றபலன்:** சங்கோசி, ஆனால் கர்வி, மறதி மன்னன். படிப்பு குறைவு. பேச்சும் நடத்தையும் கடுமை. பிறரிடம் எப்பொழுதும் ஏதாவது சலுகைகள், உதவியை எதிர்பார்ப்பவன். பிறரைச் சார்ந்து நடப்பவன். நீர் நிலையைக் கண்டு அஞ்சுபவன்.

**3. பரணி நட்சத்திரத்தில் செவ்வாய் நின்ற பலன்:** கர்வி, பொறாமைப்பட்டுக் கொள்பவன். இவன் எதற்கும் நம்பத்தகுந்தவன். வாழ்க்கையில் எந்த நிலையையும் சமாளிக்கக் கூடியவன். சுயநலவாதி, எளிதில் கோபப் படுபவன், தன்னைப்பற்றித் தம்பட்டம் அடித்துக் கொள்பவன். அறிவாளி, ஆனால் மக்களிடையே அவனுக்கு நல்ல பெயர் கிடையாது.

**4. பரணி நட்சத்திரத்தில் புதன் நின்ற பலன்:** விரைவில், எளிதில் திருப்தி அடையக்கூடியவன். நல்ல குணவான், இனிய சுபவான், பிறரால் இவனை தன்வயப்படுத்த முடியும். பகற்கனவாளி, உதார புருஷனாக இருக்க விருப்ப முடையவன். பிறரிடம் நம்பிக்கை உடையவன்.

**5. பரணி நட்சத்திரத்தில் குரு நின்ற பலன்:** சாதாரண படிப்புள்ளவன்.சுகத்தில் அதிக விருப்பமுள்ளவன். தன் செயல் வியாபாரம் இவற்றின் கௌரவமாகவும் எச்சரிக்கை யாகவும் இருப்பான். பணக்காரன். நிறைய மக்கட் செல்வமுடையவன்.

**6. பரணி நட்சத்திரத்தில் சுக்கிரன் நின்ற பலன்:** அதிக இச்சை உள்ளவன்(காமம்). பெண்களிடம் அதிக நாட்டம், ஆசையுள்ளவன். எப்பொழுதும் பெண்களைக் கேட்டே முடிவுகள் செய்வான். வாதம் பண்ணமாட்டான். எதற்கும் ஒத்துப்போவான். காதல் மன்னன். வாழ்க்யைில் எதிலும் அக்கரை இல்லாதவன். இவன் பழக்கவழக்கங்களில் எச்சரிக்கை இராது. இவன் எப்பொழுதும் அடிமட்ட சமூகத்தில் பழகுவான். தான் பழகுபவர்களிடமிருந்து எப்பொழுதும் கடன் வாங்கும் பழக்கமுள்ளவன்.

**சனி நின்றால்:** கடின சித்தம் உள்ளவன். கல்வி இல்லாதவன். அதிர்ஷ்டக்கட்டை. கோழை. கொடுஞ்சொல் பேசுபவன். எப்பொழுதும் ஏதாவது சிக்கலில் மாட்டிக்கொண்டு மானம் கௌரவம் பாதிப்பு அடைபவன். இதை மீண்டும் பெறுவதில் முயற்சித்தாலும் தோல்வி அடைபவன்.

### *பரணியில் நின்ற கோள்களை மற்ற கோள்கள் பார்த்தால் ஏற்படும் பலன்கள்*

**1. பரணியில் நின்ற சூரியனை சந்திரன் பார்த்தால்,** பிறரிடம் பாசம் அன்பும் உள்ளவன். ஆள் அடிமை உள்ளவன்.

**2. செவ்வாய் பார்த்தால்** கொடூர சித்தம் உள்ளவன். போர், படை, சண்டை, போன்றவற்றில் பயிற்சி உள்ளவன். (ஸ்டண்ட் மாஸ்டர்)

**3. புதன் பார்த்தால்** நுண்கலை திரைப்படத்துறை, இசை, நாடகம், இவற்றில் திறமை உள்ளவன். நகைச்சுவைத் திறனும் உண்டு.

**4. குரு பார்த்தால்** ஏழைகளுக்கு அதிகம் தானம் பண்ணுபவன். பணக்காரன். பெரிய அரசியல் பதவி அல்லது செல்வாக்கான அரசு உத்தியோகத்தில் இருப்பவன்.

**5. சுக்கிரன் பார்த்தால்** கீழ்மட்டப் பெண்களுடன் சுற்றுபவன். பணக்கஷ்டம் அதிகம். சந்தர்ப்பவாதிகள், இவனால் பயன் அடைவர். ஆனால் கஷ்டம் வரும்போது காலை வாரிவிடுவார்கள்.

**6. சனி பார்த்தால்** இவன் சோம்பேறி. தரித்திரன்.

## *பரணியில் நின்ற சந்திரனை*

**1. சூரியன் பார்த்தால்:** கடின சித்தமுள்ளவன். ஆனால் தன்னை நாடியவர்களுக்கு உதவி செய்பவன். சட்டத்தால் தண்டிக்கப்படுபவன். தாராள ஊதாரிச் செலவாளி. தகப்பன் சேர்த்து வைத்த பணத்தில் சுகமாக வாழ்பவன். கடினமான சுபாவமுள்ளவன். கடமையை மறப்பவன். சாதாரண அறிவாளி. பணக்காரன். பிறருடன் பேசி ஜெயிப்பதில் சமர்த்தன். உத்தியோகத்தில் இருப்பவன். ஆனால் தன் இஷ்டப்படிதான் நடப்பான்.

**2. சந்திரன் பார்த்தால்:** வெகுளி, ஆனால் கர்வம் பிடித்தவன். ஏழ்மை உள்ளவன். நல்லவற்றை அதிகம் பேசாதவன். சிறிது தயக்கம் உள்ளவன். மறதி அதிகம். எல்லாவற்றுக்கும் பிறரை எதிர்பார்ப்பவன். எதையும் பிறரிடம் கேட்டுப்பெறுவதில் தயக்கம் இல்லாதவன்.

**3. செவ்வாய் பார்த்தால்:** கடின சுபாவமுள்ளவன். படித்தவன். வேலைத்திறன் அதிகம். உஷ்ண தேகம் உள்ளவன். சுயநலவாதி. குறிக்கோள்களை அடைவதில் தீவிரமுள்ளவன். கோபம் கொள்வான். தன்னைப்பற்றி அதிகம் தம்பட்டம் அடித்துக்கொள்வான்.

**4. புதன் பார்த்தால்:** எந்த நிலையிலும் திருப்தி படுபவன். இனிமையாகப் பேசுபவன். தன் பேச்சால் பிறரை கவருபவன். கனவுலக சஞ்சாரி. எல்லாமே உயர்வாக இருக்கவேண்டும் என்று நம்புபவன். பிறரிடத்தில அதிக நம்பிக்கை உண்டு. வெகுளி. அதிகம் படிக்காதவன்.

**5. குரு பார்த்தால்:** *சாரசரி கல்வி, சுகபோக விருப்பம் உள்ளவன். தொழில் உத்தியோகத்தில் எச்சரிக்கையாக இருப்பவன். பணக்காரன். அதிகம் குழந்தைகள் உள்ளவன்.*

**6. சுக்கிரன் பார்த்தால்:** *பாலுணர்வும் அதன் மேல் இச்சையும் அதிகம் உள்ளவன். பெண்கள் மேல் நாட்டம் அதிகம். எப்போதும் பெண்களையே யோசனை கேட்பவன். தர்க்கம் செய்யாதவன். காதலில் நாட்டம் அதிகம். பொறுப்பு அதிகம் கிடையாது. சமூகத்தில் மேல் மட்டத்திலேயே பழகுபவன்.*

**7. சனி பார்த்தால்:** *உடல் நலக்குறைவு, நோய் உண்டு. கடின சித்தமுள்ளவன். பொய்யன், பரணிக்கு அதிபன் சுக்கிரன், ஆகையால் அந்த ராசிக்கு சனி யோக காரகன். ஆகையால் அவ்வளவு கஷ்டமிராது.*

## *பரணியில் நின்ற செவ்வாயை*

*1. சூரியன் பார்த்தால்: கெட்டிக்காரன். நுண்ணறிவு உடையவன். பெற்றோரிடம் பாசம் உள்ளவன். பணக்காரன். பணக்காரர்கள் நடுவே கௌரவமான பொறுப்பை வகிப்பவன்.*

*2. சந்திரன் பார்த்தால்: எப்போதும் பிற பெண்களிடம் மோகம் உள்ளவன். கடின சித்தமுள்ளவன். காவல், படைத்துறையில் உத்தியோகம் உள்ளவன். இரக்கம் அற்றவன்.*

*3. புதன் பார்த்தால்: இவனும் பிற பெண்களிடம் நாட்டம் உள்ளவன். ஆடம்பரம், வீண் கௌரவம் இவற்றில் மோகம் உள்ளவன். பிறர் பணத்தில் இவனுக்கு நாட்டம் உண்டு. பெரும் கொள்ளைக்காரர்களும், கடத்தல்காரர்களும் இவர்களே. ஆனால் குரு பார்த்தால் இது இராது.*

*4. குரு பார்த்தால்:* தன் குடும்பத்திலும் சமூகத்திலும் முதன்மை உள்ளவன், இந்த வகையில் பிறரை விட பணக்காரன். ஆனால் சகிப்புத் தன்மையற்றவன். முன்கோபி.

*5. சுக்கிரன் பார்த்தால்:* நல்ல உணவில் நாட்டமிறாது. பெண்களையே சுற்றித்திரிபவன். ஆனால் சமூகத்திலும் குடும்பத்திலும் இவனுக்கு நல்ல பதவி உண்டு.

*6. சனி பார்த்தால்:* குடும்பத்திலும், உறவினர்களிட மிருந்தும் பிரிந்து வாழவேண்டி வரும். இவனுக்கு தாயின் அன்பு கிடைக்காது. மெலிந்த தேகி. தன் குடும்பத்திற்கு எதிராகவே காரியங்களைச் செய்பவன்.

## *பரணியில் நின்ற புதனை*

**1. சந்திரன் பார்த்தால்:** இசை, நடிப்பு, மற்றும் பிற நுண்கலைகளில் தேர்ச்சி உண்டு. அதனால் நிறைய ஆதாயம் உண்டு. பல பெண்கள் மூலம் சுகமுண்டு. வாகனம், வீடு ஆளடிமை உண்டு.

**2. செவ்வாய் பார்த்தால்:** பெரிய பதவியில் உள்ளவர்கள் மற்றும் முக்கியஸ்தர்களுடன் சிநேகம் உண்டு. இவர்கள் செல்வாக்கால் நிறைய செல்வம் குவிப்பான். ஆனால் சண்டைக்காரன்.

**3. குரு பார்த்தால்:** பொதுவாக வாழ்க்கையில் சந்தோஷமுண்டு. நல்ல மனைவியும் குழந்தைகளும் உண்டு.

**4. சுக்கிரன் பார்த்தால்:** அழகிய பணக்காரப் பெண்களால் சுபயோகமுண்டு. நேரான நடத்தையும் உண்டு. உறவினர் நண்பர் முதல் எல்லோராலும் அதிகம் விரும்பப்படுபவன்.

**5. சனி பார்த்தால்:** கெட்ட நடத்தையுள்ளவன். கடின சித்தன். சண்டைக்காரன்.

### *பரணியில் நின்ற குருவை*

**1. சூரியன் பார்த்தால்:** உண்மையானவன். சமூகத் தொண்டன், புகழும் அதிர்ஷ்டமும் உண்டு.

**2. சந்திரன் பார்த்தால்:** பெரியோரை மதிப்பவன். புகழ் உண்டு. நல்லவர்கள் அறிவுரையை ஏற்றுக்கொள்பவன். அமைதியை நாடுபவன். நல்ல காரியங்களையே செய்பவன்.

**3. செவ்வாய் பார்த்தால்:** கடின சித்தன். பணத்தை வீண் விரையமும், தேவையற்றவைக்கும் செலவு செய்பவன். ஆவான். துஷ்டர்களை அடக்குபவன். அரசு பதவியில் உள்ளவன். பலரையும் வேலை வாங்குபவன்.

**4. புதன் பார்த்தால்:** பொய்யன், கொடுஞ்சொல்லன், சண்டைக்காரன். ஒரே சமயத்தில் பல பெண்களை காதலிப்பவன். ஆடம்பர தோற்றம் உள்ளவன்.

**5. சுக்கிரன் பார்த்தால்:** ஸ்த்ரீ சுகம், படுக்கை சுகம், ஆடை ஆபரணம், வாகனம், வீடு வேலைக்காரர்கள் போன்ற வாழ்க்கையின் சுகபோகங்கள் எல்லாம் நிறைந்தவன்.

**6. சனி பார்த்தால்:** மனைவி, குழந்தைகளால் சுகமில்லாதவன், கடின சித்தன், பிறருக்கு பயனற்ற யோசனைகளைச் சொல்லுபவன்.

### *பரணியில் நின்ற சுக்கிரனை*

***1. சந்திரன் பார்த்தால்:*** சமூகத்தில் தலைமைப் பதவி வகிப்பவன். அந்த செல்வாக்கால் பல பெண்களுடன் ஈடுபட்டு கௌரவம் இழப்பவன்.

***2. செவ்வாய் பார்த்தால்:*** ஏழை, பணமற்றவன், மதிப்புக் கிடையாது. வாழ்க்கையில் சுகமில்லை. எப்பொழுதும் பறிகொடுத்தல் நிலை.

*3. புதன் பார்த்தால்:* வாழ்க்கையில் நிறைய கஷ்டங்களை சந்திப்பவன். வாழ்க்கையை தான் விரும்பியபடி சுகமாக அனுபவிக்க முடியாதவன்.

***4. குரு பார்த்தால்:*** கவர்ச்சியான தோற்றமுள்ளவன். நல்ல அழகிய மனைவியும் குழந்தைகளும் உள்ளவன். வாழ்க்கையில் இவனுக்கு எல்லா சுகபோகங்களும் குறைவில்லாமல் ஏற்படும்.

***5. சனி பார்த்தால்:*** அதிகம் சிறப்புப் பணம் உள்ளவன். அமைதியை விரும்புபவன். பிறரால் பாதிக்கப்படுபவன். ஏழை பங்காளன்.

### *பரணியில் நின்ற சனியை*

1. சூரியன் பார்த்தால்: கால்நடை, பயிர்த்தொழில் இவற்றால் சம்பாதிப்பவன். நல்லகாரியங்களைச் செய்பவன்.

2. சந்திரன் பார்த்தால்: துஷ்டர்களையும், கெட்டவர் களையும் பின்பற்றுபவன். கடின சித்தன், ஏழை.

3. செவ்வாய் பார்த்தால்: தன்னை போஷிப்பவர் களையே தூஷிப்பவன். நடத்தைக்கேடும், சபல சித்தமும் உள்ளவன்.

4. புதன் பார்த்தால்: பொய்யன், திருடன், ஸ்த்ரீ சுகம் கிடையாது.

5. குரு பார்த்தால்: மிக உயர்ந்த பதவியும், அந்தஸ்தும் உள்ளவன். களத்திர ஸ்த்ரீ சுகமும் பணம், வாகனம் வீடு வேலைக்காரர்கள் ஆகிய சௌகரியங்கள் உள்ளவன்.

6. சுக்கிரன் பார்த்தால்: தன் உத்தியோக விஷயமாகப் பலவகைப் பயணங்கள் செய்பவன். தன் காம இச்சையை தனித்துக்கொள்ள மலடிகளை சுற்றித் திரிபவன். கவர்ச்சியற்ற கருமையான உடல் உள்ளவன்.

**பரணிக்குரிய விம்சோத்தரி தசைகள்:** ஆரம்ப தசை சுக்கிர தசையாகும். அதைத்தொடர்ந்து சூரியன், சந்திரன் மற்ற கிரகங்கள் தசைகள் ஏற்படும். இதன்படி 120 வருஷம் பரம ஆயுள்.

## இந்த நட்சத்திரக்காரர்களுக்கு ஏற்படும் நோய் கண்டம் முதலியவை

இவன் பிறந்த ஆண்டில் கண்டம். அடிவயிற்றில் நீர் அடைப்பால் பிணி. ஏழாவது வயதில் சுரம். 12 வயதில் கண் நோயால் பீடை, 17வயதில் உதிரத்தால், நாலுகால் மிருகத்தால் பீடை. 22 வயதில் மேல் இருந்து கீழ் விழுதலால் விபத்து. மேலும் மருந்திடுதலால் ஆபத்து. 28 வயதில் பால்வினை நோய். 30 வயதில் பெண்களால் தொல்லை. 35 வயதில் திருடர் பயம். 42 வயதில் விஷத்தால் அச்சம். 50 வயதில் மகோதர நோய். 52 வயதில் வயிற்றுக்கடுப்பு. 59 வயதில் மூல வியாதியும், 64ல் வெக்கையும், இவை கடந்தால் 81 வயதில் அக்கினி பயம். அதற்குப்பின் 86 வயதில் அமரபட்சம். வெள்ளிக்கிழமை வைகாசி 11ஆம் தேதி அளவில் 13 நாழிகைக்கு மேல் மரணம்.

இவன் பிறந்தபோது லக்கினாசாரம் சூரியன் உதயமானால் ராஜபுருஷன், தனவான், சீமான்.

இவன் பிறந்த லக்கினாசாரம் சந்திரன் உதயமானால் ராஜபுருஷன், தனவான், சீமான்.

இவன் பிறந்த லக்கினாசாரம் செவ்வாய் உதயமானால் கல்வி உடையவன், கோனன்.

இவன் பிறந்த லக்கினாசாரம் புதன் உதயமாகில் சேனாதிபதி.

இவன் பிறந்த லக்கினாசாரம் குரு உதயமாகில் அரசன்.

இவன் பிறந்த லக்கினசாரம் சுக்கிரன் உதயமாகில் மந்திரி.

இவன் பிறந்த லக்கினசாரம் சனி உதயமாகில் மந்தன், குருடன்.

இவன் பிறந்த லக்கினாசாரம் ராகு உதயமாகில் தனவான், விஷவைத்தியன்.

இவன் பிறந்த லக்கினாசாரம் கேது உதயமாகில் பிரபல முடையவன், மந்திரி.

### *பரணி நட்சத்திர பாதபலன்*

**காலமாம் சிவப்பன் மிகுபராக் கிரமன்**
**கனபல நீதியும் உள்ளான்**
**கருதலர் சிங்கம் செந்நிற மயிரான்**
**காணுமே பரணியின் முதற்கால்**
**கோலமாம் மானி நிபுணனாம் வசியன்**
**குணமுளன் புத்திமான் காமி**
**கூறிய தருமன் சாத்திரம் உரைப்பன்**
**குலவிய பரணிகால் இரண்டாம்**
**சாலவுங் கோபி உருட்சிஆம் கண்ணன்**
**தன்னியன் மானிசந் தோஷி**
**சற்குணன் நெடியோன் ஆகும்மூன் றாங்கால்**
**சாற்றிய பரணிஆம் அதன்மேல்**
**தூலதே கத்தன் கோபியாம் அரசர்**
**துன்னுசே வகத்துவம் உள்ளான்**
**துர்ச்சனன் கருவி ஆகுமே பரணி**
**தோன்றுநாற் காலினில் சொல்லே. (44)**

*(சுவடி எண். 1104, ஜாதகாலங்காரம், திருத்த வடிவம்)*

1. பரணி நட்சத்திரம் முதல் பாதத்தில் பிறந்தவன், சிவந்த சரீரமுள்ளவன், அதிக பலவான், நீதிமான், பகைவர்களை வெல்லும் சிங்கமாக இருப்பவன். சிவப்பு நிற ரோமம் உள்ளவன். செம்பட்டை தலைமயிர் உள்ளவன்.

2. பரணி நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன், சிறந்த மானஸ்த்தன், கல்வியில் பெரியவன், சோம்பேறி, நற்குணம் உள்ளவன். அறிவாளி, சிற்றின்பப்பிரியன், தருமம் செய்பவன். சாஸ்திரம் அறிந்தவன் என்பதாம்.

3. பரணி மூன்றாம் பாதத்தில் பிறந்தவன், முன்கோபம் உள்ளவன். உருண்ட வட்ட விழிகள் உள்ளவன். தனவான், மானமுடையவன், மனமகிழ்ச்சி உள்ளவன். குணசாலி, நெட்டையான உருவமுள்ளவன்.

4. பரணி நான்காம் பாதத்தில் பிறந்தவன், பருமனான உடல் உள்ளவன். கோபம் உள்ளவன். அரசாங்க பதவி வகிப்பவன், துஷ்டர்கள் சினேகம் உள்ளவன் என்பதாம்.

**பரணி நட்சத்திரம் முதல் பாத பலன்-பரணி பாதவாரி தனிப்பலன்**

**நீளிய செல்வன் சால நீதிமான் இனியன் புண்யன்**
**மாளிகை மனையில் வாழ்வான் மன்னரால் மகிழ்ச்சி உண்டாம்**
**வாள்எனும் கண்ணாள் அன்பன் வலக்கையில் மருவு முண்டாம்**
**காளிசேர் வடிவ னாகும் கதிரவன் காலி னானே.(45)** *(சுவடி எண்.722)*

நிறைந்த செல்வமுள்ளவன், நீதிமான், இனியவன், புண்ணியம் செய்பவன், மாளிகை போன்ற வீட்டில் வாழ்பவன். அரசாங்கத்தால் மகிழ்ச்சி உண்டு. வாள் போன்ற கண்ணுடைய அழகிய மனைவி உடையவன். வலக்கையில் மரு உண்டு. காளியைப் போன்று உக்கிரமான வடிவமுடைவன். இது பரணி முதற்காலில் பிறந்த சூரிய அங்கிசத்தில் பிறந்தவன் பலனாகும்.

**மற்ற நூல்கள்**

பரணி முதல் பாதத்தில் பிறந்தவன் சிவப்பு நிறமுள்ளவன். பராக்கிரமம் உள்ளவன். சொன்ன சொற்படி நடப்பவன். இவன் தியாகி.இதற்கு அம்சாதிபன் சூரியன், இதனால் சாத்வீகமும் தியாகமும் ஏற்படுகிறது. (சாரதீபம்)

இவன் தன் அதிகாரத்தின் வலுவால் சுகமாக வாழ்பவன். பிறருக்கு அறிவுரைப்பான். ஆனால் பிறர் யோசனையை இவன் ஏற்கமாட்டான். சுகபோக வாழ்க்கையில் பிரியன் சமர்த்தன்.

## இனி இந்த நட்சத்திர பாதத்தில் கோள்கள் நின்ற பலன் பரணி முதற்காலில்

**சூரியன் நின்றால்:** மெத்தப்படித்தவன். ஜோதிடக்கலை நிபுணன். பெயரும் புகழும் உள்ளவன். குணமுள்ளவன். கவர்ச்சியானவன். நன்னடத்தையுள்ளவன். கண்களில் காயம் அல்லது புரை(Catract) ஏற்படும். மருத்துவம், சட்டம், விலங்கு, மருத்துவம் இவற்றில் ஒன்றில் பயிற்சி உள்ளவன்.

**சந்திரன் நின்றால்:** இவன் செல்வந்தன். தன் சகோதர சகோதரிகளால் மிகவும் மதிக்கப்படுபவன். வாகனாதி யோகம் உள்ளவன். முன்யோசனையற்ற அவசர முதலீடு செய்வதால் தன் செல்வத்தை இழப்பவன். இவன் இன்றைய தேவையை மட்டும்தான் திட்டமிடுவான். வருங்கால திட்டம் இவனிடம் கிடையாது.

**செவ்வாய் நின்றால்:** ஆயுள் 50 வரை தான் இருக்கலாம். சாதாரண நோயால் வெளிநாட்டில் மரணம் நேரும். கூர்மையான ஆயுதங்களைப் பயன்படுத்துவதில் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். வாகனங்களை தானே ஒட்டக்கூடாது.

**புதன் நின்றால்:** ஆயுள் மத்திமம் தான். குழந்தைப் பருவத்தில் பாலாரிஷ்டம் உண்டு. இதைத் தாண்டிப் பிழைத்தால் இவன் ஆயுள் மிகவும் நீண்டதாக இருக்கும். பல நூல்கள் எழுதுவதில் இவன் ஈடுபடுவான். கட்டடக் குத்தகை (கான்ராக்டர்)யால் சம்பாதிப்பான் அல்லது பொறியாள ராகவும் இருக்கலாம்.

**குரு நின்றால்:** உண்மையானவன். சிறந்த பேச்சாளன். தந்தையிடம் அதிக பாசம் உண்டு. பிறர் இவனைக் கடவுளாக மதிப்பார்கள். ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியுண்டு. தொழிற்சாலை தலைவராகவோ வங்கி அதிகாரியாகவோ பணி செய்வான். மூளை சம்பந்தமான நோய்கள் காணலாம். இந்த வகையில் விழிப்பு தேவை.

**சுக்கிரன் நின்றால்:** உயர்ந்த சங்கீத வித்துவான். பாடகன். குறைவாகவே உண்பவன். எல்லோரும் இவனை விரும்புவர். புகை, குடிப்பழக்கம் அதிகம், கண்ணுக்கு மேல் நெற்றியில் காயம் ஏற்படும். விளையாட்டுப் போட்டிகளில் (Sports) வித்தகன், சுகபோக விருப்பமுள்ளவன். சங்கீதக் கருவிகள் (வாத்தியங்கள்) விற்பனை மற்றும் எவையானாலும் இவனுக்குச் சாம்பத்தியம் உண்டு.

**சனி நின்றால்:** சமய மத விஷயங்களில் ஆராய்ச்சி உள்ளவன். இதனால் அதிக சம்பாத்தியம் உண்டு. இவன் அறிவாளி. பல பெரிய அந்தஸ்துள்ளவர்களால் மதிக்கப் படுபவன். நயமாகப் பேசுபவன். தலையில் காயத்தால் வடு ஏற்படும். மூளை அறுவை ஏற்படும். அதிக தலைவலி ஏற்படும்.

**ராகு நின்றால்:** மிகவும் பலவான். மிகவும் பிரசித்தி அடைவான். கௌரவம், மரியாதை, அந்தஸ்து இவனை வந்தடையும். இவன் பணம் நிறைய சம்பாதிப்பான். ஆனால் இறக்கும்போது ஏழையாகிவிடுவான். (வழக்காடல் முதலியவற்றால், நாய்க்கடி, காய்ச்சல் முதலிய நோய்கள் காணலாம்.)

**கேது நின்றால்:** இவன் மிகவும் சொகுசாக வாழ்வான். இவனுக்கு ஆயுள் தாயம் சரி இல்லை என்றால் 20 வயதில் அற்பாயுள் சம்பவிக்கலாம்.

### *இனி இந்த முதற்காலுக்கு காலச்சக்கரதசை வருமாறு*

| | |
|---|---|
| *விருச்சிக செவ்வாய் தசை* | *7 வருஷம்* |
| *துலா சுக்கிர தசை* | *16 வருஷம்* |
| *கன்னி புதன் தசை* | *9 வருஷம்* |
| *கடக சந்திரன் தசை* | *21 வருஷம்* |
| *சிங்க ஆதித்தன் தசை* | *5 வருஷம்* |
| *மிதுன புதன் தசை* | *9 வருஷம்* |
| *ரிஷப சுக்கிர தசை* | *16 வருஷம்* |

| | |
|---|---|
| மேஷ செவ்வாய் தசை | 7 வருஷம் |
| மீன குரு தசை | 10 வருஷம் |
| ஆக பரமாயுள் | 100 வருஷம் |

## *பரணி இரண்டாம் பாதப்பலன்*

**மந்திர மறைகள் கற்கும் மாதரால் மகிழ்ச்சி யுண்டாம்**
**சுந்தரப் பலன்கள் தோன்றும் தோன்றிலத் திசையும் தோன்றும்**
**அந்தமில் பொய்கள் சொல்வான் அரும் பொருள் நெருங்க வாழ்வான்**
**புத்தியிற் பெரிய னாகும் புதினங் கிஷத்தி னானே. (46)** *(சுவடிஎண். 1500)*

பரணி 2ம் பாதத்தில் பிறந்தவன் நவாம்சம் புதனுடையது. இதில் பிறந்தவன் மந்திர சாத்திரம் வேதம் இவை கற்பான். இவனுக்கு பெண்களால் அதிக சுகமுண்டு. இவனுக்குப் பிறரைப் பற்றி அழகான பலன் சொல்லத் தோன்றும்(சோதிடம் கற்பான்).எல்லாத் திக்கும் புகழ் பெற்று வாழ்வான். பொய் சொல்லாதவன். நிறைய செல்வம் கொழிக்க வாழ்வான். நிறைந்த புத்திசாலியாகி அறிவாளிகளில் பெரியவனாக இருப்பான் என்பதாம்.

புதனின் நவாம்சமானதால் சோதிடனாகவும், புத்திசாலியாகவும் இருப்பான் என்று கூறப்பட்டது.

### மற்ற நூல்கள்

**ஜாதகசார தீபம்**: த்விதீயே தனவான் சுகீ. பரணி 2ம்பாதத்தில் பிறந்தவன் தனவானாகவும், வாழ்க்கையில் எந்த கஷ்டமுமற்ற சுகமனுபவிப்பவனாகவும் இருப்பான். இவன் சிக்கனக்காரன். அற்ப சந்ததி உள்ளவன். மனைவி மக்களுடன் மகிழ்ச்சியுடன் இருப்பான். இவன் மானமுள்ளவன். நிபுணன். சோம்பல் உள்ளவன். நல்ல குணவான். இவன் நவாம்சாதிபதி புதன். இதனால் பரணியின் அதிபன் சுக்கிரன் தன்மையும் சேர்ந்தது. இவன் எழுத்தாளனாகவும் கற்பனாசக்தியால் பல படைப்புகள் படைப்பவனாகவும் இருப்பான். கொஞ்சம் கோழை.

## *பரணி இரண்டாம்பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இவன் குடும்ப வாழ்க்கை மிகவும் திருப்தியாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும். தன் பெண்கள் பிள்ளைகள் மூலம் நல்ல உதவி சுகம் அனுபவிப்பான்.

**சந்திரன் நின்றால்:** பெரும்பாலான வயது காலம் மகிழ்ச்சியாக இருப்பான். இவன் தன் தாய்வழிப் பாட்டன் மூலம் பணம் பெறுவான். நல்ல கல்வி உண்டு. நிறைய படித்தவர்களுடன் பழகும் வாய்ப்புண்டு.

**செவ்வாய் நின்றால்:** பலஹீனமான உடல் உள்ளவன். வெண்புள்ளி நோய் காணலாம். தோல் நோய்கள் வரலாம். இருப்பினும் இவன் வெகு அறிவாளி. கடின உழைப்பாளி. கல்வியில் கௌரவப்பட்டம் முதலியவை கிடைக்கும். பல பெண்களிடம் தொடர்புள்ளவன். இதனால் பலவித பால்வினை நோய்கள் காணும்.விளையாட்டு வீரனாகவும். எவர்சில்வர் வியாபாரம் முதலியவற்றாலும் சம்பாத்தியம் உண்டு.

**புதன் நின்ற பலன்:** மத்தியமாயுள் 50 முதல் 60 வரை உள்ளவன். பல காரியங்களில் ஒரே சமயத்தில் ஈடுபட்டு எதிலும் பயன், வெற்றி அடையமாட்டான். தகப்பனுடன் ஐக்கியம் கிடையாது. பிறரிடம் பாசமுடன் நடப்பவன். தன்னை அண்டியவர்களுக்கு முடிந்த உதவியைச் செய்வான்.

**குரு நின்ற பலன் :** நிறைய குழந்தைச் செல்வம் மற்றும் பேரப்பிள்ளைகளும் உண்டு. 55 வயது வரை மத்யமாயுள். கொலை, கொள்ளை போன்றவற்றில் வழக்கறிஞானம் திறமை உண்டு. சமயப்பற்றுள்ளவன். பண்ணை, பயிர், நிலம், வீடு விற்பனை போன்றவற்றால் சம்பாதிப்பவன்.

**சுக்கிரன் நின்ற பலன்:** பிற பெண்கள் பின்னால் அலைந்து திரிபவன். இவன் ஜனன உறுப்பு நோயால் பாதிக்கப்படுவான். கண் பார்வை குறைவு. பிள்ளைப்பேறு

மருத்துவம் செய்வதால் ஆதாயம் உண்டு. கண்களுக்கு மேல் புருவம் அல்லது நெற்றியில் காயம் ஏற்படும்.

**சனி நின்றால்:** மிகவும் உயர்ந்த அறிவாளி. எந்தக் காரியத்திலும் நிலைத்த ஈடுபாடு கிடையாது. அரசு மந்திரி முதலியவர்களுடன் தொடர்புண்டு. பொதுவாக வாழ்க்கை மகிழ்ச்சியாக, சுகமாக இருக்கும். இந்தப் பெண்களுக்கு மாதவிலக்குக் கோளாறுகள் முதலியவை ஏற்படலாம். கட்டிகள், மயக்கம், கடும் காய்ச்சல் போன்ற நோய்கள் காணலாம்.

**கேது நின்றால்:** 63 வயது வரை வாழ்பவன். நீர் சம்பந்தமான நோய்கள் காணும். தலையில் அடிபடலாம். காக்காய் வலிப்பு போன்ற நோய்கள் ஏற்படலாம். மூளை இரத்த அழுத்தம் ஏற்படலாம். போலீஸ் துறையில் உத்தியோகம் ஏற்படலாம். கண்ணில் புரை மற்றும் மங்கல் போன்ற நோய்கள் காணலாம்.

**ராகு நின்றால்:** அந்தஸ்து, மதிப்பு, முதலியவை ஏற்படும். இவன் சேர்த்த பணத்தை அவ்வளவாக செலவழிக்க மாட்டான். மோட்டார், ஸ்கூட்டர், கார் முதலிய வாகனம் பழுது பார்த்தல் போன்றவற்றாலும் சம்பாத்தியம் உண்டு. வெண்புள்ளிகள் குஷ்டம் (தொழுநோய்) முதலியவை ஏற்படலாம். கசாப்புத் தொழிலாலும் சம்பாதிக்க நேரலாம்.

**இனி இந்த இரண்டாம் பாதத்திற்குக் காலச்சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| 1. கும்ப சனி தசை | 4 வருஷம் |
| 2. மகர சனி தசை | 4 வருஷம் |
| 3. தனுசு குரு தசை | 10 வருஷம் |
| 4. மேஷச்செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 5. ரிஷப சுக்கிர தசை | 16 வருஷம் |
| 6. மிதுன புதன் தசை | 9 வருஷம் |
| 7. கடக சந்திர தசை | 21 வருஷம் |

| | |
|---|---|
| 8. சிம்ம சூரியன் தசை | 5 வருஷம் |
| 9. கன்னி புதன் தசை | 9 வருஷம் |
| ஆக பரமாயுள் | 85 வருஷம் |

## *பரணி மூன்றாம் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்*

**மார்பகன் றுயர்ந்த மெய்யன் மதிமுகம் மறுஉண் டாகும்**
**சீர்தரும் உண்டி பேணும் செய்தருங் கொடுங்கண் ணாளன்**
**ஆதர வுடையன் மண்மேல் அறிவுடன் கல்வி கற்பன்**
**சார்வது மாதர் தன்பால் தரும்புகர் காலி னாளே. (47)**

*(சுவடி எண். 1500)*

பரணி 3ம் கால் துலாம் நவாம்சம். எனவே இவன் புகர் (சுக்கிரன்) காலினான் என்று சொல்லப்பட்டது. இவனுக்கு மார்பு அகன்று உயர்ந்திருக்கும். வகை வகையாக உணவை விரும்புவான். அறிவுடன் திறனாகக் கல்வி கற்பான். பலருடைய ஆதரவையும் இவன் பெற்றிருப்பான். சிவந்த கண்ணை உடையவன். அன்னை, தாய் மேல் அதிகம் பாசம் வைப்பான். இப்படிப்பட்டவனே பரணி 3 ம் காலில் பிறந்தவன் என்பதாம்.

**மற்ற நூல்கள்**

"த்ருதீயே க்ரூர கர்மீ" சாரதீபம். 3ம் பாதத்தில் பிறந்தவன் கொடுஞ்செயல்கள் புரிபவனாக இருப்பான். இந்த பாசத்தின் நவாம்சாதிபன் சுக்கிரன். நட்சத்திரத்திலிருக்கும் சந்திரன் இவனுடைய பகைவன். அதனால் குரூர கர்மம் செய்பவன் என்று சொல்லப்பட்டது. இவன் பலரையும் வைத்துக் காக்கும் தனவானாகவும் இருப்பான். பிறர் மெச்ச மகிழப் பேசுபவன். எப்பொழுதும் ஊக்கத்துடனும் மகிழ்ச்சியாகவும் இருப்பான்.

இவன் சுபாவமாக கோபம் கொள்பவன். வட்டமான கண்கள் உள்ளவன்.

இவனுக்கு அமைதியான மனப்பான்மை உண்டு. பரோபகாரன்.

## இனி இந்த நட்சத்திரக் காலில் கோள்கள் நின்ற பலன்
## பரணி மூன்றாம் காலில்

**சூரியன் நின்றால்:** அதிக பணம் இருக்கலாம். ஆனால் பணத்தோடு சொத்துக்களையும் இழப்பான். தலையில் அடிபடக்கூடும். வக்கீல் , மருத்துவர் அல்லது நீதிபதியாக பணிபுரியலாம். ஆனால் எந்தத் துறையிலும் முழுவெற்றி கிடைக்காது. செவ்வாய் இந்த பாதத்தைப் பார்த்தால் கட்டடத்தொழில் மூலம் வருமானமும், வெற்றியும் உண்டு. மிகவும் முரடன், கோபி, அவசர புத்திக்காரன், சண்டைக்காரன்.

**சந்திரன் நின்றால்:** இவனுக்கு 2 மனைவிகள் இருக்கலாம். பிறரால் உயர்வாக மதிக்கப்படுவான். இவனைப் பலரும் விரும்புவர். இவன் ஏழைகளுக்கு உதவுபவன். பட்டு, பஞ்சு, உரத்தொழில் ஓட்டல் தொழில் போன்றவற்றின் மூலம் சம்பாத்தியம் உண்டு.

**செவ்வாய் நின்ற பலன்:** இது அசுப பலனே தருவதாகும். 50 வயது வரை கஷ்டப்பட வேண்டிவரும். அதுவரை பிறரிடம் கையேந்திக் கூடப் பிழைக்க வேண்டி வரலாம். இதன் பின் மிகவும் நல்ல காலம். 84 வயது வரை மிகவும் சுகமாக வாழ்வான். சினிமாக் கொட்டகை, படப்பிடிப்புக் கூடம் போன்ற வகையில் இந்தக் காலத்தில் சம்பாதிப்பவன்.

**புதன் நின்றால்:** அதிக ஆயுள் வாழ்பவன். மிகவும் புத்தி கூர்மையுள்ளவன். இவன் மனைவி இவனுக்குத் தெய்வம் கொடுத்த வரம் போல மிகவும் உத்தம மானவளாகவும். இவனைப் பேணிப் பாதுகாப்பவளாகவும், குணவதியாகவும் இருப்பாள். பொறியியல் துறை (Engineer) அல்லது கட்டுமானத் தொழில் (கான்ராக்டர்) மூலமாகவோ சம்பாத்தியம் இருக்கும்.

**குரு நின்றால்:** அதிகமாகப் பயணங்கள் செய்வான், 32வயதுக்கு மேல் வாழ்க்கை சந்தோஷமாக அமையும்.

சுகபோக ஈடுபாடு அதிகம் உண்டு. பலவகை விபத்துக்கள் நேரும். ஆனால் எப்படியோ தப்பித்துக்கொள்வான். எந்தவிதத் தேர்விலும் படித்து வெற்றி பெறுவான். சட்டம், நகை வியாபாரம், விளையாட்டுப் போட்டித் தொழில் (Sports) முதலியவை மூலம் சம்பாதிப்பான்.

**சுக்கிரன் நின்றால்:** பருத்தும், குட்டையானதுமான உருவம் உள்ளவன். இவன் மனைவி மிகவும் அழகாக இருப்பாள். கடைசி வரை தொழில், கடமை செய்பவன். கண்களுக்கு அருகில் அடிபட நேரிடலாம். விளம்பரம், செய்தி பரப்புத்துறை முதலியவற்றால் சம்பாதிப்பான்.

**சனி நின்றால்:** பிறரை நம்பியே வாழவேண்டிய வாழ்க்கை. பெற்றோராலன்றிப் பிறரால் வளர்க்கப்படுபவன். இரண்டு தகப்பன் அல்லது இரண்டு தாய்கள் இருக்கல்ாம். பெற்றவர் வளர்த்தவர். இளம் வயதில் பெற்றோர் ஒருவரையோ, அல்லது இருவரையுமே இழக்கக்கூடும்.

**ராகு நின்றால்:** புகழ் பெற்ற கவிஞன் அல்லது நூலாசிரியனாவான். ஆனால் அடிப்படை படிப்பு அதிகம் இராது. இருந்தும் கற்ற பெரியோர் மத்தியில் கௌரவமாகப் பேசிப் பழகுவான். காவல் அல்லது பாதுகாப்புத் துறையில் பணிபுரிபவனாகவும் இருப்பான்.

**கேது இருந்தால்:** பெரிய யோக்கியவான். நோயாளி களைத் தன் பிரார்த்தனை சக்தியால் குணப்படுத்தும் பெரியவனாகவும் இருப்பான். குரு ஆயில்யத்தில் இருந்தால் இவன் தன்னைக் கடவுளின் அவதாரமாகவே எண்ணிக்கொள்வான். அப்படியே பிரபலப்படுத்துவான். மூலிகை ஏற்றுமதி, கிழங்குகள் வாணிபம் முதலியவற்றால் சம்பாதிப்பான்.

## பரணி நட்சத்திர மூன்றாம் பாத காலச்சக்கர தசை விவரம் வருமாறு

| | |
|---|---|
| 1. துலா சுக்கிர தசை | 16 வருஷம் |
| 2. விருச்சிக செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 3. தனுசு குரு தசை | 10 வருஷம் |
| 4. மகர சனி தசை | 4 வருஷம் |
| 5. கும்ப சனி தசை | 4 வருஷம் |
| 6. மீன குரு தசை | 10 வருஷம் |
| 7. விருச்சிக செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 8. துலாம் சுக்ரன் தசை | 16 வருஷம் |
| 9. கன்னி புதன் தசை | 9 வருஷம் |
| ஆக பரமாயுள் | 83 வருஷம் |

## *பரணி நான்காம் பாதம் விருச்சிக அங்கிஷத்தில் பிறந்தவன் பலன்*

பரணி நான்காம் பாதம் விருச்சிக நவாம்சம் ஆகும். இதனால் இப்படிச் சொல்லப்படும்.

பட்டய மணிந்த தோளான் படைக்கெலாம் தலைவ னாகும்
வெட்டெனப் பேச வல்லான் வெகுளிமுன் னுடைய னாகும்
சிட்டரைச் சேர்ந்து வாழும் சிறுகுடி அழக னாகும்
மெட்டிசைக் கினிய னாகும் மேதினியங் கிசத்தி னானே. (48)

(சுவடி எண். 1500)

பரணி நான்காம் காலான மேதினி எனப்படும் செவ்வாயான (மேதினி-பூமி-பூமிகாரன் (செவ்வாய்). இதனால் செவ்வாய் மேதினி எனப்பட்டான்) விருச்சிக அங்கிஷத்தில் பிறந்தவன் வீரப்பட்டயம் அணிந்த தோளினை உடையவன். (இக்காலத்தில் படையினர் சொக்காயில், கையின் மேல் பக்கம் இக்குறியீடுகள் (Cross) என்பவை போடப்படுவதும் இது போலத்தான்) இவன் படைக்காவல் துறையில் பணியில் சேர்ந்து அதற்குத் தலைவனாகவும் இருப்பான். நறுக்குத் தெறித்தால் போல் பேச வல்லவன்.

இவனுக்குக் கோபம் முன்னால் துரத்திக்கொண்டு வரும். நல்ல சிறந்த சிறிய குடும்பத்தைச் சார்ந்தவன். இவன் உருவத்தால் அழகன். மெட்டு வைத்துப்பாடும் இசைத் துறையில் தேர்ந்தவன் என்று பொருளாகும்.

**பிற நூல்கள்**

"சதுர்த்தே சௌதரித்ர பாக் " (சாரதீபம்) பரணி 4ம் காலில் பிறந்தவன் வறுமையுள்ளவனாக இருப்பான். செவ்வாய் காலாக நட்சத்திராதிபன் சுக்கிரன் ஆனதால் தரித்திரம் ஆயிற்று.

இவன் கல்வியில்லாதவன், மனஸ்தாபம் கொள்பவன், சதா துக்கமுள்ளவன். ரோகியும் ஆவான். பெருமை நன்றி மறத்தல் முதலிய குணங்கள் காணப்படும். அலங்காரப் பிரியன். எந்தக் காரியத்தையும் உறுதியுடன் நிறைவேற்ற மாட்டான். நிறைய சந்ததி உள்ளவன். துட்ட சகவாசம் உண்டு.

***குறிப்பு:*** தமிழ்ப்பாடல் நல்ல பலனைக் கூறுகிறது. மற்ற நூல்கள் கெட்ட பலன்களைக் கூறுகின்றன. ஆனால் பரணிக்கு அதிபன் முழுச் சுபன் சுக்கிரன்.

நான்காம்பாத அம்சாதிபன் செவ்வாய். எனவே சுக்கிரனின் நளினம், அழகு, செல்வம் இவற்றுடன் செவ்வாயின் உக்கிரம், உடைத்திறன், தலைமை இரண்டு ஒருங்கிணைந்த சுப பலன்தான் பொருத்தமாகக் காணப் படுகிறது என்ற தமிழ் நூல் கருத்து உயர்ந்ததைக் காண்க.

## *பரணி நான்காம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இளமைப் பருவத்தில் மிகவும் கஷ்டப்படுவான். தந்தை இளமையில் தவறலாம். மற்றகோள்கள் நன்கு அமையவில்லை என்றால் இவன் பிச்சை எடுக்கவும் நேரிடலாம். ஒரு கோள் மட்டுமாவது நன்கு அமைந்தால் இவனுக்கு நல்ல வாழ்வும் உதவியும் அமையும்.

**சந்திரன் நின்றால்:** நடத்தை சந்தேகத்துக்குட்பட்ட தாகும். கெட்ட எண்ணம் செயல் உள்ளவன். ஏதாவது அறுவை சிகிச்சை செய்துகொள்ள வேண்டிவரும். கடல் கப்பல் அது சம்பந்தமான தொழில்கள் அமையலாம்.

**செவ்வாய் நின்றால்:** இவன் தன் நாட்டில் மிக உயர்ந்த பதவி வகிப்பான். இவனுக்கு பல வெளிநாட்டுப் பயணங்கள் அமையும். அவற்றில் எச்சரிக்கை தேவை. ஏதாவது வெளிநாட்டுப் பயண விபத்தில் உயிரிழக்க நேரலாம். இவன் சிறந்த மருத்துவனாகவும் இருப்பான். அதே சமயத்தில் பெண்கள் தொடர்பால் கொடிய பால்வினை நோய்களும் ஏற்படலாம்.

**புதன் நின்றால்:** இவன் ஒரு அரசு உத்தியோகஸ்தன். இவனுக்கு அறுவை சிகிச்சையால் வடு ஏற்படும். 45 வயது வரை வாழ்க்கை சுகமாக ஓடும். அதன் பின் சாதாரண காலம், பொறியாளனாகவும் வேலை இருக்கலாம். காக்கை வலிப்பு முதலிய நோய்கள் காணலாம்.

**குரு நின்றால்:** பெரும்பாலும் பயிர்த்தொழில் மூலம் சம்பாத்தியம், பயணத்தொழிலில் வல்லவன். (Travel Agent) இவனுக்கு மந்திர சித்தி உண்டு.

**சுக்கிரன் நின்றால்:** பெரும்பாலும இவன் வெளிநாடுகளில் வசிப்பவன். சமய சாஸ்திரங்கள் படிப்பவன். புத்தகப்பிரியன். இவன் கோயில் அர்ச்சகனாகப் பணி செய்து அதனால் வரும் நிவேதன அன்னத்தால் வாழ்பவன். பெரும்பாலும் இவன் வயிற்றுப் பிழைப்பே கோயிலில்தான் நடக்கலாம்.

**சனி நின்றால்:** இவன் 35 வயது வரை பிறரிடம் கையேந்திப் பிழைப்பான். இளமையில் பெற்றோரை இழப்பதாலும் பிறரால் தத்து எடுத்துக்கொள்ளப்படுவதாலும் இப்படி நேரலாம். அதன் பின் காவல் அல்லது படைத் துறையில் சேர்ந்து முன்னேறுவான். இவனைச் செவ்வாய் பார்த்தால் பயங்கரவாதியாக நேரலாம்.

**ராகு நின்றால்:** பால் காரணாகவும், பால் பண்ணைத் தொழிலாலும் ஜீவனம். பிறருக்கு மிகவும் உதவுபவன் இவன் மனைவியுடன் ஒற்றுமை குறைவு.

**கேது நின்றால்:** நல்ல நீண்ட ஆயுள் உண்டு. கட்டடத் தொழில் குத்தகை, கலைத்திறன் இவற்றால் சம்பாத்தியம் உண்டு. பெரிய மாளிகை எஸ்டேட் சொந்தக்காரன். இசையிலும் நுண்கலையிலும் தேர்ச்சி உண்டு. வெண்புள்ளிகள் பால்வினை நோய், கண் நோய் முதலியவை ஏற்படலாம்.

**இனி இந்தப் பரணி நான்காம் காலுக்குக் காலச்சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| 1. கடக சந்திரன் தசை | 21 வருஷம் |
| 2. சிம்ம சூரியன் தசை | 5 வருஷம் |
| 3. மிதுன புதன் தசை | 9 வருஷம் |
| 4. ரிஷப சுக்கிரன் தசை | 16 வருஷம் |
| 5. மேஷச்செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 6. மீன குரு தசை | 10 வருஷம் |
| 7. கும்பசனி தசை | 4 வருஷம் |
| 8. மகர சனி தசை | 4 வருஷம் |
| 9. தனுசு குரு தசை | 10 வருஷம் |
| ஆக பரமாயுள் | 86 வருஷம் |

***கர்ம விபாகம்*** *(பரணியின் கர்ம விபாகம்)*

## பரணி நட்சத்திரம் முதல் பாத கர்ம விபாகம்

பரணி முதல் காலில் முற்பிறவியில் மிகவும் அழகன். அந்தண குலத்தில் பிறந்தவன். அப்போது ஒரு முதிய அந்தண மாதிடம் பணம் கடன் வாங்கினான். திருப்பித்தரவில்லை. அவன் இறந்தான். இவன் தன் பாவத்திற்குரிய தண்டனை எல்லாம் அனுபவித்தபின் இப்பிறவியில் தனவந்தனாகப் பிறந்தான். கடன் கொடுத்த அந்தண மாது இப்பிறவியில் பெண்ணாகப் பிறந்தாள். அவனுக்குத் திருமணம் செய்து வைத்தாள். ஆனால் குழந்தை எதுமின்றி விதவையானாள்.

**இவன் கீழ்கண்ட பிராயச்சித்தம் செய்தால் இத்தொல்லை நேராது.**

ஒரு லட்சம் சூரிய மந்திரம் ஜபம் செய்ய வேண்டும். பின் பார்க்கவ பூஜை செய்யவேண்டும். ஹோமம் முடித்து 100அந்தணர்களுக்குப் பால் இனிப்புடன் உணவு படைக்க வேண்டும். இதனால் நிம்மதி உண்டாகும்.

அதாவது பரணி முதல் பாதக்காரர்கள் தங்கள் கஷ்டங்களுக்கு சூரிய மந்திர ஜபமும் வழிபாடும் செய்யவேண்டும்.

**பரணி நட்சத்திர இரண்டாம் பாத கர்ம விபாகம்**

முற்பிறவியில் இவன் அந்தணன். ஆனால் திருடுவதே தொழிலாகக் கொண்டவன். இவன் மனைவி பதிவிரதை. இவனோ குல ஒழுக்கம் துறந்த குடிகாரன். ஒரு சமயம் இவனிடம் பசியுடன் வந்த ஏழை அந்தணனைத்திட்டி அனுப்பிவிட்டான். அது தாளாத அவன் தற்கொலை செய்துகொண்டான். அடுத்த பிறவியில் அந்தணனைப் பசியுடன் விரட்டிய பாவத்தால் இவனுக்குத் தொழுநோய் வந்தது.

இந்த பாவம் தீர இவன் முறைப்படி ஒரு லட்சம் தடவை காயத்திரி ஜபம் பண்ண வேண்டும். அதன்பின் ஹோமம், அந்தணர்களுக்கு உணவு அளித்தல் முதலியவை செய்ய வேண்டும். கபில நிற பசு ஒன்றை (காராம் பசு) ஞானியான அந்தணனுக்குத் தானம் செய்யவேண்டும். இதனால் இவன் நோய் தீரும்.

அதாவது பரணி 2ம் பாதக்காரர்கள் தங்கள் கஷ்டங்கள் தீர லட்சம் முறை காயத்திரி ஜபமும் ஹோமம், தர்ப்பணம் முதலியவையும் செய்வதே பரிஹாரமாம்.

### பரணி மூன்றாம் பாதக்காரனின் கர்ம விபாகம்

முற்பிறவியில் இவன் செல்வந்தனான வியாபாரி, வெல்லம் முதலிய இனிப்புப் பொருள்கள் வியாபாரம் பண்ணி வந்தான். ஒருமுறை ஒரு எருதின் மேல் அது சுமக்க முடியாத அளவு வெல்லச்சுமையை ஏற்றிவிட்டான். அது தாளாமல் அது இறந்துவிட்டது.

தன் புண்ணிய பலன் அனுபவித்த பின் இவன் பணக்கார குடும்பத்தில் பிறந்தான். முன் செய்த பாவத்தால் இவனுக்கு சந்ததி ஏற்படவில்லை. பெண் குழந்தை பிறந்தது நோயாளிதான்.

இந்த பாவம் தொலைய இவன் 30 தோலா எடையுள்ள தங்கத்தாலான எருதை, நல்ல புண்ணியவானான அந்தணனுக்குத் தானம் செய்து லட்சம் முறை பஞ்சாட்சரம் ஜபம் பண்ணவேண்டும்.

அதாவது பரணி 3ம் பாதக்காரன் ஏழைகளுக்குப் பண உதவி ஏழைக்கன்னிகளுக்கு மாங்கல்ய தானம் செய்ய வேண்டும். லட்சம் முறை பஞ்சாட்சர ஜபம் செய்ய வேண்டும். இதனால் இவன் கஷ்டங்கள் தீரும் என்பதாம்.

### பரணி நான்காம் பாதக்காரனின் கர்ம விபாகம்

முற்பிறவியில் இவன் அந்தணன். ஆனால் தன் குல ஒழுக்கம் விட்டு வேடனாகி மிருகவேட்டை வதை செய்தல், குடித்தல் போன்ற ஈன, காரியங்களே செய்தான். இவன் மனைவியும் ஒழுக்கம் கெட்டு குடி, விபசாரம் இவற்றில் ஈடுபட்டாள். இருவரும் இறந்தனர்.

பாவத்தால் “குப்பீபாகம் ” என்ற நரகவேதனை அனுபவித்து கழுதை பன்றி போன்ற பல பிறவிகளுக்குப்பின் மீண்டும் மானிடப் பிறவி உண்டாயிற்று. இப்பிறவியில் இவனுக்குக் குழந்தைகள் இறந்தே பிறந்தன. எனவே சந்ததி

இல்லை. இது முற்பிறவி தீவினைப்பயனே. இவனும் அடிக்கடி காய்ச்சல் நோயாளியானான்.

இப்பாவம் தீர இவன் சந்தான கோபால மந்திரம் ஒரு லட்சம் முறை ஜபம் பண்ண வேண்டும். தங்கத்தில் கன்றுடன் பசுவையும், வெள்ளியில் ஐந்து பறவைகளையும் செய்து நல்ல அந்தணர்களுக்குத் தானம் பண்ணவேண்டும். அஸ்வத்த மர பூஜை பிரதட்சணம் செய்யவேண்டும். இப்படிச் செய்தால் இவன் நோய் நீங்கப்பெறுவான். குழந்தைகளும் நல்லபடி உண்டாகும்.

அதாவது பரணி 4ம் பாதக்காரன் பொதுவாக சந்தான கோபால மந்திர ஜபம் செய்து தான தர்மம் பண்ணினால் கஷ்டங்கள் நீங்கப்பெறுவான் என்பதாம்.



## அத்தியாயம் - 3

# கார்த்திகை நட்சத்திர பலன்கள்

இது மூன்றாவது நட்சத்திரம். இராசி மண்டலத்தில் 26பாகை 40 கலை முதல் 40 பாகை வரை மேஷ ராசியில் முதல் பாதமும், ரிஷப ராசியில் மீதி மூன்று பாதங்களாகவும் பரவியுள்ளது. இதற்கு அதிதேவதை அக்கினியாம்.

| | |
|---|---|
| இந்தியப்பெயர்: | **கார்த்திகை** |
| கிரேக்கப்பெயர் | **தௌரி அல்லது அல்கையோன்** |
| சீனப்பெயர் | **மாவோ** |
| அரபுப்பெயர் | **அத்-தௌரியா** |

இது 6 நட்சத்திரங்களைக் கொண்டது. அம்பு முனை போன்று வடிவமுள்ளது. நெருப்பு சுடரைப்போன்றது.

**வார்த்தைகள் உடைய னாகும் வழக்கறிந் துரைக்க வல்லான்**
**கூத்து மனத்த னாகும் குணமுடைக் கிளைய னாகும்**
**போர்த்தொழில் வல்ல னாகும் புகழுடன் பொருளும் தேடும்**
**கார்த்திகை நாளில் தோன்றும் கருத்துடைக் காளை தானே.(49)**

கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தவன் நல்ல வாக்கு வன்மையுடையவன். வழக்குகளைச் சித்திரத் தெளிவாகப் பேசித் தீர்த்து வைப்பவன். (வக்கீல் தொழிலுடையவன்). நடனம் போன்ற கலைகளில் நாட்டமுள்ளவன். நல்ல குணமுள்ளவன். உறவினருக்கு அனுசரணையானவன். போர் புரிவதில் வல்லவன். (படை-போலீஸ் இவற்றில் தொழில் அமையலாம்) பொருள் பொன் இவற்றுடன் புகழையும் தேடி உயர்ந்து வாழ்பவன். தெளிந்த கருத்து சொல்லும் பண்புடையவன் என்பதாம்.

## சுவடிகளில் சொல்லிய மற்ற செய்திகள்

இப்பால் இன்னானுக்கு தெய்வம் அக்கினியாவான். பூதம்-பிரிதிவி. கோத்திரம்-அகத்தியம். சாதி-வேளாளன். யோனி - பெண் ஆடு. பட்சி - மயில், மரம் - அத்தி. கணம்-இராட்சசம். இராசி முதற்கால் மேஷம். மற்ற மூன்று கால்களும் ரிஷபம். வாரம் செவ்வாய். சூனியம்-சித்திரை மாதம் 2 முதல் 4ம் கால்வரை-வெள்ளிக்கிழமை. முதற்கால் சித்திரை மாதம்.சூனியமாம் மற்ற கால்களுக்கு வைகாசி மாதம் சூனியமாம். கார்த்திகை மாதம். முழுவதும் சூனியம்.

இந்த நட்சத்திரத்தில் நோய் காணில் 9 நாளில் நிவர்த்தி. இதற்கு நெய்யினால் ஓமம் பண்ணி பழமும் பணியாரமும், நைவேத்தியமும் பண்ண வேண்டியது. மூன்று நாளில் இதனால் தீரலாம். புதன்கிழமை கிருத்திகை கூடினால் அமிர்த யோகம். பஞ்சமி, வியாழன் கிருத்திகை கூடினால் விஷயோகமாகும். சனியும் நவமியுமானால் மரணயோகம். பிரதமையும் சஷ்டியும் கூடில் தத்து அல்லது நிவர்த்தி யோகமாம்.

இந்த நாளில் பிறந்தவன் வாய்ச்சாலகன். பசி பொரான். பல காரியங்களை முடிக்க வல்லவன். இராஜ பிரதவம் முள்ளவன். நன்றி மறவாதவன். தெய்வபக்தி உடையவன். சுகந்த பரிமளப் பிரியன். பெண்ணிச்சை அதிகமுள்ளவன். தாயை மறுத்துப் பேசாவதவன். இவன் மார்புக்கு மேலே மறுவுண்டு.கோபம் உண்டு. ஆனால் உடனே தணிந்து விடுவான்.

இந்த நட்சத்திரத்தில் செய்யத்தக்கவை. ஆடுமாடு வாங்கலாம். ஆயுதம் பிரயோகம் பண்ணவும், கடன் தீர்க்கவும் உகந்த நாள். இந்த நட்சத்திரத்தில் பெண் வயதுக்கு வந்தால், மலடியாவாள். இந்த நட்சத்திரத்தில் வருஷம் பிறந்தால் தானிய உற்பத்தி குறையும்.

இது கீழ்நோக்கு நாள். மஞ்சள் நிறம். இதில் பிரயாணம் செய்தால் தயிரை உட்கொண்டு செல்க. 30 நாழிகைக்கு மேல் 4 நாழி விஷகடிகை பரிகாரம், காயத்திரி மந்திரத்தால் 108 ஹோமம் பண்ணி, ததியோதனத்தாலும் ஓமம் பண்ண நல்லது. மந்திரம்-காயத்திரியே.

## பிறர் மத நூல்களில்

### உடலமைப்பு

நடுத்தர வடிவம். மூக்கு உயர்ந்திருக்கும். கண்ணில் கருணை உண்டு. கழுத்து பருத்திருக்கும். நல்ல கட்டான தேகம். அகன்ற தோள்கள். சதைப்பற்றுள்ள உடல் அமைதியானவன். பிறர் மதிக்கும்படி நடப்பவன். நல்ல தலைமை வகிக்கும் மிடுக்கான தோற்றம்.

### குணநலன்

கூர்ந்த அறிவாளி. ஆனால் நீடித்து செயல் புரியும் மனவலிமை குறைவு. அடிக்கடி சலிப்பு ஏற்பட்டு, முயற்சிகளை மாற்றிக்கொண்டே இருப்பவன். பிறருக்கு அறிவுரை கூறி அவர்கள் சிக்கல்களைத் தீர்த்து வைப்பதில் வல்லவன்.

சுய கௌரவம் பாதித்தால் எந்த நட்பையும் உதறித்தள்ளி விடுவான். புறம்பான முறையற்ற வழியில் பொருளீட்ட மாட்டான். பிறர் தயவில் பிழைக்க மனம் இடம் கொடாது. பொருளீட்டி சேமிக்கவும் வல்லவன். துணிந்த திட நம்பிக்கையுடன் காரியம் எதையும் சாதிக்கவல்லவன்.

பழமையில் வைதீக ஆசாரம் முதலியவற்றில் நம்பிக்கையுண்டு. ஆனால் மூட நம்பிக்கைகளுக்கு உடன்படான். பொது வாழ்க்கையில் ஈடுபடுவான். ஆனால் அதிக நாள் இது நீடிக்காது. வீணான பயனற்ற பயணங்களை அடிக்கடி மேற்கொள்வான்.

## கல்வி, தொழில் முதலியன

பெரும்பாலும் சொந்த ஊரில் இவனுக்குத் தொழில் அமையாது. வேறு ஊர்களிலும் வெளிநாடுகளிலும் பணி அமையலாம். பொறியியல், மருத்துவம் போன்ற தொழில்கள், கல்வி அமையலாம்.

ஜவுளி, மருந்துவகை வியாபாரமும் அமையலாம். அரசாங்கத்தால் உதவியுண்டு. தொழிலில் மிகவும் மந்தமாகச் செயல்படுவான். சில சமயம் இவனுக்கு பிறர் எழுதி வைத்த சொத்து சேரும் வாய்ப்புண்டு.

## குடும்ப வாழ்க்கை

பொதுவாக குடும்ப வாழ்க்கையில் சந்தோஷமே இருக்கலாம். வீட்டு நிருவாகம், நல்ல சமையல், அறிவு முதலியவற்றில் திறமையான அழகிய மனைவி அமையும். இவனிடம் மிகவும் கடமைப்பட்டவளாகவும் பாசமுள்ள வளாகவும் இருப்பாள்.

ஆனால் இவன் ஆரோக்கியம் அடிக்கடி பாதிக்கப்படும். பல்வேறு காரணங்களால் குடும்பத்திலிருந்து பிரிந்து வாழ வேண்டிவரும். குடும்பவாழ்வில் அதாவது வீட்டுக்குள் இவனுக்கு நல்ல அமைதி உண்டு.

உடன்பிறந்தவர்கள், தாய் இவர்களிடம் அதிகம் பாசம் உண்டு. தகப்பனால் பெருத்த லாபம், உயர்வு அதிகம் கிடையாது.

காதல் திருமணம் ஏற்பட வாய்ப்புண்டு. தன் குடும்பத்திலே உறவுப்பெண்ணையே விரும்பி மணப்பதும் உண்டு.

**உடல் நலம்:** நல்ல பசியும், உண்ணும் பழக்கமும் உண்டு. பல்வலி, காசநோய், கண் பார்வை குறைவு இவை ஏற்படலாம். ஆனால் இவன் தன் உடல் நலத்தில் அக்கரையாக இருப்பான். பெரிய நீடித்த நோய் எதுவும் ஏற்படாது.

**பெண்கள்:** சாதாரண உயரம். தூய உடலமைப்பு. நடுத்தர உருவம். நல்ல அழகி, ஆனால் 27 வயதுக்கு மேல் அழகின் பிரதிபலிப்பு குறையும்.

**குணம்:** பாசம் இல்லை என்றாலும் பற்றற்றவள் அல்ல. சில சமயம் இவள் முரட்டு சுபாவத்துடன் நடப்பதுண்டு.

**கல்வி:** இந்த நட்சத்திரத்தில் பிறந்த சிலரே அதிகபட்சக் கல்வி கற்கிறார்கள். பெரும்பாலோர் நடுத்தரக் கல்வியுடன் சரியே. மருத்துவம், ரசாயனம் பொறியியல் போன்ற துறைகளில் கல்வி வாய்க்கலாம்.

## பெண்கள் குடும்ப வாழ்க்கை

முழு மகிழ்ச்சி இராது. சில சமயம் இவர்கள் மலடிகள். மற்றும் சிலர் கணவனைப் பிரிந்து வாழ வேண்டி வரும். மிகச்சிலர் திருமணம் செய்துகொள்ளாமலேயே இருந்து விடுவர். சிலருக்கு 37 வயதுக்கப்பாலும் நல்ல இடத்தில் திருமணம் கூடலாம். உறவினருடன் அவ்வளவு சுமுகம் இராது. வாழ்க்கையைப் புரிந்துகொள்ளாமல் பிறர் பகை, அதிருப்தி இவற்றைச் சம்பாதித்துக் கொள்வர். இதனால் கடைசியில் தனித்து ஒண்டியான வாழ்க்கை ஏற்பட்டு விடுவதும் உண்டு.

செவ்வாய், குரு, ஜாதகத்தில் நல்லபடி அமையா விட்டால் குழந்தை இராது. சிலசமயம் பிறந்து இறக்கும்.

சனிக்கிழமையில் பிறந்த கிருத்திகை நட்சத்திரப் பெண்கள் "விஷக்கன்னி" எனப்படுவர். இவள் போக உறுப்பு சரியாக அமையாது. ஆடை அணிகலன் வாய்ப்பது கடினம். சுபக்கோள்கள் கன்னி கடைசியிலும் துலாம் முதலிலும் அமைந்தால் இந்த குறைகள் பெரும்பாலும் இராது. இவள் பிறந்த நட்சத்திர முதல் 26, 27வது நட்சத்திரத்தில், செவ்வாய் இருந்து சுபர் பாராவிட்டால் விதவையாகலாம்.

**உடல் நலம்**: அதிக உழைப்பு, மனக்கவலை, உளைச்சல் இவற்றால் இவர்கள் உடல் பெரிதும் பாதிக்கப்படும். காசநோய் ஏற்படலாம்.

இவர்கள் இந்த நட்சத்திரத்தில் திரண்டால் விபசார குணம் உண்டு. சண்டைக்காரிகள், மலடிகள், அடிக்கடி கருச்சிதைவு ஏற்படும்.

### *மற்ற நூல்களின்படி கார்த்திகை நட்சத்திர பலன்*

**1. தமிழ் ஜாதக அலங்காரம்:** இனிப்பு உணவில் பிரியமுள்ளவன், தூக்கம் குறைவு. சொற்களைத் தெளிவாகப் பேச வல்லவன். பொய் பேசி பொருள் சேர்ப்பவன். புத்திமான் அரசர்களுக்கு வேண்டியவன். பிறரால் உதவி பெறுபவன். திடமான தேக வலிமையுள்ளவன். வஞ்சக மனத்தன், மார்பில் மறு உள்ளவன். துணிந்தவன்.

**2. யவன ஜாதகம்:** தேஜசுடையவன். நியாய சாத்திரமுணர்ந்தவன். போஜனப்பிரியன், ஜனத்தலைவன், கம்பீரமுள்ளவன். சமர்த்தன். அபிமானமுள்ளவன். பரிசுத்த முள்ளவன்.

**3. பிருஹத் ஜாதகம்:** அதிக உணவு உட்கொள்பவன். அன்னிய ஸ்திரீகளிடம் இச்சை உள்ளவன். பிரசித்தன். தேக காந்தியுள்ளவன் என்பதாம்.

### *மற்றவை*

கார்த்திகை நட்சத்திராதிபன் சூரியன். முதற்பாத ராசியாதிபன் செவ்வாய். இது மேஷம் மீதி 3 பாதங்கள் அதிபன் சுக்ரன். ராசி ரிஷபம். எனவே முதற்பாதக்காரர்களிடம் சூரியன் செவ்வாய் குணங்களும், மற்றவர்களிடம் சுக்கிரன் சூரியன் குணங்களும் காணப்படும். முதற்பாதக்காரர்கள் அதிக முரடர்கள். முன்கோபிகள்.

மேஷ ராசியில் முதல் பாதமும் ரிஷபத்தில் மீதி 3 பாதங்களும் இருப்பதால் இது தலையற்ற நட்சத்திரம் எனப்படும்.

திருமண வாழ்க்கையில் சிறிது பூசல் ஏற்படும். சொந்த வீடானாலும் குறை உண்டு. முழுவதும் கட்டினால் அதில் இவர்கள் குடி இருக்கமாட்டார்கள். 70 வயது வரை ஆயுள் நீடிக்கலாம். வைகாசி அமாவாசை, கிருத்திகை கூடும் நாளில் பிறப்பவர்கள் பெரிய வீரர்கள். சாதனையாளர்கள். உலகப்புகழ் பெறுவார்கள்.

கீழ்நோக்கு நாள். சவ்விய நட்சத்திரம் ராட்சசகணம் உதர ரச்சு. பெண் யோனி, சமான நாடி. திக்கு இந்திரதிக்கு. பட்சி வல்லூறு. திங்கள்கிழமை புதன்கிழமைகளில் கிருத்திகை கூடினால் வார சூனியம். இதில் பிறந்தவர்களுக்கு வாழ்க்கை இருண்ட சூழ்நிலையும், தொல்லையும் ஆகும். இது பெண்ணின் நட்சத்திரமானால் புத்திர தோஷ முண்டு.

### *கிருத்திகை நட்சத்திர காரகத்துவங்கள்*

வெள்ளைப்பூக்கள், அக்கினி ஹோத்திரம், மந்திர சாத்திரப் பயிற்சி, அதில் நிபுணத்துவம், இலக்கண ஆத்மீக நூல்களறிவு அவற்றிற்கு உரை சொல்லும் திறன், சிற்பநூல் அறிவு, தேர்ச்சி, நாவிதன், குயவன், அந்தணன், புரோகிதன், சோதிடன் இவர்களையும் இது குறிக்கும்.

இதற்குரிய நோய்கள், மூலம், மலேரியா, அம்மை, மூளைக்கசிவு, காய்ச்சல், விபத்து, அதனால் காயம், அதிக முகப்பரு, தொண்டைக்கோளாறுகள் முதலியவையாம்.

படைத்துறை, கவிஞன், ரசாயனம், சோதிடம், நுண்கலைகள், பொறியியல், வரித்துறை, இசை போன்ற துறைகளில் தொழில் அமையலாம்.

வடமொழி ஸ்த்ரீ ஜாதகப்படி இதில் பிறந்த பெண்ணின் பலன்: இதில் பிறந்த பெண் அதிக கோபக்காரி, எப்பொழுதும் சண்டை சச்சரவில் ஈடுபாடு. உறவினருடன் பூசல் புரிபவள். சிலேஷ்ம வியாதி உண்டு. அதே சமயம் தேஜசுள்ளவள். புகழ் உள்ளவள். அதிகம் உணவு உட்கொள்பவள், அழகற்ற குருபமான வடிவமுள்ளவள்.

சங்கராச்சாரியாரின் மதன நூல்படி இதில் பிறந்த பெண்ணின் குணங்கள் - இதில் பிறந்த பெண்கள் அரக்கி தத்துவத்தில் பிறந்தவர்கள்.

**கருணையங் கவன்பா லில்லைக் கனவுறு புணர்ச்சி வேண்டும்**
**முருகயல் இடைகள் பற்றி முயங்குவார்க் கமுத மாகும்**
**முருகுசேர் குழலிக் கின்ப மிச்சைக்கோ முரண்வொன் றில்லை**
**கரியமாந் தளிர்போல் மேனி கார்த்திகை நாளி னாளே. (50)**

இந்த கார்த்திகையில் பிறந்தவளுக்கு கருணை (இரக்கம்) சிறிதளவும் இராது. திருட்டுத்தனமாகவும் வேறு ஆணுடனும் புணர்வதில் விருப்பமுள்ளவள். இவளுக்கு அளவுக்கு மீறிய காம உணர்ச்சி உண்டு. இவள் இடையை இருகைகளாலும் இருபக்கமும் பிடித்துக்கொண்டு போகம் செய்யும் ஆணுக்கு (கணவனுக்கு) இவள் அமுதம் போல் மகிழ்ச்சியைத் தருவாள். இவள் அழகி, ஆனால் கரிய மாந்தளிர் போல சிறிது மாநிற மேனியுள்ளவளாக இருப்பாள்.

## இந்த நட்சத்திரத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** உக்கிர அதாவது கோப குண முள்ளவன். தலை நீண்டிருக்கும். கடின கொடுஞ்சொல் பேசுபவன். அழகற்ற விகாரமான பல்வரிசை உள்ளவன். சாதாரண அறிவாளி.

**சந்திரன் நின்றால்:** சூடான தேகமுள்ளவன். அதிக முரடன், தலையைப் பற்றிய நோய்கள் உண்டு. கொடுஞ்சொல்லன். இவனுக்கு படிப்பு அதிகமிராது.

**செவ்வாய் நின்றால்:** தலையில் அடிபட்ட காயவடு உண்டாகும். அதிக காய்ச்சல் காணும். வைசூரி ஏற்படும். பல்நோய் காணும். உஷ்ண தேகி, அவசர புத்தி, குறைந்த படிப்பு, சிடு மூஞ்சித்தனம், அடிதடி சண்டைகளில் ஈடுபாடு, ஏமாற்றுபவன். மருத்துவத்துறை படிப்பு அல்லது மருத்துவ தேர்ச்சி, அதிகம் சிவந்த நிறம் அதிகம் எதிலும் பற்றில்லாதவன். ஆயுதம், நெருப்பு விபத்துக்களால் பயம் உண்டு.

**புதன் நின்றால்:** சாதாரண அடங்கிய சுபாவம். எழுத்து, சொல் இவற்றில் திறமை, தொண்டைநோய் மற்றும் தோல் நோயும் உள்ளவன்.

**குரு நின்றால்:** புத்திர பாக்கியம் இல்லை. தலையில் காயம், அறிவாளிகள், வித்வான்களுடன் சண்டை, பூசல், எழுதுதல், சொற்பொழிவு இவற்றில் திறமை. செல்வமற்ற தரித்திரன்.

**சுக்கிரன் நின்றால்:** இரு மனைவிகள் அமையலாம். பெண்ணானால் கடின சுபாவம் உள்ளவள். காம இச்சை அதிகம், கணவன் மனைவி சண்டை, காதலில் தோல்வி, ஆயதம், ரசாயனப்பொருள் முதலிய துறைகளில் தொழில், மருத்துவம், துணி வெளுக்கும் தொழில், சாயம் போடுபவன், பொறியியல் தொழில் போன்றவை அமையலாம்.

**சனி நின்றால்:** எப்பொழுதும் நோயாளி. பயங்கரமான ஆபத்து விபத்துக்களில் அடிக்கடி சிக்கிக்கொள்பவன்.

## *இனி கிருத்திகை நட்சத்திரத்தில் நின்ற கோள்களை மற்ற கோள்கள் பார்ப்பதன் பலன்*

### சூரியன் நின்று இந்த சூரியனை

**செவ்வாய் பார்த்தால்:** இவன் சமூக சேவை செய்வான். தன் திறமையால் நிறைய பணமும் புகழும் பெறுவான்.

**புதன் பார்த்தால்:** தேர்ந்த இசையறிஞன், நுண்கலைகளில் அதிக பயிற்சி, கவர்ச்சியான தோற்றம் உண்டு. எப்பொழுதும் மகிழ்ச்சியாக இருப்பான்.

**குரு பார்த்தால்:** பூரண குடும்ப சுகமுண்டு. அரசியல் ஈடுபாடு இருந்தால் மந்திரியாவான். இவன் பெரிய செல்வந்தனாவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** அழகிய கண்கள் உள்ளவன். அழகான உருவம் உண்டு. தன் சமூக வட்டத்தில் மிகவும் புகழ் பெறுவான்.

**சனி பார்த்தால்:** உடல் நலம் சீராக இராது. நோயாளி, அடிக்கடி குடும்பச்சண்டை ஏற்படும். ஏதோ பயனற்ற வறுமையான வாழ்க்கையே நடக்கும்.

## *கிருத்திகையில் நின்ற சந்திரனை*

**சூரியன் பார்த்தால்:** பயிர்த்தொழில் பலனளிக்கும். நிலபுலம் சேரும். செல்வம் கூடும்.

**செவ்வாய் பார்த்தால்:** அதிக சிற்றின்ப ஈடுபாட்டால் நிறைய தொல்லைகள் உண்டாகும். எதிர் பாலினரை சுண்டி இழுக்கும் நல்ல கவர்ச்சியான காந்த சக்தியுள்ள தோற்றமுண்டு. உறவினரால் மிகவும் விரும்பப்படுபவன்.

**புதன் பார்த்தால்:** இவன் புத்திசாலி. யாவருக்கும் துன்பத்தில் உதவும் இரக்கமுள்ளவன்.

**குரு பார்த்தால்:** இது கெஜகேசரி யோகமாகும். (7ம் பார்வையானால்) பெண்களால் பெரியோரால் முன்னேற்றம், நல்ல அறிவுத்திறன், படிப்பு செல்வம் இவை உண்டாகும்.

**சுக்கிரன் பார்த்தால்:** நகை, ஆடை அலங்கார வகைகள் சேரும். வீடு வாகனாதிகள் சொந்தமாகும். வாழ்க்கைச் சொகுசு சாதனங்கள் எல்லாம் கிடைக்கும்.

**சனி பார்த்தால்:** இளமையில் மாரகம் ஏற்படும். 2ம் பாதத்தில் இருக்கும் சந்திரனானால் இது மேலும் உறுதியாக இருக்கும்.

## கிருத்திகையில் இருக்கும் செவ்வாயை

**சூரியன் பார்த்தால்:** இவன் மனைவி பேராசைக் காரியாக இருப்பாள். அவள் ஆசைகளை இவனால் திருப்தி படுத்தவே முடியாது. பெரும்பாலும் காடுகளில் வசிப்பான்.

**சந்திரன் பார்த்தால்:** தன் தாய்க்குப் பகையாய் இருப்பான், இவனுக்குப் பல மனைவிகள் அமையலாம்.

**புதன் பார்த்தால்:** பெரும்பாலும் சமய நோக்குள்ளவனாவான். நுண்கலை தேர்ந்தவன். நல்ல தோற்றம் அழகு உண்டு. குறைவாகவே பேசுவான். நிறைந்த செல்வம் உண்டு.

**குரு பார்த்தால்:** தன் குடும்பத்தினரிடம் அதிக ஆசை உள்ளவன். இவன் நுண்கலைகளில் வல்லவனாக இருப்பான். 30 வயதுக்குமேல் பணக்காரனாவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** படைத்தலைவனாவான். ஆயுதத் தொழிற்சாலையில் நிருவாகத் தலைமை இருக்கலாம்.

**சனி பார்த்தால்:** நிறைந்த செல்வம், உடல் நலம், சமூகத்தில் மதிப்பு, அந்தஸ்து எல்லாம் உண்டு.

## கிருத்திகையில் நின்ற புதனை

**சூரியன் பார்த்தால்:** ஏழையாகவும், எப்பொழுதும் ஏதாவது நோயால் பீடிக்கப்பட்டவனாகவும் இருப்பான். ஒல்லியான உடல். பிறருக்கு உதவும் குணமுண்டு.

**சந்திரன் பார்த்தால்:** நல்ல உழைப்பாளி. பணக்காரன். புகழுள்ளவன்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் அரசாங்க மூலமாக உத்தியோகத்திலே தண்டனை அடைவான். நோய் உள்ள உடல் உள்ளவன். உறவினரிடமிருந்து விலகி வசிப்பவன்.

**குரு பார்த்தால்:** இவன் கிராம அதிகாரி ஆவான் அல்லது ஊராட்சித் தலைவன், மந்திரி போன்ற பதவிகள் ஏற்படலாம். இவன் புத்திசாலி. நல்ல குணங்கள் உள்ளவன். பிறர் பின்பற்றக் கூடிய உதாரண புருஷன்.

**சுக்கிரன் பார்த்தால்:** பெண்களால் மிகவும் கவரப் படுவான். அதிக காம இச்சை உள்ளவன். அதிர்ஷ்டக்காரன். துன்பப்படுபவர்களிடம் அதிக இரக்கம் காட்டுபவன்.

**சனி பார்த்தால்:** தன் மனைவி மக்களாலேயே துன்புறுத்தப்படுவான். ஏழையாக இருப்பான்.

## குரு - கிருத்திகையில் நின்ற குருவை

**சூரியன் பார்த்தால்:** போர்க்கலையில் திறமைசாலி, அதனால் இவன் உடலில் நிறைய காயங்கள் இருக்கும். இவனுக்குப் பல வாகனங்களும் பணியாட்களும் உண்டு.

**சந்திரன் பார்த்தால்:** உண்மையானவன். பிறரிடம் மரியாதையும் இரக்கமும் உள்ளவன். எப்பொழுதும் அதிர்ஷ்டம் இவன் பக்கமே.

**செவ்வாய் பார்த்தால்:** இவனுக்கு நிறைய மக்கட் செல்வம் உண்டு. பணக்காரர்களுடன் நட்புள்ளவனாக இருப்பான். கலைத்துறையில் புகழ் உண்டு. அரசாங்க வெகுமானமும் பரிசுகளும் பெறும் வாய்ப்பு இவனுக்கு உண்டு.

**புதன் பார்த்தால்:** இவனுக்கு மந்திர சித்தி உண்டு. அரசாங்க பரிசுகளும் வெகுமானமும் கிடைக்கும். தோற்றத்தில் அழகு உண்டு. பல கலைகளில் திறமை உண்டு.

**சுக்கிரன் பார்த்தால்:** வேண்டும் அளவுக்கு இவனுக்கு பண வசதி உண்டு. ஆடை அணிகலன்கள் நிறைய உண்டு. இவன் வாழ்க்கையை முழுமையாக அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** இவனுக்கு நல்ல வசதிகள், மனைவி, மக்கட்செல்வம் இவை ஏற்படும். தன் கிராமம் அல்லது நகரத்தில் பொது மக்களால் மிகவும் மதிக்கப்படுவான்.

### *சுக்கிரன் - கிருத்திகையில் நின்ற சுக்கிரனை*

**சூரியன் பார்த்தால்:** இவன் பெண்கள் மூலம் வசியும், போகமும் செல்வமும் வாகானாதிகளும் அடைவான்.

**சந்திரன் பார்த்தால்:** வாழ்க்கையில் எந்த சௌகரியங்களும் இவனுக்கு ஏறபடாது. முறைகேடான வழிகளில் பணம் சம்பாதிப்பான்.

**புதன் பார்த்தால்:** இவன் நன்னடத்தை உள்ளவன். தைரியசாலி, தோற்றப்பொலிவும், ஆளுமையும் உள்ளவன்.

**குரு பார்த்தால்:** நல்ல மனைவி மூலம் நிறைய சுகம் பெறுவான். நல்ல உறவினர்களும் குழந்தைகளும் உண்டு. தனக்கு வேண்டும் அளவுக்கு பண வசதியும் உண்டு.

**சனி பார்த்தால்:** இவன் ஆரோக்கியம் கெடும். குடும்பத்தின் பெயரும், மரியாதையையும் கெடுத்து விடுவான். எப்பொழுதும் ஏழையாகவே இருப்பான்.

### *சனி - கிருத்திகையில் நின்ற சனியை*

**சூரியன் பார்த்தால்:** மிகவும் கெட்டிக்காரன். வாக்கு வன்மை உடையவன். மன அமைதி உண்டு. தன் பிழைப்புக்கும் சாப்பாட்டிற்கும் பிறரை நம்பியே இருப்பான்.

**சந்திரன் பார்த்தால்:** இவனுக்கு அரசாங்க உதவிகள் கிடைக்கும். பல நல்ல பெண்களின் சகவாசமும் போக சுகமும் உண்டு. நிறைய பணம் சம்பாதிப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** ஓட்டை வாயன். அதிகம் பேசுபவன். வாழ்க்கையில் எப்பொழுதும் மகிழ்ச்சி உண்டு.

**புதன் பார்த்தால்:** பிற பெண்கள் விஷயத்தில் அக்கறை காட்டுவான். கெட்ட சகவாசம் உண்டு. பேடிகளுடன் பழகுவான். ஏழையாக இருப்பான்.

**குரு பார்த்தால்:** தன் வாழ்க்கையில் பெரும்பகுதி பிறருக்காகவே உழைப்பான். பொது மக்களிடம் நிறைய மரியாதையும் பாசமும் இவனுக்கு உண்டு.

**சுக்கிரன் பார்த்தால்:** வாழ்க்கையின் தேவைகள் எல்லாம் அளவுக்கு அதிகமாகவே கிடைக்கும். நிறைய தண்ணீர் அருந்துவான். அரசாங்க அதிகாரிகள் மேலிடம் இவர்களோடு இவனுக்கு தொடர்பு உண்டு.

## இந்த நட்சத்திரக்காரர்களுக்கு ஏற்படும் நோய், கண்டங்கள் முதலியன.

பிறந்த ஆண்டில் புரியாத பல காரணங்களால் கண்டம்.

மூன்றாவது வயதில் வெதுப்பு அல்லது வெப்ப நோயால் கண்டம். வெப்பநோய் என்பது காய்ச்சலும் ஆகலாம்.

ஐந்தாவது வயதில் ஜல கண்டம். ஏழாவது வயதில் நெருப்பால் கண்டம்.

பத்தாவது வயதில் உயரத்திலிருந்து வீழ்வதால் கண்டம். பதினோராவது வயதில் நாலுகால் மிருகத்தால் கண்டம். இது தற்காலம். நாலு சக்கர வண்டிகள் மோதிக்கொள்வதையும் குறிக்கும்.

பதினைந்தாவது வயதில் விஷத்தால் கண்டம் அஃதாவது நச்சுணவு முதலியன.

இருபத்தி ஒன்றாவது வயதில் பெண்களால் கலகம். அவர்கள் செய்யும் கலகம் சூழ்வினை முதலியன.

இருபத்தி ஏழாவது வயதில் அரையாப்பால் கண்டம். அஃதாவது முறைகேடான வகையில் பல பெண்களுடன் தொடர்பு கொண்டு அதனால் ஏற்படும் ரகசிய நோய்கள். அக்காலத்தில் அரையாப்பு எனப்படும். தற்போது இது எய்ட்ஸ் என்னும் கொடிய நோயைக்குறிக்கும்.

நாற்பதாவது வயதில் கல்லீரல் கண்டம்.

நாற்பத்தி ஐந்தாவது வயதில் சூலை வாதத்தால் கண்டம். விலாவிற்குக் கீழ் ஏற்படும் வலி. வயிறு சுருட்டி வலியை ஏற்படுத்தும் சூலை நோய் முதலியன.

ஐம்பதாவது வயதில் வயிற்றுக்கடுப்பால் கண்டம். இது சீதபேதி, ரத்தபேதி முதலியவற்றைக் குறிக்கும்.

ஐம்பத்தைந்தாவது வயதில் குடல் வாதத்தால் கண்டம். இது குடலில் ஏற்படும் வலி முதலியவற்றைக் குறிக்கும்.

அறுபதாவது வயதில் மூலநோயால் கண்டம்.

எழுபத்தி எட்டாவது வயதில் பித்த சுரத்தால் கண்டம்.

இது தண்டினால் எண்பது வயது சென்று வரும் கார்த்திகை மாதம் 32 வது நாள் பூர்வ பட்சம் திரயோதசி திதி சனிக்கிழமை சேர்ந்து வரும் நாளில் ஏழு நாழிகைக்கு மேல் மரணம்.

இதுவும் கடந்தால் 91ஆவது சென்று வைகாசி மாதம் அமரபட்சம் திரிதியை ஏழு நாழிகை சென்று பித்தம் அதிகமாகி மரணம்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் சூரியன் உடையதானால் குணவான். ஆனால் தரித்திரன்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் சந்திரனுடைய தானல் ராஜ புருஷன். அஃதாவது மிகவும் மேல் நிலையில் உள்ளவன். பலராலும் விரும்பப்படுபவன்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் செவ்வாய் உடையதானால் தேஜஸ் உள்ளவன். அஃதாவது தோற்றப் பொலிவு உள்ளவன்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் குருவுடைய தானால் ராஜபுருஷன் அஃதாவது மேல் நிலையில் உள்ளவன்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் சுக்கிரனுடைய தானால் பயிர்த்தொழில் விருத்தியும் அதனால் வருவாயும், நிறைந்த கல்வியும் உடையவன்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் சனியுடைய தானால் திருடன்.

இவன் பிறந்த லக்கிந நட்சத்திர சாரம் ராகுவுடைய தானால் கள்ளன், மூடன் ஆனால் தெய்வபக்தியுடையவன்.

இவன் பிறந்த லக்கின நட்சத்திர சாரம் கேதுவுடைய தானால் கள்ளன், ஆனால் வீரன். இருப்பினும் நோயுடையவன்.

## *மற்றும் சில*

கிருத்திகையில் புதன் கூடினால் அமிர்தயோகம். கிருத்திகையில் சுக்கிரன் கூடினால் சித்தயோகம். கிருத்திகையில் ஞாயிறும் பஞ்சமியும் கூடினால் விஷ யோகம். கிருத்திகையில் நவமியும் குருவும் கூடினால் பிராணயோகம். அஃதாவது உயிருக்கு ஆபத்து எனக்கூறலாம்.

கிருத்திகையில் பிரதமை கூடினால் வரயோகம். இதில் பிரயாணம் செய்ய வேண்டுமானால் தயிர் சாதம் உண்டு. புறப்படுவது நல்லது.

## *இனி நட்சத்திர பாதவாரி பலன்*

சொல்லும் ஆசாரன் வித்துவான் பிரபு
தோன்றிய இலாபம் உள்ளவனாம்
சூரனாம் நேசன் புத்திமான் ரோகி
தோன்றிடும் ஆரலின் முதுற்கால்
வெல்லும் ஆசார ஈனன்மா னிடர்கள்
வெறுத்திடும் கோபம் உள்ளவனாம்
வெற்றிசேர் பிறரை சேர்ப்பன் நூல்தன்னை
விரும்பிடான் கார்த்திகை இருகாலில்
புல்லுவன் துட்ட மடந்தையர் தன்னை
விரும்பிடான் கார்த்திகை இருகால்
புத்தி யில்லான் மிகுசூரன் பொருந்திடாக்
கோபி கருமி பொல்லாங்கைப்
புரிகுவன் ஆகுமொரு மூன்றில் அல்லுறு
மிடியன் கலைபல அறிவான்
ஆம்மனத் தாபமே உள்ளான் அடைந்திலான்
பொறுமை (துக்கவான் ரோக)
ஆகுநாற் காலவன் தானே. (51)

*1.கிருத்திகை நட்சத்திரத்தில் முதல் பாதத்தில் பிறந்தவன் ஆசாரம் உள்ளவன். வித்துவான், முக்கியஸ்தன். நிறைய வருவாய் உள்ளவன். வீரன் பிறரிடம் நேசம் உள்ளவன். புத்திசாலி, ஆனால் நோயாளி.*

*2. கிருத்திகை 2 ம் பாதத்தில் பிறந்தவன் ஆசாரம் இல்லாதவன். பிறர் இவனை வெறுப்பார்கள். முன்கோபி, பிறரோடு பழகுபவன். கல்வியில் நாட்டம் இருக்காது. துஷ்ட பெண்களுடன் தொடர்பு கொள்பவன். தன்னம்பிக்கை இல்லாதவன்.*

*3. கிருத்திகை 3ம் பாதத்தில் பிறந்தவன் அதிக முன்கோபம் உள்ளவன். தீமைகள் செய்பவன். வீரன், அகங்காரம் உள்ளவன்.*

4. கிருத்திகை 4ம் பாதத்தில் பிறந்தவன் தரித்திரன். பல கலைகள் அறிந்தவன். பிறருடன் பகை உள்ளவன். பொறுமை உள்ளவன். ஏதாவது துன்பம் துக்கம் இருந்துகொண்டே இருக்கும்.

## மற்ற சுவடிகளின் படி பாதவாரி தனிப்பலன்
(சுவடி எண்.1500)

### கிருத்திகை 1ம் பாதத்தின் பலன்

**சிறிதே யென்றும் பொய்சொல்லான் சிவந்த கண்கள் சிறுகுழலான்**
**அறிவும் மிகவே பெருங்குணத்தான் அடைந்தோர்க் கன்பன் அழகியனாம்**
**பொருள்சேர் மைந்தர் மனையாளைப் பொருளென் றெண்ணான் புகழ்விளக்கும்**
**வெறிசேர் குழலாய் மடமாதே வியாழக் காலில் பிறந்தானே. (52)**

இவன் சிறிதும் பொய் பேசான். சிவந்த கண்ணும் குறைந்த மயிர்க்கற்றையும் உடையவன். பெரிய அறிவாளி. தன்னை அடைந்தவர்களுடன் அன்பாக இருப்பவன். அழகுள்ளவன். தன்னுடைய பிள்ளைகள், மனைவியை சிறிதும் பொருட்படுத்தமாட்டான். சிறந்த புகழுள்ளவன்.

இது தனுசு வியாழக்காலாகிய குரு நவாம்சத்தை சேர்ந்தது. இதற்கு காலச்சக்கரதசை வருமாறு.

| | |
|---|---|
| 1. மேஷ செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 2. ரிஷப சுக்கிரன் தசை | 16 வருஷம் |
| 3. தனுசு வியாழன் தசை | 10 வருஷம் |
| 4. கடக சந்திரன் தசை | 21 வருஷம் |
| 5. சிங்க சூரிய தசை | 5 வருஷம் |
| 6. கன்னி புதன் தசை | 9 வருஷம் |
| 7. விருச்சிகச் செவ்வாய் தசை | 7 வருஷம் |
| 8. மிதுனப்புதன் தசை | 9 வருஷம் |
| 9. துலாம் சுக்கிரன் தசை | 16 வருஷம் |
| ஆக கிருத்திகை நட்சத்திரத்தின் 1ம்பாதத்திற்கு பரமாயுள் | 100 வருஷம் |

## பிற நூல்களின்படி கிருத்திகை 1ம் பாதத்தின் பலன்

**ஜாதக சார தீபம்**: கிருத்திகை 1ம் பாதத்தில் பிறந்தவன் தோற்றத்தில் இளையவன். தேகப் பொலிவுள்ளவன்.

**நட்சத்திர பல தர்ப்பணம்**: கிருத்திகை 1ம் பாதத்தில் பிறந்தவன் நல்ல குணவான். குரு கிரகத்தின் குணங்கள் பொருந்தியிருக்கும்.

**மற்றவை**: கிருத்திகை 1ம் பாதத்தில் பிறந்தவன் தயவுள்ளவன். சாமர்த்தியமும் புத்திசாலித்தனமும் உண்டு.

இவன் தலையில் ஏதாவது ஒரு வடு இருக்கும். அல்லது முகத்தில் இருக்கும். கோபம் வந்தால் முகம் சிவந்துவிடும். கோபம் இவனுடைய பிறவிக்குணம். இவனை எளிதில் கோபமூட்ட முடியும். கடுமையான பேச்சுள்ளவன். தூக்கமின்மை அதிக ரத்தஅழுத்தம் போன்ற நோய்கள் உண்டு.

நிறைய பணம் சம்பாதிப்பவன். எதிலும் வெற்றி பெறுபவன். செல்வாக்கு உள்ளவன். அரசியல் செல்வாக்கும் இவனுக்கு இருக்கும். பெரும் புகழ் உண்டு.

## *கிருத்திகை 1ம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்**: சூரியன் நின்று சுப கிரகங்களின் சம்பந்தம் பெற்றால் நிறைய குழந்தைகள் இருக்கும். ஏழையாக இருப்பான். ஜோதிஷத்திலும் அதைச்சார்ந்த கலைகளிலும் ஞானம் உண்டு. இவனுக்கு பார்வைக்கோளாறு உண்டு. அதிகம் சாப்பிடுபவன். இவனுக்கு தீ விபத்துக்கள் ஏற்படலாம். படைத்துறை அல்லது பாதுகாப்புத்துறையில் உத்தியோகம் பண்ணுவான்.

**சந்திரன் நின்றால்**: இவனுக்கு மந்திர சித்தி ஏற்படும். இதில் பிறந்த ஆண்கள் பெண்கள் மூலமாகவும், பெண்கள் ஆண்கள் மூலமாகவும் தொல்லைப்படுவார்கள்.

**செவ்வாய் நின்றால்:** கம்பீரமான தோற்றம் உண்டு. வாதாடும் திறமை உள்ளவன். அதனால் சிறந்த வழக்கறிஞன் ஆகக்கூடும். படை, காவல் மற்றும் அரசுத்துறைகளில் வேலை கிடைக்கலாம். இப்பாத கடைசி பாகையில் செவ்வாய் நின்றால், எப்படியும் மேல்நிலை அடையப் பாடுபடுவான். பிறர் மனைவிகளுடன் இச்சை இருக்கும். நச்சு உணவு ஏற்படலாம். அல்லது வெடிமருந்து, தீப்பெட்டிகள் முதலியவற்றால் சம்பாதிக்கக் கூடும். அதிக ஜுரம், மூளை நாளவெடிப்பு, தலையில் அல்லது முகத்தில் அடி இவைகள் ஏற்படலாம்.

**புதன் நின்றால்:** அரசு வேலைகளில் இருப்பான். வியாபாரத்தில் ஈடுபட்டால் பெருத்த லாபம் உண்டு. அரசு உதவிகள் கிடைக்கும். பொதுமக்கள் ஆதரவு அதிகம் உண்டு. மத்தியமான ஆயுள் உண்டு. நடிகன், சங்கீதக்காரன், எழுத்தாளன் ஆகிய பணிகளில் சம்பாதிப்பான். ஒல்லியான சரீரம் உள்ளவன். மதுவையும் மங்கையையும் அதிகம் விரும்புவான். சூரியன் சேர்ந்தால், நல்ல மருத்துவன். அறுவை சிகிச்சையில் வல்லவனாக இருப்பான்.

**குரு நின்றால்:** அதிக அறிவுப்பசி உள்ளவன். ஆகம பூஜா விதிகள் தெரிந்த உயர்தர கோயில் அர்ச்சகனாகவும் இருப்பான். அறிவின் தனித் தகுதிகளால் (ஜோதிஷம் முதலியவை) நிறைய பணம் சம்பாதிப்பான். பிதுரார்ஜித சொத்து உண்டு. குழந்தைகள் மூலம் வருவாய் உண்டு. அதிகப் பயணங்கள் செய்வான். பேரும் புகழும் உண்டாகும். தெளிவான சிந்தனை உண்டு. மது மங்கை இவற்றில் ஈடுபாடு உண்டு. வரலாறு, இலக்கியம் முதலியவற்றில் வல்லவன்.

**சுக்கிரன் நின்றால்:** இந்த ஆணின் உடல்வாகு பெண்ணின் நளினத்தையும், இதில் பிறந்த பெண், ஆணின் உடல்வாகு உள்ளவர்களாகவும் இருப்பார்கள். இவர்களுக்கு மாலைக்கண் ஏற்படலாம். மணவாழ்க்கை ஒற்றுமையாக இராது. கடற்படை உத்தியோகத்தில் உயர்ந்த நிலையில்

இருப்பான். சூரியன் பார்த்தால் இளமையில் திருமணம் உண்டு. வழக்கு வியாச்சியங்களால் சொத்துக்கள் சேரும், இதில் பிறந்த பெண்கள் விஷயத்தில் இந்த சுக்கிரனை சந்திரன் பார்த்தால், அதிக குழந்தைகள் பிறக்கும். புதன் பார்த்தால், உடன்பிறப்புகளுடன் மனஸ்தாபம் ஏற்படும்.

**சனி நின்றால்:** நீடித்த ஆயுள் உண்டு. ஆனால் இவன் சோம்பேறி. தகப்பனுடன் சண்டை போடுவான். இளமையில் துன்பமும், போகப்போக வாழ்க்கை மகிழ்ச்சியாகவும் இருக்கும். பொதுவாக கருப்பு நிறம் உள்ளவன். ஒல்லியான பலகீனமான தேகம் உள்ளவன். மஞ்சள் காமாலை நோய் வரலாம். முன்கோபி. பேராசை உள்ளவன். பொறாமை உள்ளவன். இரக்கமற்றவன். பல்லில் ரோகமுள்ளவன். ஜீரணக் கோளாறுகள் உண்டு.

**இராகு நின்றால்:** மணவாழ்க்கை மட்டுமல்லாமல் வெளி பெண்களுடன் தொடர்பு கொள்வான். காம இச்சை அதிகம் உள்ளவன். ஆனால் நல்ல ஆரோக்கியம் உண்டு. முகத்தில் எங்காவது கறுப்பு மச்சம் உண்டு. புத்திசாலி. நல்ல உடல் வாகு உள்ளவன். தந்தைமேல் அதிகம் பாசம் உண்டு. தொழிலில் அதிகம் சம்பாதிப்பவன்.

**கேது நின்றால்:** தொழிலில் அடிக்கடி தொல்லைகள், சிக்கல்கள் உண்டு. முயற்சிகளில் ஏமாற்றங்களை சந்திப்பான். இதய நோய்கள் ஏற்படலாம். இரசாயன உலோகங்கள் ஆய்வு செய்யும் பொறியாளனாகவும் இருப்பான். கேது சுபக்கிரகங்களால் பார்க்கப்படாவிட்டால் வயது ஏறக்குறைய ஐம்பது வரைதான் நீடிக்கும்.

## கர்ம விபாகத்தில் சொல்லியபடி கிருத்திகை முதல் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ ஜென்ம பாவ புண்ணியமும் பரிகாரமும்

இவன் பூர்வ ஜென்மத்தில் அயோத்திக்கு அடுத்த வடபூரி என்ற ஊரில் அஹிவர்மா என்ற பெயருள்ள

சத்திரியனாக இருந்தான். இவன் மனைவி அழகி பாலா என்ற பெயரை உடையவள். பணக்காரனாக இருந்தான். நல்ல அழகன்.

ஒரு சமயம் காட்டில் வேட்டையாடும் போது ஒரு கருவுற்ற மானை அம்பால் கொன்றான். தினமும் அந்த மான் மாமிசத்தையே உண்டு வந்தான். வயதாகியும் இரக்கம் இல்லாமல் இருந்தான். இவன் இறக்கும்போது இவன் மனைவியும் தீக்குளித்தாள். தன் மனைவி செய்த புண்ணியத்தால் சத்திய லோகத்தில் ஒரு கல்ப காலம் வாழ்ந்து, மீண்டும் மனிதனாகப் பிறந்தான். அதே மனைவி இவனுக்கு திரும்பி வாய்த்தாள். போன ஜென்ம பாவத்தால் இவனுக்கு குழந்தை இல்லாமல் புத்திர தோஷம் ஏற்பட்டது. இதற்கு சாந்தியாக "ஜாத வேதசே" என்ற வேத மந்திரத்தை முன்னும் பின்னும் வைத்து ஒரு லட்சம் முறை காயத்திரி ஜெபம் செய்து அதில் பத்தில் ஒரு பாகம் ஓமம் செய்து, அதில் பத்தில் ஒரு பாகம் பிராமணர்களுக்குப் போஜனம் பண்ணி வைக்க வேண்டும். பிறகு தங்கத்தால் மான் ஒன்று செய்து ஜெபத்திற்கு முன்னால் அதை பூஜிக்க வேண்டும். அதன் பின் காராம் பசுவை முன் வைத்து கோபூஜை செய்யவேண்டும். அதன் பின் இரண்டையும் வேதம் அறிந்த அந்தணனுக்கு தானம் செய்ய வேண்டும். இதை எல்லாம் முடித்த பிறகு ஹரிவம்சபுராண பாராயணம் அல்லது மற்றவர் மூலம் கேட்கவேண்டும். இதற்குப் பின், துர்கா சப்தசதி என்னும் தேவி மஹாத்மியத்தைப் பாராயணம் செய்யவேண்டும். இதனால் இவன் பாவங்கள் விலகி, இவன் மனைவிக்கு கற்பம் ஏற்பட்டு குழந்தை பிறக்கும். அதன்பின் வாழ்க்கை சந்தோஷமாகவும் வளமாகவும் இருக்கும்.



## அத்தியாயம் - 4

# இடப ராசி பலன்

*( கிருத்திகை 2, 3, 4ம் பாதங்களில் ரோகிணி நட்சத்திரம் முழுவதும் மிருக சீரிஷம் 1. 2ம் பாதம் வரை )*

### இடப ராசியில் பிறந்தவன் தன்மைகள்

பலர்க்குநல் பசுமை செய்யும் பாவமும் பழியும் பார்க்கும்
தலைக்குமேல் பொன்ன தாகத் தந்தைதாய் தம்மைப் பேணும்
கலைத்திடும் கருதார் தம்மைக் கைப்பொருள் கொடுக்க வல்லன்
இலக்கிய முடைய னாகும் இனியநல் இடபத் தானே (53)

*(சுவடி எண். 1500)*

இவன், பாவம் பழிக்கு அஞ்சுபவன். எல்லோருக்கும் உதவி செய்பவன். தன் தாய் தந்தையரைத் தன்னைவிட அதிகமாக நேசித்துப் பாதுகாப்பான். தன் சத்துருக்களை வென்று ஒடுக்க வல்லவன். பிறருக்கு இரக்கப்பட்டுத் தான் சம்பாதித்த பொருளைத் தாராளமாகக் கொடுத்துதவும் பெருந்தன்மை உடையவனாகவும் இருப்பான். இவன் எல்லோருக்கும் எடுத்துக்காட்டாக இருப்பவனாகவும் கலை அனுசரணை உடையவனாகவும் இருப்பான். இலக்கிய முடையவனாகும் என்று சொன்னதால் கலை அனுசரணை உள்ளவன் என்று பொருள் கொள்ளப்பட்டது. இடபராசி அதிபதி சுக்கிரன். கலைகளுக்கும் அதிபதி காரகன். ராசி மண்டலத்தில் இது இரண்டாவதாகும். இதன் அதிபதி சுக்கிரன். இது பஞ்சபூதங்களில் மண். ஸ்திர ராசி. பெண்பால், ஈரத்தன்மையுடையது. அரைச் சுபத்துவமுடையது. இது ப்ரஷ்ட உதய ராசியாகும். இதன் வடிவம் காளை. இங்கு சந்திரன் உச்சன்.

இந்த இராசிக்காரர்கள் நிறைந்த பொறுமைசாலிகள். எவ்வளவு உழைப்புக்கும் அஞ்சாதவர். கடைசிவரை பொறுமை சாதிக்கும் இவர்கள் கோபம் வந்துவிட்டால் எரிமலையாகி விடுவர். அடக்கமாக இருந்தாலும் முரடர். இது ஸ்திர ராசியாகையால் திடசித்தம் உண்டு. பணத்தில் சிக்கனம் உண்டு. போஜனப்பிரியர். இனிப்பு விரும்பி உண்பர். சுக செளக்கியப்பிரியர். வாழ்க்கையின் எல்லா செளகரியங்களையும் அனுபவிப்பவர். எப்பொழுதும் உற்சாகம், பந்து ஜனங்களால் விரும்பப்படுபவர். அதிர்ஷ்டக்காரர். திருமகள் விலாசம் நிரம்பப் பெற்றவர். வாகனம், வீடு, தோட்டம் முதலிய சொத்துக்கள் உடையவர். நல்ல வாக்கு லாவண்யம், குரலினிமை உடையவர் மற்றவர் அபிப்பிராயங்களுக்கு இணங்காதவர். நிதானமாகத்தான் வாழ்வில் முன்னேறிக்கொண்டிருப்பர். எதையும் நிதானமாகத் திட்டமிட்டுச் செயலாற்றுபவர்.

காதல் விவகாரங்களில் அதிக ஈடுபாடு உண்டு. ஆனால் நிதானமாகவே செல்வர். முடிவு செய்தபின் அதை மாற்றிக்கொள்ளமாட்டார்கள். பாலுணர்வு இவர்களுக்கு மிக அதிகம். அதைப்பல வழிகளிலும் பூரண திருப்தியுடன் அனுபவிப்பவர். நல்ல கலையுணர்வு உண்டு. சங்கீத நாடகப் பிரியர். சினிமா நடிப்புத்துறையும் இவர்களுடையதுதான். பணம் சம்பாதித்து அதை உல்லாசமாகச் செலவழிக்கவும் தெரிந்தவர்.

**உருவம்:** நடுத்தரமான சதைப்பற்றுள்ள தோற்றமுள்ளவர். அகன்ற நெற்றி, கருகருவென சுருள் சுருளான மயிர். பெரிய கண்கள். அழகிய முகம், வட்டமானது. சிவந்த பளபளக்கும் மேனி. ஆண்களும் பெண்களும் நளினத்தையும், அழகு கவர்ச்சி இவற்றையும் உடையவர். அப்படியானால் பெண்களைப்பற்றிக் கேட்க வேண்டியதே இல்லை. இந்த ராசி பெண்கள் பூரண அழகிகள். பொன்னொளி மேனி. நல்ல புஷ்டியான, எடுப்பான, கவர்ந்து ஈர்க்கும் தோற்றம். இவர்கள் அசைவும் ஒயிலும்

தனிப்பட்டவை. இவர்கள் பேச வேண்டியதே இல்லை. இவர்கள் உருவ அழகிற்கே ஆண்கள் அடிமையாகி விடுவர்.

**வேலைகள்:** நளின உழைப்பினர். சொகுசு வேலைகளே செய்ய விரும்புவார்கள். உல்லாசப் பொருட்கள் வாணிகம். கம்பளி, பட்டு வியாபாரம், சோப்பு, சென்ட் போன்ற வாசனைப் பொருட்கள் இவற்றின் மூலம் நிறைய பொருளீட்டுவர். பேங்கு நிருவாகம், நீதித்துறை அலுவல்கள், பந்தயம் நடத்துபவர்கள், ஸ்டாக் புரோக்கர்கள், ரேஸ் சென்று வெல்லுதல் போன்றவற்றில் அதிக ஈடுபாடு உண்டு. உழவு விவசாயம் இவற்றிலும் இவர்களுக்கு லாபம் உண்டு என்பதை இவர்கள் ராசி பூத (மண்) ராசியாகையாலும் இந்த ராசியின் உருவம் காளை என்பதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

**வீட்டு நிலை:** இதில் பிறந்த ஆண்கள் நல்ல வீட்டு வாழ்வு உடையவர்கள். அதில் எல்லா வசதிகளையும் செய்து வைப்பார்கள். இந்த ராசி பெண்கள் "மனைக்கு விளக்கம் மடவார்" என்ற வாக்குக்கு உதாரணமாய் இல்லத்தரசிகளில் சிறந்தவர்கள். இவர்களை அடைந்த கணவன்மார்கள் பாக்கியசாலிகளே. ஏனென்றால் வீட்டுக்குள் எல்லா வற்றையும் கவனித்துக்கொள்வார்கள். உருவத்தில் கவர்ச்சியும் பொலிவும், உழைப்பில் சலிப்பில்லாத இவர் கைக்குள் - கணவன்மார்கள் அடங்கி மகிழ்வதில் வியப்பில்லை. தாயாகவும் மனையாட்டியாகவும் இருவகை கடமைகளை ஒரே சமயத்தில் செய்வதில் வெகுசமர்த்தர். கொஞ்சநேரத்தில் இவர்களுக்கு சினம் வராது. இதனாலேயே இவர்களை ஆண்கள் உரிமையாக்கிக்கொள்ள விரும்புவர்.

அதிர்ஷ்டக்கிழமை-வெள்ளி. அடுத்து திங்கள். அதிர்ஷ்ட நிறம்-எல்லா வெளிர் நிறங்கள். அதிர்ஷ்ட எண்.6,5. அதிர்ஷ்ட கல்-ரத்தினம், வைரம். வைரம் அணிய வசதி இல்லாதவர் வெள்ளியில் மோதிரம் அணியலாம்.

## இடப லக்கினமாக வந்தால் அதன் பலன்

ஸ்தூல தேகவான். களத்திர தோஷம், சத்தியவான், சுபகாரியபரன், பிறர் சொத்தை கிரகிக்க வல்லவன். மனோகபடி, புருஷ வசியன், வஸ்திராபரணமுள்ளவன். குணதோஷமறிவன். அடிமையுள்ளவன், பிற்கால புத்திரருடையவன். 5-13-16-19-20 இந்த வயதுகளில் சுரம், கண்டத்தில் வியாதி, பயம், சிரங்கு, இவைகளாற் பீடை. இந்த இலக்கினத்தை சுபக்கிரகங்கள் பார்த்தால் வயது 77 வரையிலிருப்பான். சூரியனும், சனியும் நல்லவர்கள். சனி ஒருவனே மேலான இராஜயோகம் கொடுப்பான். சந்திரனும் வியாழனும், சுக்கிரனும் பாபிகள், சந்திரன், வியாழன், செவ்வாய் மாரகன், புதன் கொல்லான். வியாழன் முதலானவர் கொல்லுவர். மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12ல் மாரகத்திற்குச் சமானமாகிய கண்டத்தைக் கொடுப்பார்கள். சந்திரன் வியாழன் கிரகங்களை ஆராய்ந்து அவர்கள் நிலைகளறிந்து சொல்லவும்.

## ஸத்யாசார்ய மதப்படி இடபலக்கின பலன்

பெருத்த உதடு, கன்னம், மூக்குகளையுடையவன். விசால நெற்றியுள்ளவன். கபம் வாதம் அதிகமான சரீர தாதா, அதிகம் செலவு செய்வதில் விருப்பம். பெண் சந்ததி உடையவன். அல்ப புத்திர சந்ததி. தகப்பன் தாய்களுக்குக் கெடுதல் செய்பவன். உற்சாகமுடையவன். கெட்ட நடத்தையுள்ளவன். தனவான். எப்போதும் பார்வையை விரும்புபவன். சாத்திரங்களை அறிந்தவன். தன் பந்துக்களுக்கு தனாதிகளை அளிப்பவன். ஆயுதம் பாசம். மிருகங்கள் இவைகளால் வேறு தேசத்தில் மரணமேற்படும். சரீரப்பிரயாசை, ஜலம், சூலம், சஞ்சாரம், வேலைக்காரர்கள், பலமுள்ள நாற்கால் மிருகங்கள் இவைகளால் மரணமுண்டாகலாம்.

## இந்த லக்கினத்திற்கு நல்லவர்கள் கெட்டவர்கள்

9, 10க்குடைய சனி ஒருவனே உத்தம ராஜயோக காரகன். சுக்கிரன் 6க்கு உடையவன். ஆனாலும் லக்னாதிபதி யாகையால் அசுபம் குறைவு.

புதன் 2, 5க்குடையவன். ஆகையால் ராஜயோக காரகன். புதன் சுக்கிரன் இருவரும் வலுத்தால் புலவன், கலைஞன்.

சந்திரன் 3க்குடையவன், அதனால் அசுபன்.

சூரியன் 4க்குடையவன், ஆகிலும் சுபனே.

செவ்வாய் 7, 12க்குடையவன் ஆகையால் அசுபன்.

குரு 8, 11க்குடையவன் ஆகையால் அசுபன்.

### சுபயோகங்கள்

1. சூரியன் + புதன்
2. சூரியன் + சனி
3. சூரியன் + சுக்கிரன்
4. புதன் + சுக்கிரன்
5. புதன் + சனி
6. சுக்கிரன் + சனி

இந்த லக்கினத்திற்கு குரு செவ்வாய் மாரகன். சந்திரன் குரு அசுபன். சனி 9ம் அதிபதி என்ற வகையில் பாதகாதிபதி.

## கிருத்திகை நட்சத்திரம் இரண்டாம் பாதப்பலன்

**ஆரையும் அறிந்து பேணும் அரும்பொருள் அற்பன் சாலன்**
**சீரிய செய்ய வேண்டான் சிதைவதே செய்வ தெல்லாம்**
**வாரியம் பொய்கள் சொல்வான் மனம்பிறர்க் கறிய வொண்ணான்**
**காரியம் சூசலன் அல்லன் காரிஅங் கிஷத்தி னானே. (54)**

(சுவடி எண். 1500)

***குறிப்பு:*** நூலக எந்தச் சுவடியிலும் செய்யுள் செப்பமாக இல்லை. சோதிடம் சுவடி 850 என்றதில் உள்ள செய்யுளை சோதிட கோட்பாடுகளுக்கிணங்க செப்பம் செய்து தரப்பட்டுள்ளது. இதற்கு நவாம்சம் சனியின் உடையதாகும். அதனாலேயே அசுபத்துவப்பலன் தரப்பட்டுள்ளது.

**இதன் பொருள் வருமாறு:** கிருத்திகை 2ம் பாதத்தில் பிறந்தவன் எல்லோரையும் தரம் பிரித்து போற்ற வல்லவன். இவன் வாழ்க்கையில் ஈட்டும் பொருள் சிலகாலம் குறைவாகவும் சில காலம் அதிகமாகவும் இருக்கும். இவன் எந்த காரியத்தையும் ஒழுங்காகச் செய்யமாட்டான். இவன் செய்யும் காரியங்கள் எல்லாம் சிதைந்துபோகும் அஃதாவது கெட்டுப்போகும். அதிகம் பொய் சொல்வான். இவன் மனதைப் பிறர் அறியமுடியாது. எந்தக் காரியத்தையும் செப்பமாகச் செய்யும் திறன் இவனுக்குக் கிடையாது. இந்த கிருத்திகையின் இரண்டாம் பாதம் சனியில் நவாங்கிசமாகும்

**ஜாதக சார தீபம் கிருத்திகை 2ம் பாதத்திற்குக் கூறும் பலன் வருமாறு:**

கிருத்திகை இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் சாஸ்திர விஞ்ஞானம் தெரியாதவன். அதாவது பாரம்பரியக் கல்வியோ அறிவியல் கல்வியோ இல்லாதவன் என்பதாம்.

## *இனி, கிருத்திகை 2ம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** தீர்க்காயுள் உள்ளவன். தன் குழந்தைகளால் சுகம் மகிழ்ச்சியுண்டு. தன் நடுவயதிலிருந்து இவனுக்கு பணம் சேரும். மன உறுதி உள்ளவன். தெய்வீக நாட்டமும், கோயில் அர்ச்சகர் பூசாரி, அல்லது பாதிரி இந்த நிலைகளில் பணம் செய்ய தீவிர ஈடுபாடு உள்ளவன். இசையில் ஆர்வம் உள்ளவன். போட்டி பந்தயங்களில் ஈடுபாடு உண்டு. செவிலித் தொழில், மருந்து கலக்குனர் (compounder), தொழுநோய் மருத்துவர் இப்படிப்பட்ட நிலைகளில் இவர்களைக் காணலாம். சிலசமயம் இவர்களுக்கு கழுத்து, பிடரி அல்லது வயிற்றுப் பகுதியில் புற்றுநோய் ஏற்படவும் வாய்ப்புண்டு.

**சந்திரன் நின்றால்:** அந்தஸ்தும் அழகும் தோற்றப் பொலிவும் உள்ளவன். அறிஞர் பெருமக்களிடையே பெரிதும் பழகுபவன். பித்தரோகம் உள்ளவன். இந்த பாதத்தில் நின்ற சந்திரனை சனி பார்த்தால் விரைவில் தாய் காலமாவாள். ரசாயனம், மண் வள பரிசோதனை முதலிய வற்றில் ஈடுபாடு இருக்கும்.

**செவ்வாய் நின்றால்:** நெற்றியில் அடிபடும். கண்களிலும் காயம் ஏற்படலாம். நரம்புத்தளர்ச்சி, கண்நோய், தொண்டைப்புண் முதலியநோய்கள் ஏற்படலாம். விருந்தினர்களைத் தாராளமாக உபசரிக்கும் குணமுள்ளவன். எல்லோருடனும் எளிதாகப் பழகுபவன். ஆனால் பழி வாங்கும் குணம் உண்டு. இந்த செவ்வாயுடன் ஆதிபத்திய அசுபத்துவம் கொண்ட சுபர்கள் சம்பந்தம் பெற்றால் இவனுக்கு ஆண் சந்ததி இராது. பொறியியல் வல்லுனராகவும், போர்தளவாட உற்பத்தியால் நிறைய சம்பாதிக்கும் வாய்ப்பு உண்டு.

**புதன் நின்றால்:** மிகவும் சந்தோஷமாகவும், எப்பொழுதும் தெம்பாகவும் இருப்பவன். ஒன்றுக்கு மேல் தாரம் உண்டு. பருத்த உருவம், நிறைய செல்வம், தன் குழந்தைகளால் மகிழ்ச்சி எல்லாம் உண்டு. 40 வயதுக்குமேல் இவன் துறவு மேற்கொள்ளலாம். இந்த புதனுடன் குரு சேர்ந்தால் ஜோதிஷம் மற்றும் அமானுஷ்ய கலைகளில் வல்லவன் ஆவான்.

**குரு நின்றால்:** மத சடங்குகள் ஸ்தாபனங்கள் முதலியவற்றால் பெரும்புகழ் அடைவான். நெட்டையான தோற்றம் உள்ளவன். தாயிடம் மிகவும் பாசம் உள்ளவன். இவனுடைய பலகீனம் என்னவென்றால் இளம் பெண்களுடன் சுற்றுவதே.

**சுக்கிரன் நின்றால்:** உத்தியோகத்திலோ அல்லது கடற்படையிலோ பணி செய்வான். இந்தப் பிறவி பெண்ணானால் இந்த சுக்கிரனை சந்திரன் பார்த்தால் அடிக்கடி மாதவிலக்கு கோளாறுகள் உண்டாகும். குழந்தைகள் அதிகம் பிறக்கும். ஆனால் சிலவே உயிர் வாழும்.

**சனி நின்றால்:** இவன் தன்னைவிட மூத்த பெண்ணை மணப்பான். அல்லது தன்னை விட வயதானவளோடு உடல் உறவு கொள்வான். இவனுக்கு திருப்தியான வாழ்க்கை அமையாது. குடும்பத்தில் சுகம் நிம்மதி இராது.

**ராகு நின்ற பலன்:** இவன் ஆன்மீகத்தில் பற்றுள்ளவன். இவனுக்கு செல்வமும் குழந்தைகளும் அழியும். இவனுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களுடன் தொடர்பு உண்டு. வெளிநாட்டில் சம்பாத்தியம் இருக்கலாம். அல்லது மிகவும் ஏழையாகி பிச்சையும் எடுக்க நேரலாம்.

**கேது நின்றால்:** இவன் உற்றோர் உறவினரைப் பிரிந்து நெடுந்தொலைவில் வாழ்வான். மது மாது இவற்றில் அதிக நாட்டம், பொருள் இல்லாத ஏழ்மை வாழ்க்கை உள்ளவன்.

## *கர்ம விபாகத்தில் சொல்லியபடி கிருத்திகை 2ம் பாதத்தில் பூர்வ புண்ணிய பலன்*

இந்தக் கிருத்திகை 2ம் பாதத்தில் பிறந்தவன் பூர்வ ஜென்மத்தில் இந்திர சர்மா என்னும் அந்தணனாக இருந்தான். இவன் மனைவியின் பெயர் ருத்ரமதி. இவள் மிகவும் கெட்ட குணம் உள்ளவளாகவும், கலகக்காரியாகவும் இருந்தாள். இந்திர சர்மா தவறாமல் வேதம் ஓதி 6 அங்கங்களையும் படிப்பவனாக இருந்தான்.

ஒரு சமயம் அவன் ஊரை ஆண்ட அரசன் மாண்ட போது அந்த கர்ம சடங்குகளில் பங்கேற்று உணவு கொண்டான். இவனுக்கு யானை, துணிமணி, பல நாட்களுக்கு உதவும் பலசரக்கு உணவு வகை, செல்வம் எல்லாம் தானமாக கொடுத்தார்கள். நெடுநாள் அவற்றை அனுபவித்து மகிழ்ந்தான். நெடுநாள் கழித்து இவன் ஆயுள் முடிந்த உடன் ஒரு யுக காலம் நரகத்தில் தள்ளப்பட்டான். பிறகு புழு, பூச்சி, புலி முதலிய யோனிகளில் பிறந்து முன் ஜென்ம புண்ணியத்தால் கடைசியில் மீண்டும் மனிதனாகப் பிறந்தான்.

இவன் பூர்வ ஜென்ம பாவத்தால் தற்போது இவனுக்கு சந்ததி இல்லை. குழந்தையும் மனைவியும் இறக்கிறார்கள். இந்த பாவத்தைப் போக்க தற்போது இவன் ஒரு லட்சம் காயத்திரி மந்திர ஜெபம் செய்யவேண்டும். அதில் 10ல் ஒரு பாகம் ஓமம் செய்யவேண்டும். ஒரு லட்சம் ம்ருத்யுஞ்ஜெய மந்திரம் ஜெபம் செய்யவேண்டும். 10 நிறம் கொண்ட பசுவை வேதம் தெரிந்த நல்ல அந்தணனுக்கு தானம் செய்ய வேண்டும். தன் சொத்தில் 6ல் ஒரு பங்கை தானம் செய்ய வேண்டும். அதன் பின் 100 அந்தணர்களுக்கு உணவு அளிக்க வேண்டும். இதைச் செய்த பின் இவன் நோய்கள் நீங்கும். மறிக்காமல் குழந்தைகளும் பிறக்கும்.

## *இனி இந்த கிருத்திகை 2ம் பாதத்திற்கு காலச் சக்கர தசை வருமாறு*

| | |
|---|---|
| மகரச்சனி | 4 வருஷம் |
| கும்பச்சனி | 4 வருஷம் |
| மீன வியாழன் | 10 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 10 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| கடகச் சந்திரன் | 21 வருஷம் |
| சிங்கமாதித்தன் | 5 வருஷம் |
| மிதுனப் புதன் | 9 வருஷம் |
| ஆக வயது | 85 வருஷம் |

## *கிருத்திகை 3ம் பாத பலன்*

**ஊனம துடைய னாகும் உறவொடு பகையும் எண்ணான்
மானம துடை னாகும் மனம்பிறர்க் கறிய வொண்ணான்
மேனியும் உருவம் நல்லன் மிக்கதோர் அறிவு மில்லை
கானகந் திரிந்து வாழ்வான் காரிஅங் கிஷத்தி னானே.** (55)

*(சுவடி எண். 1500)*

(குறிப்பு: அச்சிட்ட நூல்களில் இச்செய்யுள் வேறு விதமாக உள்ளது. சோதிட நூற் கொள்கைப்படி சுவடி எண் 85ல் உள்ளதை இது செப்பம் செய்து அமைக்கப்பட்டது.)

கிருத்திகை 3ம் பாதம் ரிஷபத்தின் 2வது நவாம்சமாகும். இது சனியின் கும்பராசியைச் சாரும். இதனால் இதற்கு ஏறக்குறைய கெட்டபலனே சொல்லப்பட்டது. இது இச்செய்யுளின் பொருள் வருமாறு.

இந்த கிருத்திகை 3ம் பாதத்தில் பிறந்தவன் உடலில் ஏதாவது ஊனம் உண்டு. பிறரிடம் உறவு பகை எதையும் எண்ணாமல் கண்மூடித்தனமாகப் பழகுபவன். இவன் மானம் உள்ளவன். அஃதாவது ரோஷம் உள்ளவன். இவனுக்கு அறிவு கூர்மை இல்லை. இவன் மனத்தை பிறர் அறியாவண்ணம் அமுக்கமாக இருப்பவன். புத்தி கூர்மை இல்லாவிட்டாலும் அழகான தோற்றம் உண்டு. இவன் காடுகளில் திரிந்து தன் வாழ்வை கழிப்பவன். அஃதாவது மக்கள் நடமாட்டம் அதிகமில்லாத ஒதுக்குப்புறமான இடங்களில் இவன் வாழவேண்டி வரும்.

### *கிருத்திகை 3ம் பாதத்திற் பிறந்தவர்கள் பலன் - பிற நூல்களின்படி*

இவன் கடூரமான குணம் உள்ளவன். புத்தியும் பழக்க வழக்கங்களும் சரியாக இராது. ஒழுக்கக்கேடுள்ளவர்கள். இவர்கள் நெருக்கமானவர்களாகவும், நல்லவர்களாகவும் அமைவதில்லை. இந்த அவல வாழ்விலேயே இவர்கள் திருப்தி காண்பார்கள்.

### *இனி கிருத்திகை நட்சத்திரம் 3ம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இதில் சூரியன் சுப சம்பந்தம் சேர்ந்து இருந்தால் நல்லது. இல்லையேல் இவன் ஏழை. பிச்சையும் எடுப்பான். வாழ்நாள் கடைசிவரை இந்த கதிதான்.

எப்போதும் இடம் விட்டு, இடம் அலைந்துகொண்டே இருப்பான். முரண்பாடான பல்வகை தீராநோய்களால் பீடிக்கப்படுவான். இந்த பாதத்தில் பிறந்த குழந்தைக்குப் பாலாரிஷ்டம் உண்டு. இவன் முடிதிருத்தும் தொழில் செய்பவனாகவும் இருப்பான். இதில் பெண் பிறந்தால் இந்த சூரியனை சந்திரன் பார்த்தால் இவள் முறை மீறிய (வேசி) தொழில்களால் பணம் சம்பாதிப்பாள். பாலியல் நோய்களால் பீடிக்கப்படுவாள். ஆணானால் ஏற்றுமதி, மீன் தொழில் முதலியவற்றால் சம்பாதிப்பான்.

**சந்திரன் நின்றால்:** இவன் நெட்டையானவன். ஆனால் ஏழை. அறிவாளி. இதில் பெண் பிறந்து செவ்வாய் அல்லது ராகு பார்த்தால் இவளுக்கு 30 வயது ஆகும்போது கணவன் இறக்கலாம்.

**செவ்வாய் நின்றால்:** அரசின் மூலமும் நகை வாணிபம் முதலியவற்றாலும் மிக அதிகமாகவும் சம்பாதிப்பான். மிகவும் நிம்மதி. உடல் உழைப்பற்ற உத்தியோகம், தொழில் அமையும். இவன் பண்டிதன். மத நூல்களில் கற்றுத் தேர்ந்தவன். பிறரை அச்சுறுத்தும் தோற்றம் உள்ளவன். வாயாடி, ஆனால் திறமைசாலி. முன்னோர் சொத்து இவனுக்குக் கிடைக்கும். போட்டி பந்தயங்களில் ஈடுபாடும் வெற்றியும் உண்டு.

**புதன் நின்றால்:** இவன் செய்யும் காரியங்களை எல்லாம் அனுபவத்திற்கு ஒத்து வருபவை. இவன் எதிலும் திட சித்தம் உள்ளவன். அந்தஸ்து அதிகாரம் உண்டு. அழகான தோற்றம் உண்டு. இந்த புதனுடன் சனி சேர்ந்தால் விஞ்ஞானியாகவும், அறிவு ஜீவியாகவும் இருப்பான்.

**குரு நின்ற பலன்:** இவன் அரசு ஊழியன். பெரும்பாலும் உயர்மட்டத்திற்கு ஆலோசனை சொல்லுபவனாக இருப்பான். மிகவும் உயர்ந்த, திறமைசாலி யாகவும் இருப்பான். இவனுக்குப் பலருடைய நேசமும் பாசமும்

கிட்டும். ஆனால் பணம் அவ்வளவாக சேராது. தன்னைப் பொறுத்தவரை வரம்பு, நெறி, ஒழுக்கத்திற்கு உட்பட்டு வாழ்பவன். ஆனால் பிறரிடம் அதை எதிர் பார்ப்பதில்லை.

**சுக்கிரன் நின்றால் :** இவன் தாராளமானவன். வள்ளல். இவனுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் உண்டு. பரிமள வாசனைப்பொருள் முதலியவை வாணிபம் செய்வான் (Cosmatics). ஆசிரியன், சங்கீத வித்துவான் அல்லது திரையுலக நடிகன் போன்ற தொழில்களில் இருப்பான்.

**சனி நின்றால்:** பயிர்த்தொழில் மூலம் சம்பாத்தியம் உள்ளவன். இது பெண்ணாகி, அந்த சனியை சூரியன் பார்த்தால் கல்யாணம் கூடாது. துரதிர்ஷ்டமான வாழ்க்கை உண்டாகும். இது ஆணாகி இந்த சனியை புதன் பார்த்தால் ஆண் தன்மை அற்றவனாக இருப்பான்.

**ராகு நின்றால்:** பேசுவதில் தடங்கல், திக்குவாய் உண்டு. சிவந்த கண்கள் உள்ளவன். சோம்பேறி, நல்லதும் செய்யமாட்டான், கெட்டதும் செய்யமாட்டான். மிகவும் கொடிய வறுமையில் உழல்பவன். மீன், பிளாஸ்டிக் போன்ற தொழில்களில் ஈடுபடுவான்.

**கேது நின்றால்:** போட்டி, பந்தயம், சூதாட்டங்களில் பெருந்தொகைகளை இழப்பவன். அரசாங்கத்திலிருந்து இவனுக்கு கெடுதல். குற்றச்சாட்டு முதலியவை ஏற்படும். கீழ்த்தரமான மக்களுடன் பழகுபவன். இவனுக்குப் பிறவாத, மனைவியின் பெண் குழந்தைகள் மூலம் மிகவும் துயரப்படுவான். தக்க சமயத்தில் இவனுக்குப் பிறரிடமிருந்து உதவிகள் கிடைக்கும்.

## *கர்ம விபாகம் சொல்லும் இவன் பூர்வ ஜென்ம பலன்*

முன் ஜென்மத்தில் சூரியபுரம் என்ற நகரில் உத்தியோதன் என்ற பெயருள்ள புகழ் பெற்ற அந்தணனாக இருந்தான். இவனுக்குக் கிரிஜா என்ற மனைவியுண்டு. இவன்

மனைவி மிகவும் கொடுமையான சுபாவம் உள்ளவள். தன் கணவனை மிகவும் திட்டுவாள். ஒரு சமயம் சூரிய கிரகணத்தின் போது ஒரு எண்ணெய் வாணியன் இவரிடம் வந்தான். இவன் இந்த பிராமமணனுக்கு ஒரு லட்சம் பொற்காசுகளைக் கங்கைக் கரையில் தந்தான். பிராமணன் தானம் வாங்கிக்கொண்டு தன் வீட்டுக்கு வந்தான். அதிலிருந்து இவன் வேதம் ஓதுவதை விடுத்து சுகபோகங்களிடையே வாழ்க்கையைக் கழித்துவந்தான். ஆனால் இவன் அந்த பொருளிலிருந்து ஒரு இம்மி கூட யாருக்கும் தானம் செய்யவில்லை. இதனால் யமனின் பார்வையில் இவன் பெரும் பாவியானான். ஒரு யுக காலம் நரகவாசம் பண்ணினான். பின்னர் காகப்பிறவி ஏற்பட்டது. அடுத்து நரியாகப் பிறந்து மீண்டும் மனிதனாகப் பிறந்தான்.

இவன் போன ஜன்மத்தில் பிறருக்கு வேத பாடம் கற்றுக் கொடுத்ததால், இப்பிறவியில் நிறைந்த செல்வம் பெற்றான். இப்பிறவியில் இவன் முதல் மனைவி இறந்தாள். பின்பு இவனுக்குப் பிறந்த மகனும் இறந்தான். இவனுக்கு உடலில் பல ரோகங்கள் பீடித்தன. சுகம் குறைந்தது. பூர்வ ஜென்ம பாவத்தால் இவனுக்குக் குழந்தைகள் பிறந்தாலும் உயிர் வாழ்வதில்லை. அப்படி ஒருகால் உயிருடன் இருந்தாலும் கிழத்தோற்றம் உள்ளவர்களாக இருப்பார்கள். இதற்குப் பிராயச்சித்தம் உண்டு. ஆனால் அதைச் செய்தாலும் பெண் சந்ததி ஏற்படும். ஆண் சந்ததி இராது.

இதன் சாந்திக்காக ஜாதவேதசே என்ற மந்திரங்களை 3லட்சம் முறை ஜபம் செய்யவேண்டும். அதன்பின் எள்ளு மற்றும் உரிய சமித்துடன் ஒரு ஜபத்தில் பத்தில் ஒரு பாகம் ஹோமம் செய்யவேண்டும். சதுரக்குண்டம் அமைத்துச் செய்யவேண்டும். ஹரிவம்ச புராணத்தைப் பாராயணம் செய்யவேண்டும். அதன்பின் ஒழுக்கமுள்ள பிராமணனுக்குப் படுக்கையும், பூமியும் தானம் செய்யவேண்டும். இப்படி செய்வதால் இவன் நோய் விலகும். ஆண் சந்ததியும் ஏற்படும்.

## *இனி இந்த கிருத்திகை 3ம் பாதத்திற்குரிய காலச்சக்கர தசை வருமாறு*

| | |
|---|---|
| 1. மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| 2. ரிஷபச் சுக்கிரன் | 16 வருஷம் |
| 3. கன்னி புதன் | 9 வருஷம் |
| 4. மீன வியாழன் (குரு) | 10 வருஷம் |
| 5. மகரச்சனி | 4 வருஷம் |
| 6. கும்பச் சனி | 4 வருஷம் |
| 7. தனுசு வியாழன் (குரு) | 10 வருஷம் |
| 8. விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| 9. துலாம் சுக்கிரன் | 16 வருஷம் |
| ஆக பரமாயுள் | 83 வருஷம் |

## *கிருத்திகை 4ம் பாத பலன்*

**மாந்துளிர் போல மேனி மனத்தோடு கல்வி கற்கும்**
**ஏந்திய தலத்துக் கெல்லாம் இசைந்ததோர் குருவு மாவான்**
**காந்தலில் நடக்க மாட்டான் கனங்குழை யவர்க்கு நல்லான்**
**சேர்ந்தவர்க் கன்ப னாகும் செய்யபொற் காலி னானே. (56)**

*(குறிப்பு: இதுவும் சுவடி எண். 1500ன் படி திருத்தப்பட்டது)*

இது ரிஷபத்தின் 3 நவாம்சம் ஆகும். இது குருவின் மீனமாகும். இதனால் இதற்கு சாத்வீகமான நல்ல பலன்கள் சொல்லப்பட்டதைக் காண்க.

இந்த கிருத்திகை 4ம் பாதத்தில் பிறந்தவன் உடல் நிறம் மாந்துளிர் போன்று சிவந்து பொன்னிறமாக இருக்கும். இவன் முழுமனதுடன் ஈடுபட்டுக் கல்வி கற்பான். தான் தோன்றிய சமுதாயத்திற்கே ஒரு வழிகாட்டும் குருவாகவே இருப்பான். இவன் மென்மையானவன். ஆகையால் வெயிலில் நடக்க மாட்டான். அழகிய பெண்களைக் கவர்பவன். அவர்களுக்கு நல்லவன். தன்னை யார் வந்து சேர்ந்தாலும் அவர்களுக்கு நல்லவனாக இருப்பவன் என்பது பொருளாகும்.

இந்த கால் சுக்கிரனின் ரிஷபத்தில் இருப்பதால் பெரும்பாலும் இவன் சிவந்த மேனியுள்ளவன் என்றும் , இந்த ராசி அதிபர் மற்றும் நவாங்கிஷ அதிபதி குரு இருவரைப் போலவே கல்வியிற் பெரியவனாக இருப்பான்.சுக்கிரனின் ராசி ஆனதால் இவன் பெண்களைக் கவர்வான் என்று கூறப்பட்ட இவை எல்லாம் பொருத்தமாகவே உள்ளன.

## கிருத்திகை 4ம் பாத பலன் ஜாதக சாரதீபத்தின் படி

“தீர்க்காயு பஹீ புத்ரஸ்ச்ச சதுர்த்தே சரணே பவேத்.” கிருத்திகை 4ம் பாதத்தில் பிறந்தவனும் நிறைய ஆண் குழந்தைகள் உண்டு. இவன் தீர்க்காயுள் உள்ளவனாகவும் இருப்பான். குரு புத்ரகாரகனாகையால் இவனுக்கு (இந்த காலின் நவாம்சாதிபன் குரு) அதிக ஆண் குழந்தைகள் உண்டு என்றும் தீர்க்காயுள் உள்ளவன் என்றும் சொல்லப்பட்டது.

## கிருத்திகை 4ம் பாதம் மற்ற நூல்களின் படி பலன்

அடக்கமான குணம், நல்ல நயமான பேச்சு, தர்ம சிந்தனை, எல்லோருக்கும் உதவும் குணம் எல்லாம் உண்டு. நல்ல பேச்சாளராகவும் இவர்கள் திகழ்வார்கள். இரக்க குணமும் அன்பும் உள்ளவர்கள்.

## *கிருத்திகை 4ம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இவன் ஏழையாக வாழ்க்கையில் அடிமட்டத்தில் வாழ்பவன். கொடூரமான சித்தம் உள்ளவன். தன் பெண்டாட்டி பிள்ளைகள் உறவினர்கள் இவர்களுக்கு தான் செய்யவேண்டிய பொறுப்புகளை நிறைவேற்ற மாட்டான். இவன் நீர் தன்மையுள்ள சளி, போன்ற நோய்களுக்கு ஆளாவான்.

**சந்திரன் நின்றால்:** இவன் மிகவும் கற்றறிந்தவன். மத சம்பந்தமான நூல்களை மிகவும் தெரிந்து வைத்தவன். ஆனால் பயந்தாங்கொள்ளி.

**செவ்வாய் நின்றால்:** இவன் நளினமான தேகம் படைத்தவன். வாழ்க்கையின் எல்லா சுகங்களையும் முழுமையாக அனுபவிப்பான். கடமை தவறாத பல குழந்தைகள் இவனுக்கு உண்டு. நீர் சம்பந்தமான நோய்கள் மற்றும் மலேரியா போன்ற நோய்களுக்கு ஆளாவான். மருந்துகள் மற்றும் வெடிமருந்துகள் போன்ற வியாபாரத்தால் அதிகம் சம்பாதிப்பான். கல்யாணத்தின் பின் இவன் வாழ்க்கை வளம் பெறும். இந்த செவ்வாயை சுப கோள்கள் பார்த்தால் நல்ல குணமுள்ள அழகிய 2 மனைவிகள் வாய்ப்பார்கள்.

**புதன் நின்றால்:** தான் செய்யும் தொழிலில் மிகவும் மேலான நிலையில் இருப்பான். தன் கடமையையும் பொறுப்புகளையும் முற்றும் உணர்ந்து செயல்படுபவன். இவனுக்கு ஆண் குழந்தைகள் அதிகம் உண்டு. 60க்கு மேல் 70க்கு குறைவாக ஆயுள் இவனுக்கு உண்டு. இந்த புதனுடன் குரு இணைந்தாலோ அல்லது அவனைப் பார்த்தாலோ தன் சமுதாயத்திற்குத் தலைவனாவான். பொதுத்துறை அல்லது நிதித்துறைக்கு ஆலோசகனாக நியமிக்கப்பெறுவான்.

**குரு நின்றால்:** தன் செயல்களில் நியாயமாக நடந்து கொள்வான். இதில் பிறந்தவருக்கு கணவன் அல்லது மனைவி மூலம் சம்பாத்தியம் உண்டு. தாய் மூலம் சொத்தும், நல்ல படிப்பும் இவர்களுக்கு கிட்டும். 27 வயதிற்குப்பின் திருவாதிரையில் குரு நடக்கும்போது இவர்களுக்கு திருமணம் நடக்கும்.

**சுக்கிரன் நின்றால்:** நடிப்புத் தொழிலாலும் சங்கீதத்தாலும் இவன் நிறைய சம்பாதிப்பான். எதிர்பாராமல் முன்னோர்கள் சொத்து இவனுக்கு கிடைக்கும். இவர்கள் கணவன் அல்லது மனைவி ஏதாவது வேலையில் இருந்து சம்பாதிப்பார்கள்.

**சனி நின்றால்:** இந்த சனியை சந்திரன் பார்த்தால் அது பெண்ணாகப் பிறந்தால் குரூபியாகவும், குணக்கேடியாகவும், நல்ல ஆரோக்கியம் அற்றவளாகவும் இருப்பாள். ஆணாக

இருந்தால் இவன் அதிகாரம் அந்தஸ்து, வெற்றி அதிக தனம் இவையெல்லாம் இவன் பழகும் பெண்கள் மூலம் இவனுக்கு வந்து சேரும்.

**இராகு நின்றால்:** இவனுக்குக் குடும்பத்தில் அக்கறை இராது. திருமணம் செய்துகொள்வான். ஆனால் பொறுப்புகளை நிறைவேற்ற மாட்டான். கடவுளின் பெயரில் பழியை போட்டு விட்டு அதிகம் புண்ணிய சேத்திரங்களுக்கு சென்று வருவான். தான் சம்பாதித்த பணத்தையெல்லாம் அழித்து விடுவான். நல்ல வயதில் சம்பாதித்து பிற்காலத்தில் கடவுளின் பெயரால் எல்லாவற்றையும் செலவழித்து விடுவான்.

**கேது நின்றால்:** தொழிலில் அதிக தடங்கல்கள் இவனுக்கு ஏற்படும். அதிகாரிகளை பகைத்துக்கொள்வான். மணவாழ்க்கையில் சிக்கல்கள் ஏற்படும். அல்லது மிகவும் தாமதமாகி திருமணம் நடக்கும். ஊதாரியாகவும் சுக போகியாகவும் வாழ்க்கை நடத்துவான்.

### *கிருத்திகை 4ம் பாதத்திற்கு உரிய கால சக்கர தசை பலன்*

| | |
|---|---|
| *1. மகரச் சனி* | *4 வருஷங்கள்* |
| *2. கும்பச்சனி* | *4 வருஷங்கள்* |
| *3. தனுசு வியாழன்* | *10 வருஷங்கள்* |
| *4. விருச்சிகச் செவ்வாய்* | *7 வருஷங்கள்* |
| *5. துலாம் சுக்கிரன்* | *16 வருஷங்கள்* |
| *6. மிதுனப் புதன்* | *9 வருஷங்கள்* |
| *7. கடகச் சந்திரன்* | *21 வருஷங்கள்* |
| *8. சிங்க மாதித்தன்* | *5 வருஷங்கள்* |
| *9. மேஷச் செவ்வாய்* | *7 வருஷங்கள்* |
| *ஆக வயது* | *83 வருஷங்கள்* |

## *கர்ம விபாகப்படி கிருத்திகை 4ம் பாதம் பிறந்தவனுக்கு பூர்வ புண்ணிய பலன்*

நர்மதை நதிக்கு தென் பாகத்தில் மகிஷ்மதி என்ற நகரத்தில் ஒரு பரம வைணவப் பிராமணன் வசித்து வந்தான். இவன் பெயர் யோத சர்மா என்பதாகும். இவன் மனைவியின் பெயர் தானவி. இவன் வைசிய அஃதாவது வியாபார தொழிலைச் செய்துவந்தான். அந்த ஊரில் மற்றொரு பணக்கார வைசியன் இருந்து வந்தான். அவனிடம் இவன் அதிகம் செல்வம் கடனாகப்பெற்றான். ஆனால் அக்கடனை தீர்க்காமலேயே இறந்துவிட்டான். தன் குலத்திற்கு விரோதமான தொழிலைச் செய்ததாலும் வாங்கிய கடனைக் கொடுக்காமல் இறந்துவிட்டதாலும் கோரமான நரகம் அடைந்தான். 20 ஆயிரம் வருடம் நரகத்தில் இருந்தான். அதன் பின் மாடாகவும் பன்றியாகவும் பிறவி எடுத்தான். இதற்கு பிறகு இவன் பெரிய பணக்கார மனிதனாகப் பிறந்தான்.

இவனுக்குப் பணம் கொடுத்த வியாபாரி இவனுக்கு மகனாகப் பிறந்தான். இவன் செல்வத்தை இவன் எப்போதும் அழித்துவந்தான். மது, மாது இவற்றில் தகப்பன் சொத்தை யெல்லாம் அழித்துவிட்டான். தனது மகன் நல்ல வாலிபம் அடைந்து இப்படி செய்யும்போது அந்த மகன் இறந்து விட்டான். அதனால் பூர்வ ஜென்ம பாவத்தால் இவனுக்கு புத்திரன் பிறக்கவில்லை. அதற்கான பிராயச்சித்தம் வருமாறு.

பொதுமக்களுக்காக ஒரு பெரிய கிணறு வெட்ட வேண்டும். பின்னால் ஓமம் செய்யவேண்டும். 12 துலா எடையுள்ள தங்கத்தை நல்ல ஆடைகளுடன் 10 நிறம் உள்ள பசுக்களோடும் வேதம் பயின்ற நல்ல பிராமணனுக்கு தானம் செய்யவேண்டும். அவனுக்கு நிறைய தட்சண்யம் கொடுத்து போஜனம் செய்துவைக்க வேண்டும். இதன் பின் இவன் நோய்கள் தீர்ந்து புத்திரனுடன் பல காலம் வாழ்வான்.

## *கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்தவர்களுடைய விம்சோத்திரி தசைகளும் அவர்களுக்கு ஏற்படும் நோய் கண்டங்கள் முதலியன.*

| | |
|---|---|
| முதலில் சூரிய தசை | 6 வருஷம் |
| சந்திர தசை | 10 வருஷம் |
| செவ்வாய் தசை | 7 வருஷம் |
| ராகு தசை | 18 வருஷம் |
| குரு தசை | 16 வருஷம் |
| சனி தசை | 19 வருஷம் |
| புதன் தசை | 17 வருஷம் |
| கேது தசை | 7 வருஷம் |
| சுக்கிர தசை | 20 வருஷம் |
| ஆக பரமாயுள் | 120 வருஷம் |

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவனுக்கு இவன் பிறந்த ஆண்டில் கண்டம். 3 வது வயதில் ஜலத்தால் கண்டம். 7வது வயதில் நெருப்பால் கண்டம். 10வது வயதில் உயரத்தில் இருந்து வீழ்வதால் கண்டம். 11 வது வயதில் நாற்கால் மிருகத்தால் கண்டம். 15 வது வயதில் விஷத்தால் கண்டம். 24வது வயதில் ஸ்தீரிகளால் தொல்லை. 26வது வயுதில் மருந்தீட்டால், ஆயுதத்தால் பயம். 27 வது வயதில் ரகசிய நோயால் பயம். 28 வது வயதில் முள்ளால் வெதுப்பு நோயால் பயம். 40 வது வயதில் திருடர்களால் பயம். 48 வது வயதில் வயிற்று நோயால் தொல்லை. 53 வது வயதில் நீரிழிவு நோயால் தொல்லை. 60 வது வயதில் மூல வியாதியால் தொல்லை. 78 வது வயதில் பித்த சுரத்தால் தொல்லை. இது தாண்டினால் 80 வது வயதில் கார்த்திகை மாதம் 32ம் தேதி வரும் கார்த்திகை மாதம் த்ரயோதசி சனிக்கிழமை, தான் பிறந்த நாள் கூடிவரும்போது 7 நாழிகைக்கு மேல் மரணம். இதையும் கடந்தால் 91 வது வயது சென்று வைகாசி மாதம் அமரபட்சம் திரிதியை திதி கடந்து 7 நாழிகைக்கு மேல் பித்தம் அதிகமாகி அந்த நோயால் மரணம்.

இவன் பிறந்த லக்கினசாரம் சூரியன் ஆகில் குணவான், தரித்திரன்.

இவன் பிறந்த லக்கின சாரம் சந்திரன் ஆகில் ராஜ புருஷன்-பலராலும் விரும்பப்பட்டவன், சிறப்புடையவன்.

இவன் பிறந்த லக்கின சாரம் செவ்வாய் ஆகில் சேவகன், படைவீரன்.

இவன் பிறந்த லக்கின சாரம் புதன் ஆகில் வித்துவான், வியாபாரி.

இவன் பிறந்த லக்கின சாரம் குரு ஆகில் ராஜபுருஷன்.

இவன் பிறந்த லக்கின சாரம் சுக்கிரன் ஆகில் விவசாயத்தால் லாபம், பெரும் கல்வியுடையவன்.

இவன் பிறந்த லக்கின சாரம் சனியாகில் கள்ளன்.

இவன் பிறந்த லக்கின சாரம் ராகுவாகில் கள்ளன், மூடன், ஆனால் தெய்வபக்தியுடையவன்.

இவன் பிறந்த லக்கின சாரம் கேதுவாகில் கள்ளன், பரமாக்கிரவான், ஆனால் நோயுடையவன்.

கிருத்திகையும் புதனும் சேர்ந்தால் அமிர்தயோகம். வெள்ளிக்கிழமையானால் சித்தயோகம். ஞாயிறும் பஞ்சமிக் கிருத்திகையும் சேர்ந்தால் விஷயோகம். நவமியும் வியாழனும் சேர்ந்தால் பிராணயோகம். அதுவே பிரதமையானால் வரயோகம். இந்த நட்சத்திரத்தில் தென்னம்பிள்ளை வைக்க, தானம் கொடுக்க நல்லது. பயணத்திற்கு தயிரும் சோறும் உண்டு கிளம்புவது நல்லது.



## அத்தியாயம் - 5

# ரோகிணி நட்சத்திர பலன்கள்

ரோகிணி நட்சத்திரம் 27 நட்சத்திரங்களில் நான்காவது ஆகும். ராசி மண்டலத்தில் இது 40 பாகையிலிருந்து 53 பாகை, 20கலை வரை வியாபித்துள்ளது.

இதற்கு பிரமன் அதிதேவதை

அரபியில் இதன் பெயர் - அத் - தபரன் (Addhabaran)

இது ஒருவனை பின்பற்றுகிறது என்ற பொருள் (சந்திரன்)

கிரேக்க பெயர் - அல்டிபரான் (Al-debaran)

சீன பெயர் பீ - ஸ்யூ (Pisieu)

புராணங்களில் ரோகிணி பலராமனின் (அவதார புருஷன்) தாயாக சொல்லப்படுகிறது. இவள் சந்திர கிரகத்தின் மனைவியாகவும் காசிபமுனிவரின் மகளாகவும் சொல்லப் படுகிறாள். இது சிறந்த பசு என்ற பொருளுடையது. சுரபி என்ற பாத்திரத்தையும் மின்னலையும் உடலின் ரத்த நாளத்தையும் இது குறிக்கும். 5 நட்சத்திரங்கள் கொண்ட தொகுதியாக ரோகிணி நட்சத்திரம் சொல்லப்படுகிறது. தென்னிந்திய கொள்கைப்படி 42 நட்சத்திரங்கள் கொண்ட தொகுதியின் வடிவமாக ரோகிணி சொல்லப்படுகிறது.

### *இனி ரோகிணி நட்சத்திர பலன்*

**செய்வன திருந்தச் செய்வான் சேயிழை யார்க்கு நல்லான்**
**மெய்யுற மணியும் பொன்னும் மகிழ்ச்சியாய் அணிய வல்லான்**
**நெய்யுடன் பாலும் கூட்டி நிரம்பவே உண்பன் கற்றோன்**
**உய்யவே பகுத்திட் டுண்ணும் ரோகிணி நாளி னானே. (57)**

*(சுவடி எண். 1500)*

ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்தவன் தான் செய்யும் காரியமெல்லாம் செப்பமாக திருத்தமாகச் செய்வான். பெண்கள் நட்பும் அவர்கள் பால் நேசமும் அவர்களுக்கு நல்லவனாகவும் இருப்பான். பொன்னும் இரத்தினமும் சேர்ந்த அணிகலன்களை தன் அழகு வெளிப்படும்படி அணிந்து கொள்வான். நெய்யுடன் பால் முதலியவற்றுடன் நிரம்ப உண்ணுபவன். கிடைப்பவற்றை எல்லோருக்கும் பகுத்தளிப்பான். ரோகிணி நட்சத்திரம் சுக்கிரனின் ரிஷப ராசியாகையால் பெண்களைக் கவர்பவன். இது சந்திரனின் நட்சத்திரமாகையால் நல்ல போஜன சுகம் உண்டு என்று கூறினார்.

## இனி சுவடி 1500, 850 இவற்றில் உள்ள செய்திகள்

இந்த நாளுக்குத் தெய்வம் பிரம்மா, பஞ்சபூதத்தில் பிரிதிவியைச் சார்ந்தது. இது அகத்திய கோத்திரம். மனித கணம். சாதி வேளாளன் (நான்காம் வருணத்தவன்). யோனி (கொம்பேறி மூக்கன்) பாம்பு. பட்சி ஆந்தை. விருட்சம் நாவல். இவன் குணம்-சத்திய வாசகனாம். பாம்புச் செவியன். சமயப்பற்றுள்ளவன். தன் பிரதாபத்தை நிரூபித்துக் காட்ட வல்லவன்.

இதில் பெண் திரண்டால் சுகத்துடன் இருப்பாள். இது விவாகத்திற்கு நல்லது.

இதில் சீமந்தம் பண்ண - நல்ல சாப்பாடு வசதி உண்டாகும்.

இதில் அன்னப்ராசீனம், கோடியுடுக்க பொன் பூண, மரம் வைக்க நன்று.

இதில் வருஷம் பிறந்தால் தானியம் பெருகும்.

இவன் (இதில் பிறந்தவன்) காலும் கையும் உடம்பும் அழகியவன். வயிறு திரண்டிருக்கும். புத்திமான். முகத்தில்

அல்லது அரையில் மரு உண்டு. இந்த நட்சத்திரம் ஆரம்பித்து 40 நாழிகை விஷகடிகை. வெள்ளிக்கிழமை ரோகிணி கூடப்பிறக்கில் நோய் உண்டாகில் 7 நாளில் குணமாகும். இது வெதுப்பு நோயாம். நோய் தீராவிட்டால் நெய்யில் ஓமம் பண்ண வேண்டும். யாத்திரை கிளம்ப வேண்டுமானால் பாலருந்திச் செல்லவேண்டும்.

இந்த நட்சத்திரத்தில் வியாழக்கிழமை சேர்ந்தால் விஷயோகமாகும்.

இந்த நட்சத்திரத்தில் சனிக்கிழமை கூடினால் சித்த யோகம்.

## இனி பிற நூல்களின்படி ரோகிணியின் பலன்

### தமிழ் ஜாதகாலங்காரம்

**நீரதிக தாகமுளன் சொன்னது கேட்பான் புலவன் நிருபனாகும்**
**பாரன் அன்னம் இடும்சீமான் இரும்புவியா பாரி நெய்பால் பட்சம் உண்பான்**
**சேரும் இரு விழிபருத்து புருவமு மகற்றே நெருங்கும் நேயன் என்றும்**
**ஓரம் உரையால் உள்ளங் கால் உரத்தோன் திடநடை ரோகிணியினானே.**

ரோகிணியில் பிறந்தவன் அதிக தாகமும் அதனால் அதிக நீரும் குடிப்பவன். பிறர் சொல்லுக்கு மதிப்புக் கொடுப்பவன். வித்துவானாகவும், அரசனாகவும் இருப்பான். பசித்தோர்க்கு வயிறு நிரம்ப அன்னம் இடும் பாரபுத்தி உள்ளவன். இரும்பு வியாபாரியாகவும் இருப்பான். நெய் பால் தயிர் உண்பதில் பிரியமுள்ளவன். விசாலமான கண், அகன்று நெருங்கிய புருவம் உடையவன். ஓரம் சொல்லாமல் நியாயம் பேசும் குணமுள்ளவன். வலுத்த உள்ளங்காலும் திடமாக நடக்க வல்லவனுமாவான்.

### பிருகத்ஜாதகம்

**ரோஹிண்யாம் சத்ய சுசீ ப்ரியம் வத, ஸ்திரமதி சுலுபஸ்ச்ச**

ரோகிணியில் பிறந்தவன் உண்மை பேசுபவன். இனிய வசனம் பேசுபவன், ஸ்திர புத்தி உள்ளவன். உருவம் அழகியவன்.

**யவன ஜாதகம்**

**சுருபஸ்திர தீர்வாணி போக பாக் சுரதப்ரிய !**
**ப்ரியவாச் சதுரோ தக்ஷஸ் தேஜஸ்வீ தாத்ருதீக்ஷ் யண்யஜ !!**

ரோகிணியில பிறந்தவன் அழகிய வடிவம் உள்ளவன். அறிவாளி. நன்றாகப் பேசுபவன். போகத்தில் பிரியம், (சாப்பாடு முதலியவை) சிற்றின்பத்தில் அதிக பற்றுள்ளவன். அபிமானி. சதுரன். தீரன். தேஜஸ் உள்ளவன். தீட்சணிய புத்தி உள்ளவன்.

**ஜோராப்ர தீபம்**

**அன்ய களத்ரகாமீ பூதக்குத் க்யாதி யுத ஸுதேஜா !**
**ப்ரஜே பதேர்ப ப்ரியவாக் ஸருப**
**சுசி சதா ஸ்திர சத்யவாக் சசாங்கே !!**

ரோகிணியில் பிறந்தவன் பரதாரகமனம் பண்ணுபவன். (பிறர் மனைவியால் இன்பம் துய்ப்பவன்) வல்லவன், புகழ் உள்ளவன். பிரஜைகளிடமும் தன் யஜமானனிடமும் பிரிய வசனம் பேசுபவன். வடிவழகன். தூய்மையுள்ளவன். உண்மை பேசுபவன். எப்பொழுதும் திட சித்தம் செயல் உள்ளவன்.

**ஜ்யோதிஷ சித்தாந்த சாரம்**

**ஸ்யாத் தர்ம கார்யே குசல குலீன சுசாரு தேஹோ விலசக் கலேபர !**
**ஸ்மராக்னி னாகுலிதாகி வாசயோ யோ ரோஹிணீஜ: தனீச மானீ !**

ரோகிணியில் பிறந்தவன், சத்காரிய வாதி. ஒழுக்க சீலன். அவயவ அழகமைப்புள்ளவன். அதிக இச்சை காமம் உள்ளவன். பணக்காரன், கர்வமுள்ளவன்.

## மற்ற நூல்கள்

இதில் பிறந்தவர்கள் சாமர்த்தியசாலிகள். செல்வந்தர்கள். பார்வையில சிறிது குறை இருக்கும். இது கிருஷ்ணபகவான் உதித்த நட்சத்திரம். ஆகையால் இதில் பிறப்பது புண்ணியம் என்று கூறப்படும். கண்ணனைப் போலவே பலரையும் வாழவைக்கும் குணம் உண்டு. சத்திய சீலர். ஒழுக்கமுண்டு. முடிவை மாற்றிக்கொள்ளாதவர். இவர்கள் சிறிது பயந்த சுபாவம் உள்ளவர்கள். ஆனாலும் இவர்களைக் கண்டு மற்றவர்களும் பயப்படுவார்கள். ஊக்கமுடையவர்கள். இரவில் இவர்களுக்கு அதிக ஊக்கம் உண்டு. இளமையில் கல்வி முன்னேற்றமிராது. தாய் தகப்பனுக்கு இவன் பிறந்தபின் அவ்வளவு முன்னேற்ற மிராது. அரசியல், சட்டம், நீதி போன்ற துறைகளில் கல்வி அமையும். எழுத்துத்துறையும் அமையும். அவர்கள் தன் உடன்பிறப்புகளில் மூத்தவராக இருப்பதுண்டு.

எந்த இடத்திலும் நடுப்பாகத்தையும், உடலில் நெற்றியையும் இது குறிக்கும். கால்நடைச் செல்வம் அதிகமுண்டு. மலைவளப் பொருட்கள் உடையவர்கள். விவசாய மிராசுதார்கள். ஆட்சிப்பொறுப்பில் உள்ளவர் களாகவும் இருப்பார்கள்.

### *பிறர் மதப்படி இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தன்மைகள்*

**ஆண்கள்:** ஒல்லி தேகம் உடையவர்கள். ஒளிவீசும் கண்கள், கவர்ச்சியான தோற்றம் உள்ளவர்கள். சிறிது பொறுமையற்றவர்கள். கோபம் வந்தால் அடங்காது. இவர்கள் முடிவை யாராலும் மாற்றமுடியாது. தன்னை மீறிப் போக யாரையும் விடமாட்டார்கள். பிறர் அறிவுரை கேட்க விரும்பாதவர்கள். பிறரிடம் எளிதில் குற்றம் காண்பார்கள். இவர்கள் குறிக்கோள் நிறையாக இராது. தான் நேசிக்கும் யாருக்கும் எந்த தியாகத்தையும் செய்வார்கள். ஆனால் தான் விரும்பாதவர்களுக்கு, தொல்லையும் கொடுப்பார்கள்.

உண்மை விரும்பி. வாழ்க்கையில் ஏற்றத்தாழ்வுகள் நிறைய உண்டு. நாளைக்காக எதையும் விட்டு வைப்பது இல்லை. தன் சுகத்துக்காக எல்லாவற்றையும் செலவழிப்பார்கள். கைகட்டி வேலை செய்யாமல் சுதந்திரமாகவே தொழில் செய்ய விரும்புவார்கள். எல்லாத்தொழில்களையும் தெரிந்து வைத்திருப்பார்கள். பால்பண்ணை, சர்க்கரை ஆலை, இரசாயனப் பொறியாளர் போன்ற நிலைகளில் வேலை செய்வார்கள். 18 முதல் 36 வயது வரை கடினமான காலம். 38முதல் 50 வரை மிகவும் உயர்ந்த போகமுள்ள வாழ்க்கை கிட்டும். இது 75 வரை தொடரும். இவர்கள் யாரையும் நம்பக்கூடாது.

**குடும்பவாழ்க்கை:** தகப்பனால் அதிக முன்னேற்றம் இராது. தாயால் முன்னேற்றம் உண்டு. மதப்பற்று அதிகம் இராது. மண வாழ்க்கையில் சிக்கல்கள் இருக்கலாம்.

**ஆரோக்கியம்:** இரத்த கெடுதி, சோகை, மஞ்சள்காமாலை, மூத்திராசையக்கோளாறு, இரத்தத்தில் சர்க்கரை,நீரிழிவு, மூச்சுத்திணறல், தொண்டை நோய், சில சமயம் பக்கவாதம் போன்ற நோய்கள் ஏற்படலாம். ஜாதகம் வலுத்து சந்திரனும் வலுத்திருந்தால் அவ்வளவு பாதிப்பு இராது.

**பெண்கள்:** வடமொழி ஸ்த்ரீஜாதகப்படி இதில் பிறந்த பெண்களின் குணங்கள்

**ஜாதா பவேத்ஸ்ரீத்வத ரோ ஹிணீஷி**
**ப்ரபூத காத்ரா சுசிரப்ரமத்தா !**
**பதிப்ரதானா பித்ரு மாத்ரு பக்தா**
**சுபுத்ர கன்யா விபவை ஸமேத !!**

ரோகிணியில் பிறந்தவள் தூய்மையும் அழகும் உள்ள சரீரம் உள்ளவள். தன் கணவனையே முக்கியமாகக் கொள்பவள். தாய் தந்தை மேல் அதிக பக்தி உண்டு. ஆண் பெண் குழந்தைகள் உண்டு. வளமான வாழ்க்கை உண்டு.

**ஆயுஸ்மதி சுதவதி கன்னியக குலவர்த்தினி**
**தன்யா மானவதி சைவ ரோகிணியாம் ஜாயதே ஹி, ஸா**

இதில் பிறந்தவள் நீண்ட ஆயுள் உள்ளவள். ஆண், பெண் குழந்தைகள் உள்ளவள். தன் குலத்தைப் பெருமைப்படச் செய்பவள். மானம் உள்ளவள் என்றும் கூறப்பட்டது.

கொக்கோக மதனநூல் என்ற சங்கராச்சாரியார் பெயரில் வழங்கப்படும் நூலின்படி, இதில் ரோகிணியில் பிறந்த பெண்களின் பலன்கள்:

இந்த நட்சத்திரத்தில் பிறந்த பெண்கள், முனி தத்துவத்தைச் சார்ந்தவள் என்று சொல்லப்படுகிறது. இவர்கள் குணங்களை ஆராய்ச்சி முன்னுரையில் காண்க.

## *ரோகிணியில் பிறந்த பெண்ணின் தனிப்பலன்*

**மேனிதான் அறவும் தூய்யள் வெவ்விய கோபம் செய்யும்**
**கானிடைத் திரிய வேண்டிக் கருதுவாள் பிறரை எண்ணி**
**மானிட மில்லை மேன்மேல் மனக்கள முடைய ளாகும்**
**ஊனமில் திரண்ட கொங்கை உ ரோகிணி நாளி னாளே ! (58)**

இவள் மிகவும் பரிசுத்தமான உடல் உள்ளவள். முன்கோபமுண்டு. பிற மனிதர்மேல் இவளுக்குச் சிறிதும் இரக்கம் இராது. மனத்தில் வஞ்சமும் கனவும் உள்ளவள். நல்ல உடல்வாகு, திரண்டுருண்ட மார்பகம் இவற்றுடன் அழகியாக இவள் இருப்பாள் என்பதாம்.

## *பிற நூல்களின்படி இதில் பிறந்த பெண்களின் தன்மைகள்*

இவள் அழகி, கவர்ச்சியான கண்கள் உள்ளவள். நடுத்தரமான உயரமும் சிவந்தமேனியும் உள்ளவள்.

**குணங்கள்:** கச்சிதமாக உடுப்பவள். நல்ல நடத்தை உண்டு. தோற்றத்தில் வீண் பெருமையும் கர்வத்தையும் காட்டுபவள். ஆனால் பலகீனமான மனம் உள்ளவர்கள். முன்கோபிகள், வம்புகளை இதனால் வளர்த்துக் கொள்வார்கள். எதார்த்தவாதி. தனிமை விரும்பி. தூண்டி விடப்பட்டால் எந்த வன்முறைக்கும் தயங்கமாட்டார்கள்.

**கல்வி:** இயல்பாகவே கல்வியில் நாட்டம் உண்டு. விவசாயம், தையல், நடுநிலை, கல்வி இவற்றில் பயிற்சி உள்ளவள். எண்ணெய், பால்வளம், ஓட்டல், தையல், பயிரிடல் போன்ற தொழில்களைச் செய்பவள்.

**குடும்பம்:** இவள் குடும்ப வாழ்க்கை இனிதாக இருக்கும். கணவனாலும் குழந்தைகளாலும் அதிகபட்சம் சுகம் பெறுபவள். இவள் முரட்டுத்தனத்தை விட்டால் மண வாழ்க்கை அமைதியாக இருக்கும். கணவனை சந்தேகப் படுவதால் மணவாழ்க்கை கெட்டு விவாகரத்திலும் முடியலாம். எனவே இந்த குணத்தைத் தவிர்க்கவேண்டும்.

**உடல் நலம்:** பொதுவாக ஆரோக்கியம் உண்டு. வயதேர கால்மூட்டு இவைகளில் வலியும், ஸ்தனங்களில் வலியும் இவற்றில் ஒரு கால் புற்று நோயும் ஏற்படலாம். ஒழுங்கற்ற மாத விலக்குகள் தொண்டைவலி, அதிக பருக்கள், கழுத்து வீக்கம் இவை இருக்கலாம். ஜாதகம் வலுத்து சந்திரன் வலுத்தால் நோய்கள் இராது.

ஒரு பெண் ரோகிணியில் வயதுக்கு வந்தால் சண்டைக்காரியாகவும் அடிக்கடி கருச்சிதைவு செய்து கொள்பவளாகவும், உடல் விற்று பிழைப்பவளாகவும் இருக்கலாம். குரு பார்வை இருந்தால் அல்லது சேர்ந்தால் இந்த தொல்லைகள் இராது.

**பிற செய்திகள்:** இவள் வட்டமுகமும், கவர்ந்திழுக்கும் உருவமும் உள்ளவள். நல்ல சிந்தனா சக்தியும், படிப்பும் மூளைத்திறனும் உள்ளவள். பேச்சுத்திறனும் கவன சக்தியும் உண்டு. தாய் தந்தையர்மேல் பாசமும், தன் குடும்பத்தில் அக்கரையும் உள்ளவள். நேர்மையான, சுத்தமான பழக்கம் நடத்தைகளால் இவள் வாழ்க்கை என்றும் இனிமையாகவும் சந்தோஷமாகவும் இருக்கும்.

## ரோகிணி நட்சத்திரத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** இவன் மிகவும் மரியாதைக் குரியவன். திருப்தியான வாழ்க்கையையும் உயர்ந்த குறிக்கோளையும் உள்ளவன். பரிசுத்த உடல் அமைப்புள்ளவன். நேர்மையான நடத்தை, பழக்க வழக்கங்கள் உள்ளவன். பல மொழி பயின்று அதிகம் புலமைபெறும் பன்மொழிப்புலவன். பலருடன் நட்பாக இருப்பவன்.

**சந்திரன் நின்றால்:** தாராளமானவன். பிறரால் விரும்பப் படுபவன். நல்ல ஒழுக்கம் உள்ளவன். பணக்காரன். தன் குடும்பத்தில் பற்றதிகம். பெண்களுக்கு இது மிகவும் சிறந்தது. இந்த நிலையில் பிறந்தவர்கள். மிகவும் அழகாக இருப்பார்கள். வட்டமுகமும் வடித்து வைத்த சிலை போன்றும் இருப்பார்கள்.

**செவ்வாய் நின்றால்:** இச்சை அதிகம் உள்ளவர்கள். நேசமும் பாசமும் உள்ளவர்கள். பணக்கார குடும்பத்தைச் சார்ந்தவர்கள். அழகான வட்டமுகமுள்ளவர்கள். சுருண்ட நெற்றிமேல் அலைபாயும் கூந்தல் உள்ளவர்கள். பிரபலமானவர்கள். காதல் விவகார ஈடுபாடு அதிகம் உண்டு. வாழ்க்கையில் எல்லா நல் சுகங்களையும் முழுமையாக அனுபவிப்பார்கள். ஸ்த்ரீலோலர்கள். உலக இன்பங்களில் அதிகப் பற்றுள்ளவர்கள். உல்லாச போகமும் உண்டு.

**புதன் நின்றால்:** குடும்பத்தில் இவர்கள் நேசிக்கப் படுபவர். இவரை எல்லோரும் விரும்புவார்கள். தன் குடும்பத்தில் கண்டிப்பாக நடந்து கொள்வார்கள். அழகர்கள். நிதானமாக, அமைதியாக நடந்துகொள்வார்கள். இதில் பிறந்த பெண்கள் மிகவும் அழகிகள். தன் அழகாலேயே மற்றவரை ஏமாற்றுபவர்கள். தன் குழந்தைகள் மேல் அதிகம் பாசம் வைப்பார்கள்.

**குருநின்றால்:** தான் அதிகம் செயல்படமாட்டார்கள். நல்ல குறிக்கோளை அடையவேகமுண்டு. தான் விரும்பும்

எதையும் அடையக்கூடிய முயற்சியும் அதில் வெற்றியும் உள்ளவர்கள். நாணம், தயக்கம் ஆனால் கவர்ந்து இழுப்பவர்கள். இவர்களுக்கு உயர்கல்வியும், அதனால் பிறரால் பெரும் நன்மையும் உண்டாம். நிதானமாக, ஒரு சீராக, ஆனால் நிச்சயமாக நல்ல பணம் சேர்ப்பார்கள். தான் மணந்துகொண்ட கணவன் அல்லது மனைவியை மிகவும் விரும்பி மகிழ்பவர்கள். உலகப்புகழ் அதாவது சமூகத்தில் புகழ் உள்ளவர்கள்.

**சுக்கிரன் நின்றால்:** மிகவும் சிவந்த மேனியும் அழகான வடிவமைப்பும் உள்ளவர்கள். எல்லாருடனும் அமைதியாகவும் பாசமாகவும் நடந்துகொள்வார்கள். அழகான பல் வரிசையுண்டு. நட்பு செய்பவர்கள். ஆனால் அதில் அதிக வேகம் இராது. அதிக போகி சுகவாசி.

**சனி நின்றால்:** கடுமையான பேச்சுள்ளவர்கள். ஆனால் பயந்தாங்கொள்ளிகள். பலரையும் நட்புக்கொள்வார்கள். குடும்பத்தில் உள்ளே மூழ்கி இருப்பார்கள். ஆனால் அதில் அவர்கள் பெரும்பாலும் சுகம் பெறுவதில்லை. குடும்பத்திற்கு அதிகம் பணம் செலவழித்தாலும் இந்த நிலைதான். உறவினர்களும் இவர் பணத்தில் அக்கரை வைத்து, இவர்மேல் அக்கரை வைக்கமாட்டார்கள். பெரும்பாலும் பணம் வட்டிக்கு விட்டுப் பிழைக்கும் தொழிலைச் செய்பவர்கள். சாதாரண பொருளாதாரம்தான்.

**ராகு நின்றால்:** சனிக்குச் சொன்ன பலனையும், கேது நின்றால் செவ்வாய்க்குக் கொடுத்த பலனையும் கொள்க.

## *ரோகிணி நட்சத்திரத்தில் நின்ற சூரியனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சந்திரன் பார்த்தால்:** தன் குடும்பத்தில் உள்ள மற்றும் இதர பெண்களுக்கும் அதிகம் சேவை செய்பவன். கப்பல்துறை மற்றும் தண்ணீர் சம்பந்தமான தொழில்கள் மூலம் சம்பாதிப்பவன்.

**செவ்வாய் பார்த்தால்**: போர்க்கலையில் வல்லவன். பணமும் புகழும் உள்ளவன்.

**புதன் பார்த்தால்**: நுண்கலையில ஆர்வம் உள்ளவன். அவைகள் மூலமாகவும் ஜோதிடம் மூலமாகவும் சம்பாதிப்பவன்.

**குரு பார்த்தால்**: தன் குடும்பத்திலும் மற்றும் சமுதாயத்திலும் இவன் தலைவனாக இருப்பான். பொது மக்களிடையே புகழ் உள்ளவன். அரசாங்க பதவிகள் உள்ளவர்கள் மூலம் அதிக பயன் பெறுபவன்.

**சுக்கிரன் பார்த்தால்**: அழகான கண்கள் உள்ளவன். வசீகரிக்கும் இனிமையான தோற்றம் உள்ளவன். நண்பர்களையும் பகைவர்களையும் ஒரே மாதிரியாக நடத்துபவன்.

**சனி பார்த்தால்**: இவனுடைய ஆரோக்கியம் நன்றாக இராது. எதிலும் ஆதாயம் இராது. பணமுடை இருக்கும். ஏழையாக இருப்பான். எப்பொழுதும் தன் மனைவிக்கு சத்ருவாக இருப்பான்.

## *ரோகிணியில் நின்ற சந்திரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்**: இவன் பயிர்த்தொழிலில் அதிகம் சம்பாதிப்பவன். ஜோதிடம் மற்றும் இதர அதிசய கலைகள் மூலமும் வீடு, மனை விற்றல் வாங்கல் மூலமும் அதிக பணம் சம்பாதிப்பான்.

**செவ்வாய் பார்த்தால்**: இவன் பெண்களைக் கவர்வதில் வல்லவன். உண்மையானவன். தன் குடும்பத்தில் உள்ளவர்களிடம் நல்ல பெயர் வாங்குபவன்.

**புதன் பார்த்தால்**: இவன் மிகவும் புத்திசாலி, எல்லாக் கலைகளிலும் வல்லவன். வாழ்க்கையில் எல்லாத்துறை களிலும் அதிகம் வெற்றிபெறுவான்.

**குரு பார்த்தால்:** இவன் பெற்றோர்களிடம் மதிப்பும், மரியாதையும் வைத்திருப்பான். அவர்களுக்குத் தான் செய்ய வேண்டிய கடமைகளை ஒழுங்காக நிறைவேற்றுவான். அதிக சமயப்பற்றுள்ளவனாக இருப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் வீடு வாகனாதிகள், ஆடை ஆபரணங்கள் மற்றும் கால்நடைச்செல்வம் ஆகியவற்றை முழுமையாக அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** இவன் தன் இளமையிலேயே தாயை இழந்துவிடுவான். மற்றும் தகப்பனிடமிருந்து இவனுக்கு எந்த உதவியும் கிட்டாது.

## *ரோகிணியில் நின்ற செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் மலைப்பிரதேசம் மற்றும் வனாந்திரங்களில் பெரும்பாலும் வசிப்பான். இவனால் தன் மனைவிக்கு எந்த சுகமும் தரமுடியாது.

**சந்திரன் பார்த்தால்:** இவன் தன் தாய்க்கு எதிராகவே எல்லா வேலைகளையும் செய்வான். (இவள் இச்சைக்கு மாறாக) இவன் பல பெண்களோடு தொடர்புகொண்டு சுகித்திருப்பான்.

**புதன் பார்த்தால்:** இவன் சமய நூல்களை மிகவும் கற்றுணர்ந்தவனாக இருப்பான். எப்பொழுதும் பிறருடன் சண்டை போடுபவன். பிறரைக் கவரும் தோற்றம் உள்ளவன். மற்றும் பணம் படைத்தவனாக இருப்பான்.

**குரு பார்த்தால்:** இவன் உறவினர்களுடன் எப்போதும் இருப்பதை விரும்புவான். அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வான். நுண்கலைகளிலும் மற்றும் இசையிலும் வல்லவன். அவை மூலம் அதிகம் பொருளீட்டுவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் ஒரு அரசியல் வாதியாகவும் நல்ல அந்தஸ்து உள்ள பதவி உள்ளவனாகவும் இருப்பான். இத்துறையில் புகழ்பெறுவான்.

**சனி பார்த்தால்:** இவன் எல்லோரிடமும் மரியாதையாக நடந்துகொள்வான். தூய இதயம் படைத்தவன். நன்கு கற்றவன். கிராமம் அல்லது நகரத்துக்கு அதிகாரியாக இருப்பான். (பஞ்சாயத்து மற்றும் நகரசபை முதலியன)

## *ரோகிணியில் நின்ற புதனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் ஆரோக்கியம் நன்றாக இராது. இவன் ஒல்லியான தேகம் படைத்தவன். இவனுக்குப் பணம், சொத்து முதலியவை சேராது. ஆனால் மற்றவர்களுக்கு உதவி செய்யும் எண்ணம் உள்ளவன்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் கடின உழைப்பாளி. பணம் படைத்தவன். அரசியலில் உள்ளவர்களுக்கு நெருங்கிய வனாக இருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் ஆட்சியாளர்களிட மிருந்து அதிகம் உதவிகள் பெறுவான். ஆனால் சனி திசை நடந்தால் அவர்களால் தண்டிக்கவும்படுவான்.

**குரு பார்த்தால்:** ஒரு நகரத்திற்கு அல்லது பணிபுரியும் ஒரு பகுதிக்கோ தலைவனாக இருப்பான். புத்திசாலி, பணக்காரனாகவும் இருப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் பகட்டாக ஆடை அணிபவன். பெண்களால் அதிகம் கவரப்படுபவன். காம இச்சையில் அதிகம் ஈடுபாடு உண்டு.

**சனி பார்த்தால்:** தன் மனைவி குழந்தைகள் மற்றும் உறவினர்கள் மூலம் இவன் வேதனைக்குள்ளாவான். அவர்கள் இவனை நன்றாக நடத்தமாட்டார்கள். இவன் பொது மக்களாலும் கைவிடப்படுவான்.

## ரோகிணியில் நின்ற குருவை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் முப்படைகளில் சேர்ந்து (ஏதாவது ஒன்றில்) பணிபுரிவான். போர்க்கலையில் வல்லவன். இவன் அரசாங்கத்திடமிருந்து பாராட்டப் படுவான். அதே சமயத்தில் போரில் எதிரிகள் மூலம் காயமுறுவான்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் உண்மையானவன். மரியாதைக்குரியவன். வேண்டியவர்களுக்கு உதவி செய்வான், மற்றும் அதிர்ஷ்டக்காரன்.

**செவ்வாய் பார்த்தால்:** இவனுக்கு நல்லமனைவி, மக்கள் வாய்ப்பர். ஆட்சியில் உள்ளவர்களிடமிருந்து நிறைய உதவிகள் பெறுவான். அரசுத்துறையில் ஏதாவது ஒரு அந்தஸ்து உள்ள பதவி வகிப்பான்.

**புதன் பார்த்தால்:** இவன் அரசியலில் ஈடுபடுவான். அதிலிருந்து சம்பாதிப்பான். பிறரைக்கவரும் தோற்றம் படைத்தவன். கலாச்சாரம் மற்றும் பண்பாட்டை முன்னேற்றுவதில் அக்கறை காட்டுவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் பணம் படைத்தவன். அதிர்ஷ்டக்காரன். ஏழைகளுக்கு சேவை செய்வதில் அக்கறை காட்டுவான்.

**சனி பார்த்தால்:** இவன் பணம், புகழ் மற்றும் எல்லா சௌகரியங்களையும் படைத்தவன். இவன் மந்திரியாகவோ அல்லது ஒரு நிறுவனத்தின் தலைவனாகவோ இருப்பான்.

## ரோகிணியில் நின்ற சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் பெண்களிடமிருந்து அதிகம் உதவிகள் பெறுவான். இவன் வீடு நிலபுலம் வாகானாதிகள்

உடையவனாக இருப்பான். ஆனால் மணவாழ்க்கை மகிழ்ச்சியாக இராது.

**சந்திரன் பார்த்தால்:** இவன் காம இச்சை அதிகம் உள்ளவன். இவன் குடும்பத்தில் மிகவும் சிறந்தவனாக இருப்பான். நயமாகப் பேசுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவனுக்கு எந்த சௌகரியங் களும் கிட்டாது. கொடூரமானவன். சட்டவிரோத காரியங்கள் மூலம் சம்பாதிப்பான்.

**புதன் பார்த்தால்:** இவன் அழகான தோற்றமுள்ளவன். இவன் அமைதியான அடக்கமான சுபாவம் உள்ளவன்.

**குரு பார்த்தால்:** இவன் வீடு வாகனாதிகள் உள்ளவன். பல பெண்களோடு சேர்ந்து வாழ்பவன். சந்தோஷமான மண வாழ்க்கை உண்டு. மற்றும் கடமை தவறாத குழந்தைகள் உண்டு.

**சனி பார்த்தால்:** இவனுக்கு உடல் நலமே ஒரு பிரச்சினையாக இருக்கும். இவன் தன் சுயமரியாதை,யைக் கெடுத்துக்கொள்வான். மற்றும் ஏழையாக இருப்பான்.

## *ரோகிணியில் நின்ற சனியை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் மற்றவர்கள் தயவில் வாழ்பவன். ஏழையாக இருப்பான்.

**சந்திரன் பார்த்தால்:** இவனுக்கு அரசாங்கத்தின் மூலம் விருதுகள் கிடைக்கும். பணம் படைத்தவன் மற்றும் உடல் வலிமையுள்ளவனாக இருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் அதிகம் பேசுபவன். எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருப்பான். நடுத்தர பணவசதி உண்டு.

**புதன் பார்த்தால்:** இவன் காம இச்சையில் மிகவும் தீவிரமாக இருப்பான். கெட்ட நடத்தை உள்ளவர்களிடம் பழகுபவன்.

**குரு பார்த்தால்:** இவன் எப்பொழுதும் பிறருக்கு உதவி செய்யும் எண்ணம் உள்ளவன். நோயுற்றவர்கள் மற்றும் ஏழைகளிடம் அன்பாக இருப்பான். கடின உழைப்பாளி.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் நகை வியாபாரியாக இருப்பான். அதன் மூலம் நல்ல இலாபம் உண்டு. குடிகாரன். காம இச்சை உள்ளவன்.

## ரோகிணி நட்சத்திர பாத பலன்

### பதினான்கு சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பொருள்அழகு உள்ளான் அலைக்கலான் காமி
புறத்தியர்க்கு இயற்றுவான் துன்பம்
பொறையிலான் வர்மி ரோஷவான் ரோகி
பொருந்து ரோகிணி முதற்காலான்
அருள்உயர் சாந்த குணமுளான் ரோகி
ஆசாரன் சத்திய வாக்கி
அமர்ந்தோர் பெண்ணை மணப்பன் வாய்ச்சாலன்
அன்புளான் ஆம்இரு காலான்
குருஅருள் கணித வித்தைசங் கீதன்
கூரிய மந்திரன் சுகவான்
குலவிய பஞ்ச காவியம் அறியும்
கொள்கையன் ஆகும்மூன் றாங்கால்
இருமையில் தத்துவன் அன்னியர் உடமைக்கு
இச்சைசெய் புந்தியான் இனியன்
ஏந்திய வேலான் ரோஹிணியி நாற்கால்
இனிவருவோன் பலனது தானே. (59)

# ரோகிணி நட்சத்திரம்

**முதல் பாதத்தில் பிறந்தவன்:** *தனவான், அழகன், நிலையின்றி திரிபவன், சிற்றின்பத்தில் அதிக பிரிய முள்ளவன். பிறர்க்குத் தீங்கு செய்பவன். சாந்தமில்லாதவன், வைராக்கியமுள்ளவன். மானமுள்ளவன். நோயாளி என்பதாம்.*

**இரண்டாம் பாதத்தில் பிறந்தவன்:** இரக்கமும் சாந்தமும் உள்ளவன். நோயாளி, ஒழுக்கமுள்ளவன். உண்மை பேசுபவன். இந்த குணமுள்ள ஒரு பெண்ணை நாடித் திருமணம் செய்து கொள்வான். சிறந்த பேச்சாளன் அன்புள்ளவன் என்பதாம்.

**மூன்றாம் பாதத்தில் பிறந்தவன்:** குருவின் அருள் உள்ளவன். கணித வித்தையில் வல்லவன். (சோதிட மறிந்தவன்) இசை தெரிந்தவன். நுண்ணிய மந்திரம் அறிந்தவன். சுகபுருஷன், இலக்கிய ஞானமும் பஞ்ச காவியமும் அறிந்த புலமையும் உள்ளவன் என்பதாம்.

**நான்காம் பாதத்தில் பிறந்தவன்:** தெளிந்த ஒருமையான் (அத்துவித) தத்துவம் அறிந்தவன். பிறர் பொருள்மேல் ஆசையுள்ளவன். இனியவன், ஸ்த்ரீ லோலன் என்பதாம்.

**அடுத்து சுவடி எண் 1500 மரணகண்டிகையில் சொல்லப்பட்ட ரோகிணி நட்சத்திர 4 பாத பலன்கள் வருமாறு**

## *ரோகிணி நட்சத்திரத்தின் முதல் பாத பலன்*

**வெட்டெனப் பேச வல்லான் வெகுளிமுன் உடைய னாகும்**
**சிட்டரைச் சேர்ந்து வாழ்வான் சிறுகுடி யாள னாகும்**
**பட்டிசை யார்க்கும் தோளான் படைக்கெலாம் தலைவ னாகும்**
**எட்டுணை யொன்றும் அஞ்சான் எரியின்அங் கிஷத்தி னானே. (60)**

*(சுவடி எண். 1500)*

ரோகிணி முதல் பாதத்தின் அதாவது செவ்வாய் நவாம்சத்தில் உதித்தவன் பலன். இவன் வெட்டொன்று துண்டிரெண்டென்று தெளிவாகப் பேசவல்லவன். கோப முள்ளவன். நல்லவர்களைச் சேர்ந்து வாழ்பவன். குடும்பம் உள்ளவன். இவன் வீரம் மிக்கவன். அதனால் புகழுள்ளவன். வெற்றியுடைய தோள்களுள்ளவன். படைத்தலைவனாவான். எள்ளளவும் அச்சம் இல்லாதவன். இவனே விருச்சிக நவாம்சத்தில் பிறந்தவன் ஆவான்.

### *இதற்குக் காசலச்சக்கர தசைகள் வருமாறு*

| | |
|---|---|
| *தனுசு குரு தசை* | *10 வருஷம்* |
| *மகரச்சனி தசை* | *4 வருஷம்* |
| *கும்பச்சனி தசை* | *4 வருஷம்* |
| *மீனகுரு தசை* | *10 வருஷம்* |
| *மேஷச்செவ்வாய் தசை* | *7 வருஷம்* |
| *இடப சுக்கிரன் தசை* | *16 வருஷம்* |
| *மிதுன புதன் தசை* | *9 வருஷம்* |
| *சிம்ம சூரியன்* | *5 வருஷம்* |
| *கடக சந்திரன்* | *21 வருஷம்* |
| *ஆகவயது* | *86 வருஷம்* |

### *ரோகிணி இரண்டாம் பாதத்தில் துலா சுக்கிரனின் பலன்*

**மார்பகன் றுயர்ந்தி ருக்கும் மதிமுக மறுவு முள்ளான்**
**சீர்தரும் உண்டி பேணும் சேர்தரும் கொடுங்க ணாளன்**
**ஆதர வுடையன் பெண்மேல் அறிவுளன் நன்று கற்பான்**
**சார்வது மனத்த னாகும் தரும்புகர்க் காலி னானே ! (61)** *(சுவடி எண். 1500)*

இவன் மார்பகன்று உயர்ந்த உடல் வாகுள்ளவன். நன்றாகச் சிறந்த உணவு உண்பவன். இவன் கோபப்பொறி பறக்கும் கண்ணுள்ளவன். உலகில் பெண்மேல் ஆதரவாக இருப்பவன். அறிவாளன், நன்றாகப் படிப்பவன். உயர்ந்த கொள்கையுள்ள மானமுள்ளவன். இவனே துலா சுக்கிர காலில் பிறந்தவனாவான்.

### இதற்குக் காலச்சக்கர தசைகள்

| | |
|---|---|
| கன்னி புத தசை | 9 வருஷம் |
| துலா சுக்கிர தசை | 6 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் தசை | 7 வருஷம் |
| மீன குரு தசை | 10 வருஷம் |
| கும்பச் சனி தசை | 4 வருஷம் |
| மகரச்சனி தசை | 4 வருஷம் |
| தனுசு சனி தசை | 10 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் தசை | 7 வருஷம் |
| துலா சுக்கிரன் தசை | 16 வருஷம் |
| ஆக பரமாயுள் | 83 வருஷம் |

### ரோகிணி 3ம் பாதத்தில் பிறந்த கன்னி புதன் பலன்

**மந்திர மறைகள் கற்கும் மாதரால் மருளு முண்டாம்**
**அந்தரப் பொய்கள் சொல்லான் அரும்பொருள் சேர்ந்து வாழும்**
**சுந்தரப் பலன்கள் சொல்லும் சோதிடம் வல்ல னாகும்**
**புத்தியில் பெரிய னாகும் புத்தியின் அங்கிஷத்தி னானே ! (62)**

*(சுவடி எண். 1500)*

இம் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் மந்திரம், வேதம் தெளிந்தவன். இவன் பெண்களால் மயக்கமுள்ளவன். பொய்கள் சொல்லாதவன். நிறைய பொருள் சேர்த்து வாழ்வான். நல்லபடி எதிர்காலப் பலன்கள் சொல்லும் சோதிடம் வல்லவன். இவன் சிறந்த புத்திமான். இவன் ரோகிணி 2ம் கால் புதன் அங்கிஷத்தில் பிறந்தவன்.

### இதற்குக் காலச்சக்கர தசை வருமாறு

| | |
|---|---|
| கன்னி புதன் தசை | 9 வருஷம் |
| சிம்ம சூரியன் தசை | 5 வருஷம் |
| கடக சந்திர தசை | 41 வருஷம் |
| மிதுன புதன் தசை | 9 வருஷம் |
| இடப சுக்கிர தசை | 16 வருஷம் |
| மேஷச் செவ்வாய் தசை | 7 வருஷம் |

| | |
|---|---|
| தனுசு வியாழன் தசை | 10 வருஷம் |
| மகர சனி தசை | 4 வருஷம் |
| ஆக பரமாயுள் | 85 வருஷம் |

## ரோகிணி நட்சத்திரம் 4ம் காலில் சூரியன் அங்கிஷத்தில் பிறந்தவன் பலன்

**நீளியன் செய்யான் சால நிபுணனாய் நீதி சொல்வான்**
**மாளிகை மனையில் வாழும் மன்னனால் மகிழ்ச்சி யுண்டாம்**
**வாளிசேர் கண்ணி னாள்மேல் மகிழ்வொடு பொருந்தி வாழ்வான்**
**காளிசேர் வடிவ னாகும் கதிரவன் காலி னானே ! (63)**

(சுவடி எண். 1500)

இவன் நெட்டையான வடிவமுள்ளவன். மிகவும் அறிவுத்திறனொடு பிறருக்கு நீதி சொல்லும் தன்மை யுடையவன் (நீதிபதியாகவும் இருக்கலாம்). அம்பு போன்று கூர்மையான கடைக்கண் நீண்டிருக்கும். அழகிய கண்களுடைய அழகிய பெண் மனம் பொருந்தி அவளுடன் மகிழ்ந்து வாழ்வான்.

இவன் கருமையான கடுமையான தோற்றமுள்ளவன் என்பதாம்.

## இதற்குக் காலச்சக்கர தசை வருமாறு

| | |
|---|---|
| 1. மீன குரு | 10 வருஷம் |
| 2. மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| 3. இடபச் சுக்கிரன் | 16 வருஷம் |
| 4. மிதுன புதன் | 9 வருஷம் |
| 5. சிம்ம சூரியன் | 5 வருஷம் |
| 6. கடகச் சந்திரன் | 21 வருஷம் |
| 7. கன்னி புதன் | 9 வருஷம் |
| 8. துலா சந்திரன் | 16 வருஷம் |
| 9. விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| ஆக பரமாயுள் | 100 வருஷம் |

## *ரோகிணி நட்சத்திர முதல் பாதத்தில் கோள்கள் நின்றபலன்*

**சூரியன் நின்றால்:** இவன் தந்திரசாலி மற்றும் கெட்டிக்கான். இவன் ஆடைகளுக்கு முக்கியத்துவம் அதிகம் தருவான். கால்நடைச் செல்வங்கள் மற்றும் குதிரைகள் வளர்ப்பு இவற்றிலிருந்து அதிகம் லாபம் சம்பாதிப்பான். சமுதாயத்திற்கு நல்ல சேவைகள் செய்வான். காக்காய் வலிப்பு, மூளை நாள ரத்தக்கசிவு மற்றும் தலைவலி போன்ற நோய்கள் ஏற்படலாம்.

**சந்திரன் நின்றால்:** இவன் நல்ல நடத்தை, அழகிய உருவமைப்பு, இனிமையான பேச்சு உள்ளவன். இவன் கால்நடை, பால்பண்ணை மற்றும் கரும்பு ஆலை அல்லது எண்ணெய் இவற்றிலிருந்து நிறைய சம்பாதிப்பான். இவன் நிறைய சகோதரிகள் உள்ளவன். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் பெறுவான். காது கோளாறும் உண்டு.

**செவ்வாய் நின்றால்:** இவனுக்கு வாத்தியக் கருவிகள் வாசிப்பதில் அதிகம் நாட்டம் உண்டு. இனிமையாகப் பேசுபவன். இவன் கப்பல் சம்பந்தமான தொழில்களில் ஈடுபடுவான். இவன் பொன்னுக்கு வீங்கி.

**புதன் நின்றால்:** இவன் திறமையானவன். இனிமையான பேச்சாளி. இவன் நேர்மையான வழியில் நிறைய பொருளீட்டுவான். இவன் மனைவி நல்லவள். மற்றும் அறிவு ஒழுக்கம் நிறம்பியவள். இவனுக்குப் பேச்சுத் தடுமாற்றம் அல்லது தெற்றிப் பேசுதல் போன்றவை ஏற்படலாம்.

**குருநின்றால்:** இவன் தத்துவம் மற்றும் அதற்குத் தொடர்பான துறையில் கவனம் செலுத்துவான். இவன் உண்மையானவன். இவன் நல்ல நண்பர்களுடன் மட்டுமே பழகுபவன். ஆண்கள் பெண்களிடமிருந்து மரியாதையும் மற்றும் தலைமையானவனாக இருப்பான். இது குரு

இருப்பதில், அஃதாவது 4ம் பாதத்தில் மிகச்சிறந்த பாதமாகும். இவன் வாழ்க்கையை முழுமையாக அனுபவிப்பான். நல்ல மக்கள் மற்றும் குறையாத செல்வம் உள்ளவன். நிறைய மக்கள் இவனுக்குக் கீழ் வேலை செய்வார்கள். இவன் நிறைய புகழ் மற்றும் என்றும் மக்கள் இவனை மறவாத தன்மையைப் பெறுவான். ரத்தக்கோளாறு அல்லது ஜன்னி போன்ற நோய்கள் ஏற்படலாம்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் வீடு, வாகனாதிகள் மற்றும் செல்வம் இவற்றை அடைவான். 35 வயது வரை திருமண வாழ்க்கை சுமுகமாக இராது. இவன் கருத்து வேற்றுமையையும், மனஸ்தாபத்தையும் தவிர்த்தால், தன் மனைவியிடமிருந்து விவாகரத்து அல்லது பிரிந்திருப்பதிலிருந்து தவிர்க்கலாம். 35 வயதுக்கு மேல் இவன் வாழ்க்கை மிகவும் நன்றாக இருக்கும். இவன் மனைவி இவனைப் புரிந்துகொண்டு வாழ்க்கையின் முக்கியத்துவத்தை உணர்வாள். இவன் மார்சளி மற்றும் தோல் சம்பந்தமான வியாதிகளால் துன்புறலாம்.

**சனி நின்றால்:** இவன் சமயப்பற்று அதிகம் உள்ளவன். அதே சமயத்தில் சூதாட்டம் ஆடும் எண்ணம் உள்ளவன். நிறைய செல்வத்தை முதலில் இழந்தாலும் தன்னுடைய 45வது வயதில் இழந்த செல்வத்தை அடைந்துவிடுவான். பொதுவாக சந்தோஷமான வாழ்க்கை வாழ்பவன். இவன் தன்னுடைய தொண்டையை கவனமாகப் பாதுகாக்க வேண்டும். ஏனெனில் தொண்டைப் புற்றுநோய் வரும் அறிகுறிகள் உள்ளன. இவன் தன்னுடைய பற்களை இளைய வயதில் இழந்துவிடுவான்.

**ராகு நின்றால்:** இவன் ஒல்லியான உடலை உடையவன். இவன் வெளிப்படையானவன். பெரும் பசியுள்ளவன். இந்த பாதம் உச்சஸ்தானத்தில் இருந்தால் துர்தேவதைகளிடமிருந்து காப்பாற்றப்படுவான் மற்றும் நீண்ட நாட்கள் இருப்பான்.

**கேது நின்றால்:** இவன் தன்னுடைய இருப்பிடத்தி லிருந்து தொலைவாக இருக்கவிரும்புவான். இவன் அடுத்தவர் தயவில் சிலசமயம் வாழ்வான். ஒரு சில நேரங்களில் இவன் ஏழ்மையால் தன்னுடைய 30 வது வயதில் இறக்க நேரிடலாம். இவனுக்குக் கண் பார்வையின்மை அல்லது கண்ணில் சதை வளர்தல் போன்றவை ஏற்படலாம்.

## ரோகிணியில் இரண்டாம் பாதத்தில் கோள்கள் நின்றபலன்

**சூரியன் நின்றால்:** அழகான மற்றும் வசீகரமான தோற்றம் உள்ளவன். எண்ணெய் சம்பந்தமான தொழிலைச் செய்வான். இவன் ஆழமான நதியிலோ அல்லது கடலிலோ நீராடக்கூடாது. இதில் செவ்வாய் இருந்தால் காவல்துறை அல்லது பாதுகாப்புத்துறை அல்லது தூதரகத்தில் பணிபுரிவான். தலைவலி மயக்கம் போன்ற வியாதிகள் உண்டு.

**சந்திரன் நின்றால்:** இவன் இசையிலோ அல்லது நுண்கலையிலோ நாட்டம் செலுத்துவான். இவன் ஓட்டல் அதற்கு சம்பந்தமான தொழில்கள் செய்வான். கல்வியில் சில தடைகள் ஏற்படும். இருப்பிடத்தை அடிக்கடி மாற்றிக் கொள்வான். இந்த பாதப்பெண்கள் காரியத்தில் துணிந்து இறங்குவார்கள். இந்தப் பாதப் பெண்கள் நிறைய பெண் சந்ததியையும் ஆண்கள் ஆண் சந்ததியையும் அடைவார்கள்.

**செவ்வாய் நின்றால்:** இதில் சூரியன் இருந்தால், இவன் பாதுகாப்பு அல்லது காவல்துறையில் பணிபுரிவான். துடிப்பானவன். ஆனால் முட்டாள் தன்மை உள்ளவன். மூக்கில் ரத்தம் ஒழுகுதல் அல்லது தொண்டையில் சதை வளர்தல் போன்றவை ஏற்படும்.

**புதன் நின்றால்:** பிரபலமானவன். வேத சாஸ்திரங்களில் நிறைய அறிவு உண்டு. சுமாரான வசதி உள்ளவன். நெருப்பு மற்றும் அதற்கு தொடர்பானவைகளிடம் கவனமாக இவன்

இருக்கவேண்டும். திருமணத்திற்கு முன் பல பெண்களுடன் உடலுறவு கொண்டிருப்பான்.

**குரு நின்றால்:** இவன் சமயப்பற்று உள்ளவன். தந்தையுடன் மிகவும் நெருக்கமாக இருப்பான். உண்மையானவன். பிறர் இவனைப் புகழக்கூடிய தகுதிகள் நிறைய உண்டு. இவனுக்கு இரண்டு மனைவிகள் அமையலாம். தொண்டை உபாதைகள், மிதமான நிலையில் ஆஸ்துமா, இருமல் போன்ற நோய்கள் உண்டு.

**சுக்கிரன் நின்றால்:** இவன் நுண்கலையில் வல்லவன். இசைக்கருவிகள் மீட்டுவதில் விருப்பம் உள்ளவன். ராகு பார்த்தால் இவன் நடிகன் அல்லது கதாசிரியனாக நிறைய பொருள் ஈட்டுவான். இவன் குடும்பத்தை நல்ல விதமாக நடத்துவான். மனைவியை அன்புடன் வைத்திருப்பான். சுக்கிரன் இந்த பாதத்தை கூட்டாகவோ அல்லது சேர்ந்தோ பார்த்தால் இவள் ஒரு ஆண்குழந்தை, ஒரு பெண்குழந்தை மற்றும் ஒன்று முதல் மூன்று கருச்சிதைவு ஏற்படலாம். அஃதாவது இவை தவிர்க்க முடியாத கருச்சிதைவு.கழுத்து வீங்குதல் மற்றும் புரைகுழல் போன்ற வியாதிகள் ஏற்படலாம்.

**சனி நின்றால்:** இவன் கால்நடை மூலம் வருமானம் செய்வான். அழகிய தோற்றம், இனிமையான பேச்சு மற்றும் புத்திசாலித்தனம் இவை அனைத்தும் இவனுக்கு உண்டு. கண் மற்றும் தொண்டைவலி அல்லது மூக்கில் ரத்தம் கசிதல், மலச்சிக்கல் காரணமாக வயிற்று பாகத்தில் அறுவை சிகிச்சை மற்றும் சொட்டை தலை போன்றவை ஏற்படலாம்.

**ராகு நின்றால்:** இது ராகு இருப்பதற்கு ஒரு சிறந்த இடமாகும். இவன் அசாத்தியமான புகழை அடைவான். உறுதியான நம்பிக்கை. இவன் வார்த்தைகளைப் பொதுமக்கள் ஏற்பர். இவன் தன் 50வது வயது வரை நிறைய பொருளீட்டி னாலும் இறக்கும்போது இவனிடம் ஒன்றும் இருக்காது.

**கேது நின்றால்:** நீண்ட ஆயுள் சந்தேகமானது. குரு பயன்தரும் வகையில் இருந்தால், இவன் 21 வயது வரை வாழலாம். இவன் குழந்தையிலிருந்தே கண் கோளாறு உள்ளவன்.

## *ரோகிணி 3ம் பாதத்தில் கோள்கள் நின்றபலன்*

**சூரியன் நின்றால்:** இவன் பொதுமக்களுக்கு நல்ல காரியங்கள் செய்து புகழடைவான். ஆனால் இவனால் பணம் சம்பாதிக்க முடியாது. நீர்கண்டம் உண்டு. மலச்சிக்கல் மற்றும் கட்டிகள் ஏற்படலாம். பெண்களுக்கு மாதவிலக்கு கோளாறு உண்டு.

**சந்திரன் நின்றால்:** இவன் பெண்களுடன் நிம்மதியான வாழ்க்கை நடத்துவான். இவன் நீர் சம்பந்தமான துறையில் சேரலாம். அழகிய தோற்றம். புத்திசாலி மற்றும் ஸ்திர மனம் உள்ளவன். கண் கோளாறுகள் அல்லது தொண்டைப் புண்கள் ஏற்படலாம்.

**செவ்வாய் நின்றால்:** இவன் தைரியசாலி. சான்றோர்கள் இவனை கவுரவப்படுத்துவார்கள். இவன் அஸ்வினியில் வீழ்ந்தால் மற்றும் அதை செவ்வாய் பார்த்தால் குழந்தைகள் இழப்பு மற்றும் மனைவி மூலம் நிறைய தொந்தரவுகள் ஏற்படும். இவனுக்கு கழுத்தில் கீழ் வாதம் ஏற்படலாம்.

**புதன் நின்றால்:** இவன் தன்னுடைய முடிவுகளை உறுதியாக எடுப்பான். காம இச்சை அதிகம். இவன் தந்தை ஆளுங்கட்சியின் மூலம் தண்டனை அல்லது அபராதம் கட்டுவார். சகோதரர்களால் மன வருத்தம் ஏற்படும். மூத்திரக் கோளாறுகள் ஏற்படும்.

**குரு நின்றால்:** இவன் பிற பெண்களுடன் திருமணத்தின் பின்பு தொடர்பு வைத்திருப்பான். வேலைக்காரர்களுடன் காம இச்சை உண்டு. இவன் பெண்களினால் துன்புறுவான். இவனுக்குக் குழந்தைகள் உண்டு. இவன் 55 வயது வரை

வாழ்வான். சந்திரனும் இதே பாதத்தில் இருந்தால் நீண்ட நாட்கள் வாழ்வான். இவன் தொண்டைக் கோளாறுகளால் பாதிக்கப்படுவான்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் பெண்களுடன் காம இச்சை கொள்வதை மிகவும் விரும்புவான். இவனிடம் பழகிய ஒரு சில பெண்கள் இவனை பயமுறுத்தி பணம் பறிப்பார்கள். இவன் தன்னுடைய 35 மற்றும் 36வது வயதில் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். ஏனெனில் இவனுடைய காம இச்சை மிகவும் அதிகமாக இருக்கும். இவன் வேலைக்காரர்களுடன் உடல் உறவு கொள்வான். மூத்திரக்கோளாறுகளினால் பாதிக்கப்படுவான்.

**சனி நின்றால்:** சனி இருப்பதற்கு ஒரு சிறந்த இடமாகும். இவன் சமய நூல்களில் ஆராய்ச்சி செய்து நல்ல பெயர் பெறுவான். பிறரிடமிருந்து நிறைய பொருளீட்டுவான். சாதுவானவன். மற்றும் அதிபுத்திசாலி. இவனுக்கு பல்வலி அல்லது தொண்டைப்புண்கள் ஏற்படலாம்.

**ராகு நின்றால்:** இவன் தன்னுடைய வாழ்க்கை அடுத்தவர்கள் தயவிலே வாழ்பவன். அன்றாட தேவைகளுக்குக்கூட பிறரையே சார்ந்திருப்பான். இவனுடைய வாழ்க்கை 65 வயது வரை இருக்கும். நீர் மூலம் ஏற்படும் நோய்கள் இவன் சாவுக்குக் காரணமாகலாம். அதிகமாக சிறுநீர் கழிப்பான்.

**கேது நின்றால்:** இவன் ஆசிரியன்-பெரிய குடும்பம் உள்ளவன். தன்னுடைய 30வது வயது வரை இவன் பூர்வீகசொத்தின் மூலம் நன்றாக இருப்பான். அதன்பின் எல்லாவற்றையும் மனைவி மூலம் இழப்பான். இவனுக்குத் தொண்டை அல்லது வாய் புற்று நோய் அல்லது திக்குதல் போன்றவை ஏற்படும்.

## *ரோகிணி 4ம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** அரசாங்கத்தில் பணிபுரிவான். அடிக்கடி பயணம் செய்வான். இவன் தன்னுடைய

மனைவியின் சொல்லே வேதமாக கருதுபவன். மனைவி சொல்படி நடப்பவன். மங்கிய கண்பார்வை அல்லது வாய்ப்புண் ஏற்படலாம்.

**சந்திரன் நின்றால்:** நகைகள், கற்கள் மூலம் சம்பாதிப்பான். பொற்கொல்லன். பால் பண்ணையின் மூலம் வருவாய் உண்டு. இவனுக்கு ஆடை ஆபரணங்கள், வாகனாதிகள் மற்றும் நல்ல வேலைக்காரர்கள் அமைவார்கள். கால்கள் மற்றும் பாதத்தில் வலி உண்டாகும். பெண்களுக்கு மாதவிலக்குக் கோளாறு உண்டு.

**செவ்வாய் நின்றால்:** இவன் பணம் படைத்தவன். மது மற்றும் மாது ஆகியவற்றில் நாட்டம் உண்டு. சலனபுத்தி யுள்ளவன். இவன் சட்ட விரோதமான நடவடிக்கைகள் மூலம் நிறைய பொருளீட்டுவான். கடத்தல்காரர்கள் மற்றும் போதை மருந்து விற்பவர்கள் இதில் அடங்குவார்கள்.

**புதன் நின்றால்:** இவன் தன்னுடைய தூரத்து உறவுக்கார்கள் மூலம் நிறைய சம்பாதிப்பான். இவனுக்கு ஒரு சகோதரி சுமையாக இருக்கலாம். இதில் சனியும் இருந்தால் இவன் பல்வலி மூலம் துன்புறுவான்.

**குரு நின்றால்:** இவன் அதிகமாகப் பயணம் செய்பவன். இவன் தன்னுடைய உணவுக்கு வெளிநாட்டில் சம்பாதிப்பான். (அஃதாவது வெளிநாட்டில் பணிபுரிவான்) இவன் தன்னுடைய 32வது வயது வரை பொருளாதார மற்றும் சமுதாய பிரச்சினைகளை சந்திக்க வேண்டி வரும். அதன்பின் ஒரு ஞானி இவன் உதவிக்கு வருவான். இவர் மூலம் இவன் வாழ்க்கைக்குத் தேவையான எல்லாவற்றையும் பெறுவான். இவன் தன்னுடைய 40வது வயதில் பயணம் செய்வான்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் குள்ளமானவன். குண்டானவன். இவன் உலகத்தில் உள்ள சிறந்த அழகியை மணப்பான். இவன் பூர்வீக சொத்து மூலமோ அல்லது தன் மனைவி சம்பாதித்த பணத்தை வைத்தோ வாழ்க்கையை அனுபவிப்பான். இந்த பாதத்தில் பிறந்த பெண்கள் பணக்கார மற்றும் சமுதாயத்தில் உயர்ந்த அந்தஸ்து உள்ளவரை மணப்பர். இவன் பொன்னுக்குவீங்கி.

**சனி நின்றால்:** கால்நடை மூலம் வருமானம். அழகிய தோற்றம். புத்திசாலித்தனம். இனிமையான பேச்சு உள்ளவன். ஆனால் எந்த நடவடிக்கையிலும் நிலை இருக்காது. ஆளுங்கட்சிக்கு நெருக்கமானவனாக இருப்பான். தன்னுடைய சொத்தின் மூலம் அரசியலில் ஈடுபடுவான். சில சமயங்களில் இவன் அரசியலில் நிலையான மற்றும் நல்ல நிலைக்கு வருவான். கண் கோளாறு தொண்டைப்புண் அல்லது மூக்கில் ரத்தம் கசிதல், பக்கவாதம், காது கேட்காமை ஆகியவைகள் ஏற்படும்.

**ராகு நின்றால்:** இவன் பயணம் செய்யும்போது எச்சரிக்கையாக இருக்கவேண்டும். விபத்துகள் ஏற்பட வாய்ப்புகள் அதிகம் உண்டு. கழுத்தில் குறிப்பாக அடிபட நிறைய வாய்ப்புண்டு. கவிதை எழுதுவதில் அதிக நாட்டம் உண்டு. இவனுக்குப் படிப்பு இல்லாவிட்டாலும் பெரும் புலவனாக ஆகும் வாய்ப்பு உண்டு.

**கேது நின்றால்:** இவன் வேத சாஸ்திரங்களில் கை தேர்ந்தவன். பட்டிமன்றங்களில் திறம்படப் பேசுபவன். மந்திர தந்திரங்களில் விற்பனன். சில சமயங்களில் நல்ல ஆயுர்வேத மருத்துவர். கேது 4ம் பாதத்தில் ரோகிணியும் இருக்கும்போது பிறப்பவர். ஆனால் இவன் கண் பார்வையின்மை அல்லது சதை வளர்தல் (கண்ணில்) அல்லது குறைவான பேச்சு உள்ளவன்.

## ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம பரிகாரம்

### *ரோகிணி நட்சத்திரம் முதல் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம பரிகாரம்*

**சிவபெருமான் சொல்லுகிறார்:** கங்கைக்கரை கிராமம் ஒன்றில் சோபன் என்ற பிராமணன் வசித்து வந்தான். இவன் தன் குலத்தொழிலை விட்டு திருட்டுத் தொழிலால் பொருளீட்டிப் பிழைத்து வந்தான். தன் மனைவியைத் துறந்து

பர ஸ்த்ரீகளுடன் வாழ்ந்து வந்தான். இவன் இறந்த பின் எமதூதர்கள் இவனை 60 வருஷங்கள் நரகத்தில் தள்ளித் துன்புறுத்தினார்கள். இந்த தண்டனை முடிந்தபின் கோழியாகப் பிறந்தான். அதன் பின் மனிதனாகப்பிறந்தான். பூர்வ ஜென்மத்தில் தன் குலத்தொழிலை விட்டு இழிதொழில் செய்த பாவத்தால் இப்பொழுது இவனுக்கு பாண்டுரோகம் பிடித்துக்கொண்டது. இதனால் இவனுக்குச் சந்ததி ஏற்படவில்லை.

இதற்குப் பரிகாரமாக பஞ்சாட்சரம் ஒரு லட்சமுறை ஜபம் பண்ணவேண்டும். பசுவின் கோமயம் மண் புற்றும் எள்ளும் கலந்து சிவலிங்கம் செய்து விதிப்படி பூசிக்கவேண்டும். அதன் பின் தன் முழு சொத்தின் ஒரு பகுதியை அந்தணர்களுக்குத் தானம் பண்ணவேண்டும். தன் ஆசார்யனுக்குத் தங்கம் தட்சணையாக அளிக்கவேண்டும். அதன்பின் பொதுமக்களுக்காக கிணறுகள் வெட்டவேண்டும்.

இதனால் இவன் நோய் தீரும். அதன் பின் இவனுக்குத் தீர்க்காயுள் உள்ள ஆண் சந்ததி ஏற்படும்.

## *ரோகிணி நட்சத்திரம் இரண்டாம்பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம பரிகாரம் வருமாறு*

**சிவபெருமான் கூறுகிறார்:** கங்கைக்கரையில் வைமானிகம் என்ற நகரம் உள்ளது. இங்கு நன்கு வேதம் கற்ற வாசுதேவன் என்ற அந்தணன் தன் அழகிய மனைவி லீலாவதியுடன் வசித்து வந்தான். இவன் மனைவி கெட்ட மதியால் பரபருஷர்களுடன் கணவனுக்குத்தெரியாமல் ரமித்து வந்தாள். அதனால் கிடைத்த பொருளைத் தன் கணவனுடன் சேர்ந்து அனுபவித்து வந்தாள். ஒருமுறை அவ்விருவரும் புனித கங்கையில் தவறி விழுந்து விட்டனர். கங்கையில உயிர் விட்டதால் இருவரும் 60 ஆயிரம் ஆண்டுகள் சுவர்க்கத்தில் சுகம் அனுபவித்தனர்.

அதன்பின் மனிதப்பிறவி அடைந்தனர். ஆனால் இவர்களுக்குப் பலமுறை குழந்தைகள் பிறந்து இறந்து போயின. இது பூர்வ பிறவி பாவத்தின் விளைவே ஆகும்.

இதற்குப் பரிகாரமாக த்ரயம்பக மந்திரத்தை ஒரு லட்சம் முறை ஜபம் பண்ண வேண்டும். அதன் பின் மண்ணால் லிங்கம் செய்து பூஜிக்கவேண்டும். பின் சுவர்ணத்தால் சிவலிங்கம் செய்து அதைப் பிராண பிரதிஷ்டை செய்து மகா மிருத்தியுஞ்ஜெப ஹோமம், ஜபம் பிரதட்சணம் முறைப்படி பூசிக்கவேண்டும். அதன்பின் மகர சங்கராந்தி மற்றும் மாசி மகத்தின் போதும் தன் மனைவியுடன் ஏகாதசி தினத்தன்று பிரயாகையில் புனித நீராட வேண்டும்.

இதனால் இவர்கள் பாவம் தீரும். நோய்களும் நீங்கி தீர்க்காயுளுள்ள புத்திரர்கள் பிறப்பார்கள்.

### *ரோகிணி நட்சத்திரம் 3ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம பரிகாரம்*

**சிவபெருமான் சொல்லுகிறார்:** கோமதி நதியின் வடகரையில் சங்கரபுரம் என்ற ஊர் உண்டு. அங்கு விஷ்ணு தாஸன் என்ற ஒருவன் தன் மனைவி சுந்தரி என்பவளுடன் வசித்து வந்தான்.

இந்தப்பெண் பொல்லாதவள். தன் மாமியாருக்கு எந்தவிதமான பணிவிடையும் செய்வதில்லை. ஆனால் விஷ்ணு தாசனோ பரம சிவபக்தன். பயிர்த்தொழில் செய்பவன். தன் கடமையில் கண்ணாகி பெரியவர், பிராமணர்களுக்கும் சேவை செய்து வந்தான். தன் தந்தையாருக்கும் பணிவிடை செய்து வந்தான்.

ஒருசமயம் இவன் வீட்டில் இல்லாதபோது ஒரு துறவி இவன் வீட்டுக்கு வந்து பிட்சை கேட்டான். கணவன் வீட்டில் இல்லாததால் அவன் மனைவி அந்தத் துறவியைக் கடும்சொல் கூறி விரட்டிவிட்டாள்.

புண்ணியம் செய்ததால் விஷ்ணுதாசன் யட்சர் உலகம் சென்று சுகம் அனுபவித்தான். அவன் மனைவி தான் செய்த பாவத்தின் காரணமாக ரௌரவம் என்ற நரகத்தில் தள்ளப்பட்டாள். நெடுங்காலம் அங்குத் துன்பம் அனுபவித்து புலியாகவும், கழுதையாகவும் பிறந்து மனித ஜென்மம் பெற்றாள். உரிய சமயத்தில் திருமணம் நடந்தது. இவள் போன ஜென்மத்தில் செய்த பாவத்தால் இவளுக்கு பல நோய்கள் பற்றிக்கொண்டன. இவளுக்குக் குழந்தைகள் ஏற்படவில்லை. இதற்குப் பரிகாரம் வருமாறு.

தினமும் விடியலில் எழுந்து தன் மாமியார், மாமனார் இவர்களுக்குப் பணிவிடை செய்யவேண்டும். மாசி மாதத்தில் தினமும் விடியலில் எழுந்து தன் கணவனுக்கு வெந்நீர் வைத்து ஸ்நானம் செய்விக்கவேண்டும். அதன் பின் தினமும் திருவிளக்கு தானம் பண்ணவேண்டும். அதன்பின் எட்டுதோலா எடை தங்கத்தில் ஒரு மரத்தின் உருவத்தைத் தயார் செய்து அதை கற்பக விருக்ஷமாக பாவித்து அதில் விஷ்ணு பூஜையைச் செய்யவேண்டும். சிவபூஜையும் அதிலேயே செய்யவேண்டும்.

அதன்பின் இந்த சுவர்ண கற்பக விருட்சத்தைத் தகுதியுள்ள அந்தணனுக்குத் தானம் செய்யவேண்டும். இதன்பின் 66 அந்தணர்களுக்கு விருந்து செய்விக்கவேண்டும். அதன் பின் ஒரு காராம் பசுவின் அதன் கொம்புகளுக்குத் தங்கப்பூண் அணிவித்து மற்ற அலங்காரங்களுடன் அதே போல் தானம் பண்ண வேண்டும். அதன் பிற்பாடு கோபால மந்திரம் ஜபம் பண்ணவேண்டும். புரஸ்சரணமும் பண்ண வேண்டும். இதனால் இவள் பாபங்கள் தீரும். நோயும் தீரும். அதன் பின் நல்ல ஆயுளுள்ள ஆண்குழந்தை ஏற்படும்.

### *ரோகிணி நட்சத்திரம் 4ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வகர்ம பரிகாரம் வருமாறு*

சிவபெருமான் சொல்லுகிறார்: கங்கை யமுனை சேருமிடத்தின் அருகில் ஒரு கிராமத்தில் புத்தி சர்மா என்ற

பிராமணன் வாழ்ந்து வந்தான். இவன் தன் புரோகிதத் தொழிலை விட்டு சமையற்காரனாகப் பிழைத்து வந்தான். இவன் மனைவி பர புருஷர்களுடன் ரமித்து வந்தாள். புத்தி சர்மாவும் தானங்களும் பெற்று வந்தான். இவன் மனைவி இறந்தபின் ஒரு யுக காலம் நரகவேதனை அனுபவித்தாள். அதன்பின் மாடாகவும், கழுதையாகவும் பிறந்தாள். இதன் பின் மனிதப்பிறவி கிடைத்தது. பூர்வத்தில் செய்த பாவத்தால் இவர்களுக்கு சந்ததி ஏற்படவில்லை. பல நோய்கள் பற்றிக் கொண்டன. இதற்கும் பிராயச்சித்தம் வருமாறு.

முதலில் "ஆக்ருஷ்ணேன" என்ற மந்திரத்தை ஒரு லட்சம் முறை ஜபம் பண்ணவேண்டும். இதன்பின், எள், தேன், நெய் இவற்றைக் கலந்து வட்டமான ஓமகுண்டத்தில் ஓமம் பண்ணவேண்டும். அதன்பின் புரஸ் சரணமும் பண்ண வேண்டும். அதன் பின் பிராமண போஜனம் பண்ணி வைக்கவேண்டும். பத்து நிறங்கொண்ட பசுவை கன்றுடன் தானம் பண்ணவேண்டும். படுக்கையும் தானம் பண்ண வேண்டும். இதன் பின் 70 பிராமணர்களுக்குப் போஜனம் பண்ணி வைக்கவேண்டும். இதற்குப் பிறகு மாசி மாதத்தில் பிரயாகையில் விடியற்காலையில் மனைவியுடன் புண்ணிய நீராடவேண்டும். இதனால் இவர்கள் பாவங்கள் விலகி, நோய்களும் நீங்கி இவர்களுக்கு நல்ல குழந்தைகள் பிறக்கும்.



## அத்தியாயம் - 6

# மிதுன இராசி பொதுக்குணங்கள்

**பண்டிதன் பரியு மாள்வன் பலருரை அறிந்து சொல்வான்**
**கண்டவர் தம்மைப் பேணும் அழகிய செல்வ னாவன்**
**வண்டனாய் திரிந்து வாத வழக்கறிந் துறைக்க வல்லான்**
**கொண்டல்சேர் குழலி னாளே குணமிது மிதுனம் தானே.(60)**

*(சுவடி எண். 1500)*

மிதுன ராசியில் பிறந்தவன் பண்டிதனாவான். பலருடனும் நல்ல வகையில் பேசி வெல்வதில் சமர்த்தன். தன்னைச் சேர்த்தவர்களைக் காப்பாற்றுவதில் வல்லவன். அழகன், பணக்காரனாவான். பல வகையிலும் அலைந்து வேண்டிய சாட்சிகளை விசாரித்து வழக்காட வல்லவன். அழகிய மேகம் போன்ற கருங்கூந்தல் உள்ள பெண்ணே ! இவையே மிதுன ராசியில் (லக்னம்) பிறந்தவன் குணங்களாகும்.

மூன்றாவது ராசி ஆண். பஞ்சபூதத்தில் காற்று. உபயராசி, சீர்ஷோதய ராசி. புருஷனின் அங்கம் மார்பு. ஸ்திரீ புருஷர் ஜோடியை வடிவமாக உடையது. இது மலட்டு ராசி என்று சொல்லப்படும்.

**வடிவம்:** இதில் பிறந்தவர்கள் உயர்ந்த நடுத்தர பருமனுள்ள சரீரம் உடையவர்கள். மாநிறம், ஒளிபொருந்திய கண்கள், நீண்ட மூக்கு, தோற்றத்தில் படித்தவன் என்பது பொலிந்து தோன்றும்.

**குணங்கள்:** படிப்பாளி, அதிகம் எழுதுபவன். எடை போடுவதில் சமர்த்தன். பிறரைப் பேசித் தன் வசமாக்குதல், அறிவுரை கூறல் இவற்றில் கெட்டி. ஊர் சுற்றிப் பயணம் செய்வதில் ஆசை. புலமை அறிவுத்திறன், கலை உணர்வு, தெளிவு இவற்றை உடையவன். புத்திகூர்மை அதிகம். அபார ஞாபக சக்தி உள்ளவன். புள்ளி விவரப்புலி, பின் வருவதை

ஊகித்துச் சொல்வதில் கெட்டிக்காரன். சிறந்த கணிதப் புலமை, ஜோதிட பண்டிதர்கள், சங்கீத கலை வல்லுனர்கள் இந்த ராசிக்காரர்களே. உபய ராசியாகையால் சஞ்சல புத்தியும் உண்டு. இதன் அதிபதி புதனும் சஞ்சலனே.

உபய ராசியாகையால் இரண்டுக்கு மேற்பட்ட தொழில்களில் சமர்த்தன்.தருக்கம், வேதாந்தம், கணிதம், ஜோதிடம் மற்றும் நியூமராலஜீ என்ற எண் சாஸ்திரம் மற்றும் இதுபோன்ற நுண்கலைகளில் சமர்த்தன். பெற்றோர்களைக் கேள்விமேல் கேள்வி கேட்டு அவர்களைத் திணற வைத்து விட்டு அவர்கள் பதில் சொல்லமுடியாமல் இருக்கும்போது கை கொட்டிச் சிரிக்கும் இளசுகள் இந்த மிதுனங்களே. எதையாவது புதிதாகத் தெரிந்துகொண்டே இருக்கவேண்டும் என்ற ஆர்வம் இருந்துகொண்டே இருக்கும்.

இந்த ராசி பெண்களிடம் தனிக்கவர்ச்சி உண்டு. கலை உணர்ச்சி அதிகம். நடனம் இசை முதலியவற்றில் சிறந்தவள். ஆண் ரா்சியாயினும் இவர்கள் பெண்மை தோற்றத்தில் புதனின் அசையும் சஞ்சலம் துடிதுடிப்பு, நகைச்சுவைத்திறன் புத்திகூர்மை இவற்றால் பெண்மையில் ஆண்மை கலந்து கவர்ந்து யாரையும் மோகம் கொள்ளச் செய்யக்கூடியதே. இப்பெண்கள் பேச்சு கேட்கும் கணவர்களை இவர்கள் சில தர்ம சங்கடமான நிலைக்கு ஆளாக்குவார்கள். காதல் கல்யாணம். இந்த ராசிக்காரர்கள் காதலையே ஒரு கலா ரசனையாகக் கருதுவார்கள். அடிக்கடி மாறும் சுபாவம் உள்ளவர்கள். ஆகையால் ஒரே சமயத்தில் இரண்டு பேரிடம் ஒருவரை மற்றவர் அறியாமல் உறவுகொள்ள முயல்வர். தன் கணவன் அல்லது மனைவியை அடக்கியாளும் சுபாவம் உண்டு. பெரும்பாலும் சமூகத்தில் அடையும் கவுரவத்தின் பொருட்டும் அடையப்போகும் ஊதிய லாபத்தின் பொருட்டும் இந்த ராசிக்காரர்கள் சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்து உள்ளவர்களை அல்லது ஆண்களானால் உத்தியோகம் செய்யும் பெண்களை மணக்க விரும்புவார்கள்.

இவர்கள் தங்கள் குழந்தைகளை ஒரு வணிகன் தான் முதலீட்டின் மேல் கணக்குப்போடுவதுபோல் ஒரு வகையான வியாபார நோக்குடனேயே வளர்ப்பார்கள். இவர்களுக்கு எல்லாவற்றிலும் ஒரு கணக்கு உண்டு. ஏனென்றால் இதன் இராசி அதிபதிக்கு "கணக்கன்" என்றே பெயராகும். இவர்கள் குழந்தைகள் அழகுள்ளவையாகவும், கலைத்திறன் உள்ளவையாகவும் அமையும். ஆகையால் குழந்தைப் பருவத்திலேயே அவர்களால் வருவாய் இந்த ராசிக்காரர் களுக்குக் கிட்டும்.

**பொருளாதாரம்:** அதிக பொருளாதார சீரழிவு அடை பவர்கள் இவர்கள். சண்டை, பூசல், அபிப்பிராய பேதம் இவற்றால் பொருளிழப்பர். ஆனால் கலைத்துறையில் இவர் நிறைய பொருளீட்டுபவர்.

**தொழில்கள்:** புத்தக வியாபாரம், நூல் நிலைய அதிகாரி, பத்திரிகைத் தொழில், கணக்கர், ஆடிட்டர், ட்ராவலிங் சேல்ஸ்மென், ஆசிரியர், விரிவுரையாளர், தபால் அலுவலர், போட்டோ தொழிலர், பொக்கிஷதாரர், மொழி பெயர்ப்பாளர், வக்கீல்கள், நோட்புத்தகம் முதலிய எழுதும் பொருள் விற்பனையாளர், வங்கி கணக்கர், காண்ட்ராக்டர்கள், தரகர்கள், புகழ்பெற்ற காரியதரிசிகள், பேச்சாளர்கள், வணிகர், பெரும்பாலும் பயணம் செய்யும் தொழில், டைப்பிஸ்ட், சுருக்கெழுத்தாளர் முதலியன.

அதிர்ஷ்ட தினம்-புதன், சனி இதையடுத்து திங்கட்கிழமை. அதிர்ஷ்ட நிறம்-பச்சை, மஞ்சள். அதிர்ஷ்ட ரத்னம்-மரகதம், பச்சை. அதிர்ஷ்ட எண்-5, 9 பெரும்பாலும் 5எல்லா எண்களையும் சரிக்கட்டடக்கூடியது.

## *மிதுனம் லக்கினமாக வந்தால் அதன் பலன்*

சுயகாரியபரன், உதரரோகி, இனியவார்த்தையுடை யவன், வார்த்தை சோர்வில்லாதவன். கபடி. மைதுனப் பிரியன். களத்திரத்தின் சொல்லைக் கேட்பவன். ரோக களத்திர

முடையவன். வெட்கமுடையவன். கணக்கன். மூத்திரக் கிருச்சிரமுடையவன். புகழுடையவன். விஷயாதிகன். வழக்கறிபவன். 2-3-4-5-8-9-18-25-28 இந்த வயதுகளில் நெருப்பு ஆயுதம். சுரம், கண்ணோய் இவைகளாற் பீடை இந்த இலக்கினத்தைச் சுபக்கிரகம் பார்க்கில் 105 வயது வரையில் வாழ்ந்திருப்பான்.

இந்த இலக்கினத்துக்குச் சூரியன், செவ்வாய், வியாழன் கொடிய பாபிகள். வியாழன் சனியுடன் சேருவானாகில் மேஷ ராசியிற் பிறந்தோர்க்கொத்தபடி அசுபத்தை யளிப்பான். சுக்கிரன் ஒருவனே சுபன். சந்திரன் தவிதீயாதிபத்திய தோஷத்தை உடையவனாயிருந்தாலும் மாரகங்கொடான் சூரியனைச் செவ்வாய், வியாழன் இவர்கள் மாரகஸ்தானங் களிலிருந்தால் மாரகசமானமாகிய கண்டத்தைக் கொடுப் பார்கள். குருவும் சனியும் தரும கருமாதிபதி களாகையால் யோக காரகர்கள். பலமறிந்து சொல்லவும்.

## ஸத்யாசார்ய மதப்படி மிதுனம் லக்கினமாக வந்த பலன்

அங்கஹீனன் அல்லது அதிக அங்கமுடையவன். பிரியவாதி. கொண்டாடத்தக்க காரியம் செய்பவன். நன்மை தீமைகளுடையவன். இரு தாய்களையுடையவன். அற்பன் சிறிய சரீரமுடையவன். தாய் தகப்பன் முதலியவர்களால் கொண்டாடத்தக்கவன். குறைந்த சகோதரமுள்ளவன். அல்ப காரியம் செய்பவன். ஜயசீலன், நற்குணமுள்ளவன். பல காரியங்களைச் செய்ய ஆசைப்படுபவன். தர்மிஷ்டன். கெட்ட நடத்தையால் திரவியத்தை அழிப்பவன். பல களத்ரமுள்ளவன். மகா ரோகங்களைப் போக்குபவன். பாம்பு, விஷம், மிருகம், ஜலம் இனங்களால் மரணம் நேரிடக்கூடும்.

## இந்த லக்கினத்திற்கு நல்லவர்கள் கெட்டவர்கள்

புதன் 1,4 க்குடையவன், இவனுக்கு மற்றவர்களைக் காட்டிலும் கேந்திராதிபத்ய தோஷம் குறைவு. ஆகவே சுப பல காரகன்.

சந்திரன் 2ம் அதிபன் மாரகேசனானாலும் இவன் கொல்லான்.

சூரியன் 3ம் அதிபன் நிச்சயமாக அசுபன்.

சுக்கிரன் 5, 12க்குடையவன் சுபன்.

செவ்வாய் 6, 11க்குடையவன் அசுபனே.

சனி 8, 9க்குடையவன் சமபலன் தருபவன். இவனுக்கு 9ம் அதிபத்யம் இருப்பதால் 8ம் பாவ அசுபம் குறைவு.

குரு 7, 10க்குடையவன் மாரகஸ்தானம். அதனுடன் கேந்திராதிபத்தியமும் உண்டு. அதனால் அசுப பலனே கொடுப்பான்.

## சுபயோகம்

1) புதன் + சுக்கிரன், 2) புதன் + சனி, 3) சுக்கிரன்+சனி.

சனி காரகன் மாரகன் இரண்டும் ஆவான். குரு 7ம் அதிபதியாகையால் பாதகாதிபதி ஆகையால் அசுபனே. இந்த லக்கினத்திற்கு குரு சந்திரன் மாரகர்கள், செவ்வாய், குரு, சூரியன் இவர்கள் அசுபர்கள். புதன், சந்திரன் சமபலன் தருபவர்கள். சுக்கிரன் காரகன். சனி மேற்சொன்ன காரணத்தால் அசுபனாவதோடு சுபன்.



## அத்தியாயம் - 7

# மிருகசீரிட நட்சத்திரம்

*இது 5 வது நட்சத்திரம். ரிஷப ராசியில் 53 பாகை - 20 முதல் 64 பாகை 40 வரை பரவி உள்ளது.*

*அரபுப் பெயர் - அல்ஹக்*

*சீனப்பெயர் - சியூ*

*கிரேக்கப் பெயர் - ஓரியனிஸ்*

*இது மான்தலை போன்று தோற்றம் கொண்ட 3 நட்சத்திரங்களைக்கொண்டது. முதல் 2 பாதங்கள் ரிஷப ராசியிலும் பின் இரண்டு பாதங்கள் மிதுன ராசியிலும் உள்ளன.*

**நிரந்தர நடைய னாகும் தேசமெய்ப் பொருளும் வல்லான்**
**அருந்தவத் தோர்க்கு நல்லான் ஆயுதம் பிடிக்க வல்லோன்**
**நிரம்பிய கல்வி கற்கும் நினைத்தது முடிக்க வல்லான்**
**வருந்தியே கருமஞ் செய்யும் மான்தலை நாளி னானே. (61)**

*(சுவடி எண். 1500)*

*(நின்றுகந்தாட வல்லான்) என்ற அதிகப்படி அறையடி காணப்படுகிறது.*

*மிருக சீரிட நட்சத்திரத்தில் பிறந்தவன் நன்கு நிமிர்ந்து அழகாக நடப்பவன். எல்லா உண்மையான ஞானம் சார்ந்த கருத்துக்களையும் அறிந்தவன். தவம் செய்யும் முனிவர்க்கு நல்லவன். நல்ல ஆயுத படைக்கலப் பயிற்சி பெற்றவன். நிறைந்த கல்வி கற்றவன். தான் எண்ணியதை முடிக்க வல்லவன். கஷ்டப்பட்டு எந்தக் கடினமாக செயலையும் செய்ய வல்லவன். நன்கு நடனம் பயின்றவன். இக்குணங்கள் உள்ளவனே மிருக சீரிடத்தில் பிறந்தவனாவான்.*

இப்பால் இன்னானுக்குத் தெய்வம் ஈஸ்வரன். பூதம்-பிரிதிவி. கோத்திரம் அகஸ்தியன். சாதி வைசியன். யோனி சாரைப்பாம்பு. பட்சி கோழி. விருட்சம்- கருங்காலி மரம். கணம் தெய்வகணம், இந்த நட்சத்திரம் மூன்று தேங்காய்கண் போலிருக்கும். மார்கழி மாதம் சூனியம் வரும் புதன்கிழமை முப்பது நாழிக்குமேல் 2 நாழிகை விஷம். இதில் வெதுப்பு தோன்றில் ஒன்பது நாளில் தத்து. இதற்கு நெய்யால் ஓமம் செய்யவேண்டும். நான்கு நாளில் தீரும்.

தெய்வபக்தியுடையவன். அரசரால் கொண்டாடப் படுபவன். யாத்திரைக்கு மாமிசம் தின்று மாமிசத்துக்குச் சமமான உளுத்தம் வடை தின்று, வழிப்போனால் வெற்றி. கையும் காலும் உடம்பும் அழகியவன். நெற்றி உயர்ந்திருக்கும் வயிறு திரண்டிருக்கும். புத்தியுடையவன். தலைமயிர் நெருக்கமாகத் திரண்டிருப்பவன். முகத்தில், மார்பில் முதுகிலாவது மருமச்சம் உடையவன்.

இந்த நட்சத்திரத்தில் வழக்காடினால் 3 நாள் 6 நாள் அல்லது 8 தாளில் வெல்வான். இதில் மழை தோன்றில் மேற்கண்ட நாட்கள் வரை பெய்யும்.

இந்த நட்சத்திரம் கூடிய திங்கள்கிழமை சந்திரோ தயத்தில் சென்றால் பசு, மாதர், எருமை, குதிரை கொள்ள நன்று. இந்த நட்சத்திரத்தில் பெண் திரண்டால் ஆண் குழந்தை பெறுவாள்.

**பிற செய்திகள்:** இது மிருது நட்சத்திரம் எனப்படும். புது நண்பர்களைச் சந்திக்க நல்ல நாள். இந்த நாளில் களஞ்சியத்தில் தானியம் சேர்க்க நன்று. இதில் நோய் தோன்றினால் 5 நாளில் குணமாகும். சனிக்கிழமை மிருக சீரிடம் கூடிய நாளில் எடுத்த காரியம் யாவும் நிறைவேறும். இது வர்த்தமான யோகம் எனப்படும். இதில் வித்தை கற்கத் தொடங்கினால் நல்ல முன்னேற்றம் உண்டாகும். மனை முகூர்த்தம், கிருகப்பிரவேசம் செய்ய நன்று.

இதில் பிறந்தவன் ஆசாரவான். தன் கருத்தை வெளியிட மாட்டான் . நல்ல ஞானி. நல்ல கல்வித்திறன் உண்டு. தாமதத் திருமணம் அல்லது இருதாரம் உண்டு.

அந்திமக் காலத்தில்தான் பெரும்பாலும் புத்தி சந்தானம் ஏற்படும். அப்படி பிறப்பது நல்லது. இளமையில் பிள்ளைகள் தோன்றினால் அவை பெண் பிள்ளைகள் தான். இந்த நட்சத்திரத்தின் அதிதேவை சந்திரன். சந்திரனை பௌர்ணமியன்று வழிபட நன்று. இது அபகவய நட்சத்திரம் அலி நட்சத்திரம் . சமநோக்கு நாள்.

ஞாயிறு, வியாழன், வெள்ளி ஆகிய கிழமைகளில் மிருக சீரிஷ நட்சத்திரம் வந்தால் அது சூன்ய தினம் எனப்படும். இந்த நிலையில் பிறந்ததால் தோஷம் உண்டு. இவர்கள் 25 வது வயதில் கெட்ட சகவாசம் உண்டாகும். 50வயதில் குடும்பம் பிரியும். 70க்கு மேல் ஆயுள் உண்டு. இதில் செய்யத்தக்கவை, ருது கெமனம், சீமந்தம், நாமகரணம், அன்னப் பிராசனம், வேதாரம்பம், யாக, வித்யா, விதை விதைத்தல், கும்பாபிசேகம், வாஸ்து சாந்தி மாடு வாங்கல் முதலியவை செய்யலாம். இந்த நட்சத்திரத்தில் வருடம் பிறக்கில் சுகம். சாந்தி குமுத மலரால் பூஜை தசாங்க தூபம் நவோ தவோ பவதி என்ற மந்திரபூஜை. பயறு, எள், பஞ்சகவ்யத்தால் ஹோமம். சாவித்திரி 108 தடவை ஆகுதி. இதில் மாதம் பிறந்தால் பயிர் மத்திமம்.

**இதன் காரகங்கள்:** துணி, தாமரை, பூக்கள், பழங்கள், பட்சிகள், யாகத்தில் சோம ரச பானம், கந்தர்வர், காமுகன், தபால்காரன், வேலைக்காரன்.

## *தமிழ் ஜாதகாலங்காரப்படி இதில் பிறந்தவன் குணங்கள்*

காலையில் நீராடும் விருப்பமுள்ளவன். பெரிய கண்கள் உள்ளவன். பயிர் வளமுண்டு. அழகுடையவன். கல்விமான். தேகபலவான். மனதிற்கொண்ட ரகசியங்களை வெளியிடாதவன். நாடகம் இசையில் வல்லவன். சஞ்சாரி.

தாம்பூலப் பிரியன். கையில் அம்பு ரேகை உள்ளவன். அறிவாளி.

**யவன ஜாதகம்:** உற்சாகமுடையவன். சஞ்சலமுடையவன். பயம் உடையவன். தனவான். அபிமானி. எல்லோருக்கும் நிஷ்டூரன். சாஸ்திரம் அறிந்தவன். அரசனுக்கு சமானமானவன். சமர்த்தன் ஆவான்.

**பிருகத்ஜாதகம்:** சபல சித்தன். பயமுள்ளவன். சிறந்த பேச்சாளன், சமர்த்தன், தனவான், போகவான் முதலியன.

**பெண்கள்:** வடமொழி பெண் ஜாதகம் கூறும் மிருக சீரிஷம் பிறந்தவள்.

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவள் அழகிய வடிவமைப்புள்ளவள். தன்மானம் உள்ளவள். எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருப்பவள். இனிமையாகப் பேசுபவள். நிறைய ஆபரணங்கள் அணிந்தவள். சாத்திரங்கள் கற்றவள். நல்ல குணமுள்ள ஆண்குழந்தைகள் பெறுபவள். தருமநெறி தவறாதவள். நல்ல நிறமுள்ள மேனியுடையவள்.

தாய் தந்தைக்கு வேண்டியவள். பணக்காரி. சிக்கனம் உள்ளவள். பிறர் மேல் விருப்பமுள்ளவள்.

## தமிழ் மதன நூல் வாக்கியம்

கொக்கோக மதனநூல் கருத்துப்படி இந்த நட்சத்திரத்தில் பிறந்தவள் முனி தத்துவத்தைச் சேர்ந்தவள். அவள் குணநலன் வருமாறு.

**கரியவாய் பெரிய ளாகும் கருணையும் இவள்பால் இல்லை**
**அரியதாம் ஒன்றும் ஈயாள் அகங்கனி இல்லம் சாராள்**
**உரிமைகள் பலதும் பேசும் உண்பதும் புளிப்பே யுண்ணும்**
**பெருமுலை உருண்ட தோளாள் பெருமிரு சீரிடத்தி னாளே.**

மிருகசீரிட நட்சத்திரத்தில் பிறந்தவள் கரிய பெரிய உருவமுடையவள். கொஞ்சம் கூட கருணை இல்லாதவள். வீட்டில் கால் நிற்காது. வாயாடி, நிறைய பேசுவாள். புளிப்பான சுவையையே உண்பாள். பெரிய கொங்கைகளும் உருண்ட தோள்களும் உள்ளவள்.

**நட்சத்திர பாத பலன்**

***தமிழ் ஜாதகாலங்காரப்படி***

உரைத்திடும் தனவான் சத்துரு சங்காரன்
உறுதூல தேகனாம் கோபி
உண்மை ஆசார ஈனன் ராட்சதனாம்
ஓங்குமான் தலைமுதற் காலான்
தரைக்குநல் வழக்கே உரைப்பான் உத்தேசி
சாது மனோசாரம் பெற்றான்
சத்திய வாக்கியர் அரிசையர் லோலன்
சாற்றிடு மிரண்டதாம் காலன்
உரைக்குநல் லுதார குணமுள னல்லன்
உத்தமன் சாது சந்தோஷி
உசித ஆசாரன் புத்திமான் சீமான்
உற்ற மூன்றாம்பாத முற்றோன்
வரைந்துறு புத்தி சத்தியன் சாது
மேவிய துருமனக் காமி
வீரியன் கோபி வஞ்சக னென்றே
விளம்புநாற் பாதமும் இனியே !

1. மிருக சீரிட நட்சத்திர முதல் பாதத்தில் பிறந்தவன் உலகில் தனவான் என்ற புகழ் பெறுவான். தன்னை எதிர்த்த சத்துருக்களை ஜெயிப்பவன். பருத்த சரீரமுள்ளவன். கோபக்காரன். உண்மை பேசுபவன். ஆசாரமற்றவன். அரக்கத் தன்மை உள்ளவன்.

2. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன், உலகில் பிறருக்கு நீதியுரைப்பவன். தீர்க்க ஆலோசனை உள்ளவன். சன்யாசியைப் போன்று சாந்த குணமுள்ளவன். சிறப்பு வாய்ந்தவன். எவ்விதத்திலும் தவறாத சத்திய வாக்குள்ளவன். கல்வியில் பெரியன். பல பெண்களிடம் சுகமனுபவிக்கும் குணமுள்ளவன்.

3. மூன்றாம் பாதத்தில் பிறந்தவன், யார் என்ன கேட்டாலும் அமைதியுடன் பதில் சொல்லுபவன். நல்லவன். உத்தமன். போகமில்லாதவன். எந்நாளும் சந்தோஷத்துடன் இருப்பவன். மேலான ஆசார கிருத்தியங்கள் உள்ளவன். உயர்ந்த அறிவாளி. பணக்காரனும் ஆவான்.

4. நான்காம் பாதத்தில் பிறந்தவன், எவ்வித ஆலோசனை கேட்கினும், விரைந்து பதில் சொல்லுபவன். சத்தியம் தவறாதவன். சன்மார்க்கன், அளவற்ற தர்மங்களைச் செய்பவன். காமுகன். (போக சுகத்தில் அதிக இச்சை) பலசாலி, கோபமுள்ளவன். தன்னை வஞ்சித்தவரை வஞ்சிப்பவன் என்பதாம்.

## மிருகசீரிடம் முதல் பாதபலன்

இனி மரணகண்டிகை கூறும் பாத பலன். சுவடி எண். 1500 ஜாதகசார தீபத்தில் மிருக சீரிட பாத பலன்.

1ம் பாதத்தில் பிறந்தவன் அரசன் - யோகமுள்ளவன்.

2ம் பாதத்தில் பிறந்தவன் - திருடன்.

3ம் பாதத்தில் பிறந்தவன் - தன தான்யம் நிறைந்தவன்.

4ம் பாதத்தில் பிறந்தவன் - தன தான்யம் நிறைந்தவன்.

மரணகண்டிகை சுவடி எண் 1500ல் கண்டது.

## *மிருக சீரிட நட்சத்திரம் முதல் பாதத்தில் பிறந்தவன்*

**தலையது கறண்டி யாகும் தனமது பெரியோ னாகும்**
**மலையென வளர்ந்த தோளன் வார்த்தைய னுடைய னாகும்**
**கலைபல நன்கு கற்றான் கடிமதக் காளை யாகும்**
**மலைதரு வாலி பத்தில் மதியினங் கிஷத்தி னானே !**

*(சுவடி எண். 1500)*

*மிருக சீரிடம் முதல் பாதத்தில் பிறந்தவன் தலை மானினது போன்று (மான்தலை-மிருகசீரிஷம்) அல்லது கமண்டலம் போன்று வட்டமாக உருண்டு இருக்கும். நல்ல பெரிய பணக்காரன், மலைபோல் திரண்டுயர்ந்த தோளுடையவன். நல்ல வாக்குத் திறன் உள்ளவன். பல கலைகளிலும் வல்லவன். நல்ல மதர்த்த பலமுள்ள காளையைப் போன்று கம்பீரமுள்ளவன். வாலிபத்தில் இன்னும் அழகாக இருப்பான் என்பதாம்.*

## *முதல் பாதத்திற்குரிய காலச்சக்கர தசை வருமாறு*

| | |
|---|---|
| *மீனவியாழன்* | *10 வருஷம்* |
| *மிதுன புதன்* | *9 வருஷம்* |
| *கும்ப சனி* | *4 வருஷம்* |
| *மகரச்சனி* | *4 வருஷம்* |
| *கடக சந்திரன்* | *21 வருஷம்* |
| *மேஷச் செவ்வாய்* | *7 வருஷம்* |
| *சிம்ம சூரியன்* | *5 வருஷம்* |
| *ரிஷப வெள்ளி* | *16 வருஷம்* |
| *கன்னி புதன்* | *9 வருஷம்* |
| *ஆக வயது* | *85 வருஷம்* |

## *மிருக சீரிட நட்சத்திரம் 2ம் பாத பலன்*

**மேதையான் அனங்கன் சால வேந்தரால் விருப்ப முண்டாம்**
**மாதுமால் உடைய னாகும் மனம்பெரி துடைய னாகும்**
**தாதுசேர் குழலி னாள்மேல் தனம்பொருள் சால நல்லான்**
**மீதுறு வலக்கை எள்ளான் மிதுனவங் கிஷத்தி னானே. (64)**

*(சுவடி எண். 1500)*

இவன் அறிவாளி. அரசர்களால் மிகவும் விரும்பப் படுவான். பெண்கள் மேல் மையல் உடையவன். பரந்த மனப்பான்மை உடையவன். தான் விரும்பும் அழகிய பெண்ணை, நல்ல தனம் முதலியவை செலவழித்துத் திருமணம் செய்துகொள்வான். வலது கையின் நிறைந்த வலிமையுள்ளவன் என்பதாம்.

### இரண்டாங்காலுக்குக் காலச்சக்கர தசை

| | |
|---|---|
| *மிதுன புதன்* | *9 வருஷம்* |
| *ரிஷப வெள்ளி* | *16 வருஷம்* |
| *மேஷச்செவ்வாய்* | *7 வருடம்* |
| *மகரச்சனி* | *4 வருடம்* |
| *கும்பச்சனி* | *4 வருடம்* |
| *மீன வியாழன்* | *10 வருடம்* |
| *விருச்சிகச் செவ்வாய்* | *7 வருடம்* |
| *கடகச்சந்திரன்* | *21 வருடம்* |
| *கன்னி புதன்* | *9 வருடம்* |
| *ஆக வயது* | *87 வருடம்* |

## *மிருக சீரிட 3ம் பாத பலன்*

**தெள்ளிய தருமம் செய்வாள் சேயிழை யாரைப் பேணும்**
**ஒள்ளிய கண்ணி னாள்மேல் ஒண்பொருள் சார நல்லன்**
**பள்ளியும் பலவும் கற்றும் பாக்கிய னுடைய னாகும்**
**வெள்ளியங் கிஷத்தில் வந்த வெற்பெனும் காளை தானே. (64)**

*(சுவடி எண். 1500)*

இவன் தகுதியுடையோர்க்கு தானம் செய்வான். பெண்களைப் பாதுகாப்பான். அழகுள்ள, தான் விரும்பும் பெண்ணை நல்ல செலவு பண்ணி, திருமணம் செய்வான். பள்ளிகள், கல்லூரிகள் சென்று படித்து உயர்கல்வி பெறுபவன். பாக்கியவான். மலைபோல் கம்பீர தோற்றமுடையவன் என்க.

### *இந்த பாதத்திற்குக் காலச்சக்கர தசை வருமாறு*

| | |
|---|---|
| *மிதுன புதன்* | *9 வருஷம்* |
| *மீன வியாழன்* | *10 வருஷம்* |
| *சிங்க மாதித்தன்* | *5 வருஷம்* |
| *கடகச் சந்திரன்* | *21 வருஷம்* |
| *கன்னி புதன்* | *9 வருஷம்* |
| *துலாம் வெள்ளி* | *16 வருஷம்* |
| *விருச்சிகச்செவ்வாய்* | *7 வருஷம்* |
| *மகரச்சனி* | *4 வருஷம்* |
| *கும்பச்சனி* | *4 வருஷம்* |
| *ஆக வயது* | *85 வருஷம்* |

## *மிருகசீரிடம் 4ம் பாத பலன்*

குறுகிய புருவன் மெய்யன் குவளைசேர் குதலை வாயன்
முறுகிய கொடுமை செய்யும் முதுகினில் சுழியுண் டென்றும்
மறுகிய மனத்தன் பெண்மேல் மனமது சார நல்லன்
செறிதரு கூந்தல் பேணும் சேயினங் கிஷத்தி னானே. (65)

*(சுவடி எண். 1500)*

*இவன் குறுகிய வளைந்த புருவங்கள் உள்ளவன். உருவமும் ஓரளவு குட்டையாகத்தான் இருக்கும். குவளை மலர் போன்ற குவிந்த வாயும் மழலை நீங்காத சொற்களும் பேசுபவன். மனம் மாறுபட்ட சிந்தனை உள்ளவன். பெண்கள் மேல் ஆசையும் நாட்டமும் உள்ளவன். நெருங்கிய அடர்த்தியான தலைமயிருடைய அழகிய பெண்ணைக் கூடி சுகித்து மகிழ்ந்திருப்பவன் என்பதாம்.*

### 4ம் பாதத்திற்குக் காலச்சக்கர தசைகள் வருமாறு

| | |
|---|---|
| *தனுசு வியாழன்* | *10 வருஷம்* |
| *விருச்சிகச் செவ்வாய்* | *7 வருஷம்* |
| *துலாம் சுக்கிரன்* | *16 வருஷம்* |
| *கன்னி புதன்* | *9 வருஷம்* |
| *சிங்கப் புதன்* | *5 வருஷம்* |
| *கடகச் சந்திரன்* | *21 வருஷம்* |
| *மிதுன புதன்* | *4 வருஷம்* |
| *ரிஷப சுக்கிரன்* | *16 வருஷம்* |
| *மேஷ செவ்வாய்* | *7 வருஷம்* |
| *ஆக வயது* | *100 வருஷம்* |

## இந்த நட்சத்திரத்திற்கு விம்சோத்தரி தசை

| | |
|---|---|
| செவ்வாய் | 7 வருடம் |
| ராகு | 18 வருடம் |
| குரு | 16 வருடம் |
| சனி | 19 வருடம் |
| புதன் | 17 வருடம் |
| கேது | 7 வருடம் |
| சுக்ரன் | 20 வருடம் |
| சூரியன் | 6 வருடம் |
| சந்திரன் | 10 வருடம் |
| ஆக வயது | 120 வருடம் |

இவன் பிறந்த ஆண்டில் செவ்வாய் தசையில் தத்து, ஐந்து வயதில் சிலந்தியால் விஷக்கடி, பதின்மூன்று வயதில் வெதுப்பு. இருபது வயதில் உதிரத்தால் கோளாறு. (வெதுப்பு-சூடு) முப்பத்தஞ்சு வயதில் நான்குகால் மிருகத்தால் தாக்கப்படல். அறுபத்தைந்து வயதில் நீரால், ஜன்னியால் நோய். எழுபதாவது வயதில் கள்ளரால் கெடுதி. எண்பத்து மூன்று வயதில் மீண்டைஇடி. எண்பத்தாறு வயது சென்று வைகாசி மாதம் 9ம் தேதி பூர்வபட்சம், தசமி, சோம வாரம், மிருக சீரிஷம் மூன்றாம் பாதத்தில் செருக்கி இறைவனடி சேர்வான்.

இவன் பிறந்த லக்கின சாரம் சூரியனாகில் உடல் வெளுத்திருக்கும்.

இவன் பிறந்த லக்கின சாரம் சந்திரனாகில் சீமானாவான்.

இவன் பிறந்த லக்கின சாரம் செவ்வாய் ஆகில் தரித்திரன்.

இவன் பிறந்த லக்கின சாரம் புதனாகில் புத்திமான்.

இவன் பிறந்த லக்கின சாரம் குருவாகில் குணவான்.

இவன் பிறந்த சாரம் சுக்கிரனாகில் வேளாண்மை செய்வான்.

இவன் பிறந்த சாரம் சனியாகில் கோழையாம்.

இவன் பிறந்த லக்கினம் இராகு சாரமாகில் வியாபாரி, துஷ்டன்.

இவன் பிறந்த லக்கினம் கேது சாரமாகில் கள்ளன், துஷ்டன்.

இந்த நட்சத்திரத்தில் விவாகம் பண்ண, பெண் திரள நன்று. திங்கள் கூடில் அமிர்தயோகம். வியாழன் கூடில் மரணயோகம்.

இந்த நாளில் சுரம் தோன்றில் 10 நாளில் விடும். விடாதிருந்தால் கருங்காலி மரத்தடியில் நீர்க்கரையில் தேவதையை நோக்கி வேத மந்திரத்தால் பூசை செய்யவும்.

இவன் பிறக்கும்போது புதன், சனி, கேது, வலுத்து பாப சம்பந்தம் பெற்று 4ம் இட சம்பந்தமும் பெற்றால் 27 நாளைக்குள் தாய்க்குக் கண்டம் உண்டு. தாயைப் பெற்ற பாட்டிக்கு ஆறுநாள் தோஷமுண்டு.

இதற்கு மகேசுவர பூஜை, விநாயகபூஜை, ஆதித்தன் அதாவது சூரியனுக்குப் பூஜை பண்ணவும். பிராமணன், வள்ளுவன் இவர்களுக்குத் தானம் பண்ணவும்.

## கருமவிபாகம்

***சிவபெருமான் உமையம்மைக்குக் கூறிய மிருக சீரிஷம் முதல் பாதத்தில் பிறந்தவன் பூர்வ ஜென்ம வரலாறும், பரிகாரமும்.***

**சிவபெருமான் கூறுகிறார்:** ஏ மாயா தேவீ! அழகிய முகமுடையவளே ! இப்பொழுது மிருக சீரிட நட்சத்திரம் முதல் பாதத்தில் பிறந்தவனின் முற்பிறவியின் செய்தியைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

மத்திய தேசத்தில் ஒரு அழகான நகரத்தில் பிரம்மசாரி ஒழுக்கம், வேத வேதாங்கங்களில் சிறந்த ஒரு அந்தணன் இருந்தான். தினமும் நான்கு வேதங்களையும் பிறருக்குச் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருந்தான். இதனால், இவன் வேதசர்மன் என்று புகழ்பெற்றான். இவனுக்கு சுசீலா என்ற பெயருடைய மனைவியுண்டு. இவன் வேதம் ஓதுவித்து அதில் வரும் சம்பாத்தியத்தில் வாழ்ந்து வந்தான். இந்த அந்தணனுக்கு ஒரு கருமான் (கொல்லன்) நண்பனாக இருந்தான். நாநூறு துலாம் எடையுள்ள தன் தங்கத்தைப் பாதுகாப்பாக காப்பாற்றும்படி இந்த அந்தணனிடம் கொடுத்து வைத்திருந்தான். இதை அந்தணன் திருப்பிக் கொடுக்காததால் அந்தக் கவலையாலேயே கொல்லன் இறந்துபோனான்.

கொல்லனிடம் இப்படி அபகரித்த தங்கத்துடன் தன் மனைவியுடன் அந்தணன் வாழ்ந்து வந்து கடைசியில் அவனும் இறந்தான். இந்த பிராமணன் சூரிய நாராயணனின் பக்தனானதால் இறப்புக்குப்பின் சூரியலோகம் சென்றான். அங்கே 20,000 வருடங்கள் சுகவாழ்வு வாழ்ந்தான். இப்படிப் புண்ணியம் குறைந்ததும் பூவுலகில் மீண்டும் மனிதனாகப் பிறந்தான். தன் புண்ணிய வசத்தால் செல்வம் நிறைய இருந்தும் முன்செய்த பாவத்தால் இவனுக்குப் புத்திர பாக்கியம் இல்லாமல் போயிற்று. முன்பிறவியில் இவன் களவு செய்த கொல்லன், காலம் கடந்து, இவனுக்கு மகனாகப் பிறந்தான். இவன் அன்பு உள்ளவனாக இருந்தான். இவன் வாலிபப் பருவம் அடையும்போது இறந்து போனான். இதற்குப் பரிகாரம் கேட்பாயாக!

இதற்கு காயத்திரி மந்திரம் ஒரு லட்சம் -ஜபம் பண்ண வேண்டும். துர்கா பூஜை அதன்பின் பண்ணவேண்டும். பத்து நிறம் கொண்ட பசுக்கள் தானம் பண்ணவேண்டும். (ஒவ்வொரு நிறத்திலும் ஒவ்வொன்றும் பூமி தானமும் பண்ண வேண்டும்) அதனால் முன் ஜென்ம பாவம் முழுவதும் விலகும். மேலும் பாவம் விலக கயாவுக்குச் சென்று பித்ரு

சிரார்த்தமும் பண்ணவேண்டும். சங்கிரமண காலத்தில் (தை, மாதப்பிறப்பு வரும்போது) பிரயாகையில், திரிவேணியில் சென்று கங்கை நீராட வேண்டும். இப்படிச் செய்தால் இவன் பாவம் முழுவதும் விலகும். அதன் பின் தீர்க்காயுள் உள்ள புத்திரன் பிறப்பான். இவனுடைய எல்லா நோய்களும் நீங்கும். முதல் பாத பரிகார விவரம் முற்றிற்று.

## *மிருக சீரிடம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பூர்வ புண்ணிய வரலாறு*

சிவபெருமான் சொல்லுகிறார்: அழகிய கன்யா குப்ஜம் என்ற தேசத்தில் நந்தனம் என்ற நகரத்தில் வறுமை மிகுந்த, பிச்சை எடுத்து (உஞ்ச விருத்தி) பிழைக்கும் போதசர்மா என்ற பிராமணன் ஒருவன் இருந்தான்.

இவன் பிறரளிக்கும் உணவு உண்டு அவர்கள் சொல்லும் தபால் அனுப்புதல் போன்ற வேலைகளைச் செய்து வந்தான். அவன் மனைவி போதமா என்றவளும் இத்தகைய பணிகளில் புகழ் பெற்றிருந்தாள். இவன் பிறந்தது முதல் இறக்கும் வரை பிறரிடமே வெளி உணவே உட்கொண்டு வந்தான். இதனால் பரான்னம் உட்கொண்ட பாவத்தால் இறப்புக்குப் பின் இவர்கள் இருவருக்கும் நரக வாசமே கிடைத்தது. 1000 வருடம் நரக துன்பம் அனுபவித்த பின் இவன் ஆட்டுப்பிறவியை அடைந்தான். அதன்பின் மனிதப்பிறவியை அடைந்தான். மத்திய தேசத்தில் பூர்வஜென்ம பாவத்தால் நோயாளியாகவும், நாட்டியம் சொல்லிக் கொடுப்பவனாகவும் பிழைத்து வந்தான். பிள்ளையோ பெண்ணோ அவனுக்குப் பிறக்கவில்லை. இவன் பூர்வ ஜென்மத்தில் சிரார்த்தமும் பண்ணவில்லை. இதனால் இவன் வம்சம் விளங்கவில்லை. இதற்குப் பரிகாரம் சொல்லுகிறேன் கேட்பாயாக!

இதற்கு காயத்திரி மந்திரத்தினையும் ஜாதவேதசே என்ற மந்திரத்தையும் இணைத்து லட்சம் தடவை ஜபம் செய்யவேண்டும். அதில் 10ல் ஒரு பங்கு ஹோமமும் அதில் 10ல் ஒரு பங்கு மார்ஜனமும் செய்யவேண்டும். அதன்பின்

உண்மையான, ஒழுக்கமுள்ள, அந்தணர்களைத் தேடி, பக்தியுடன் உபசரித்து அவர்களுக்கு உணவு உட்கொள்ள வைக்கவேண்டும். இப்படிச் செய்வதால் அவன் பாவங்கள் முழுதும் நாசமாகும்.

அதன் பின் நீல நிறம் கொண்ட எருது ஒன்றை அலங்கரித்து, உரிய நல்லவனுக்குத் தானம் பண்ண வேண்டும். அதன்பின் அவன் மனைவி மலடு நீங்கும். அவளுக்கு ஆண் குழந்தை பிறக்கும். சந்தேகமில்லை.

## *மிருகசீரிட நட்சத்திரம் 3ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ புண்ணிய விவரம்.*

**சிவபெருமான் சொல்லுகிறார்:** ஏ விசாலா ! நர்மதை நதிக்கரையில் புரி என்ற நகரம் இருந்தது. அதில் ஒரு பணக்காரனான குயவன் வசித்து வந்தான். அவன் பெயர் கர்ம சந்திரன். தான் குயவத்தொழில் புரிந்து பணம் சம்பாதித்து வந்தான். அவன் மனைவியின் பெயர் தேவி என்பதாம். அக்குயவன் ஆயுள் பூராவும் மட்குடம் செய்து விற்று வந்தான். தொண்டு கிழவனும் ஆகிவிட்டான். அவன் செயலிழந்ததால் சம்பாத்யமின்றி ஏழையானான். இதனால் வயிறு வளர்க்க வழி இன்றி ஒரு முறம் பின்னும் தொழிலாளியிடம் 100 பொற்காசுகள் கடன் வாங்கினான். இவன் மனைவி, முன்னாலேயே இறந்து போனாள். குயவனும் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்காமலேயே இறந்து போனான். கணவன் மனைவி இருவரும் நர்மதை நதிக்கரையில் இறந்தனர். அந்த புண்ணிய வசத்தால் இவர்கள் சுவர்க்கத்தில் பல காலம் சுகபோகம் அனுபவித்தனர். புண்ணியம் தீர்ந்தபின் மீண்டும் பூலோகத்தில் பணக்காரனாகப் பிறந்தான். போன ஜென்ம மனைவியே இப்பொழுதும் பெண்ணாகப் பிறந்து இவனுக்கு மனைவி யானாள். இவனுக்குக் கடன் கொடுத்தவனே இவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தான். ஆனால் சிறுவயதிலேயே இறந்து போனான். இந்த குயவன் கெட்ட சகவாசத்தால் தாசிகள்

வேசிகளிடம் சென்று தன் சொத்தை செலவழித்து வந்தான். இவனுக்கு அடுத்துப் பெண் குழந்தைகளே பிறந்தன. ஆண்குழந்தை ஏற்படப் பரிகாரம் சொல்லுகிறேன். கேள்!

இதற்கு ஒரு லட்சம் முறை காயத்திரி மந்திரமும், அதே எண்ணிக்கை த்ரயம்பக மந்திர ஜபமும் பண்ண வேண்டும். முக்கோண வடிவமுள்ள ஓமகுண்டம் அமைத்து மந்திரங்களினால் அதில் 10ல் ஒரு பங்கு ஹோமமும் அதில் 10ல் ஒருபங்கு தர்ப்பணமும், அதில் 10ல் ஒருபங்கு பிராமண போஜனமும் பண்ணிவைக்க வேண்டும். இதன் பின் தங்கம் பூண் பொருத்தப்பட்ட கொம்புகளுடன் செங்காவி நிறமுள்ள பசுவைக் கன்றுடன் தகுந்தவனுக்குத் தானம் கொடுக்க வேண்டும்.

அதன்பின் 100 தோலா தங்கத்தாலான முறம் விற்கும் குறவன் மாதிரி உருவம் பண்ணி, நல்ல வேதம் தெரிந்த வேதியனுக்குத் தானம் பண்ண வேண்டும்.

இதனால் இவன் பாவங்கள் விலகும், நல்ல ஆண் சந்ததியும் ஏற்படும்.

## மிருக சீரிட நட்சத்திரம் 4ம் பாதத்தில் பிறந்தவர்களின் போன ஜென்ம விவரம்

**சிவபெருமான் சொல்லுகிறார்:** அவந்தி நகரத்திற்குத் தெற்கில் 5 மைல் தொலைவில் கேசவபுரம் என்று ஒரு நகரம் உண்டு. அந்த ஊரில் வேதபாடம் செய்யும் கிஷோர் சர்மா என்ற பிராமணன், இறந்தவர்களுக்குக் கருமம் செய்யும் வீடுகளில் உணவு (பித்ருவுக்கு சந்தி கருமத்தில்) உண்டு வந்தான். அவன் மிகவும் கஞ்சன். யாருக்கும் உதவி செய்யமாட்டான். இதனால் அவனிடம் அபரிமிதமான பணம் குவிந்துவிட்டது. இவன் புண்ய காரியங்கள் எதற்கும் செலவு பண்ணமாட்டான். தன் இளைய சகோதரன் பங்கையும் அவனிடம் கொடுக்காமல் மூன்று கோடி பணம் சேர்த்தான். தன் அண்ணனிடம் பணம் கேட்டு கேட்டு அலுத்து, அந்த

இளையவன், கடைசியில் பிழைக்க வழி இல்லாமல் இறந்துபோனான். அண்ணனும் வெகுகாலம் சென்று இறந்துபோனான். தான் பண்ணிய பாவத்தால் 19யுகங்கள் கோர நரகத்தில் துன்பம் அனுபவித்தான். அதன் பின் கர்ம வசத்தால் கழுதையாகவும், ஆடாகவும் பிறந்து இறந்து, அதற்குப் பின் மனித ஜென்மம் பெற்றான்.

போன ஜென்ம பாவத்தால் அவனுக்குப் பெண்களே பிறந்தன. மேலும் இவன் மனைவியின் கற்பம் கலைந்து கொண்டே வந்து காலம் கடந்தது. போன ஜன்மத்தில் செய்த பாவத்திற்கு இந்த ஜென்மத்தில் எவனும் கட்டாயம் துன்பம் அனுபவிக்கத்தான் வேண்டும். போன ஜென்மத்தில் தன் தம்பியை ஏமாற்றியதால் இவனுக்கு தீரா நோய் கண்டது.

இதற்கு சாந்தியாக ஒரு லட்சம் முறை காயத்திரி ஜபம் பண்ண வேண்டும். பின்பு தன் செல்வத்தின் 6ல் ஒரு பங்கைக் கொண்டு மீண்டும் காயத்திரி மந்திரத்தையும், ஜாத வேத சே, என்ற மந்திரத்தையும் 3 லட்சம் முறை ஜபம் செய்ய வேண்டும். அதன்பின் 10 நிறம் கொண்ட 10 மாடுகளை விதிப்படி தானம் கொடுத்து, ஹோமம், மார்ச்சனம், தர்ப்பணம், பிராம்மண போஜனம் முதலியவற்றைச் செய்விக்கவேண்டும். இதனால் இவன் பாவங்கள் நீங்கி நோயும் அகலும். அதன் பின் நல்ல சந்ததியும் உண்டாகும். அதன்பின் இருபது தோலா எடையுள்ள தங்கத்தில் சூரிய மூர்த்தியைச் செய்யவேண்டும்.

## *பிறர் மதப்படி மிருக சீரிட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்*

### பொதுத்தன்மை - ஆண்கள்

**1. உடலமைப்பு:** இவன் அழகான மற்றும் குண்டான உடலமைப்பு உள்ளவன். உயரமானவன். மாநிறம் உள்ளவன். மெல்லிய கால்களும் நீண்ட கைகளும் உண்டு.

**2. குணம்:** இவனிடம் ஒரு வித்தியாசமான போக்கு இருக்கும். இவன் சந்தேகப்பேர்வழி. எதையும் சந்தேகக் கண்ணில் பார்ப்பவன். இவன் அடுத்தவரிடம் நேர்மையாக நடப்பான். ஆனால் பிறர் இவனிடம் அவ்வாறு இருக்க மாட்டார்கள். இவனுடைய நேர்மையால் அடுத்தவர் இவனிடம் வியாபாரம் செய்வதை விரும்புவார்கள். ஆனால் இவன் நண்பர்கள், உறவினர்கள் மற்றும் கூட்டு ஸ்தாபனம் போன்றவற்றில் வியாபாரம் செய்யும் போது எச்சரிக்கை தேவை, ஏமாற்றம் ஏற்பட வாய்ப்புகள் அதிகம். அடுத்தவரிடம் கண்மூடித்தனமான நம்பிக்கை வைத்தால் பின்னர் தொல்லை மற்றும் வருத்தத்தில் முடியும்.

இவனை ஏமாற்றுபவர்களிடம் கூட திறம்பட வியாபாரம் செய்பவன். இயற்கையாக புத்திசாலி, சுறுசுறுப்பானவன். உழைப்பாளி, தந்திரசாலி, ஆனால் பிறரிடம் மிகவும் பாசமாக இருப்பதால் சந்தர்ப்பங்களும், மனிதர்களும் இவனை ஏமாற்றுவார்கள். இவன் தன்னுடைய வாழ்க்கையை எளிமையாக, குறிக்கோளுடன் வாழ்பவன். இவன் தன்னுடைய நேர்மையான வழியைக் கடைசிவரை கடைபிடிப்பான். இவன் அடுத்தவரிடம் பாரபட்சமாக நடப்பவர்களை எதிர்ப்பான். அடுத்தவரை மரியாதையாக நடத்துவான். அடுத்தவர் உபதேசங்களை கேட்டாலும், அதைத் தன் வாழ்க்கையில் கடைபிடிக்க மாட்டான். இவன் தன்னுடைய விருப்பப்படியே நடப்பவன். வெளியில் மிகவும் தைரியசாலியாக இருந்தாலும், மிகவும் கோழை. துணிச்சலான காரியத்தில் இறங்கத் தயங்கமாட்டான்.

இவன் சிறிய நிகழ்ச்சிகளுக்கு மனதை சங்கடப் படுத்துவான். அமைதியான மனம் இருக்காது. தன்னுடைய 32வது வயது வரை வாழ்க்கை சோதனைகளும், தவறுகளும் நிறைந்து இருக்கும். நடுக்கடலில் தொலைந்து போன படகைப் போல இருப்பான். எங்கே போவது? எப்படிப் போவது? ஏன் போவது? போன்ற கேள்விகள் இவன் மனதை அரித்துக்கொண்டிருக்கும். முடிவை எடுப்பது கடினம். 32வது

வயதிற்குப்பின் வாழ்க்கை திருப்திகரமாக இருக்கும். மற்ற கிரகங்கள் நல்ல நிலையில் இருந்தால் இது நடக்கும்.

**3. கல்வி, தொழில், பொருள் ஈட்டல்:** இவன் நன்றாகப் படிப்பான். அடுத்தவர்களுக்குப் பணத்தை சிக்கனமாக செலவழிக்க அறிவுரை கூறுவான். ஆனால் இவனால் அதைச் செய்ய இயலாது. இதனால் பொருளாதாரத்தடை ஏற்படும். இவன் வாழ்க்கையில் வெற்றிகளைத் தன்னுடை 32வது வயதிற்குப் பின்னரே அடைவான். அதுவரை ஏராளமான ஏற்றங்களும், இறக்கங்களும் இருக்கும்.

சில சமயங்களில் இவன் எந்த ஒரு காரியத்தையும் எடுத்து நடத்த முடியும். ஆனால் கடவுள் துணை இல்லாததால் மனவருத்தம் தற்கொலை நிலைக்கு கொண்டு வரும். இந்த நட்சத்திரத்தில் பிறந்தவனுடைய சதி என்று இதைச் சொல்லலாம். அதனால் இவன் பின்னால் கொடுக்கப்பட்டுள்ள பரிகாரங்களைச் செய்யலாம்.

33வது வயது முதல் 50 வயது வரை முழு முயற்சியுடன் இவன் செய்யும் அனைத்தும் வெற்றிகரமாக அமையும். முழு திருப்தி இருக்கும். இந்த சமயத்தில் இவன் எதிர்பாரா வண்ணம் பயன்கள் அமையும். ஆனால் எவ்வளவு சம்பாதித்தாலும் வாழ்க்கையில் இவனுடைய தவறுகளால் அனைத்து செல்வத்தையும் இழந்து விடுவான்.

**4. குடும்ப வாழ்க்கை:** சகோதரர்களால் ஒரு பயனும் இராது. கூடப்பிறந்தவர்கள் தொந்தரவுகள் மற்றும் பிரச்சினைகளும் பெரும் விரோதத்தையும் ஏற்படுத்து வார்கள். இவை இவனைத் துன்புறுத்தவே ஆகும். இவனுடைய உண்மையான அன்பு மற்றும் பாசத்தை உறவினர்கள் புரிந்து கொள்ளமாட்டார்கள். இவனை மற்றவர்கள் எப்போதும் தவறாகப் புரிந்துகொள்வார்கள். இதனால்தான் நாம் கடவுளை உணர்கிறோம். மற்றும் நட்சத்திரங்களின் உறவு மனிதர்கள் மீது ஆகியவற்றை நாம் நம்புகிறோம்.

இவனுடைய மனைவியின் ஆரோக்கியம் நன்றாக இராது. அதனுடன் இவனுடைய திருமண வாழ்க்கை சுமூகமாக இராது. அற்ப விசயங்களில் கருத்து வேற்றுமை, இவனுடைய பிடிவாத குணம் ஆகியவையே காரணம். சில சமயங்களில் கருத்து வேற்றுமைக்குக் காரணம் கணவன், மனைவி ஆகியோரில் யாராவது ஒருவரின் தொழில் ஓங்கி இருக்கும். இதனால் மற்றவருக்கு ஏற்படும். தாழ்வு மனப்பான்மையே காரணமாகும். இதைத் தடுக்க ஒரே வழி, மனைவி செவ்வாய்க்கிழமைகளில் விரதம் இருந்து சிவனை வழிபட வேண்டும்.

**5. ஆரோக்கியம்:** இவன் குழந்தைப் பருவத்தில் உடல்நலம் சரியில்லாமல் துன்புறுவான். மலச்சிக்கல் அடிக்கடி உண்டாவதால் வயிற்றுக் கோளாறை ஏற்படுத்தும். காயங்கள், சிராய்ப்புகள், தோள்களில் வலி போன்றவை ஏற்படுத்தும்.

## பொதுத்தன்மை - பெண்கள்

பெண்கள், ஆண்களுடன் குறிப்பிட்ட பலனையே ஏறக்குறைய அனுபவிப்பார்கள். கூடுதலாக அவர்களுடைய தன்மைகளை இங்கே காண்போம்.

**1. உடலமைப்பு:** உயரமானவள். கூர்மையான பார்வை, ஒல்லியான தேகம். அவளுடைய அமைப்பு மற்றும் உடல் மிக அழகாக இருக்கும்.

**2. குணம்:** இவள் புத்திசாலி, சமூக சேவையில் அதிக நாட்டம் செலுத்துவாள். எப்போதும் எச்சரிக்கையாக இருப்பாள். சுறுசுறுப்பானவள் மற்றும் சுயநலக்காரி. இவளுடைய நாக்கு மிகவும் பொல்லாதது. இதனால் மற்றவர் களுடன் பேசும்போது அல்லது கோபப்படும்போது எச்சரிக்கையாக இருக்கவேண்டும். ஏனென்றால் இவள் சாபம் கொடுத்தால் அது பலிக்கும். அடுத்தவர் இதனால் துன்புறுவர். இவள் படித்தவள். நுண்கலையில் நாட்டம் உண்டு. இவள்

கணவனை பூசிப்பவள். குழந்தைகள் உண்டு. போதுமான செல்வத்தை அடைவாள். நன்றாக சாப்பிடுபவள். விரும்பி எந்த உணவையும் உண்பாள். இவளுக்கு ஆடை, ஆபரணங்கள் யோகம் உண்டு. பணத்துக்காக பேராசைப் படுபவள்.

**3. கல்வி, தொழில், பொருள் ஈட்டல்:** இவள் மெத்தப்படித்தவள். இதில் மிகவும் ஆச்சரியமான விஷயம் என்னவெனில் ஆண்கள் செய்யும் தொழில்களை இவள் விரும்பிச்செய்பவள்.

**4. குடும்ப வாழ்க்கை:** திருமணத்திற்குப் பின்பும் இவள் சுறுசுறுப்பாகவே இருப்பாள். கணவனை தன் கையின் கீழ் வைத்திருப்பாள். இவளுக்கு ஒன்று அல்லது இரண்டு காதல் தொடர்பு இருக்கும். ஆனால் அது திருமணத்தில் முடியாது. தன் கணவனோடு மிகவும் நெருக்கமாக இருப்பாள். திருமணத்திற்கு முன் எதுவும் நடக்காதது போல இருப்பாள். பூரநட்சத்திரத்தில் பிறந்தவளைத் திருமணம் செய்யக்கூடாது. அப்படித் திருமணம் ஆனால், கணவன் இளவயதிலே இறந்து விடுவான்.

**5. ஆரோக்கியம்:** இவளுடைய ஆரோக்கியம் நன்றாக இராது. இவளுக்கு பருக்கள், மற்றும் மாதவிலக்கு கோளாறு, தோள்வலி போன்றவை ஏற்படும். இவள் மிருக சீரிடத்தில் வயதுக்கு வந்தால் நற்பண்புகள் உள்ளவள். கணவனை மிகவும் நேசிப்பாள். மற்றும் கணவனோடு மகிழ்ச்சியாக இருப்பாள்.

## *மிருக சீரிட நட்சத்திரத்தில் நின்ற சூரியனை மற்ற கோள்கள் பார்த்தால் பலன்*

**சந்திரன் பார்த்தால்:** இவனை நம்பி பல பெண்கள் இருப்பார்கள், போதிய செல்வத்தை நீர் சம்பந்தமான துறையின் மூலம் சம்பாதிப்பான்.

**செவ்வாய் பார்த்தால்**: இவன் வீரமானவன். அந்த வீரத்தின் மூலம் பணம் சம்பாதிப்பான். (வீர விளை யாட்டுகள், போட்டிகள்)

**குரு பார்த்தால்**: இவன் எழுத்தாளன் மற்றும் அழகிய உடலமைப்பு உள்ளவன்.

**புதன் பார்த்தால்**: இவன் ஆளுங்கட்சிக்கு நெருக்க மானவன். அவற்றின் மூலம் போதிய அளவு செல்வத்தைப் பெறுவான்.

**சுக்கிரன் பார்த்தால்**: இவன் அரசியலில் மிக உயர்ந்த நிலையைப் பெறுவான். நல்ல மனைவி குழந்தைகள் உண்டு. செல்வம் நிறைய உண்டு.

**சனி பார்த்தால்**: இவன் கேவலமானவன். தன்னுடைய வயதில் மூத்தவருடன் உடலுறவு வைத்திருப்பான்.

## *மிருக சீரிடத்தில் நின்ற சந்திரனை மற்ற கோள்கள் பார்த்தால் பலன்*

**சூரியன் பார்த்தால்**: இவன் விவசாயத்தை நம்பி இருப்பான். பணக்காரன்.

**செவ்வாய் பார்த்தால்**: இன்னொரு பெண்ணால் இவன் தன்னுடைய மனைவியிடமிருந்து பிரிய வேண்டி வரும். மற்றும் தன் தாய்க்கு ஆபத்து ஏற்படும்.

**புதன் பார்த்தால்**: இவன் மிக உயர்ந்த அளவில் படிப்பான். எல்லோரும் இவனை விரும்புவர்.

**குரு பார்த்தால்**: இவன் தன்னுடைய வாழ்க்கையின் எல்லா சுகங்களையும் மனைவி, குழந்தைகளுடன் அனுபவிப்பான். செல்வம் இவனுக்கு உண்டு. இவன் பிரபலமானவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் தன்னுடைய தாயிடமிருந்த சொத்தைப் பெறுவான். வாழ்க்கையை நன்றாக அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** இவனுக்குப் பணம் இருக்காது. தாயின் ஆயுளுக்கு ஆபத்து ஏற்படுத்துவான். ஆனால் கடமை தவறாத குழந்தைகள் உண்டு.

## *மிருகசீரிடத்தில் நின்ற செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் வனவாசத்தலங்களில் வசிக்க விரும்புவான். பெண்களை வெறுப்பான், மற்றும் தைரியசாலி.

**சந்திரன் பார்த்தால்:** இவன் தாயிடம் ஒத்துப்போக மாட்டான். விபச்சாரிகளுடன் இருப்பான். அவர்கள் பிடியில் சிக்கித் தவிப்பான்.

**புதன் பார்த்தால் :** இவன் குறைந்த செல்வத்தை உடையவன். அதிக ஆண் குழந்தைகள் பிறக்காது.

**குரு பார்த்தால் :** இவன் இசையிலும், இசைக் கருவிகளிலும் வல்லவன். உறவினர்கள் இவனை மிகவும் விரும்புவார்கள்.

**சுக்கிரன் பார்த்தால் :** இவன் அரசியலில் நல்ல நிலையை அடைவான். பாதுகாப்புத் துறையிலோ அல்லது காவல் துறையிலோ நல்ல நிலையை அடைவான்.

**சனி பார்த்தால் :** இவன் கிராமம் அல்லது நகரத்திற்குத் தலைவனாக இருப்பான். (பஞ்சாயத்து போன்றது)

## மிருக சீரிடத்தில் நின்ற புதனை மற்ற கோள்கள் பார்த்தபலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் தன் எஜமானனிடம் நிறைய சலுகைகள் பெறுவான்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் திடகாத்திரன், பக்தி உள்ளவன். தன் குடும்பத்தை நேசிப்பவன்.

**குரு பார்த்தால்:** மிக்க படித்தவன். ஒரு சமூகத்தின் அல்லது ஊரின் / தொகுதியின் தலைவனாக / வழிகாட்டியாக இருப்பான். தன் வாக்குறுதிகளைக் காப்பாற்றுவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** வாழ்நாள் முழுவதும் சந்தோஷமாக இருப்பவன். அதிர்ஷ்டசாலி. பெரும் செல்வத்தைச் சேமிப்பவன்.

**சனி பார்த்தால்:** பலப்பல கஷ்டங்கள் எதிர்நோக்க வேண்டிவரும். குறைந்த வாழ்க்கை அதிகப்படியான கஷ்டங்கள் மூலம் அனுபவிப்பான்.

## மிருக சீரிடத்தில் நின்ற குருவை மற்ற கோள்கள் பார்த்தபலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் ஆளுங்கட்சியுடன் நெருங்கிய தொடர்பு உள்ளவன். இவனுக்கு வீடு செல்வம் வாகனாதிகள் யோகம் உண்டு. உண்மையான வேலைக் காரர்கள் இருப்பார்கள்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் மிகப்பெரிய பணக்காரன். காம இச்சையில் அதிக ஈடுபாடு உள்ளவன். இவன் சில சூழல்களில் மாட்டிக்கொண்டு அவஸ்தைப்படுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் படிப்பாளி, தைரியசாலி, பண விஷயத்தில் அதிர்ஷ்டக்காரன். ஆனால் இவன் குடும்ப வாழ்க்கை சிறிய தொந்தரவுகள் நிரம்பியதாக இருக்கும்.

**புதன் பார்த்தால்:** இவன் பெரிய ஞானி. நிறைய படித்தவன். நற்பண்புகள் உள்ளவன். மற்றும் நிரம்ப செல்வம் பெற்றவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் கண்ணியமான தோற்றம் உள்ளவன். அழகிய பெண்களுடன் இருக்க விரும்புவான்.

**சனி பார்த்தால்:** இவனுடைய அறிவு, ஞானம் மற்றும் பல கலைகள் துறைகளில் தேர்ச்சி ஆகியவை, பிறர் இவனைப் பாராட்ட வைக்கும். ஆனால் நல்ல மனைவியால் ஏற்படும் சுகம், வசதிகள் கிட்டாது.

## *மிருக சீரிடத்தில் நின்ற சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவனுக்கு நல்ல மனைவி வாய்ப்பாள். அழகிய வீடு, நிலம் ஆகியவை வாங்குபவன்.

**சந்திரன் பார்த்தால்:** இவனுடைய தாய் சமுதாயத்தில் ஒரு உயரிய இடத்தில் இருப்பாள். தாயின் மூலம் மக்களுக்கு இவன் பிரபலமாவான்.

**செவ்வாய் பார்த்தால்:** பெண்கள் மூலம் செல்வத்தை இழப்பான். இவனுடைய திருமணம் குழப்பமாகவே இருக்கும்.

**புதன் பார்த்தால்:** இவன் எப்போதும் மகிழ்ச்சிகரமாக இருப்பான் மற்றும் அதிர்ஷ்டக்காரன்.

**குரு பார்த்தால்:** நல்ல மனைவி குழந்தைகள் மற்றும் குறையாத செல்வம் உள்ளவன்.

**சனி பார்த்தால்:** இவனுக்கு மகிழ்ச்சி என்பதே அரிது. அதிகமாக மனைவியால் துன்புறுவான். மனைவியின் உறவினர்களால் துன்புறுவான்.

## மிருக சீரிடத்தில் நின்ற சனியை மற்ற கோள்கள் பார்த்தபலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் அதிகம் படித்தவன். வேத சாஸ்திரங்களில் அறிஞன், ஆனால் இவன் அன்றாட வாழ்க்கைக்கே அடுத்தவர்களை நம்பி இருக்கவேண்டும்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் அரசியலில் மிக உயர்ந்த நிலையை அடைவான் அல்லது ஒரு நிறுவனத்தின் தலைவனாக இருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் பாதுகாப்பு அல்லது காவல்துறையில் பணிபுரிவான். நல்ல குடும்பம் உண்டு.

**புதன் பார்த்தால்:** இவன் பெண்களுக்குக் கீழ் பணி புரிவான். மற்றும் சமுதாய விரோத செயல்களால் பல இன்னல்களுக்கு ஆளாவான்.

**குரு பார்த்தால்:** இவன் அடுத்தவர் துக்கங்களுக்கும் மகிழ்ச்சிக்கும் சம பங்கு வகிப்பான். வேண்டியவர்களுக்கு உதவி செய்வான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் மது, மாது ஆகியவற்றை நன்கு அனுபவிப்பான். ஆளுங்கட்சியுடன் நெருங்கிய தொடர்பு உள்ளவன்.

## மிருக சீரிட முதல் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்ற பலன்:** இவன் வாசனை மலர்களை விரும்புவான். இவன் புத்திசாலி. அழகிய தோற்றம் மற்றும் அதிர்ஷ்டக்காரன். இவனுக்கு ஒரு சில மகன்கள் உண்டு. இவன் வாய் முகம் மற்றும் கண்கள் போன்றவற்றில் ஏற்படும் நோய்களால் துன்புறுவான்.

**சந்திரன் நின்ற பலன்:** இவன் பிரபலமானவன். புத்திசாலி, இவனுக்கு நிறைய பெண்கள் உண்டு. இவன்

மனைவி அழகானவள் மற்றும் தூய்மையானவள். அவளிடமிருந்து இவனுக்கு சொத்து வரும். இவனுக்கு இளைய வயதில் திருமணம் நடக்கும். மகிழ்ச்சிகரமாக இருக்கும்.

**செவ்வாய் நின்ற பலன்:** இவன் கடுமையாகப் பேசுபவன். பணம் இவனுக்கு ஒரு பிரச்சினையாகவே இருக்கும். இவனுக்கு நெருக்கமானவர்கள் மற்றும் வேண்டியவர்கள் நிறைய பேர்களை கவனிக்கும் பொறுப்பு இவனுக்கு உண்டு. இவன் மனைவியை இளைய வயதில் இழந்துவிடுவான். இவனுடைய நீண்ட ஆயுட்காலமே சந்தேகமானது. இது விசாக நட்சத்திரத்தில் இருந்தால் இவனுக்கு குழந்தைகள் இருக்காது. தொண்டைக் கோளாறுகள் அதிகமாக காய்ச்சல் ஏற்படும்.

**புதன் நின்ற பலன்:** இவனுக்கு எல்லாவிதமான செல்வங்களும் உண்டு. புதனை மிகவும் சுபர்கள் பார்த்தால் இவன் பணக்காரனாவான்.

**குரு நின்ற பலன்:** இவன் சஞ்சலமான மனம் உடையவன். படிப்பது எழுதுவது மிகவும் பிடிக்கும். குள்ளமானவன். சதுரமான உடலை உடையவன். இவன் பணம், பெயர், புகழ் போன்றவை சம்பாதிப்பான்.

இவன் சிவப்பாகவும், பெரிய கண்கள் மற்றும் அழகும் உள்ளவன்.

**சுக்கிரன் நின்ற பலன்:** இவன் இசை மற்றும் நுண் கலைகளில் சிறந்தவன். நடிப்பிலிருந்து நிறைய பணம் சம்பாதிப்பான். அதிக காம இச்சை உள்ளவன். இவன் ஆளுங்கட்சியால் இவனுடைய நுண்கலைகளில் உள்ள தனித்திறமையால் பாராட்டப்படுவான். இவனுக்கு பொன்னுக்கு வீங்கி அல்லது இது போன்ற நோய்கள் ஏற்படும்.

**சனி நின்ற பலன்:** இவன் உயரமானவன். குறுகிய மார்பு, சுருட்டை முடி மற்றும் வெய்யில் பிரதேசங்களில் கறுப்பாகவும், பனி பிரதேசங்களில் சிகப்பாகவும் உள்ளவன். இவனுக்குப் பணம் எப்போதும் ஒரு பிரச்சினை. ஆனால் புதனோ அல்லது குருவோ சனியை இந்தப் பாதத்தில் பார்த்தால் இவனுக்கு அபாரமான செல்வம் உண்டு. பெயர் மற்றும் புகழ் உண்டு. இவன் தன்னுடைய வயதை விட அதிகமான வயதை உடைய பெண்களுடன் அதுவும் சமுதாயத்தால் ஒதுக்கிய பெண்களுடன் காம இச்சை உள்ளவன். இவனுக்கு இளவயதில் உடல்நிலை சரியாக இருக்காது. இவனுக்குப் பல்வலி அல்லது பல் சம்பந்தமான கோளாறுகள் உண்டு.

**ராகு நின்ற பலன்:** இவன் பணக்காரன். எல்லோராலும் மதிக்கப்படுவான். இவனுக்குப் பெயர் மற்றும் புகழ் உண்டு.

**கேது நின்ற பலன்:** இவன் தன்னுடைய சொந்த முயற்சியால் பணம் சம்பாதிக்க முடியாது. இவன் தன்னுடைய முதிய வயதில் மகிழ்ச்சியான மற்றும் அமைதியான வாழ்க்கை குழந்தைகளின் பணத்தால் வாழ்வான். இவனுக்கு கண்பார்வையின்மை அல்லது கண்ணில் சதை வளர்தல் போன்றவை தன்னுடைய வாழ்க்கையின் நடுவயதில் ஏற்படும்.

### *மிருக சீரிட இரண்டாம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்ற பலன்:** பிரகாசிக்கும் உடலும், பிறரால் மதிக்கத்தக்க உடல்வாகும் பெற்றவன். அழகாக ஆடை உடுத்தி கவர்ச்சிகரமாக விளங்குவான். பாடுவதிலும் வாத்திய இசை இசைப்பதிலும் விருப்பமும் ஆர்வமும் உடையவன். ஆனால் தண்ணீரைக்கண்டு அஞ்சுபவன். திருமணம் 27 வயதளவில் நடக்கும். கண் உபத்திரவம் உள்ளவன்.

**சந்திரன் நின்ற பலன்:** இந்த நிலையில் லக்கினம் அமையுமானால் இவன் பெருஞ் செல்வமும் நல்ல குலமும்

உள்ளதுமான குடும்பத்தில் பிறந்தவன். இளவயதில் திருமணமாகி சந்தோஷமான குடும்பவாழ்க்கை நடத்துவான். இருதயம் அல்லது சுவாச சம்மந்தமான நோய்கள் தாக்கும்.

**செவ்வாய் நின்ற பலன்:** தன் குடும்பத்திற்கே விரோதியாக இருப்பான். மேலும் தன் செய்கையால் தன் குடும்பத்துக்குக் கெட்டபெயர் சம்பாதிப்பான். தசைப் பிடிப்பு, கழுத்துப்பிடிப்பு, மர்ம உறுப்பில் புண்கள் முதலிய நோய்கள் வாட்டும். இந்த நிலையில் சனியும் கூட சேர்ந்திருந்தால் இவன் சிறை தண்டனை அனுபவிக்க நேரும்.

**புதன் நின்ற பலன்:** கீழ்த்தரமான,தகாத வழிகள், செயல்கள் மூலமாகப் பணம் சம்பாதிக்க விரும்புவான். பிறர் சொத்துக்களைப் பார்த்து பொறாமைப்படுபவன். இவனுக்கு ஒரு பெண்ணும் 4 பையன்களும் இருப்பர். இந்த புதனை ஒரு கிரகமும் பார்க்காவிட்டால், தொண்டையில் புண் ஏற்படும் அல்லது பேச்சில் தடங்கல் திக்கல் இருக்கும்.

**குரு நின்ற பலன்:** அரசாங்கத்திடமும், அரசியல் கட்சிகளுடனும் நெருங்கிய தொடர்பும், அவர்கள் சுலபமாக அணுகும் பேறும் பெற்றவன். கடுமையான தலைவலி அல்லது தொண்டை சம்பந்தமான நோய்களுக்கு ஆட்படுவான். இந்த குருவுடன் லக்கினமும் இதுவாகவே அமைந்தால் பெரும்படிப்பு படித்தவன். மகாபுத்திசாலி, கவர்ச்சிகரமான உடல்வாகு கொண்டவன்.

**சுக்கிரன் நின்ற பலன்:** பெண்களிடம் அதிக தொடர்பு இருக்கும். உதவி என்று வந்தவர்களுக்கு கையிலிருப்பதைக் கொடுத்தவிடும் தாராள மனசு உள்ளவன். பொதுவாக ஆரோக்கியமானவன். இருந்தாலும் பெண் சம்பந்தப்பட்ட நோய்கள் , மூத்திர சம்பந்தமான வியாதி, தலையில் காயம்படுதல், கழலைக்கட்டி அல்லது கழுத்து வீக்க நோய், சில சமயங்களில் சுரப்பிகளில் TB போன்ற நோய்களால் அவதிப்படலும் உண்டு.

**சனி நின்ற பலன்:** செலவுகள் கட்டுக்கடங்காமல் இருக்கும். கெட்ட சகவாசத்தால் எல்லாவற்றையும் இழப்பான்.

**ராகு நின்ற பலன்:** மூளை இல்லாதவன். திடும்திடும் என கோபம் வரும். குரூரமானவன். ஆனாலும் தன் அதிர்ஷ்டத்தினால் ஏராளமாக தனத்தை சம்பாதிப்பான்.

**கேது நின்ற பலன்:** உடலில் குறை உள்ளவன். உடல் ஊனமுற்றவனாயிருந்தாலும் மிக்கப் படித்தவன். மனமும் உடலும் ஊனமுற்றவர்கள் முன்னேற்றத்திற்காக உழைப்பவன். நாக்கு தொண்டையில் புண் ஏற்பட்டு கஷ்டப்படுவான்.

## *மிருக சீரிடம் மூன்றாம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்.*

**சூரியன் நின்ற பலன்:** பொருளாதாரம், நிதி பற்றிய ஆலோசனை சொல்லும் பதவிக்கு பொருத்தமானவன். உயர்ந்த நிலையை அடைவான். பொதுஜனத் தொடர்பான பதவிகளுக்கு மிகவும் பொருத்தமானவன். இவன் பையன்களில் ஒருவன் விஞ்ஞான ஆராய்ச்சித் துறையில் சிறப்பை அடைவான். மூக்கு சம்பந்தமான பிரச்சினை கடுமையாக இருக்கும்.

**சந்திரன் நின்ற பலன்:** புகழ்பெறுவான். பிள்ளைப் பிராயத்தில் பலவிதமான பிரச்சினைகளை எதிர்நோக்குவான். இவனுடைய சம்பாத்தியம் குறைவாக இருக்கும். தன் தாயின் அன்பையும், ஆதரவையும் இவனால் பெறமுடியாது. சிலர் தொண்டைப்புண்ணாலும், சிலர் வாயில் கான்சரினாலும் அவஸ்தைப்படுவர்.

**செவ்வாய் நின்ற பலன்:** இதில் லக்கினமும் அமையுமானால், இவன் ஏழையாகவும், தன் வாழ்க்கையில் சந்தோஷத்தையே அனுபவிக்காதவனாகவும், அம்மை நோயினால் பாதிக்கப்படுபவனாகவும் இருப்பான். இந்த

நிலையில் வேறு லக்கினத்தில் பிறந்திருந்தால் இவன் சுமாரான வருமானமும் வாழ்க்கையும் உடையவனா யிருப்பான். கழுத்தில் தசைப்பிடிப்பு நோயும், வீங்கிய சுரப்பிகளாலும் கஷ்டப்படுவான்.

**புதன் நின்ற பலன்:** ஜாதகன் மகா புத்திசாலி, தைரியமானவன், எப்போதும் உற்சாகமாக இருக்கும் தன்மை பெற்றவன். அனேக பெண்களுடன் உடலுறவு கொள்பவனாக இருப்பான். இருந்த போதிலும் ஒரே முறைதான் திருமணம் நடக்கும். தன் மனைவியை மனதார நேசித்து அவளுக்குச் செய்யவேண்டிய கடமைகளைத் தவறாது செய்வான். திக்குவாய் அல்லது TB ஏற்படலாம்.

**குரு நின்ற பலன்:** இவன் ஒரு உலோபி. நன்றி உடையவன் அல்லன். தன் மனைவி மக்களின் அன்பு இவனுக்கு கிடைக்காது. தன்னுடைய உடமைகளை யாருக்கும் தரமாட்டான். அவர்கள் தன் மனைவி மக்களாக இருந்தாலும் சுயநலவாதி. இருதய சம்பந்தமான அல்லது ரத்த சம்பந்தமான நோய்க்கு ஆளாவான்.

**சுக்கிரன் நின்ற பலன்:** சாஸ்திரத்திலும் விஞ்ஞானத் திலும் புகழ் பெற்றவனாயிருப்பான். சங்கீதம் நாட்டியம் மூலம் பணம் திரட்டுவான். இந்த சுக்கிரனை பாபிகள் பார்த்தால் 2-வது திருமணம் நடக்கும். சுக்கிரதசை நடக்கும் போது இவன் 13 வருடங்களுக்கு நன்மையான பலன்களையும் மீதி 2 வருடங்களுக்கு நன்மை தீமை இரண்டும் கலந்த பலன்களையும் அனுபவிப்பவன். ஆனால் கடுமையான தலைவலியும், பெண் ஆனால் கர்பப்பை சம்பந்தமான நோய்களையும் அனுபவிக்க வேண்டிவரும்.

**சனி நின்ற பலன்:** இந்த சேர்க்கையில் லக்கினம் உத்திரட்டாதி நட்சத்திரத்தில் அமைந்து பெண்ணாக இருந்தால் கல்யாணத்திற்கு முன்பே கர்ப்பம் உண்டாகி குழந்தை பிறக்கும். இவன் ஜெயிலர், போலீஸ் அல்லது பாதுகாப்பு சம்பந்தமான துறைகளில் உத்தியோகம்

பார்ப்பவன். ஒரே ஒரு ஆண் மகவு உண்டாகும். மூளை சம்பந்தமான வியாதி அல்லது மூளையில் கட்டி அல்லது புத்திமாறாட்ட நோய் பாதிக்கும் அபாயம் உள்ளது.

**ராகு நின்ற பலன்:** இவன் பேராசை பிடித்தவன். பொல்லாதவன். சந்தோஷம் இல்லாதவன், பிறருடைய சொத்தை விரும்பாதவன். தன் எதிரிகள் மூலம் எப்போதும் ஆபத்தை அடைபவன். தன்னுடைய முட்டாள்தனத்தால் பொருள்களை இழப்பான். நாத்திகனாக மாறுவான். போலியோ, முதுகுத்தண்டு நோய் பாதிக்கும் அபாயம் உண்டு.

**கேது நின்ற பலன்:** பிறரைக்கண்டு பொறாமைப் படுபவன். ருமாடிசம், இடுப்புப்பிடிப்பு, வயிற்றில் பூச்சிகள் இந்த நோய்களால் கஷ்டப்படுவான்.

### *மிருக சீரிடம் நான்காம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்ற பலன்:** ஏராளமாக பொதுஜன சேவை செய்வான். இந்த அமைப்பில் புதனும் இருந்து, மிருக சீரிடம் முதல் காலில் சந்திரனும் இருந்தால் இவன் மிக்க படித்தவன், பண்டிதன். இனிமையாகப் பேசுபவன். கௌரவம் மிக்கவன். ஜோதிட நிபுணன். தொண்டைப்புண்கள் அல்லது டான்ஸிலிடிஸ் தொந்தரவுகள் உடையவனாக இருப்பான்.

**சந்திரன் நின்ற பலன்:** கட்டுமஸ்தான தேக அமைப்பு கொண்டவன். உடலின் பக்கவாட்டிலும் பின்புறத்திலும் அடையாளக்குறி இருக்கும். மருந்துகள், கெமிக்கல் அல்லது அழகு சாதனங்கள் சம்பந்தமான தொழிலில் இருப்பான். ஆனால் சுவாசப்பையில் தண்ணீர், பெண்ணானால் மாதவிலக்கு சம்பந்தமான நோய்கள் உண்டாகும்.

**செவ்வாய் நின்ற பலன்:** தந்தை, அவர்தம் உறவில் ஏற்பட்ட துக்க சம்பவத்தால் துக்கத்தை அனுபவிப்பான். திருமண வாழ்வு வசந்தம் உடையதாக இருக்கும். ஆனால்

இவன் மனைவி அடிக்கடி நோய்வாய்ப்படுவாள். டிப்தீரியா, அடினாய்ட் தொண்டை சம்பந்தமான தொந்தரவுகளை அனுபவிப்பான்.

**புதன் நின்ற பலன்:** கடவுளிடம் ஆழ்ந்த பக்தி உள்ளவன். நடுத்தர கல்வி பெற்றவனாக இருந்தாலும், தன்னுடைய கடுமையான உழைப்பால் உயர்வை அடைவான். அக்கௌண்ட் அல்லது நிதி கம்பெனிகளில் தொழில் அமையும். நரம்பு சம்பந்தமான நோய்கள், சில சமயங்களில் புத்தி மாறாட்டம் அல்லது உடலில் அங்கக்குறைபாடுகள் ஏற்பட வாய்ப்புண்டு.

**குரு நின்ற பலன்:** போதுமான செல்வம் படைத்தவன். அரசாங்கத்திடமிருந்து கௌரவங்களும், வெகுமதிகளும் பெறுவான். பிறருடைய மனதில் உள்ள எண்ண ஓட்டங்களை அறிவதில் சமர்த்தன். கண்பார்வை பழுதுபடும். அல்லது குடல் கோளாறுகள் உண்டாகும்.

**சுக்கிரன் நின்ற பலன்:** உத்தமமான குணங்கள் உடையவன். நடுத்தரமான உயரமுடையவன். கவிஞனாகவோ அல்லது எழுத்தாளனாகவோ இருப்பான். முகத்தில் மச்சம் உள்ளவன். இந்த அமைப்பில் லக்கினம் சுவாதி அல்லது விசாக நட்சத்திரத்தில் அமைந்தால், இவனுக்கு 2முறை திருமணம் ஆகும். அல்லது முதல் மனைவி இருக்கும்போதே வேறொரு பெண்ணிடம் கள்ளத்தொடர்பு உடையவனாக இருப்பான். லக்கினம் பூசத்தில் அமைந்தால் இவன் மனைவி உத்தியோகம் பார்ப்பவள். பால்வினை நோய், தைராய்டு சுரப்பி பாதிப்பால் தொண்டை வீங்குதல் அல்லது டான்சில் போன்ற நோய்கள் பாதித்தலும் உண்டு.

**சனி நின்ற பலன்:** பிறக்கும்போதே உடல் அவயவங்களில் குறை இருக்கும். அப்படி இல்லாவிடில் பின்னாளில் அங்கக்குறை ஏற்படும். பூசாரியாக வேலைபார்ப்பான். தன் சொந்த ஊரிலிருந்து வெகுதூரம் தள்ளி வாழ்க்கை நடத்துவான். தன் ஊரில் ஏதாவது பாபகரமான செயலை

செய்துவிட்டு சிலகாலம் வெளிஊரில் மறைந்து வாழ்வான். ஆஸ்துமா அல்லது சுவாச சம்பந்தமான நோய்கள் இவனை வந்தடையும்.

**ராகு நின்ற பலன்:** சிறந்த பண்டிதன். அந்த ஊரில் உள்ள பெரிய மனிதர்கள் இவனிடம் மரியாதை காட்டுவார்கள். நல்ல கடமை உணர்வு உள்ள குழந்தைகளைப் பெறுவான். இவ்வளவு நல்ல குணங்கள் இருந்தும், அடுத்தவர் மனைவிமேல் ஆசைப்படுவான்.

**கேது நின்ற பலன்:** எப்போதும் பாபகரமான செயல்களைச் செய்பவன். எல்லோருடனும் சண்டையிடுவான். பிறருக்குத் தீங்கு விளைவிப்பான். பலவிதமான வியாதிகளால் கஷ்டப்படுவான். ஆனாலும் இவன் செல்வந்தனாகவும் வாழ்க்கையில் வளப்பம் உள்ளவனாகவும் இருப்பான்.



## அத்தியாயம் - 8

# திருவாதிரை நட்சத்திரம்

இது 6-வது நட்சத்திரம். மிதுன ராசியில் ராசி மண்டலத்தின் 66பாகை 40 முதல் உள்ள பரப்பளவை உடையது.

| | |
|---|---|
| அரபுப்பெயர் | அல்ஹறைஹ |
| கிரேக்கப் பெயர் | பெடல்க்யூஸ் |
| சீனப்பெயர் | ட்ஸான் |

இந்திய சாஸ்திரப்படி இந்த நட்சத்திரம் ஒரே ஒரு நட்சத்திரம்தான். இந்த நட்சத்திரத்தின் அதிதேவதை ருத்திரன். ருத்திரம் சம்ஹாரத்தொழில் செய்யும் தேவதை. ருத்திரன் நரம்புத் தத்துவத்தின் அதிபர். இவன் இளைய சகோதரன் இந்திரன் ஆகும்.

**புறமிசை யுடைய னாகும் புகழ்பெற வாழ நல்லன்**
**திறமுடன் காரி யங்கள் சிறப்பொடு பூசை செய்யும்**
**வறுமையே உடைய தாகும் அறிவுநூல் பலவும் கற்கும்**
**அரசுநெறி பலவும் பேசும் ஆதிரை நாளி னானே !**

*(சுவடி எண். 1500)*

வெளியிலே பெரும்பாலும் வாழ்பவன். புகழ்பெற வாழ்பவன். நல்ல திறமையுடன் எல்லாக் காரியங்களையும் செய்யவல்லவன். நல்ல முறையுடன் தேவதா பூசை செய்பவன். வறுமையுள்ளவன். அறிவு நூல் பலவும் கற்பவன். அரசியலில் அதிக ஈடுபாடு உள்ளவன் என்பதாம்.

இன்னானுக்குத் தெய்வம் மகேஸ்வரன். பூதம்-பிரிதிவி, சாதி-சத்திரியன், யோனி-செந்நாய், பட்சி-ஆந்தை, விருட்சம்-செங்காலிமரம், நட்சத்திரத்தொகை-ஒன்று, எருக்கம்பூ போன்றிருக்கும். இன்னானுக்கு தை மாதம் சூனியம். வெதுப்பு தோன்றில் 7 நாளில் விடும். இதற்கு நெய்யும் தேனும் கலந்து ஓமம் பண்ணுவது. பாலும் சோறும் பலி இடுவது. திசை, திக்கு தோறும் தானம் பண்ணுவது . மூன்று நாளில் தீரும். இந்த நட்சத்திரத்தில் பெண் திரண்டால் இவளுக்கு திருமணம் ஆவது கடினம். பெரும்பாலும் கன்னிகையாகவே இருப்பாள். இந்த நட்சத்திரத்தில் வருஷம் பிறக்கில் விளைச்சல் குறையும். வெள்ளி விலை குறையும். பெண் பிறந்தால் வியாதியும் இருக்கும். இந்த நட்சத்திரத்திற்கு 7வது நாளில் மனை கோல நன்று. இதன் கணம் மனதின் பட்சி அன்றிலும் ஆம். இந்த நட்சத்திரத்தின் 21 நாழிகைக்கு மேல் 4நாழிகை விஷம். இவன் கண்களில் செவ்வரி பரந்திருக்கும். மூக்கு உயர்ந்திருக்கும். உறவு முறை நிறைய வேண்டும். தூக்கம் குறைவு. பெண்கள் கண்கள் போல், மருளும் மயக்கும் கண்கள் உள்ளவன். அழிக்கும் காரியங்கள் செய்பவன். கோபமுடையவன். எதற்கும் எதிர்பேசுபவன். இவனுக்கு நாற்கால் பிராணியால் ஆபத்து உண்டு. அலங்காரப் பிரியன். கழுத்திலே இவனுக்கு மரு உண்டு.

சுப காரியங்களுக்கு இது ஏலாத நாள். வணிகத்தில் வல்லவர்கள். செய்நன்றி கிடையாது. தீர்க்காயுள் உண்டு. இவர்கள் சுயகாரியப்புலிகள், துணிச்சல்காரர்கள். தீர்க்க தரிசனம் உண்டு. அன்னிய மொழிகளில் வல்லவர்.

திருமணம் பெரும்பாலும் தாமதமாகும். ஆனால் மனைவியால் யோகமுண்டு. அதிக குழந்தைகள் உண்டு. பழைய வீடு தான் கிடைக்கும். அதில விரயம் அதிகம். நஷ்டமும் உண்டு. இருப்பினும் வளமான வாழ்வு உண்டு. 81வயது வரை தீர்க்காயுள் உண்டு.

**இந்த நட்சத்திரத்தின் காரகங்கள்**: வதம்: அதாவது மிருகங்கள் முதலியவற்றை வேட்டையாடல். பிற மனைவியைக் கடத்தி அவளுடன் வாழ முயற்சி. பிறரை தன்னை மறக்க, முட்டாளாக்குதல். மாரணம் பேதனம் போன்ற அட்ட கர்மங்களைச் செய்தல்.

## பிற செய்திகள்

மஞ்சள் வர்ணம், மேல்நோக்கு நாள், ஏகாரமும் ஐகாரமும் எழுத்துக்கள். யாத்திரை போக வேண்டுமானால் தேன், பால் உண்டு விட்டு கிளம்ப வேண்டும்.

இந்த நாளில் செவ்வாய் உதயத்தில் ரிஷப லக்கினத்தில் திரவியம் வாங்கலாம். காது குத்தல், பித்ரு காரியத்திற்கு உகந்த நாள். வியாழன் கூடின் மரணயோகம். தந்தை ஞாயிறு கூடின் மரணயோகம். இரண்டாவது அம்சம் தினமிருத்யு வாகு. இந்த நாள் கூடிய சனிக்கிழமையில் அணை கட்டலாம், ஆற்றிற்கு வரம்பு கட்டலாம்.

ஞாயிறு, செவ்வாய், கடக லக்கினத்தில் மருந்துண்ண லாம். அதே லக்கினத்தில் வித்யாரம்பம் செய்யலாம். வியாதி தோன்றில் , ஜ்வரம் தோன்றில் தீருவது கடினம். 31 நாளைக்கு பீடையுண்டு. வெல்லம், நெய், நைவேத்தியம், ஊமத்தம்பூ கொண்டு பூஜை. அகர்பர்த்தி தூபம் "நம சம்பவேதி" என்பது பூஜா மந்திரம், ஜெபம் பண்ணலாம். சாவித்திரி மந்திரத்தால் 108தடவை ஹோமம். பாயசான்னத்தால் ருத்திரனுக்கு பலியிடல் வேண்டும். 5 நாளைக்கு மேல் 10 நாளைக்குள் சுகம். இதில் மாதம் பிறந்தால் பயிர் விளைச்சல் குறையும்.

## *தமிழ் ஜாதக அலங்காரப்படி இதில் பிறந்தவன் குணங்கள்*

**பொய்யுரை சொல்பவன் கீர்த்திமான் தரித்திரன் நெடியன்**
**வெய்ய சிலுக்கன் சுத்த வான் குஞ்சி அழகன் கிருவிழி சிவப்பன்**
**துய்யபல வான்கோபி உறவுடையவன் உயர்ந்திருக்கும் துண்ட முள்ளான்**
**அய்யம் அற உலகு தொழு ஒரு மணியாய விளங்கிய ஆதிரையினானே. (66)**

திருவாதிரையில் பிறந்தவன் பொய்யுரை சொல்பவன். கீர்த்தியுடையவன்.தரித்திரன், நீண்ட வடிவமுடையவன். கணுக்களில் வியாதியுள்ளவன். கொடிய சண்டை செய்பவன். சுத்தமுடையவன்.தலையில் அழகுடையவன். இருகண்களும் சிவந்திருப்பவன். தேகபலமுடையவன். பந்துக்கள் உள்ளவன். உயர்ந்த மூக்குள்ளவன்.

**யவன ஜாதகப்படி:** எதையும் சிந்திக்காதவன். சௌக்கியமுடையவன். திரய விக்ரயங்களில் சமர்த்தன். கோஹிம்சை செய்பவன். குரூரமான சரீரமுடையவன் செய்நன்றி மறப்பவன்.

**பிருகத் ஜாதகப்படி:** முரணான வார்த்தை பேசுபவன். அகங்காரமுடையவன். உபகாரத்தை மறப்பவன், ஜீவ ஹிம்சை செய்பவன். பாவ காரியங்களைச் செய்பவன்.

## வடமொழி பெண் ஜாதகப்படி இந்த நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணின் குணங்கள்

இதில் பிறந்த பெண் வீண் கர்வம், அபிமானம் உள்ளவள். கெட்ட சுபாவம் உள்ளவள். கபம், பித்த சுபாவம் நிறைந்தவள். பிறர் குற்றத்தைப் பெரிதுபடுத்தப் பார்ப்பவள். அதிக செலவாளி, ஊதாரி, தன்னை மெத்தப் படித்தவளாகக் காட்டி கொள்பவள்.

பாபகாரியங்களில் பற்றுள்ளவள். குரூபி, அழகற்றவள். கலகப்பிராணி, எப்பொழுதும் யாரிடமாவது பகைமை யுடையவள்.

## தமிழ் மதன நூல் வாக்கியம்

**நேர்ந்திட நிதம்பம் நன்றாய் நிரைமயிர் ஒழுக்க முள்ளாள்**
**சார்ந்தவற் கண்டி செய்வாள் சதிரதாய் அழகு துய்யாள்**
**சேர்ந்தவற் கின்பம் செய்வாள் தேனமு தனைய சொல்லாள்**
**ஆர்த்ததோர் மனத்த ளாகும் ஆதிரை நாளி னாளே. (67)**

நிதம்பம் (மன்மத பீடமான குறியிடம்) நிறைய மயிர்கொத்துள்ள அழகுள்ளவள். தன்னை அடுத்தவருக்கு அன்பு செய்பவள். பரிசுத்தமுள்ளவள். தன்னை அனுபவிக்க சேர்ந்த கணவனுக்கு கலவியின் போது அதிக திருப்தியான இன்பம் அளிப்பவள். தேன் போன்ற அமுத வார்த்தையும் ஆழ்ந்த மனமும் உடையவள்.

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவள் முனிதத்துவம் சார்ந்தவள்.

### நட்சத்திர பாத பலன்

*தமிழ் ஜாதகாலங்காரப்படி பாதப்பாடல்*

இனியநல் வசன குணமுள்ளான் மகாத்துமா
யௌவன நாரியார்க் கினியன்
இயலுறு நல்ல ஆதிரை முதல்கால்
தனில் தருங் குணத்தினா னெனத்
தணியுரை வாய்ச் சாலன் நிட்டூரன்
தருக்கியன் கருவி தீக்ஷை யில்லான்
தகுதியாய் மடவாருடன் புணர்ந்த திருவான்
சாற்றிய பாதமோர் இரண்டில்
குனியுநல் வாத ரோகமும் உள்ளான்
கோபி தன் கிருபையும் இல்லான்
கோளனாம் அஞ்சு நாரியர் தமக்கே
குணமிலான் காலொரு மூன்றில்
துணியுநல் விவேகி உறவினர் பகையான்
தோன்றிய ஈனமா மனத்தன்
துர்ப்புத்தி யூக்தை யுடன்புளான் பொல்லாத்
துர்ச்ச னாகுநான் கென்றே. (68)

1. முதற்பாதம், மேலான வல்லமை பொருந்திய திருவாதிரை முதல்பாதத்தில் பிறந்தவன் யாவரும் சந்தோஷிக்கத் தக்க இதமான வார்த்தையும் நல்ல குணமுள்ளவனும் ஆவான். துரந்தரன்-வாலிபப் பெண் களுக்குப்பிரியமுள்ளவன்.

2. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன். தனியாய்ப் பேசுபவன். படபடவென்று வார்த்தையாடுபவன். யாவரையும் கண்டு நிஷ்டூர வார்த்தை சொல்பவன். ஆபத்தில் உதவக்கூடிய ஞான உபதேசக்கருவி. தீட்சையில்லாதவன். பெண்களை அளவாய் அனுபவிப்பவன்.

3. மூன்றாம் பாதத்தில் பிறந்தவன். கூன் முதுகுள்ளவன். வாதம் முதலிய வியாதிகள் உள்ளவன். கோபமுள்ளவன். கடவுள் அனுக்கிரகமில்லாதவன். கோள்மூட்டி, கலகப் பிராணி, பெண்களைப் பார்த்து அச்சப்படுபவன். துன்மார்க்கன் என்றும் சொல்லவேண்டும்.

4. நான்காம் பாதத்தில் பிறந்தவன். துணிகரமாக செயல் படுபவன். நல்ல விவேகன். யோக்யதை உடையவன். தன் பந்துக்களைப் பகைத்துக் கொள்பவன். அடிக்கடி மறந்து போகும் குணமுள்ளவன். துர்ப்புத்தி, துர்ச்செய்கையுள்ளவன். அழுக்குச் சரீரம் உள்ளவன். சரீரத்தில் முடை நாற்றம் உள்ளவன். கொடிய துர்ச்செய்கை, துர்ச்சேஷ்டை உடையவன் என்று சொல்லுக.

## *ஜாதகசார தீபம் நூலின்படி நட்சத்திர பாதபலன்*

முதல் பாதத்தில் பிறந்தவன் அதிக செலவாளி. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் தரித்திரன். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் அற்பாயுள் உள்ளவன். நான்காம் பாதத்தில் பிறந்தவன் திருடன், களவாணி.

## *திருவாதிரை நட்சத்திர முதற் பாத பலன்*

**மாந்தளிர் போல மேனி மனதோடு கல்வி கற்கும்**
**ஏந்திய குலத்துக் கெல்லாம் இசைந்ததோர் இராச னாகும்**
**காய்ந்தபின் நடக்க மாட்டான் கனங்குழை யார்க்கு நல்லான்**
**சேர்ந்தவர்க் கன்பு செய்யும் செய்யபொற் காலி னானே. (69)**

*(மரண கண்டிகை சுவடி எண். 1500)*

மாந்தளிர் போன்ற சிவந்த மேனி நிறமுள்ளவன். நல்ல மனம் முழுவதும் ஈடுபட்டுக் கல்வி கற்பவன். தன் குலத்துக்கு விளக்காக தலைவனாக இருப்பவன். தன்னைச் சேர்ந்தவர்க்கு அன்பும் உதவியும் செய்பவன். இவை திருவாதிரை முதற்காலில் பிறந்தவன் குணங்களாகும்.

**முதற்பாதத்திற்குக் காலச்சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| மீன வியாழன் | 10 வருஷம் |
| மகரச் சனி | 4 வருஷம் |
| கும்பச் சனி | 4 வருஷம் |
| தனுசு வியாழன் | 10 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| சிங்கமாதித்தன் | 5 வருஷம் |
| கடக சந்திரன் | 21 வருஷம் |
| ஆக வயது | 86 வருஷம் |

## திருவாதிரை இரண்டாம் பாத பலன்

ஊனம துடைய வாதும் உறவொடு பழியும் செய்யும்
மானம துடைய னல்லன் மனம்பிறர்க் கரிய ஒண்ணான்
மேனியும் உருவும் நல்லான் மிக்கதோ ரறிவு முள்ளோன்
கானக மிருந்து வாழுர் காரியங் கிஷந்தி னானே. (70)

(சுவடி எண். 1500)

இவன் உடலில் ஏதாவது ஊனமுண்டு. உறவாடுவான். ஆனால் பழியும் ஏற்படுத்துவான். தன்மானம் உள்ளவன். நல்லவன். நல்ல அறிவு வளரப்பெற்றவன். காட்டில் இருந்து தவவாழ்க்கையும் மேற்கொள்வான். இவை திருவாதிரை 2ம் பாதத்தில் பிறந்தவர்கள் குணநலன்களாகும்.

**இரண்டாம் பாதத்திற்குக் காலச்சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| மிதுனபுதன் | 9 வருஷம் |
| ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| தனுசு குரு | 10 வருஷம் |
| மகரச் சனி | 4 வருஷம் |
| கும்பச் சனி | 4 வருஷம் |
| மீன குரு | 10 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| ஆக வயது | 83 வருஷம் |

## திருவாதிரை மூன்றாம் பாத பலன்

**யாரையும் அறிந்து பேசும் அரும்பொருட் குரிய னாகும்**
**சீரிய உறவு வேண்டான் சிதைவதே செய்வ தெல்லாம்**
**வாரிய பொய்கள் சொல்லும் மனம்பிறர்க் கறிய ஒண்ணான்**
**காரியக் குசல னாகும் காரியங் கிஷத்தி னானே.** (71)

(சுவடி எண். 1500)

**மூன்றாம் பாதத்திற்குரிய காலச்சக்கர தசைகள் வருமாறு**

| | |
|---|---|
| மிதுன புதன் | 9 வருஷம் |
| கடகச் சந்திரன் | 21 வருஷம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| தனுசு வியாழன் | 10 வருஷம் |
| மகரச் சனி | 4 வருஷம் |
| கும்பச்சனி | 4 வருஷம் |
| ஆக வயது | 85 வருஷம் |

## திருவாதிரை நட்சத்திரம் நான்காம் பாத பலன்

**சிறிதே எண்ணும் பொய்சொல்லான் சிவந்த கண்ணன் செறிகுழலான்**
**அறிவு மிகவும் பெருங்குணத்தான் அடைந்தோர்க் கன்பன் அழகியனாம்**
**பொறிசேர் மைந்தர் மனையாளைப் பெரிதாய் எண்ணான் புகழ்விளங்கும்**
**வெறிசேர் குழலின் மடமாதே வியாழன் காலிற் பிறந்தோனே**

*(சுவடி எண். 1500)*

திருவாதிரை 4ம் பாதத்தில் பிறந்தவன் அதிகம் சிந்தனை செய்யமாட்டான். (கவலைப்படமாட்டான்) பொய் சொல்ல மாட்டான். நல்ல குணமும் அறிவும் உள்ளவன். தன்னை அடைந்தோர்க்கு அன்பு செய்யும் நல்ல குணமுள்ளவன். தன் மைந்தர்கள் மனைவி இவர்களைப் பெரிதாக எண்ணி பற்றுவைக்கமாட்டான். நறுமணம் வீசும் கூந்தலுடைய பெண்ணே (ம்கடுஉ முன்னிலை) அறிவாயாக என்பதாம்.

**நான்காம் பாதத்திற்குக் காலச்சக்கரம் வருமாறு**

| | |
|---|---|
| தனுசு வியாழன் | 10 வருடம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| துலாம் வெள்ளி | 16 வருடம் |
| கன்னி புதன் | 9 வருடம் |
| சிங்க மாதித்தன் | 5 வருடம் |
| கடகச் சந்திரன் | 21 வருடம் |
| மிதுன புதன் | 9 வருடம் |
| ரிஷப வெள்ளி | 16 வருடம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருடம் |
| ஆகவயது | 100 வருடம் |

அடுத்து கர்ம விபாகம் வடமொழி நூலில் கண்ட இந்த நட்சத்திரத்தின் 4 பாதங்களுக்கும் பூர்வ புண்ய ஜென்ம வரலாறுகள் வருமாறு.

## திருவாதிரை முதல் பாதத்தில் பிறந்தவன் முற்பிறவி வரலாறும் சாந்தியும்

### சிவபெருமான் சொல்லுகிறார்:

ஏ தேவி ! அவந்தி நாட்டில் (நகரில்) ஒரு சாயத் தொழிலாளி வாழ்ந்து வந்தான். அவன் பல துணிகளைச் சாயம் போட்டு அதனால் பிழைத்து வந்தான். அவன் குபேர் என்ற பெயர் உடையவன். அவன் மனைவியின் பெயர் லீலா என்பதாகும். சிறிது காலம் அவளுடன் வாழ்ந்து விட்டு விட்டு அதே நகரில் இருந்த ஒரு பிராமணப் பெண்ணுடன் நட்பாகி வாழ்ந்து வந்தான். அவன் மிகவும் நிறைய பணம் சேர்த்தான். தான் சம்பாதித்த பணத்தை புதைத்தும் விட்டான்.

கங்காஸ்நானம் பண்ணினான். அப்பொழுது சிறிதளவு பணம் தான தர்மம் செய்தான். சிறிது காலம் சென்று இறந்தான். அவன் பிராமண வைப்பாட்டியும் இறந்து போனாள். அவன் உண்மையான மனைவி வருத்தம் தாளாமல் அக்கினிப் பிரவேசம் பண்ணி இறந்துபோனாள். தன் மனைவி கற்பின் மகிமையால் சாயத்தொழிலாளி 2 லட்சம் வருஷம் சத்தியலோகத்தில் வாழ்ந்து வந்தான். புண்ணியம் போன பின் அவன் மீண்டும் பூவுலகில் பிறந்தான். மத்திய தேசத்தில் வாழ்ந்தான். நல்ல தன தான்யத்துடன் வாழ்ந்து வந்தான். புகழ்பெற்றான். அவனுக்குப் பல ஆண் குழந்தைகள் பிறந்தனர். ஒரு பிள்ளையைத் தவிர மற்றெல்லோரும் இறந்துவிட்டனர். இவனும் தேகம் பூராவும் நோய் கொண்டான். ஒரு கால் இழந்தான். நொண்டியானான். இவன் போன ஜென்மத்தில் வேறு ஒருவர் மனைவியான பிராமணப் பெண்ணைக் கூடிய பாவத்தால், வம்சம் விளங்கவில்லை.

தேவி ! இதற்குப் பரிஹாரம் கேட்பாயாக ! இவன் ஒரு லட்சம் காயத்திரி மந்திரம் ஜபம் செய்விக்கவேண்டும். அதில் 10ல் ஒரு பங்கு ஹோமமும் அதில் 10ல் ஒரு பங்கு மார்ச்சனமும், தன் சொத்தில் 6ல் 1 பகுதியை நன்கு வேதம் கற்ற அந்தணனுக்குத் தானம் செய்யவேண்டும்.

90பிராமணர்களுக்கு பால் பாயசம் உணவுடன் உண்பிக்க வேண்டும். அதற்குப் பின் நன்கு அலங்கரித்த சிவப்பு நிறப்பசு ஒன்றை உத்தம பிராமணனுக்கு தானம் செய்ய வேண்டும். இதனால் அவன் நோய் நீங்கி அவனுக்கு ஆண் சந்ததியும் உண்டாகும் என்பதில் ஐயமில்லை.

## திருவாதிரை இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பூர்வ ஜென்ம வரலாறும் சாந்தியும்

***சிவபெருமான் சொல்லுகிறார்:***

ஏ தேவி ! மனிதர்கள் தங்கள் பூர்வ ஜென்ம பாபத்திலேயே நரகவேதனை அனுபவிக்கிறார்கள்.

உஜ்ஜையினி நகரத்தின் மேற்கே உள்ள ஒரு ஊரில் ஒரு பாக்கியசாலியான வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் தன் நெறியில் தவறாது இருந்து வந்தான். இப்படி பாதி வாழ்வு நடக்கும்போது வியாபாரத்தை நிலைநாட்ட அவன் ஒரு பிராமணனிடம் 80 தோலா தங்கம் கடன் வாங்கிக்கொண்டான். ஆனால் அது செலவழிந்து போயிற்று. கடனை அடைக்காமலேயே அந்த வணிகனும் மனைவியும் இறந்து போனார்கள். அவர்கள் நர்மதை நதிக்கரையில் இறந்ததால் சுவர்க்கபோகம் அனுபவித்து பின் உலகில் மனிதப் பிறவியைப் பெற்றார்கள். கடன் கொடுத்த பிராமணன் இவர்களுக்குப் பிள்ளையாகப் பிறந்தான். தான் கொடுத்த அளவு இவர்கள் பொருளை செலவு செய்துவிட்டு அவன் இறந்துபோனான். அதன்பின் 20 வருஷங்கள் வரை இவனுக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை.

இந்த பாவத்திற்காக இவன் தன் சொத்தில் 8ல் ஒரு பங்கை பிராமணன் ஒருவனுக்குத் தானம் செய்யவேண்டும். 20 தோலா தங்கத்தில் விரிந்த தாமரைமலர் வடிவம் செய்து வேதம் உணர்ந்த பிராமணனுக்குத் தானம் செய்யவேண்டும். இதனால் இவன் பாவங்கள் தொலைகின்றன. பிறகு இவனுக்கு ஆண் சந்ததி நிச்சயம் உண்டாகும். இதில் சந்தேகமில்லை. அறிவாயாக.

## திருவாதிரை மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பூர்வ ஜென்ம வரலாறும் சாந்தியும்

*சிவபெருமான் சொல்லுகிறார்:*

உஜ்ஜையினி நகரத்தின் தென்கிழக்கு திக்கில் இரண்டு மைல் தொலைவில் மங்களபுரி என்ற ஊர் உண்டு. அங்கு ஒரு பிராமணன் வசித்துவந்தான். அவன் எப்பொழுதும் சூதாடியும் கள் குடித்தும், மாற்றான் மனைவிகள், தாசிகள் இவர்களுடன் சுகம் அனுபவித்தும் வந்தான். இவன் திருடிப்பிழைத்தான். யாருக்கும் சிறிதளவு கூட தானம் செய்யவில்லை. நிறைய பணம் சேர்த்தான். இறந்துபோனான். காலதேவன் கட்டளையால் நரகத்தில் தள்ளப்பட்டான். அங்கு 60 ஆயிரம் வருடங்கள் ஊசி முனை போல கூர்மையுள்ள பல்லுடைய பூச்சிகளின் கடியால் ரௌரவம் என்ற நரகில் துன்பம் அனுபவித்தான். நரக வேதனை தண்டனை முடிந்தபின் அவன் காக்கையாகப் பிறந்தான். அதன்பின் மத்திய தேசத்தில் மனிதப்பிறவியை அடைந்தான். ஆனால் அதிகத் துன்பம் அனுபவித்து வந்தான்.

இந்த துன்பம் தீர சாந்தி வருமாறு: காயத்திரி, ஜாதவேதஸே, த்ரயம்பகம் இந்த மூன்று மந்திரங்களையும் முன்னும் பின்னும் இணைந்து ஜபம் செய்விக்கவேண்டும். முறைப்படி ஹோமம் தர்ப்பணம் செய்விக்கவேண்டும். மூன்று லட்சம் ஜபம் செய்வித்தபின் துளசி பூஜை செய்ய வேண்டும். இதனால் அவன் பாபங்கள் முழுவதும் தீர்கின்றன. நோய்கள் தீருகின்றன.

## திருவாதிரை நட்சத்திரம் நான்காம் பாதத்தில் பிறந்தவர்கள் பூர்வ ஜென்ம வரலாறும் சாந்தியும்

*சிவபெருமான் கூறுகிறார்:*

முன்னொரு காலத்தில் உஜ்ஜையினி நகரில் ஒரு வேளாளன் இருந்தான். பயிர்த்தொழில் செய்து வியாபாரம்

முதலியன செய்து பிழைத்துவந்தான். பல்பொருள் வியாபாரம் செய்து, ஆடு மாடு இவைகளின் மாமிசத்தையும் உண்டு வந்தான். தன் வீட்டிலுள்ள ஆடு, மாடுகள், பொன் நகை ரத்தினம் முதலியவற்றை விற்று வந்தான். ஒரு சமயம் சூரிய கிரகணத்தின் போது 1000 பசுக்களை நர்மதைக் கரையில் தானம் பண்ணினான். பொன், துணி மணிகளைத் தானம் பண்ணினான். இவ்வளவு பண்ணியும் இவைகளைக் கொடுத்து உதவிய பொன்னைத் திருப்பிக்கொடுக்கவில்லை.

பல வருஷங்கள் சென்று அவன் இறந்தான். நன்கர்மங்களின் பயனாக அவன் பலவிதமான துன்பங்கள் அனுபவித்தான். பின்பு வாத்து, காக்கை, எருமை, ஆடு முதலிய பிறவிகளைப் பெற்றான். இதற்குப்பின் மனிதப்பிறவியை எடுத்தான். பெரிய பணக்கார குடும்பத்தில் பிறந்தான். போன ஜென்மத்தில் பொற்கொல்லனை ஏமாற்றியதால் இந்தப் பிறவியில் அவன் புத்திரன் இளவயதில் இறந்து போனான். முதுமையில் இவனைப் பல நோய்கள் பற்றிக்கொண்டன. பக்கவாதத்தால் அவன் உடலின் ஒரு பக்கம் செயலிழந்தது. அவனுடைய இரண்டு மனைவிகளில் ஒருவள் இவன்மேல் மிகவும் பாசமுள்ளவளாக இருந்தாள். என்ன பாவபுண்ணியம் பண்ணினாலும் அதன் கர்ம பலனை இந்த கர்ம பூமியில் தான் அனுபவிக்கவேண்டும்.

இப்பொழுது அவன் பாவங்கள் நீங்க சாந்தி சொல்லுகிறேன். காயத்திரி மந்திரத்தை ஜபம் செய்விக்க வேண்டும். ஹரிவம்ச புராணத்தைப் பாராயணம் செய்ய வேண்டும். ரதம், குதிரை, துணி, மாம்பழம், பசு இவற்றைத் தானம் பண்ண வேண்டும். இதனால் பாபங்கள் நசிக்கின்றன. ஆயிரம் பொன் பெறுமானம் உள்ளதை முறைப்படி தானம் பண்ணவேண்டும். களிமண்ணால் 3 லட்சம் சிவலிங்கங்கள் செய்து பஞ்சகவ்யத்தால் பூஜை செய்யவேண்டும். பஞ்சாம்ருதத்தால் பூஜை செய்ய வேண்டும். வேதத்தின் அங்கங்களால் பூஜை செய்யவேண்டும். பசும்பாலால் பூஜித்து நைவேத்தியம் செய்யவேண்டும்.

இதனால் அவன் பக்கவாதம் நீங்கும். அதன் பின் அவனுக்கு ஆண்குழந்தை பிறக்கும்.

**இனி விம்சோத்தரி தசைகள் விவரம் வருமாறு:**

| | |
|---|---|
| இராகு தசை | 18 வருடம் |
| குரு தசை | 16 வருடம் |
| சனி தசை | 19 வருடம் |
| புதன் தசை | 17 வருடம் |
| சனி தசை | 7 வருடம் |
| சுக்ர தசை | 20 வருடம் |
| சூரிய தசை | 6 வருடம் |
| சந்திர தசை | 10 வருடம் |
| செவ்வாய் தசை | 7 வருடம் |
| ஆக வயது | 120 வருடம் |

இவனுக்கு ராகு தசையில் கண்டம். 3வது வயதில் வெதுப்பு, 7வது வயதில் வைசூரி, 12ல் நாற்கால் மிருகத்தால் கெடுதி, 18ல் உயரமேறி விழுதல், 20ல் பெண்ணால் தீங்கு. மருந்து வைப்பால் தீங்கு. 33ல் கள்வரால் தீங்கு. 35ல் ராஜபயம். 40ல் சுழல் வாதத்தால், 47வது வயதில் வயிற்று நோயால் தீங்கு. 50ல் மூலவியாதி, 55ல் வயிற்றுக் கடுப்பால் பாதிப்பு. 60ல் வயிற்றுப்போக்கால் கண்டங்கள் உண்டாகும்.

இவை கடந்தால் வயது சென்று ஆனி மாதம் பூர்வ பட்சம் அஷ்டமியும், ஞாயிற்றுக்கிழமையும் கூடிய அன்று 31 நாழி உதித்து 3 நாழிகையில் இளைப்புத்தோன்றி மரணமாம். இதுவும் கடந்தால் 88-வது வயது சென்று தை மாதம் பூர்வ பட்ச நவமியில் குரு வாரம் கூடிய அன்று திருவாதிரை உதித்த நாளில் 1 நாழிகையில் இளைப்பு தோன்றி மரணம்.

இவன் பிறந்த லக்கின சாரம் சூரியனாகில் தரித்திரன் திருடன்.

இவன் பிறந்த லக்கின சாரம் சந்திரனாகில் பயிர் பலிதம்.

இவன் பிறந்த லக்கின சாரம் செவ்வாய் ஆகில் கோபி.

இவன் பிறந்த லக்கின சாரம் புதனாகில் பண்டிதன். பிதாவுக்கு நல்லவன்.

இவன் பிறந்த லக்கின சாரம் குருவாகில் வியாபாரி, கல்வியுடையவன்.

இவன் பிறந்த லக்கின சாரம் சுக்கிரனாகில் கள்ளன், வியாபாரி.

இவன் பிறந்த் லக்கின சாரம் இராகுவாகில் கலகப் பிரியன்.

இவன் பிறந்த லக்கின சாரம் கேது ஆகில் விரோதி, விஷமபுத்தியுடையவன்.

இந்நாளில் குஜன் கூடில் மிருத்தியோகம். குரு கூடில் சுபயோகம்.

மேற்படி யோகத்தில் வித்யாரம்பம் பூஜா ரம்பம் செய்ய நன்று.

பெண் திரளில் நோயாளி ஆவாள், மாதம் பிறக்கில் தானிய உற்பத்தி குறையும், சுரம் தோன்றில் 5 நாளில் விடும். விடாவிட்டால் அரச மரத்தடியில் துர்க்கையை ஆவாஹனம் பண்ணி, வழிபட்டு பலியிட்டு (நைவேத்தியம்) ஓமம் பண்ணவும். இந்த நாளில் வானவில் தோன்றிடினும் வெள்ளை மேகம் பரவிடினும் மழை பெய்யும். இது கண்ட ரஜ்ஜுவாகும்.

## *பிறர் மதப்படி திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்*

### பொதுப்பலன் – ஆண்கள்

**1. உடல் அமைப்பு:** திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்த ஆண்கள் எல்லோரும் ஒரேவிதமான உடலமைப்பை பெற்றவர்கள் அல்லர். இவர்களில் ஒல்லியானவர்கள், குண்டானவர்கள்,குட்டை, நெட்டை என்று எல்லா ரகமும் கலந்தவர்களாக இருப்பதைக் காணமுடிகிறது.

**2. குண நலன்கள்:** தான் எடுத்துக்கொள்ளும் எந்த வேலையையும் பொறுப்பாகச் செய்துமுடிப்பான். பொதுக் கூட்டங்களில் வேடிக்கையாகப் பேசி எல்லோரையும் வசீகரிப்பான். இவன் ஒரு சிறந்த மனோதத்துவ நிபுணன். தன் உள்ளுணர்வால் எல்லாவற்றையும் அறிபவன். தன்னுடைய நண்பர்கள், உறவினர்களிடம் இவனது உறவு சுமுகமாக இருக்கும். சிலர் இதற்கு நேர்மாறாகவும் இருப்பதைக் காண முடிகிறது. அவர்கள் தங்களுக்கு உதவி செய்தவர்களிடம் கூட நன்றி அற்றவர்களாக இருப்பார்கள். இவனுடைய நடத்தைகள் ஒரே மாதிரியாக இருக்காது.

**3. கல்வி, தொழில், சம்பாத்தியம்:** எல்லா விஷயங்களையும் நுணுக்கமாக அறியும் ஆற்றலுடன் அவற்றை உபயோகப்படுத்தவும் தெரிந்தவன். ஆனாலும் இவ்விதமான குணங்கள் இருந்தபோதிலும் அதனால் புகழோ, வெகுமதியோ பெறமுடியாது. தான் செய்யும் வேலையில் அல்லது தொழிலில் அதிக உண்மையுடன் உழைப்பதால், அதில் சிறிய பிரச்சினைகள் தோன்றும்பொழுது கூட, அதை சமாளிக்கக்கூடிய வழிகளைத் தேட தன் மூளையையும், மனத்தையும் அதிகம் வருத்திக்கொள்வான். அந்த மாதிரியான நேரத்தில் கூட அதாவது மனரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் ரொம்ப கஷ்டங்கள் ஏற்படும்போது கூட இவன் தன் நிலை தவறமாட்டான். மேலும் தன்னுடைய அமைதியான நடத்தையாலும், வசீகரமான முறையாலும் தன்

மனதை அமைதியாகவும், தெளிவாகவும் வைத்துக் கொள்வான். இவனுடைய இந்த தன்மையால் பிறருடைய மனதில் இடம்பெறுவான்.

இவன் ஒரு சமயத்தில் ஒரே ஒரு வேலையை மட்டும் செய்யமாட்டான். மாறாக ஒரே சமயத்தில் பலவித வேலைகளைச் செய்வான். செய்யவும் விரும்புவான். தொழில் செய்யும் போது தனக்குச் சரியான முறையாகத் தோன்றுவதைச் செய்வான். தன்னுடைய அணுகுமுறை, வேலை செய்யும் முறை சரியானதாக இருந்தாலும் கூட மற்றவர்கள் அவன் செய்யும் வேலை சரியில்லை, வேறு விதமாகச் "செய்" என்று கூறினால், மனம் சளைக்காமல் அவர்களுக்கு மதிப்பளித்து அவர்கள் செய்யச்சொல்லும் பாணியிலேயே செய்வான். இவன் எந்த ஒரு துறையிலாவது ஆராய்ச்சிப்பணி செய்தால் அதில் பரிமளிப்பான். வியாபாரத் துறையில் கூட இவன் பெரிய வெற்றியை அடைவான். அனேக தன்னலமற்ற சமூக சேவகர்கள் திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவர்களே. இவனுக்கு ஒரே சமயத்தில் பலதரப்பட்ட வேலைகளைச் செய்தாலும் கூட அவற்றைத் திறம்படச் செய்து முடிக்கும் திறமை உண்டு. ஒரு குறிப்பிட்ட வேலை சம்பந்தமாக பிரயாணம் செய்ய நேரிட்டால், அது தொடர்பாக உள்ள பிற வேலைகளையும் முன்யோசனை யுடன் அதே சமயத்தில் செய்து முடிக்கும் ஆற்றல் உள்ளவன்.

தன் வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை, தன் மனைவி, மக்கள், ஊரை விட்டு வெளியூருக்குச் சென்று சம்பாதிப்பான். அதாவது இவன் ஓரிடமும், இவன் குடும்பம் ஓரிடமும் இருக்கும்படியாக நேரும். 32 வயது முதல் 42 வயது வரை இவன் வாழ்க்கை பொன்னான காலமாக இருக்கும். இவன் போக்குவரத்து, கப்பல், தகவல் தொடர்பு ஆகிய துறைகளில் தொழில் செய்பவனாக இருக்கக்கூடும். தொழில்துறை, புத்தக வியாபாரம் அல்லது லேவாதேவி செய்யும் புரோக்கர் வேலைகளால் கூட பணம் சம்பாதிப்பான்.

**4. வாழ்க்கை:** இவனுடைய திருமணம் காலாகாலத்தில் நடக்காது. காலங்கடந்தே நடைபெறும். ஒருவேளை சீக்கிரமாக கல்யாணம் நடந்துவிட்டால் குடும்பத்தைப் பிரித்து தனியாக வாழும் நிர்பந்தம் ஏற்படும். இதற்குக் கணவன் மனைவிக்குள் ஏற்படும் அபிப்பிராய பேதம் காரணமாக இருக்கலாம். அல்லது அவனால் கட்டுப்படுத்த முடியாத சூழ்நிலை காரணமாகலாம். இவன் வாழ்க்கையில் அனேக பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டி இருக்கும். ஆனால் எந்த கஷ்டமானாலும் அதை வெளிக்குக் காட்டிக்கொள்ள மாட்டான்.

அதனால் இவனுக்கு காலங்கடந்து திருமணம் நடப்பதே நல்லது. அப்போது இவன் வாழ்க்கை பிரச்சினை இன்றி நல்லபடியாக அமையும். ஆனால் இவன் மனைவி இவனைத் தன்னுடைய ஆதிக்கத்தில் வைத்துக்கொள்வாள்.

**4. ஆரோக்கியம்:** குணப்படுத்த முடியாத முடக்கு வாதம், இதயநோய், பல் தொந்தரவு போன்ற வியாதிகளால் பாதிக்கப்படுவான். இவனுக்கு ஆஸ்துமா, வரட்டு இருமல், காது சம்பந்தமான நோய்கள், ஈசனோபிலியோ போன்ற நோய்கள் ஏற்படவும் வாய்ப்புண்டு.

## பொதுப்பலன் - பெண்கள்

**1. உடல் அமைப்பு:** எடுப்பான மூக்கும், அழகிய கண்களும், அளவான, அழகான உடல் அமைப்பும் கொண்டவள்.

**2. குண நலன்கள்:** அமைதியான மனமும், இனிமை யான நடத்தையும் உடையவள். அதிக செலவாளி, நல்ல புத்திசாலி. பிறருக்கு உதவும் குணம் உண்டு. பிறர்மேல் குற்றம் கண்டுபிடிப்பதில் கெட்டிக்காரி. சிலருக்கு இரண்டு தாயோ அல்லது இரண்டு தகப்பனோ இருக்கலாம். லக்கினம் அசுவதியில் அமைய நேர்ந்தால் இரு-தாய் தகப்பன் இருக்கக்கூடிய சாத்தியம் அதிகம்.

**3. கல்வி, தொழில், பொருளீட்டல்:** இவள் கல்வி, விஞ்ஞானத்துறைகளில் தனிச்சிறப்புப் பெறக்கூடியவள். இந்தத் திருவாதிரையில் பிறந்த அனேகம் பெண்கள் எலக்ட்ரானிக், மருந்து சாமான்களின் தனி கவனம் செலுத்தி தன்னைத் திறமைசாலி ஆக்கிக்கொள்கிறார்கள். சிலர் பல தரப்பட்ட விஷயங்களில் ஆலோசனை சொல்லி பணம் சம்பாதிக்கின்றனர்.

**4. குடும்ப வாழ்க்கை:** திருவாதிரை ஆண்களைப் போலவே, பெண்களும் காலதாமதமாகவே திருமணம் செய்துகொள்கின்றனர். ஆனால், இவள் தன் கணவனிட மிருந்தோ, அவன் குடும்பத்தினரிடமிருந்தோ முழு அன்பையும் பாசத்தையும் பெறமுடிவதில்லை. இவள் மணவாழ்க்கை முழுவதும் முள் நிறைந்ததாகவே இருக்கும். இவள் குழந்தைகள் கூட இவளுக்குத் தேவையான சந்தோஷத்தைக் கொடுக்கமாட்டார்கள். சிலருக்குக் கணவன் இறப்பதாலோ அல்லது விவாகரத்தினாலோ பிரிவு ஏற்படும்.

**5. ஆரோக்கியம்:** மாதவிடாய்க் கோளாறுகள், ஆஸ்துமா, கெட்ட ரத்தம், சோகை அல்லது கருப்பை கோளாறு, காது கோளாறு, பித்தம், கபம் போன்ற நோய்கள் இவளுக்கு ஏற்படும்.

இந்த நட்சத்திரத்தில் ஒரு பெண் பெரியவள் ஆனால் கெட்ட நடத்தை உள்ளவளாயும், பிறப்பு உறுப்பு குறைபாடு உள்ளவளாயும், இறந்த குழந்தையைப் பெற்றெடுப்பவ ளாயும் இருப்பாள்.

## *திருவாதிரை நட்சத்திரத்தில் நின்ற சூரியனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சந்திரன் பார்த்தால்:** இவனைச் சொந்த உறவினர்களே கஷ்டப்படுத்துவார்கள். அதனால் தன் சொந்த ஊரை விட்டு வெளியூர் சென்று சம்பாதிப்பான். ஆனாலும் அங்கும் அவனுக்கு ஆரம்பத்தில் தோல்விகளே ஏற்படும்.

**செவ்வாய் பார்த்தால்:** எதிரிகள் இவனுக்கு பிரச்சினைகளை உருவாக்குவார்கள். இவன் சோம்பேறியாக மாறுவான்.

**புதன் பார்த்தால்:** இவன் அதிக நன்மைகளை அனுபவிக்க முடியாது. ஆனால் இவனுடைய புத்திரர்கள் அரசாங்கத்திடமிருந்து அநேக நன்மைகளைப் பெறுவார்கள். அவன் புத்திரர்களை வளர்ப்பதைக் கண்ட உறவினர்கள் இவனைப் பார்த்து பொறாமைப்படுவார்கள்.

**குரு பார்த்தால்:** மந்திர தந்திரங்களில் நிபுணனாக இருப்பான். இவனால் நல்ல வாழ்க்கையின் இன்பங்களை அனுபவிக்கமுடியாது. எப்போதும் அலைந்து திரிந்து கொண்டிருப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** ஜாதகன் தன் ஊரைவிட்டு வெளியூருக்குச் சென்று கணிசமான பொருளை சம்பாதிப்பான். ஆனால் குருதசை நடக்கும்போது அவைகளை இழக்கநேரிடும்.

**சனி பார்த்தால்:** தந்திரமானவன். பெண்களால் பல விதமான கஷ்டத்தையும் வருத்தங்களையும் அனுபவிப் பவன்.

## *திருவாதிரை நட்சத்திரத்தில் நின்ற சந்திரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** பலதரப்பட்ட பௌதிக விஞ்ஞான அறிவைப் பெறுவான். செல்வத்தை சேமித்து வைக்க மாட்டான்.

**செவ்வாய் பார்த்தால்:** உயரமாக இருப்பான். படித்த அறிவாளி.

**புதன் பார்த்தால்:** அரசாங்கத்திடமிருந்து நல்ல உதவியைப் பெறுவான்.

**குரு பார்த்தால்:** நன்கு படித்தவன். ஆசிரியராகவோ, காலேஜ் லெக்சரராகவோ அல்லது பிறருக்கு கல்விச் செல்வத்தை போதிப்பவனாகவோ இருப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** வாழ்க்கையில் உண்டான எல்லா சுகங்களையும் பெறுவான்.

**சனி பார்த்தால்:** இவன் ஒரு ஏழை.

## *திருவாதிரையில் நின்ற செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** பொருட்செல்வம் அதிகம் பெற்றவன். தைரியசாலி, மரசம்பந்தமான வேலையோ அல்லது பாதுகாப்புத்துறை சம்பந்தப்பட்ட தொழிலையோ செய்வான்.

**சந்திரன் பார்த்தால்:** செக்யூரிடி டிபார்ட்மெண்ட் அல்லது போலீஸ் டிபார்ட்மெண்டில் வேலை செய்பவனாக இருப்பான். கெட்ட பெண்களுடன் அதிக சவகாசம் கொண்டு. அவர்களை அனுபவித்து அதனால் ஏற்பட்ட பால்வினை நோய்களால் கஷ்டப்படுவான்.

**புதன் பார்த்தால்:** சிறந்த சோதிடனாக விளங்குவான். மனைவியால் பல சுகங்களை அனுபவிப்பான். சிறந்த மனைவியையும் குழந்தைகளையும் பெற்று சந்தோஷமாக இருப்பான்.

**குரு பார்த்தால்:** எழுதுதல், அச்சிடுதல், வெளியிடுதல், போன்ற தொழில்கள் மூலம் சம்பாதிப்பான். சந்தோஷமாக குடும்ப வாழ்க்கையை நடத்துவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் மனைவியும் நல்ல உத்தியோகத்தில் அமர்ந்து இவனை விட அதிகமாக சம்பாதிப்பாள்.

**சனி பார்த்தால்:** குரூரமானவன். பல இடங்களில் கீழ்த்தரமான வேலைகளைச் செய்பவன். இவனுடைய மனைவி ஒரு சிறந்த பெண்ணாக இருப்பாள்.

## திருவாதிரையில் நின்ற புதனை மற்ற கோள்கள் பார்த்தபலன்

**சூரியன் பார்த்தால்:** தான் வேலை பார்க்கும் முதலாளி யிடமிருந்து அதிக நன்மைகளைப் பெறுவான். அனேகமாக அரசாங்க நிறுவனங்களில் உத்தியோகம் அமையும்.

**சந்திரன் பார்த்தால்:** ஒரு கிராமம் அல்லது நகரத்தை நிருவாகம் செய்யும் திறமை உள்ளவன். தன் திறமையினால் அந்த ஊர் மக்களிடம் பெரும் கௌரவத்தை சம்பாதிப்பான்.

**குரு பார்த்தால்:** தனவான், புத்திசாலி, ஒரு அக்கவுண்டன்டாகவோ, நிதி நிறுவன புரோக்கராகவோ இருந்துகொண்டு நிறைய பணம் சம்பாதிப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** கெமிக்கல் என்ஜினியராக இருக்கலாம். தன் மனைவியிடம் துன்பத்தை அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** எல்லோரிடமும் நல்லமுறையில் பழகுவான். இவன் நல்லதையே செய்வான். இவன் செய்கைகளால் எல்லாரிடமும் நல்ல பெயரைப்பெறுவான்.

## திருவாதிரையில் நின்ற குருவை மற்ற கோள்கள் பார்த்தபலன்

***சூரியன் பார்த்தால்:*** நல்ல மனைவியையும், நல்ல குழந்தைகளையும் செல்வத்தையும் பெற்றவன். எல்லோரும் இவனிடம் மரியாதை செலுத்துவார்கள்.

**சந்திரன் பார்த்தால்:** ஒரு கிராமத்திற்கோ அல்லது நகரத்துக்கோ அல்லது ஒரு அரசாங்க நிறுவனத்திலோ தலைமைப்பதவி பெறும் பேறு பெற்றவன்.

**செவ்வாய் பார்த்தால்:** ஆட்டோமொபைல் அல்லது விமானம் சம்பந்தப்பட்ட துறைகளில் வேலை செய்பவனாக இருப்பான்.

**புதன் பார்த்தால்:** கணக்கில் புலி, சிறந்த ஜோதிடன்.

**சுக்கிரன் பார்த்தால்:** பெரும் செல்வத்தைத் திரட்டுவான். ஆனால் இந்த செல்வத்தைத் தன்னுடைய வசதிகளுக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் உபயோகித்துக் கொள்ளமுடியாது.

**சனி பார்த்தால்:** லட்சத்தில் ஒருவனாக இருப்பான். சிறந்த மனைவி, மக்கள், செல்வம், புகழ் எல்லாம் பெற்று சிறப்புப் பெறுவான்.

## *திருவாதிரையில் நின்ற சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்தபலன்*

**சூரியன் பார்த்தால்:** இவனுக்கு இரண்டு மனைவிகள். டாக்டராக இருப்பான்.

**சந்திரன் பார்த்தால்:** கூச்ச சுபாவம் உடையவன். தன்னுடைய எண்ணங்களை பிறருக்கு சரியான முறையில் வெளிப்படுத்தத் தெரியாதவன். அதனால் பிறருடன் மனஸ்தாபம் ஏற்படும். ஆனால் பெண்கள் இவனை அதிகம் விரும்புவர்.

**செவ்வாய் பார்த்தால்:** எல்லா வகையிலும் அதிர்ஷ்டத்தை உடையவன்.

**குரு பார்த்தால்:** புத்திசாலி, உயர்ந்த பட்ச கல்வியை பெற்றவன். தன் கீழ் பல வேலைக்காரர்களை உடையவன்.

**சனி பார்த்தால்:** பல பெண்களுடன் உடல் உறவு பெற்றதால், பால்வினைநோயினால் கஷ்டப்படுவான். தன் குடும்பத்தினரால் புறக்கணிக்கப்பட்டவன்.

## *திருவாதிரையில் நின்ற சனியை மற்ற கோள்கள் பார்த்தபலன்*

**சூரியன் பார்த்தால்:** இவனுக்கும் இவன் தந்தைக்கும் சுமூகமான உறவு இருக்காது. தன் தந்தையிடமிருந்து எந்த விதமான நன்மைகளையும் பெறமுடியாது.

**சந்திரன் பார்த்தால்:** இவனுடைய இளைய சகோதரி விதவையாகி இவனுடன் வசிப்பாள். அவளைக் காப்பாற்றும் பொறுப்பு இவனை வந்தடையும்.

**செவ்வாய் பார்த்தால்:** உடன் பிறப்புகளுக்கு அபாயம் ஏற்படும். தந்தை வழி சொத்துக்கள் நாசமடையலாம்.

**புதன் பார்த்தால்:** உயர்பட்ச கல்வித்தகுதியைப் பெற்றவன். விஞ்ஞான சம்பந்தமான துறைகளில் உத்தியோகம் பார்ப்பான். இவனுடைய திருமண வாழ்க்கை சுமூகமாக இருக்காது.

**குரு பார்த்தால்:** அரசாங்கத்திடமிருந்து பலவித நன்மைகளைப் பெறுவான். எல்லோரும் இவனை மதிப்பார்கள்.

**சுக்கிரன் பார்த்தால்:** தங்க நகை செய்பவனாகவே அல்லது பலவித உலோகங்களை வாங்கி விற்பவனாகவோ தொழில் நடத்துவான். இரண்டு மனைவிகளை உடையவன்.

## *திருவாதிரை நட்சத்திரத்தின் முதல் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** அதிகம் படித்தவனாகவும், செல்வந்தனாகவும் இருப்பான். இவன் ஒரு சிறந்த சோதிடன், கணக்குத்துறை, அக்கவுண்டன்ட் துறைகளில் உத்தியோகம் பார்ப்பவனாக இருப்பான்.

திருவாதிரை முதல் பாதத்தில் சூரியன் இருந்து குருவும், புதனும் இவனுடன் சேர்ந்திருந்தால் இவனுக்கு இரட்டை ஆண்பிள்ளைகள் பிறக்கும். அவர்களுடன் சுக்கிரனும் சேர்ந்திருந்தால், ஜாதகன், போலீஸ் அல்லது பாதுகாப்புத் துறையில் சேருவான். வயதான காலத்தில் இவன் பார்வைக் கோளாறு உள்ளவனாக இருப்பான்.

**சந்திரன் நின்றால்:** மனத்தால் நல்லவன் அல்லன். எரிச்சலூட்டும் குணம் கொண்டவன். சந்திரன் செவ்வாயுடன் சேர்ந்து இருந்தால், இவன் ஒரு தொழிலாளியாகவோ, உலோகம் சம்பந்தப்பட்ட துறையிலோ, தோல் வியாபாரி யாகவோ அல்லது பானை, சட்டி செய்பவனாகவோ தொழில் செய்து பணம் சம்பாதிப்பான்.

இந்த நிலையில் லக்கினம் ரேவதி நட்சத்திரத்தில் அமைந்து குரு இந்த சந்திரனுடன் கூடி இருந்தால் வாழ்க்கையில் உயர்ந்த நிலையை அடைந்து ஏராளமான செல்வத்தை சம்பாதிப்பான். கை, தோள்களில் "ருமாடிசம்" நோய் ஏற்பட்டு கஷ்டப்படுவான்.

**செவ்வாய் நின்றால்:** நன்கு கற்றறிந்தவன். கவிதை களில், பாட்டுகளில் பிரியம் உள்ளவன். வெளிநாடுகளில் இருக்க ஆசைப்படுவான். லக்கினம் கிருத்திகை அல்லது ரோகிணி நட்சத்திரத்தில் அமைந்தால் உடன் பிறப்புக்கு அபாயம் ஏற்படும். இவன் மனைவி நோயாளியாக இருப்பாள். பலவிதங்களில் "இழப்புகள்" ஏற்படும். நிமோனியா நோய் தாக்கலாம்.

**புதன் நின்றால்:** எல்லாத்துறை தொழில்களிலும் நிபுணனாக இருப்பான். ஜோதிடத்தில் நிபுணன். வேதங்களில் சிறந்த அறிவு பெற்றவன். ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களுடன் உடல் தொடர்பு உள்ளவன். காது செவிடாகவும், இடுப்பு அல்லது தொடைகளில் வலி உள்ளவனாகவும் இருப்பான்.

**குரு நின்றால்:** பல தரப்பட்ட விஷயங்களிலும் அறிவும் ஆற்றலும் கொண்டவனாக இருப்பான். இவன் ஒரு லாயராகவோ, ஆசிரியராகவோ, லெக்சரராகவோ இருப்பான். பிறர் திருப்தி அடையும் படியாக, அவன் கடமைகள் ஆற்றுவான். இவனுக்கு லிவர் சம்பந்தப்பட்ட அல்லது சுவாசம் சம்பந்தமான நோய்கள் ஏற்பட வாய்ப்புண்டு.

**சுக்கிரன் நின்றால்:** பெண்ணாக இருந்தால் இந்த அமைப்பு நல்லதல்ல. சுபகிரகங்கள் பார்வை அல்லது சுக்கிரனுடைய சேர்க்கை இருந்தாலன்றி, விபசாரம் மூலம் பணம் சம்பாதிக்கும் துர்பாக்கிய நிலை ஏற்படும்.

ஆணாக இருந்தால் இவனுடைய கல்வி, விஞ்ஞானம் சம்பந்தப்பட்டதாக அமையும். கலைகளிலும், சங்கீதத்திலும் ஆர்வம் உள்ளவனாக இருப்பான்.

**சனி நின்றால்:** இது சனிக்கு நல்ல அமைப்பு இல்லை. இவன் கடனில் மூழ்குவான். கீழ்த்தரமான தொழில்களைச் செய்வான். சிலர் திருடனாகவும் கடத்தல்காரர்களாகவும் இருப்பர். வெட்கம், மானம், என்பதின் பொருளே தெரியாதவனாக இருப்பான். மறைவான இடங்களில் ஒளிந்து வாழ்வான்.

**ராகு நின்றால்:** கறுத்த அல்லது சிவந்த நிறம் உள்ளவன். தன் செய்கைகளால் ஏற்பட்ட திருப்தி மற்றும் சந்தோஷத்தால் பெருமை உடையவனாக இருப்பான். மதங்களுக்கு அதிக முக்கியத்துவம் தரமாட்டான். காதல் விவகாரங்கள் அதிகம் உள்ளவன். அனாவசியமாகப் பேசுபவன். ஏராளமான செல்வத்தை சம்பாதிப்பான். ஆனால் எல்லாவற்றையும் சூதாட்டத்திற்காகவும், பெண்கள் விஷயத்திலும் செலவு செய்வான். ஈசனோபிலியா அல்லது வறட்டு இருமலால் அவஸ்தைப்படுவான்.

**கேது நின்றால்:** கொடூரமும், தந்திரமும் நிறைந்தவன். தனக்கு உதவியவனிடம் நன்றியற்ற முறையில் நடந்து

கொள்வான். அரசாங்கத்திடமிருந்து கடுமையான கண்டனத்தை எதிர்கொள்ள நேரும். இவன் மனைவி ஒரு நோயாளியாக இருப்பாள். அல்லது இவனுடைய 35 வது வயதில் மனைவியின் மரணம் நிகழும். மத்திம ஆயுள் உடையவன். ஆஸ்துமா அல்லது டீ, காபியால் கஷ்டப்படுவான்.

## திருவாதிரை இரண்டாம் பாதத்தில் கோள்கள் நின்றபலன்

**சூரியன் நின்றால்:** பழகுவதற்கு இனிமையானவன். அன்பானவன். நகைச்சுவையாகப் பேசுபவன். இனிமையாகப் பேசுவான். மொழிகளில் நிபுணத்துவம் உடையவன். குடும்ப உறுப்பினர்கள் இவனை மிகவும் விரும்புவார்கள்.

குருவும் இந்த அமைப்பில் இருந்தால், இவன் ஒரு மந்திரியாக ஆவான். அல்லது அரசாங்கத்தில் மிகப்பெரிய ஆபிசர் பதவியை அடைவான்.

சனி இந்த அமைப்பில் சேர்ந்தால் உலோகங்களின் தன்மையை அறிந்த மெடலர்ஜிஸ்ட் ஆக இருப்பான். இந்த அமைப்பு மனைவிக்கும், மக்களுக்கும் ஆகாது. அபாயத்தை உண்டாக்கும்.

**சந்திரன் நின்றால்:** மெக்கானிக்கல் துறையில் தொழில் அமையும். இந்த சந்திரனை சுக்கிரன் பார்த்தால் ஜாதகன் ஒரு சிறந்த சங்கீத வித்துவான். எல்லாவித வாத்தியங்கள் வாசிப்பதிலும் நிபுணன். பிராங்கைடிஸ், ஆஸ்துமா, பித்தம் அல்லது கபம் சம்பந்தப்பட்ட நோயால் அவதிப்படுவான்.

**செவ்வாய் நின்றால்:** தைரியமானவன். செல்வந்தன். கற்றுணர்ந்தவன். காடுகளில் வசிக்கப் பிரியப்படுவான். இவன் விறகு வெட்டியாகவோ, பாரஸ்ட் ஆபீசராகவோ, அல்லது மர சம்பந்தமான பொருள்கள் செய்பவனாகவோ விற்பவனாகவோ இருப்பான். காயங்கள் ஏற்படுவதும் வெட்டுப்படுதலும் இவனுக்கு சர்வ சாதாரணம்.

**புதன் நின்றால்:** பணக்காரன் இனிமையாகப் பேசுபவன். எல்லாவித தொழில்களும் வேலைகளும் தெரிந்தவன். விரல்விட்டு எண்ணக்கூடிய பெரிய ஜோதிடர்களில் ஒருவன், அனேக பெண்களையும் மகன்களையும் பெற்றவன். அவர்களில் பெண்களை விட ஆண்களே அதிகம் இருப்பர். ரத்தம் சம்பந்தப்பட்ட கோளாறுகள், ஆஸ்துமா அல்லது பிராங்கைடிஸ் நோயினால் கஷ்டப்படுவான்.

**குரு நின்றால்:** மிக உயர்ந்த நிலையில் இருப்பான். மந்திரியாகவோ அல்லது டிபார்ட்மெண்டில் தலைமைப் பதவியோ பெற்றவனாக இருப்பான். இவனுடைய மக்கள் நல்லவர்களாகவும், கடமை உணர்ச்சி மிக்கவர்களாகவும் இருப்பார்கள்.

**சுக்கிரன் நின்றால்:** கவர்ச்சிகரமான உருவம் உடையவன். நடுத்தரமான உயரம், புத்திசாலி. நீண்ட ஆயுளைப் பெற்றவன். இவன் கெமிக்கல் எஞ்சினியராக இருக்கலாம். இவனுடைய வாழ்க்கை முழுவதும் ஏதாவது தகராறுகள் நிறைந்ததாக இருக்கும். குரு பார்த்தால் இவனது மணவாழ்க்கை அமைதியாக சந்தோஷத்துடன் செல்லும். ரத்தக்கோளாறு அல்லது டிராப்ஸி என்ற நோயால் கஷ்டப்பட நேரும்.

**சனி நின்றால்:** பிறருடைய சொத்துக்களையும் செல்வத்தையும் அபகரித்து ஏப்பம் விடுவான். ஆனால் தன்னுடைய தகப்பனிடமிருந்து எந்தவித லாபத்தையும் பெறமுடியாது. இவன் போதகனாக இருக்கக்கூடும்.

இந்த அமைப்பில் சந்திரன் சனியைப் பார்த்தால் தன் சமூகத்திற்கு தலைவனாக இருந்து பெரும் செல்வத்தையும், புகழையும் பெயரையும் அடைவான்.

சனி திருவாதிரை நட்சத்திரத்தின் 2வது பாதத்தில் இருக்கும்போது சந்திரன் இந்த சனியை பார்த்தால்தான் நல்ல பலன்கள் நடைபெறும். மற்ற எல்லா நிலைகளிலும் தீய பலன்களே நடைபெறும்.

**ராகு நின்றால்:** வாயாடியாகவும், முறைகெட்ட நடத்தை உடையவனாகவும் இருப்பான். சிறுவயதில் "ஆக்ஸிடன்ட்" ஏற்படலாம். இவனுடைய முரட்டுத் தனமான நடவடிக்கைகள் இவனுக்கு அனேகரிடம் விரோதத்தை சம்பாதித்துத் தரும்.

**கேது நின்றால்:** சண்டை போடும் குணம் உள்ளவன். செல்வத்தை இழப்பான். வாயில் ரோகங்கள் ஏற்படும். தன்னுடைய குடும்பத்தாராலேயே புறக்கணிக்கப்படுவான். தன் தாயின் அன்பையும் பாசத்தையும் பெறமுடியாதவன்.

## *திருவாதிரை மூன்றாம் பாதத்தில் கோள்கள் நின்றபலன்*

**சூரியன் நின்றால்:** பலவித துறைகளில் கல்வித் தேர்ச்சி பெற்றவன். 40 வயதிற்குப்பிறகு புகழ்மிக்க ஜோதிட வல்லுனராகத் திகழ்வான். ஒரு "அக்கவுண்டன்ட்" ஆகவோ அல்லது நிதி சம்பந்தமான ஆலோசனை சொல்பவராகவோ அல்லது வங்கிகளில் ஆலோசனை சொல்லியோ ஒரு நிரந்தரமான வருவாயைத் தேடிக்கொள்வான். சுவாச சம்பந்தமான நோய்களோ அல்லது "பிராங்கைடிஸ்" நோயோ இவனைத் தாக்கும் அபாயம் உண்டு.

**சந்திரன் நின்றால்:** அறிவாளி. சிறந்த பேச்சாளி. எப்போதும் சந்தோஷமாக இருப்பான். இந்த அமைப்பில் ரோகிணி நட்சத்திரத்தில் லக்கினம் இருந்தால் ஏராளமான செல்வத்தைச் சேமித்துவைப்பான். ஆனால் வீழ்ச்சி அடைந்திருந்தாலும், லக்கினம் கிருத்திகை அல்லது ரோகிணியில் இருந்தாலும் இவனுடன் பிறந்தவர் மூளைக்கோளாறு உள்ளவராக இருப்பர்.

**செவ்வாய் நின்றால்:** கணிதத்திலும், செய்யுளிலும், சிறந்த ஞானம் உள்ளவன். அரசாங்கத்தால், வெளிநாடுகளில் பலவித இன்னல்களை அனுபவிப்பான். வயிற்றுப்போக்கு, சுவாசகோசம் வீங்குதல் போன்றவற்றால் கஷ்டப்படுவான்.

**புதன் நின்றால்:** சிறந்த அறிவாளி, லக்கினமும் இந்த அமைப்பில் இருந்தால், புதன் மட்டும் தனியாகவும்

இருந்தால் பணம் சேருதல், நல்ல குடும்பம் அமைதல், உடன் பிறந்தவர்களிடமிருந்து நன்மைகளும் உதவிகளும் கிட்டுதல் போன்ற சிறந்த பலன்கள் நடைபெறும்.

**குரு நின்றால்:** இந்த அமைப்பில் 15 வயதுக்குள் குருதசை நடந்தால் எல்லாவிதத்திலும் கஷ்டப்பட நேரும். மனம், பணம் இரண்டாலும் ஸ்திரத்தன்மை, திருமணத் திற்குப் பிறகே ஏற்படும். இடுப்பிலும், தொடையிலும் "ருமாடிசம்" நோய் ஏற்படக்கூடும்.

**சுக்கிரன் நின்றால்:** நன்றாகப் படித்தவன். செல்வந்தன். அரசாங்கத்திடமிருந்து பலவித நன்மைகளையும் லாபங்களையும் பெறுவான். இருந்தபோதிலும் பெண்கள் வழியில் செல்வத்தை செலவிடுவான். கடவுளுக்குப் பயந்தவன். ஆசாரமாக இருந்து முன்னோர்கள் சொல்லிய வழியில் தன் மதகோட்பாடுகளைக் கடைபிடிப்பான். டிராப்ஸி அல்லது ரத்தக்கோளாறினால் அவஸ்தைப்படுவான்.

**சனி நின்றால்:** கெட்ட நண்பர்களுடன் சேர்ந்து தீய செயல்களைப் புரிபவன். துன்பகரமான சூழ்நிலையில் தன்னுடைய பெரும்பான்மையான நேரத்தைச் செலவிடு பவன். கணவன் மனைவி உறவு சந்தோஷகர மானதாக இருக்காது. தீயவர் கூட்டத்தின் தலைவனாக இருப்பவன். பிராங்கைடிஸ் அல்லது தோள்களில் ருமாடிசம் வியாதியால் கஷ்டப்படுவான்.

**ராகு நின்றால்:** ஒரு கிராமத்தின் அல்லது நகரத்தின் தலைவனாக இருப்பான். தன்னுடைய மனைவியால் திருப்தியை அடையாமல் பல பெண்களின் பின்னால் அலைவான். சீதோஷ்ண நிலை மாறுவதால் ஏற்படும் வியாதிகள், வறட்டு இருமல் இவைகளால் பாதிக்கப் படுவான்.

**கேது நின்றால்:** விவசாயம் செய்வதாலோ அல்லது விவசாயத்தால் உற்பத்தியாகும் பொருட்களாலோ தன் தொழிலை அமைத்துக்கொள்வான். நிலத்தகராறினால் தன் நிலத்தை இழப்பான். திருமண வாழ்வில் ஒற்றுமை இராது.

குழந்தைகளை இழப்பான். டி.பி. அல்லது கான்சர் நோயினால் கஷ்டப்படுவான்.

## திருவாதிரை நான்காம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** உயர்ந்த நன்னடத்தை உடையவன். கௌரவமானவன். சாஸ்திரங்களைக் கற்றறிந்தவன். இந்த அமைப்பு சிறந்த ஜோதிடன் ஆவதற்கு உகந்தது. தன்னுடைய 39ஆவது வயதிற்குப்பின் நற்புகழை அடைவான். கவர்ச்சிகரமான உடலமைப்பைக் கொண்டவன். தனவந்தன். ஆணானால் 25வது வயதிலும், பெண்ணானால் 23வது வயதிலும் திருமணமாகும்.

**சந்திரன் நின்றால்:** ஒரு ஊதாரி. வக்கிரமான விஷயங்களை நன்கு அறிந்தவன். கடவுள் பக்தி உள்ளவன். நேர்மையான முறையில் செல்வம் சம்பாதிப்பான். இருந்தாலும், கருத்து வேற்றுமையினால் அடிக்கடி தகராறுகள் ஏற்பட்டுத் தன் குடும்ப வாழ்க்கையில் உண்டான சந்தோஷத்தை அனுபவிக்க முடியாதவன். பெரும்பான்மை யானவர்கள், ஆண்கள் தன் மனைவியை விட தாழ்வான நிலையில் இருப்பதே இந்த தகராறுகளுக்குக் காரணம். மேலும் பெண்கள் தங்களுடைய கணவன் தங்களை விட கீழ் நிலையில் வேலைபார்ப்பதைக் கண்டு வருத்தப்படுபவர் களாகவும் இருப்பார்கள். ஆதலால் கணவன் மனைவி இருவரும் ஒரே அந்தஸ்து கொண்டவர்களாக தொழில் துறையில் இருப்பது நல்லது.

**புதன் நின்றால்:** புதன் திருவாதிரை நட்சத்திரத்தில் முதல் பாதத்தில் கொடுக்கும் பலன்களையே இதற்கும் தருவான். நியூரால்ஜியர் ஆஸ்துமா அல்லது பிராங்கைடிஸ் நோய்கள் இவனை பீடிக்கும்.

**குரு நின்றால்:** இந்த நிலையில் லக்கினமும் அமைந்தால், இவன் நிலையான ஒற்றுமையான, சந்தோஷமான வாழ்க்கையை அனுபவிப்பான். தன் கிராமத்தில் ஆயிரத்தில் ஒருவனாக போற்றப்படுவான். புளூரசி அல்லது சுவாச சம்பந்தமான நோய்கள் இவனை வந்தடையும்.

**சுக்கிரன் நின்றால்:** சிறந்த நடிகனாகவோ அல்லது பாடகனாகவோ இது சிறந்த அமைப்பு. ஏராளமான செல்வத்தை நடிப்பு, பாட்டு அல்லது லலித கலைகள் மூலம் சம்பாதிப்பான். 40, 50 வயதுகளில் வாழ்க்கை மிகச்சிறப்பாக இருக்கும். கழுத்தில் வீங்குதல் அல்லது இடது கண்ணில் கோளாறு ஏற்பட்டு பிரச்சினையை உண்டாக்கும்.

**சனி நின்றால்:** சட்ட விரோதமான செய்கையால் தன் மனைவியின் வருமானத்தைப் பெற்று தன் வாழ்க்கையை நடத்துவான். ஆனாலும் மனைவி மேல் அவனுக்கு தனியான பிரியம் உண்டு. குடிபோதைக்கு அடிமையானவன். கோர்ட், கேசுகளில் சம்பந்தப்படுவான். சிலர் சிறைவாசமும் அனுபவிக்க நேரும். சந்தோஷமும் செல்வமும் வாழ்க்கையில் இல்லாதவன்.

**ராகு நின்றால்:** இவனுடைய நற்செய்கைகளுக்காக அரசாங்கத்தில் கௌரவிக்கப்படுவான். இவனுக்கு 2 மனைவிகள் ஏற்படும். விஞ்ஞானத் துறைகளிலும் கல்வித் துறையிலும் இவன் காட்டிய திறமைக்காக, கௌரவம், புகழ், செல்வம் எல்லாம் இவனை வந்தடையும். இவனுடைய கல்வி பாதியில் தடைபடும். ஆனாலும் பின்னால் தொடர்ந்து படித்து பூர்த்தி செய்வான்.

**கேது நின்றால்:** பிதுரார்ஜித சொத்துக்களை இழப்பான். தன் தந்தையிடமிருந்து எந்தவிதமான நன்மையையும், லாபத்தையும் அனுபவிக்கமாட்டான். ஒல்லியான உடல் அமைப்புகொண்டவன். ஏதாவது உடல் உறுப்பு ஊனமாக இருக்கலாம். இவனுக்கு விஷத்தால் அபாயம் ஏற்படும்.

**குறிப்பு:** திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள், பூசம், மகம், உத்திரம், திருவோணம் நட்சத்திரத்தில் பிறந்தவர்களுடன் எந்தவிதமான தொடர்பும் உறவும், கொடுக்கல் வாங்கலும் வைத்துக்கொள்ளக்கூடாது.



## அத்தியாயம் - 9

# புனர்பூச நட்சத்திரம்

இது 7வது நட்சத்திரம். இதன் முதல் மூன்று பாதங்கள் மிதுன ராசியிலும் 4ம் பாதம் கடக ராசி மண்டலத்தின் 80பாகை முதல் 93 பாகை,20 கலை வரை பரவி உள்ளது.

| | |
|---|---|
| அரபுப்பெயர் | அத தீரா (சிங்கத்தின் கால்கள்) |
| கிரேக்கப் பெயர் | ஜிமினோரியம் |
| சீனப்பெயர் | ட்ஸின்ங் |

வடமொழி நட்சத்திரத்தின் அதிதேவதை அதிதி. தேவர்களின் தாய். இது இராமாயண சரித்திர நாயகன் இராமன் பிறந்த நட்சத்திரம். புனர்வசு நட்சத்திரத்தில் பிறந்தவன்.

**நெய்யோடு பால்வி ரும்பும் நிரம்பிய கல்வி கற்கும்**
**வெய்யசொல் உடைய னாகும் வேதியர் தம்மைப் பேணும்**
**கையது கடிய னாகும் கடுநடை யுடைய னாகும்**
**பொய்யுரை என்றும் சொல்லான் புனர்பூச நாளி னானே. (73)**

*(சுவடி எண். 1500)*

இந்த புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் நெய்யும் பாலும் விரும்பி உண்பான். நிறைய கல்வி கற்பான். பேச்சு கொஞ்சம் கடுமையாக இருக்கும். அந்தணர்களை விசுவாசமுடன் பாதுகாப்பான். கடுமையாக கையாலும் செயல்படுவான். வேகமாக நடப்பான். என்றும் பொய் பேசமாட்டான். இவை புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் தன்மைகளாகும்.

இன்னானுக்குத் தெய்வம் அக்கினி பகவான். பூதம்-பிரிதிவி,சாதி-பிராமணன், கோத்திரம்-அகஸ்தியன், யோனி-பெண் பூனை. பட்சி-அன்னம். விருட்சம்-மூங்கில்.

கணம்-தேவகணம். மூன்றாங்கால் இராசி-மிதுனம். வாரம்- புதன். நாலாம்கால் இராசி-கடகம். வாரம்-திங்கள். ஆனி மாதம், ஆடி மாதம் பகை. நட்சத்திரம் ஓடம் போன்றிருக்கும். இது ஐந்து நட்சத்திரங்கள் கொண்டது. இதில் 30 நாழிகைக்கு மேல் நாலு நாழிகை விஷம். வெதுப்பு தோன்றில் விடும். கோதுமை அரிசியும் நெல்லரிசியும் கலந்து ஓமம் பண்ணுவது. மூன்றுநாளில் தீரும். ஆயுசு விருத்தியாகும். யாத்திரை செல்லவேண்டுமானால் புடலம்பூ தின்று வழிப்போவது தாமதப்படும். ஆண்டு பிறக்கில் தானியம் விலை ஏறும்.

இவன் வித்தையும் குணமும் உடையவன். கையும் காலும் விரைந்து செயல்படும். அழகிய புருவமுடையவன். உத்தம குணவான். சத்துருவை வெற்றிகொள்ளுவான். மருமச்சமுடையவன். ஆடையலங்காரன்.

ஆனி மாதம் சூனியம். இந்த நட்சத்திரம் தறிக்கால் போன்றிருக்கும். இவன் நெற்றி உயர்ந்திருக்கும்.

இந்த நட்சத்திரத்தின் காரகங்கள் உயர்ந்த தானியங்கள், உண்மை சத்தியம், தாராள குணம், தூய்மை, தன் குலப்பெருமை, பக்தி, புகழ், அரசு உத்தியோகம், வியாபாரி, சிற்பி முதலியன.

இவர்களுக்கு மிக இளமையில் திருமணம் கூடும் அல்லது மிக தாமதித்தும் நடக்கும். அளவான பிள்ளைப் பேறுதான் இருக்கும். இவர்களை விட இவர்கள் வாரிசு மிக முன்னேறுவார்கள். சொந்தவீடு இருந்தும் இதில் வாசமிராது. அவர்களுக்குப் பெண்களால் அவமதிப்பும், கலகமும் உட்பகையும் இருக்கும். புராண இதிகாச, சாஸ்திரங்களில் பற்றுடையவர்கள். இவரைவிட இவர் மனைவி அல்லது கணவர் நிலை உயர்ந்திருக்கும். இவர்கள் வயது 70 வரை இருக்கும். இவர் ஒரு லட்சியவாதி.

இந்த நட்சத்திர அதிதேவதை பலதேவன் என்று கூட சொல்லப்படும். இவர்கள் இந்திரனை வழிபட நல்லது. வியாழன், வெள்ளி ஆகிய இருதினங்களில் புனர்பூசம் வார சூன்யமாகும். இப்படிப் பிறந்தவர்கள் கஷ்டப்படுவார்கள். இது உதர ரஜ்ஜு.

இவர்கள் அடிக்கடி நோய்வாய்ப்படலாம். கிடைத்ததைக்கொண்டு திருப்தி பெறுவர்.

இதில் பெண் திரளில் - செலவாளி. தன்னிச்சையாக நடப்பார்கள்.

இதன் நிறம் சிவப்பாகும். இது ஓங்கார ஒலிக்கு உரிமை கொண்டது.

இந்த நட்சத்திரத்தில் செய்யத்தக்கவை பும்சவனம், நாமகரணம், சீமந்தம், காது குத்தல், உபநயனம் செய்தல் போன்றவை நல்லது. வித்தியாரம்பம் போதித்தல், புதுக்கோடி வாங்குதல், அணிதல், நுண்கலைகள் பயிலுதல் இவற்றிற்கு நல்லது.

இதில் சாந்தி முகூர்த்தம் செய்ய நல்லது. இது உயர்குல நட்சத்திரம். பிறர் பணத்தை அனுபவிக்கவும் வல்லவர்.

மாடு வாங்கல் நல்லது, நல்ல நிறைய பால் கிடைக்கும். பூஜை வழிபாடு அணைக்கட்டுத் தொழில் செய்ய நன்று.

**தமிழ் ஜாதகாலங்காரப்படி இதில் பிறந்தவன் குணங்கள்:** சிறந்த வாக்கு வன்மையுடையவன். அகங்காரி; பருத்த தோள்களையுடையவன். அழுத்தமுடையவன். கஷ்டப்பட்டு அதிக தூரம் நடப்பவன். கொடுஞ்சொல்லன். திருடன் மிருதுவான கையை உடையவன். அன்பான குணமுண்டு. பொய் சொல்லுவான். பித்தாதிக்க தேகமுடையவன். பலருடன் சினேகம் செய்பவன். ஒருகால் 5ம் வயதில் முடமாகும் வாய்ப்புண்டு.

**யவன ஜாதகம்**: கெட்ட புத்தியுடையவன். பார்க்க அழகான உடல்வாகுள்ளவன். அன்னிய பெண்களின் காரியத்தை சிரத்தையாகச் செய்பவன். அல்ப சந்தோஷி, சிரமம் கொடுப்பவன். வேகமாக நடப்பான்.

**பிருகத்ஜாதகம்**: தாபத்தால் உண்டாகும் சிரமத்தைப் பொறுத்துக்கொள்பவன். சுகபுருஷன். சத்வகுணமுள்ளவன். தன் சரீரத்தை அக்கரையுடன் கவனித்துக்கொள்வான். மிகவும் தப்பு செய்பவன். சொற்ப லாபத்தினால் சந்தோஷப்படுவான். நோயுடையவன் என்பதாம்.

இது அசையும் நட்சத்திரம், சரம், பட்சி, காக்கை, அட்சரம், ஓகாரம், "ஓ, ஔ" குறுக்குப் பார்வை. மேலே சொன்ன சுபகாரியங்களும் அன்றி அன்ன பிராசனம். முடி சூட்டுதல், உபநயனம், பிரசவித்த பெண்கள் புதிதாக மருந்துண்ணல், ஆபரணம் தரிக்க முதலிய காரியங்களுக்கு நன்று. வியாழக்கிழமை அமிர்தயோகம், ஞாயிற்றுக்கிழமை அர்த்த ஸாதன யோகம். அதாவது பொருளீட்ட நல்ல வெற்றி.

**நைவேத்தியம்**: சர்க்கரைப்பொங்கல், புஷ்பம், மல்லிகை, மலயஜம், தூபம் "அதிதிர்தௌர் இதி" புஜா மந்திரம். நெய் அரிசி இவற்றில் 108 காயத்திரி ஹோமம். அதிதியின் பொருட்டு கந்தம், புஷ்பம், தயிர்சாதம் இவற்றால் பலி. நோய் தோன்றில் 7 நாட்கள் முதல் 21 நாட்களில் குணம் உண்டாகும். இதில் மாதம் பிறந்தால் பயிர் விருத்தி.

**நட்சத்திர பாத பலன்**

*தமிழ் ஜாதகாலங்காரம்*

**என்றுமெய்த் தூலப் பிலுக்கனல் யோகி**
**இடைந்திடும் செவிடனாம் காமி**
**ஏன மயிரன் இனியநற் பூசம்**
**ஆம்முதல் காலினில் இசைந்தோன்**

துன்றிய பித்தன் உட்டின தேகி
சோம்பல் ஆசாரமு மில்லான்
துக்கமே நித்தம் பொருந்துவ னிருகால்
தோன்றிய நாட் பலன் மிகவே
என்றுமெய் தூவப் பிலுக்கன்நல் யோகி
அன்றித்தீக் குட்ட ரோகியாம் சதாகால்
அலைச்சலான் காவிய மறியான்
மந்துறுதந்த ரோகவான் தீர்க்க
வயதுளான் பாதமூன் றதனல்
நன்றினிற் குள்ளன் பிரியமு முள்ளான்
அழகுளான் வல்லவன் என்றே
நாடிய பார்வை லக்ஷண மறிவான்
நாற்பாத மறிந்துரை தனக்கே. (74)

(இதன் பொருள்) 1. இனிமையான புனர்பூசம் முதற்பாதத்தில் பிறந்தவன் தடித்த சரீரமுள்ளவன். அற்பகுணமுள்ளவன். போகத்தில் மிகுந்தவன். செவிடன், வெட்கம் கெட்டவன். நல்ல தடித்த மயிருள்ளவன் என்றும் அறிக.

2. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன், பித்த சரீரமுள்ளவன். அங்கங்கள் அளவாக உள்ளவன். சோம்பேறி, ஆசாரம், சுத்தம் இவை இல்லாதவன். எந்நாளும் துக்கத்தையே அனுபவிப்பவன் ஆவான் என்றறிக.

3. மூன்றாம் பாதத்தில் பிறந்தவன், குஷ்ட்டரோகி யாகலாம். பல நோய்கள் பீடிக்கப்பட்டவன். எக்காலத்திலும் அலைச்சல் உள்ளவன். சாஸ்த்திர கிருத்யாதியிலும் திருத்தங்கள் தெரிந்தவன். பல நோயுள்ளவன். தீர்க்க வயதுள்ளவனும் ஆவான் என்றறியவும்.

4. நான்காம் பாதத்தில் பிறந்தவன், நற்காரியங்களில் பிரவேசிக்கப் பிரியமுள்ளவன், குள்ள சரீரன், அழகுள்ளவன். ஒரு பொருளைக் கண்ணால் பார்த்தே அதன் குறை குணங்களை அறிய வல்லவன் என்றும் அறியவும்.

## *ஜாதக சார தீபத்தில் சொல்லிய பாத பலன்*

| | |
|---|---|
| 1ம் பாதம் | பால்யத்தில் சுகமுள்ளவன். |
| 2ம் பாதம் | படித்த பண்டிதன், வித்துவான் |
| 3ம் பாதம் | நோயாளி, வியாதியுள்ளவன் |
| 4ம் பாதம் | இனிமையாகவும் மெதுவாகவும் பேசுபவன் |

**மரண கண்டிகை சுவடி எண். 1500 சொல்லும் நட்சத்திர பாதபலன்**

## **புனர்பூச நட்சத்திரம் முதல் பாதத்தின் பலன்**

**குறுகிய புருவன் மெய்யன் குறளைசேர் குதலை வாயன்
மறுகிய மனத்தன் பெண்மேல் மனமது சார நில்லான்
முறுகிய கொடுமை செய்யும் முதுகினில் சுழியுண் டென்றும்
செறிதரும் கூந்தல் பேணும் சேயினங் கிசத்தி னாளே. (75)**

*(சுவடி எண். 1500)*

இவன் சிறிய வளைந்த புருவமுள்ளவன். எப்பொழுதும் கோள்சொல்பவன். பேச்சும் திக்குவாய் போன்றிருக்கும். மனம் கோணல் உள்ளவன். பெண்களிடம் அவ்வளவாக மனம் ஈடுபடமாட்டான். செய்கையெல்லாம் கொடுமையாகவும், தாறுமாறாகவும் தான் இருக்கும். ஆனால் அழகிய நெருக்கமான தலைமயிர் உள்ள தன் மனைவியுடன் ஒற்றுமையாக இருப்பான். அவளை எவ்விதத்திலும் நன்றாக பாதுகாப்பான்.

**இந்த முதல் பாதத்துக்குரிய காலச்சக்கர தசைகள் வருமாறு**

| | |
|---|---|
| 1. மேஷச் செவ்வாய் | 7 வருடம் |
| 2. ரிஷப வெள்ளி | 16 வருடம் |
| 3. மிதுன புதன் | 9 வருடம் |
| 4. கடக சந்திரன் | 21 வருடம் |
| 5. சிங்க ஆதித்தன் | 5 வருடம் |

| | |
|---|---|
| 6. கன்னி புதன் | 9 வருடம் |
| 7. துலாம் வெள்ளி | 16 வருடம் |
| 8. விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| 9. தனுசு வியாழன் | 10 வருடம் |
| ஆக வயது | 100 வருடம் |

## புனர்பூசம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்

தெள்ளிய பொருளான் நல்லன் சேயிழை யாரைப் பேணும்
ஒள்ளிய பலவும் கற்கும் ஒண்பொருள் சார நல்லான்
பள்ளியும் பலவும் கற்கும் பாக்கிய முடைய னாகும்
வெள்ளிஅங் கிஷத்தில் வந்த விருப்புடைக் காளை தானே. (76)

(சுவடி எண். 1500)

இவன் நல்ல தனம் உள்ளவன். பல பெண்களை சகவாசம் பண்ணி அவர்களுக்குப் பாதுகாப்பாகவும் இருப்பான். நல்ல அழகன் கண்கள் உடைய அழகிய பெண்ணை மணந்து அவளால் நிறைய பணமும் பெறுவான் அல்லது அவளுக்காக பொருளீட்டுவான். பல கல்வி நிறுவனங்களில் படித்து நல்ல கல்வி, பட்டம் முதலியவை பெறுவான் என்பதாம்.

**இதற்குரிய காலச்சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| 1. மகரச்சனி | 4 வருஷம் |
| 2. கும்பச்சனி | 4 வருஷம் |
| 3. மீன வியாழன் | 10 வருஷம் |
| 4. விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| 5. துலாம் சுக்கிரன் | 16 வருஷம் |
| 6. கன்னி புதன் | 9 வருஷம் |
| 7. சிங்க மாதித்தன் | 5 வருஷம் |
| 8. மிதுனப் புதன் | 9 வருஷம் |
| 9. கடக சந்திரன் | 21 வருஷம் |
| ஆக வயது | 85 வருஷம் |

## புனர்பூசம் மூன்றாம் பாதத்தில் பிறந்தவர்கள்பலன்

**மேதையாம் அலங்கன் சால வேந்தரால் விருப்ப முண்டாம்**
**மாதுமால் உருவு மாகும் மனம்பிறக் கறிய ஒண்ணான்**
**தாதுசேர் குழலி னாள்மேல் தனம்பொருள் சார நில்லான்**
**மீதுரை உரைக்க வல்லான் மிதுனஅங் கிஷத்தி னானே. (77)**

*(சுவடி எண். 1500)*

புனர்பூசம் 3ம் பாதத்தில் பிறந்தவன் நல்ல அறிவாளி. மாலையணிந்தவன். பெரிதும் மன்னரால் அரசாங்கத்தால் மதித்து விரும்பப்படுவான். பெண்கள் மயங்கும்படியான அழகுள்ளவன். இவன் மனதைப் பிறரால் அறிய முடியாது. அழகிய நறுமணக் கூந்தல் கொண்ட மனைவியிடம் பணமோ வேறு செல்வமோ எதிர்பார்க்கமாட்டான். யாரிடமும் வாதத்தில் தோற்கமாட்டான். நல்ல வாக்குத்திறன் உள்ளவன். இவன் மிதுன அங்கிஷத்தில் பிறந்தவன் என்பதாம்.

| | |
|---|---|
| 1. ரிஷப வெள்ளி | 16 வருடம் |
| 2. மேஷச் செவ்வாய் | 7 வருடம் |
| 3. மீன வியாழன் | 10 வருடம் |
| 4. கும்பச் சனி | 4 வருடம் |
| 5. மகரச் சனி | 4 வருடம் |
| 6. தனுசு வியாழன் | 10 வருடம் |
| 7. விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| 8. மிதுன புதன் | 9 வருடம் |
| 9. துலாம் சுக்கிரன் | 16 வருடம் |
| ஆக வயது | 83 வருடம் |

## புனர்பூசம் நான்காம் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்

**தலையது தடிய னாகும் மனமது பெரிய னாகும்**
**மலையென வளர்ந்த தோளன் வடிவுளான் சால**
**கலைபல நன்று கற்கும் கடிமதக் காளை யாகும்**
**மலைதரும் வாலிபத்தில் மதியினங் கிஷத்தி னானே ! (78)**

*(சுவடி எண். 1500)*

இவன் பெரிய தலையுள்ளவன். நிறைய பண முள்ளவன். மலை என வளர்ந்த தோளுள்ளவன். அழகிய அங்கங்கள் நன்கு அமைத்த வடிவ அழகுள்ள தோற்றம் உள்ளவன். பல கலைகளும் கற்றுத்தேர்ந்தவன். நல்ல பலம் பொருந்திய காளை போன்ற பல முரட்டு வாலிப ஆண் மகன். சந்திரன் அங்கிஷத்தினான் இவன் என்பதாம்.

**இதற்குரிய காலச்சக்கர தசைகள் வருமாறு**

| | |
|---|---|
| 1. கடக சந்திரன் | 21 வருடம் |
| 2. சிங்க ஆதித்தன் | 5 வருடம் |
| 3. கன்னி புதன் | 9 வருடம் |
| 4. துலாம் சுக்கிரன் | 16 வருடம் |
| 5. விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| 6. தனுசு வியாழன் | 10 வருடம் |
| 7. கும்பச் சனி | 4 வருடம் |
| 8. மகரச் சனி | 4 வருடம் |
| 9. மீன வியாழன் | 10 வருடம் |
| ஆக வயது | 86 வருடம் |

**அடுத்து இந்த நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணின் குணங்கள்**

**வடமொழி பெண் ஜாதகப்படி :** புனர்வசு நட்சத்திரத்தில் பிறந்தவள் கர்வமில்லாதவள். கேள்வி ஞானம்

அதிகமுள்ளவள். புண்ணிய சுபாவம் உள்ளவள். (நல்லதே செய்பவள்) தருமநெறி பின்பற்றுபவள். நல்ல மனமுள்ளவள். பூஜிக்கத் தக்கவள். நல்ல கணவனுடன் வாழ்பவள் என்பதாம்.

## மதன நூலில் சொல்லிய புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணின் பலன்

கொக்கோகத்தில் இந்த நட்சத்திரம் பிசாசு தத்துவ லட்சணம் எனப்படுகிறது.

பேச்சுக்கு முன்னே பல்களைக் காட்டுவதும், பலரறிய பெருமை பேசுவதும், சொன்ன சொல் கேளாமையும், வீண் பெருமை அடித்துக்கொள்வதும், சண்டை போடுவதும், நிறைய உணவு தின்பதும், அடிப்பவளைப் போல முறைத்துப் பார்ப்பதும், மிகுதியும் பற்களைக் கடிப்பதும், பற்களைக் கடித்துக்கொண்டே பேசுவது போன்ற பழக்கமுள்ளவள். இநத குணங்கள் உள்ளவளே பூத தத்துவத்தில் பிறந்தவள் தன்மையாகும்.

## *புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவள் குணம்*

**துஞ்சிய வதனந் துய்யாள் சுகத்துடன் உண்டல் வேண்டாள்**
**வஞ்சகம் செய்யாள் ஆசை மனத்தினில் பயம தில்லாள்**
**தஞ்சமுண் டாக்கி நன்றாய்த் தலைவனை தலைமை யாக்கும்**
**புஞ்சொல்லாள் ஒன்றும் சொல்லாள் இவள்புனர் பூசத் தாளே. (79)**

எப்போதும் தூங்கி வழியும் முகமுள்ளவள். சுகம் வேண்டாள். உணவை விரும்பி உண்ணமாட்டாள். வஞ்சகம் இல்லாதவள், செய்யாதவள், மனத்தில் எந்த பயமும் இல்லாதவள். தன் தலைவனை நன்கு ஆதரித்து அவனைப் பெருந்தலைவனாக்க உழைப்பவள். கெட்ட வார்த்தை என்றும் சொல்லாதவள். இவளே புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவளின் குணங்களாகும் என்க.

**கர்ம விபாகம்**

## கர்ம விபாகம் வடமொழி நூலில் சொல்லிய புனர்பூசம் 1ம் பாதத்தில் பிறந்தவனின் பூர்வ ஜென்ம வரலாறும், சாந்தி முறையும்.

**சிவபெருமான் சொல்லுகிறார்:**

ஏ பிரியமானவளே ! மனிதர்கள் பெரும்பாலும் பிறர் பொருள், பணம் முதலியவற்றை அபகரிக்கிறார்கள். அதனால் அடுத்த பிறவியில் அனேக நோய்களுக்கும் துன்பங்களுக்கும் ஆளாகிறார்கள். பொற்கொல்லன் அல்லது பிறரிடமிருந்து பொன்னை அபகரித்தவனுக்கு அடுத்த பிறவியில் மிகவும் முரடான துராசாரனான பயங்கரம் செய்யும் குணமுள்ள புத்திரன் பிறக்கிறான். அவனுக்கு அதிக துன்பங்களும் செய்கிறான். போன ஜன்மத்தில் எவன் ஒருவன் கன்னிப் பெண்ணை அடித்துத் துன்புறுத்துகிறானோ, மறு ஜென்மத்தில் அவன் சரீரம் அவலட்சணமாகிறது. ஆண்மை குறைந்து பெண்ணை அனுபவிப்பதற்கு முன்பாகவே அவன் உறுப்பு தளர்ந்து போன வீரியம் ஸ்கலிதமாகிவிடுகிறது.

அவந்தி நகரத்திலிருந்து வடக்கில் 1 மைல் தூரத்தில் வசந்தபுரம் என்ற அழகிய நகரம் உண்டு. அங்கு பல வித மனிதர்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களில் நந்தன என்ற பெயருடைய இடையன் வாழ்ந்து வந்தான்.

அவன் மனைவி சுந்தரி, மிகவும் அழகும் புகழும் உள்ளவளாக இருந்தாள். அவளுடன் வாழ்ந்து வந்த அவன் மிகவும் கருமியாக இருந்தான். இநத இடையனுடைய வேதம் நன்கு ஓதும் அந்தண நண்பன் ஒருவன் நிறைய பணம் சம்பாதித்துச் சேர்த்து வைத்திருந்தான்.

அவன் தன் பணத்தால் எல்லோருக்கும் உதவி வந்தான். முதுமை அடைந்தபின் தான் வாழ்ந்த அவந்திபுரத்தை விட்டு வசந்த புரத்திற்கு வந்து நண்பனுடன் சேர்ந்து வாழ்ந்து

வந்தான். இடையனான நந்தனும் அவர்களைத் தன்னிடம் வைத்துக்கொண்டு பாதுகாப்பு அளித்துவந்தான். ஆனால் இந்த இடையன் அளவற்ற தங்க நாணயங்களைக் கண்டான். பேராசை வந்துவிட்டது. அந்தணனுக்குத் தெரியாமல் அவன் தங்கத்தின் பெரும்பகுதியை தன் வீட்டில் புதைத்து வைத்தான்.

தன் பணம் தங்கம் காணாமையால் அந்தணன் அழுது புலம்பி மிகவும் கஷ்டப்பட்டான். அவன் காசிக்குச் சென்று இதே வருத்தத்தினால் இறந்துபோனான்.

அந்த இடையனும் பிராமணனின் பணத்தைத் தான் செலவழித்துக்கொண்டு வந்தான். ஆயுசு முடிந்தவுடன் இறந்து போனான்.

அவனை யமதர்மன் கட்டளைப்படி நரகத்தில் தள்ளினான். அங்கே நெடுங்காலம் துன்பம் அனுபவித்து விட்டு 1000 பிறவிகள் மனிதப்பிறவியைத் தவிர மற்ற யோனிகளில் பிறந்து கஷ்டப்பட்டான்.

அதன் பின் சரயூ நதியின் வடக்கு பாகத்தில் தன் மனைவியுடன் மனித ஜென்மம் எடுத்தான். புனர்பூச நட்சத்திர முதல் பாதத்தில் பிறந்தான். நிறைய பணக்காரனாகவும், அரசாங்கப் பணியிலும் இருந்தான். போன ஜென்மத்தில் இவன் 100 பசுக்கள் தானம் பண்ணினான். இதனால் அரசனும் ஆகிவிட்டான். போன ஜென்மத்தில தங்கத்தைத் திருடிய பாவத்தால் இவனுக்குப் பிறக்கும் எல்லாபுத்திரர்களும் இறந்தனர்.

**இவன் பாவத்திற்கு சாந்தி சொல்லுகிறேன் கேட்பாயாக!**

அவன் தன் சொத்தில் 10ல் 1பங்கை தானம் செய்ய வேண்டும். காயத்ரி ஜாதவேதசே இந்த மந்திரங்களையும் ஒவ்வொரு லட்சம் ஜபம் பண்ண வேண்டும். இதில் 10ல் ஒரு பாகம் ஹோமமும் அதில் 10ல் ஒரு பங்கு மார்ச்சனம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

ஹரிவம்ச புராணத்தைப் பாராயணம் செய்யவேண்டும். அதன்பின்பு முறைப்படி சிவபூஜை செய்யவேண்டும். அதன் பின் குளம், ஏரி வெட்டுவிக்க வேண்டும். வெள்ளி நகையும், தேங்காயும் 5 விதமான ரத்தினம் இவற்றுடன் தானம் பண்ண வேண்டும். இதன் பின் இவன் 88 கழஞ்சு பொன்னாலான பிராமணன் மற்றும் அவன் பிள்ளை மாதிரி உருவம் பண்ணி 40 தோலா எடை வெள்ளியிலான 4 சதுரமான ஓமகுண்டம் அமைக்க வேண்டும். அந்த குண்டத்தின் முன்னால் பிராமணன் அவன் குமாரன் இருவர் தங்கச்சிலையை வைத்து பூஜை செய்யவேண்டும். கீழ்கண்ட மந்திரங்களைச் சொல்லி வழிபட வேண்டும்.

ஓம் நமோபகவதே வாசுதேவாய நம !

ஓம் பிரஹ்மனே நம !

ஓம் அனந்தாய நம !

ஓம் புருஷோத்தமாய நம !

ஓம் புருஷாய நம ! ஓம் சார்ங்கினே நம !

ஓம் பீதாம்பர தராய நம !

ஓம் சக்ர பாணயே நம !

ஓம் அச்சுதாய நம !

ஓம் கதா தராய நம !

மேற்கண்ட 10 நாமங்களும் அந்த பிரிதிமைகளை வைத்து பூஜை செய்யவேண்டும். தனித் தனியாகச் செய்யவேண்டும். அதன்பின் இந்திர பூஜை, விஷ்ணு பூஜை அதன்பின், அந்த தங்க விக்ரகங்களை பிராமணர்களுக்குத் தானம் பண்ணவேண்டும். மனம் உருகி முறை இடவேண்டும். கடவுளே என் பூர்வ ஜென்ம பாவத்தைப் போக்கியருள வேண்டுகிறேன் என்று வேண்டி பொன்னால் பூண் அமைத்த கொம்புகள் உள்ள பசுவைக் கன்றுடன் காராம் பசு ஒன்றைத் தானம் பண்ண வேண்டும். அதன்பின் 10 வண்ணங்கள் உள்ள பத்து பசுக்களைத் தானம் பண்ண வேண்டும். அவர்களுக்கு உணவு உட்கொள்ள வைக்க

வேண்டும். நான்கு வேதத்தில் தேர்ந்த பிராமணன் ஒருவருக்கு பூமி தானமும் பண்ணவேண்டும். இதனால் இவன் பூர்வ ஜென்ம பாவம் விலகும். அதன்பின் அவனுக்குக் குழந்தைகள் பிறக்கும். பெண் குழந்தையே பிறக்காமலும் போகலும். அவன் மனைவியின் மலட்டுத்தனம் நீங்குகிறது. எல்லாவித நன்மைகளும் உண்டாகும்.

## புனர்பூசம் 2ம் பாதத்தில் பிறந்தவன் பூர்வ ஜென்ம வரலாறும் பரிஹார முறைகளும்

**சிவபெருமான் சொல்லுகிறார்**

அவந்தி நகரத்தின் கிழக்கே ஒரு மைல் தூரத்தில் லக்ஷ்மணபுரம் என்ற நகரம் இருக்கிறது. அங்கு வசிக்கும் மக்கள் எல்லாம் வைணவர்கள். அங்கு கடமையுடன் தன் பிழைப்பை நடத்தி வந்த தாமோதரன் என்ற பொற்கொல்லன் வசித்து வந்தான். அவன் மனைவியின் பெயர் பிரபாவதி என்பதாகும். தாமோதரன் விஷ்ணு பக்தி மிகுந்தவன். சாந்த குணமுள்ளவன். நேர்மையானவனாகவும் இருந்தான். இவன் மனைவி பிரபாவதியோ சிறந்த குணமுள்ள பதிவிரதை யாவாள். தன் கணவனுக்குப் பணி செய்வதிலேயே இவள் கருத்தாய் இருந்தாள். சிறிது காலம் சென்று இவர்களுக்குக் கடமை தவறாத இரு ஆண்பிள்ளைகள் பிறந்தனர். இன்னும் சில காலம் சென்று பசுமேய்க்கும் இடைச்சி ஒருவள் அவர்களை அண்டி வசிக்கத் தொடங்கினாள். இவளுக்கு இரண்டு பிள்ளைகளும் நிறைய கால்நடைச்செல்வமும் இருந்தன. அவன் பிள்ளைகளில் ஒருவன் சூதாடி மற்றொருவன் திருடன். இருவரும் சூதாட்டத்தாலும் திருட்டுத்தொழிலாலும் நிறைய எருமைகள் பசுமாடுகள் வாங்கினர். இதனால் இடைச்சி பெரிய பணக்காரி ஆகிவிட்டாள். இதன்பின் அந்த பொற்கொல்லன் அந்த இடைச்சியைத் தன் வீட்டிலேயே அழைத்து வைத்துக் கொண்டான். அவள் சொத்தை எல்லாம் இவன் தின்று தீரத்துக்கொண்டிருந்தான். இன்னும் சில காலம் சென்று அந்த

இடைச்சியும் அவன் பிள்ளைகளும் இறந்துவிட்டனர். பொற்கொல்லன் அவளுடைய கால்நடை செல்வத்தையும், தனத்தையும், தன் பிள்ளைகளுடன் தான் அனுபவித்து வந்தான். தீர்க்காயுள் ஆவதற்கு முன்பே பொற்கொல்லன் முதலில் இறந்து போனான். இதன் பின் இவனுடைய தர்ம பத்தினியும் இறந்துபோனாள். இறந்தவுடனே இருவரும் சுவர்க்க லோகம் சென்றனர். 5 ஆயிரம் ஆண்டுகள் அங்கு சுகம் அனுபவித்தனர். புண்ணியமும் தீர்ந்தது. மீண்டும் பூவுலகில் மனிதப்பிறவி அடைந்தனர். அயோத்தி நகரத்தின் இரண்டு மைல் தள்ளி சரயூ நதியின் வடக்கரையில் உள்ள உதஹல் என்ற நகரில் இவர்கள் பிறந்தனர். ஆனால் இவர்களுக்கு சந்ததி ஏற்படவில்லை. முன்செய்த பாவம்.

**இதற்குப் பரிஹாரம் சொல்கிறேன் கேள் !**

இவன் நந்திதேவனை வணங்கவேண்டும்.

நந்திகேஸ்வர பெருமானே! பூத நாதனே! தேவதேவனே! தேவர்களுக்கு அதிபதியே என் பூஜையை ஏற்றுக்கொண்டு என் முற்பிறவி பாவத்தை எல்லாம் போக்கி அருள்வாயாக. அதன்பின் இந்திரன் முதலிய 10 திக்பாலகர்களை வழிபட வேண்டும்.

புராம மக்ருதம் பாபம் காம தேனோ சுரேஸ்வரி !

கபிலே த்வம் ஜகந்மாதாம கார்யம் ப்ரசாதய !!

என்ற சுலோகத்தால் கோமாதா கபிலையை பலமுறை சொல்லி வழிபட வேண்டும்.

(ஏகாமதேனோ! தேவர்களுக்கு ஈஸ்வரியே! கபிலையே! உலகத்திற்கு தாயாய் இருப்பவளே! நீ உன் பாரியத்தைச் சாதித்துத் தரவேண்டும். என் பூர்வ ஜன்ம பாபங்களைப் போக்கியருள வேண்டும். என்பது சுலோகத்தின் பொருள்) அதன் பின் சிவஸ்வரூபமான பிராமணனுக்கு கோதானம்

செய்யவேண்டும். பத்து வண்ணம் கலந்துள்ள பசுவைத் தானம் பண்ணவேண்டும். பல வகையான பாத்திரங்களையும் தானம் பண்ண வேண்டும். அதன்பின் நீல வர்ணமுள்ள ஒரு காளைமாட்டை அலங்கரித்து குடும்பஸ்தனான ஒரு பிராமணனுக்குத் தானம் பண்ணவேண்டும். அதன் பின் அனேக வகையான பால் பாயாசம், லட்டு போன்ற இனிப்புகளுடன் ருத்ரன் வடிவமான நூறு பிராமணர்களுக்குப் போஜனம் செய்விக்கவேண்டும். அதன் பின் அவர்களுக்கு நல்ல சந்ததி உண்டாகும்.

## இனிப் புனர்பூச நட்சத்திரம் 3ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ ஜென்மமும் சாந்தியும் வருமாறு

**சிவபெருமான் சொல்லுகிறார்**

ஏ தேவீ ! உஜ்ஜயினி நகரில் ஒரு முடிதிருத்தும் வம்சத்தினன் தன் தொழிலை விட்டுவிட்டு விலக்கப்பட்ட தொழில்களைச் செய்து வந்தான். பயிர்த்தொழில் செய்து வந்தான். அவன் மனைவி துர்தூரா என்பவள் பரபுருஷர் களுடன் கூடி சுகித்திருப்பவளாக இருந்தாள். ஒரு நாள் ஒரு பணக்கார வைசியன் ஒருவன் ஒருகோடி பொன் காசுகளுடன் வீட்டில் வந்து சேர்ந்தான்.இவன் நள்ளிரவில் அந்த வைசியனை வாளால் வெட்டிக்கொன்றான். பிறகு இந்தப் பரிகாரி கோடி பொற்காசுகளை எடுத்துக்கொண்டு வேறு ஒரு இடம் சென்று வாழ்ந்தான். ஆனால் தானம் எதுவும் செய்யவில்லை. இப்படியாக அந்தப்பொருளை முழுவதுமாக தின்று தீர்த்தான். ஒருசமயம் அவன் தன் மனைவியுடன் மகா சங்கராந்தியன்று பிரயாகையில் மாசி மாதம் வரையில் இருந்து அங்கு ஸ்னானம் பண்ணினான். தன் மனைவி சகிதம் இருந்து தினமும் கோதானம் பண்ணினான். அதன்பின் அவன் ஒரு வரண்ட கற்பாங்கான பிரதேசத்தில் இறந்து போனான். அப்பொழுது எமதூதர்கள், தர்மராஜன் கட்டளைப்படி அவனை தர்தமம் என்ற நரகத்தில் 60 ஆயிரம் வருடங்கள் வரை தண்டனைக்குட்படுத்தினார்கள். அதன்

பின் புலியாகவும், எருமையாகவும் பிறந்து மீண்டும் அவன் மனிதனாகப் பிறந்தான். இவன் பிராயகையில் தானம் பண்ணிய புண்ணியத்தால் அரச வம்சத்தில் புனர்வசு நட்சத்திரம் 3ம் பாதத்தில் பிறந்தான்.

மத்திய தேசத்தில் சரயூ நதியின் வடகரையில் இவன் பிறந்தான். புண்ணிய பலத்தால் தர்மவானாகவும், அதே சமயம் பாப பலத்தால் திருட்டுத் தொழில் செய்பவனாகவும் வாழ்ந்து வந்தான். இவனுக்குக் குழந்தைகள் பிறந்து, பிறந்து இறந்தன. பெண்கள் பிறந்தன. ஆனால் அவை எல்லாம் எப்பொழுதும் காய்ச்சலால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தன.

போன ஜன்மத்தில் தன்னை அண்டி வந்த நண்பனைக் கொன்ற பாவத்தால் இவனைக் கொடிய ரோகம் பற்றிக்கொண்டது. இதற்கு சாந்தி வருமாறு.

காயத்திரி மூல மந்திரம் 5 லட்சம் முறை ஜபம் செய்விக்க வேண்டும். அதனால் இவன் பாவங்கள் தொலையும்.

அதன் பின் ஹரிவம்ச புராணத்தை பாராயணம் பண்ணி, சண்டி பாடமும் படிக்கவேண்டும். அதன்பின் சிவபூஜையும் பண்ண வேண்டும். இதனால் இவன் பாவங்கள் நீங்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

அதன் சதுரமான ஓமகுண்டம் செய்து காயத்திரி மந்திர ஜபத்தில் 10ல் ஒரு பங்கு ஓமம் பண்ணவேண்டும். அதன்பின் 100 தோலா எடையுள்ள பொன்னாலான ஒரு வைசியன் மூர்த்தியைச் செய்து அதை ஒரு அழகான செம்பு பாத்திரத்தில் ஸ்தாபனம் பண்ணி கீழே சொல்லப்போகும் மந்திரங்களால் பூசித்து, கந்த, புஷ்பம், அட்சதைகள் தூவி அர்ச்சிக்க வேண்டும்.

நமஸ்தே தேவ தேவேச ! சங்க சக்ர கதாதார !
அக்ஞானத்தா ப்ரமாதத்தா மயாபாபம் க்ருதம் புரா !!
தத்சர்வம் க்ஷம்யதாம் தேவ சரணாகத வத்வல !!

தேவர்களுக்கெல்லாம் தேவனே ! உனக்கு நமஸ்காரம். சங்கு சக்கரம் தரித்தவனே! அக்ஞானத்தினாலும், மறதியினாலும் நான் முன்னர் செய்த பாவங்களைப் போக்கி மன்னிப்பாயாக. அதன்பின் கீழ்கண்ட நாமங்களால் அர்ச்சிக்க வேண்டும்.

ஓம் சக்ரதாராய நம! ஓம் கோவிந்தாய நம! ஓம் தாமோதராய நம! ஓம் அச்சுதாய நம! ஓம் ஹம்ஸாய நம! ஓம் பரம ஹம்சாய நம !

ஓம் ஹ்ரிஷீகேசாய நம! அச்சுதாயநம! என்று அர்ச்சித்து, சக்ரதாராய நம ! முதலிய நாமங்களால் எல்லா திக்குகளிலும் பூஜிக்க வேண்டும். 5காராம் பசுக்களை குடும்பம் பெரிய ஒரு ஏழை அந்தணனுக்குத் தானம் பண்ண வேண்டும். பின்னால் முடிந்த வரையில் பிராமணர்களுக்கு போஜனம் செய்விக்க வேண்டும். இப்படி பரிகாரம் பண்ணினால் பாவம் நீங்கும். ரோகம் தீரும். இவனுக்குப் புத்திர பாக்கியமும் ஏற்படும். அவன் மனைவியின் மலட்டுத்தனமும் நீங்கிப் போகும்.

## புனர்பூச நட்சத்திரம் 4ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ ஜென்ம வரலாறும் சாந்தியும்

**சிவபெருமான் சொல்லுகிறார்:**

உஜ்ஜயினி நகரத்தின் மேற்கே ஒரு மைல் தூரத்தில் சுந்தர நந்தனம் என்ற ஊரில் ஒரு படகோட்டும் செம்படவன் இருந்து வந்தான். இவன் பெயர் மனோகரன் என்பதாகும். இவன் மிகவும் பணக்காரனாக இருந்தான். இவன் மனைவியின் பெயர் மத்தா என்பதாகும். தன் கணவனுக்கு பதிவிரதையாக சேவை செய்து வந்தாள். இவன் மீன் விற்று நிறைய பணம் சேர்த்தான். ஆனால் தானம் எதுவும் செய்யவில்லை.

ஒரு சமயம் சந்திர கிரகணத்தின் போது 100 பொன் மதிப்புள்ள ஒரு எருதை ஒரு வேத பிராமணனுக்குத் தானம்

பண்ணினான். இதன் பின் இவன் மனைவி முதலில் இறந்து போனாள். அடுத்து இவனும் இறந்து போனான். இவன் பாபங்களுக்காக காலன் இவனை மகாகோரம் என்ற நரகத்தில் தள்ளினான். இங்கு இவன் அறுபதினாயிரம் வருஷம் தண்டனை அனுபவித்தான். அதன் பின் ஓநாய் யோனியில் பிறந்தான். பின்னால் காகமாகப் பிறந்தான். அதன்பின் மனித ஜென்மம் கிடைத்தது. இவன் இப்பொழுது பக்தனாக இருந்தும், வேசியர் தொடர்பு வைத்து சுகம் அனுபவித்து வந்தான். இவன் சங்கீதம் தெரிந்து பலவகையான ராகங்களையும் பாடும் திறமை பெற்றிருந்தான். ஒல்லியான உடலும், பேச்சாளனாகவும், ஞானியாகவும், புத்திரர்களற்ற வனாகவும் இருந்தான். இவன் மனைவி முரடியாகவும், குரூபியாகவும் இருந்தாள். மிக தடித்த உருவம் கொண்டவ ளாகவும் இருந்தாள். போன ஜென்மத்தில் மீனைப் பிடித்து உண்டதனால், மாதந்தோறும் விலக்கானாலும் கற்பம் நிற்காமல் சிதைந்து கொண்டுவந்தது. இப்பொழுது இதற்கு சாந்தி பரிகாரம் சொல்லுகிறேன். கேட்பாயாக.

இவன் முறைப்படி 3 முறை ஹரிவம்ச புராணம் ச்ரவணம் பண்ணவேண்டும். காயத்திரி மூல மந்திரம் 5 லட்சம் தடவை ஜபம் செய்விக்கவேண்டும். அதில் 10ல் ஒரு பங்கு ஹோமம் பண்ணவேண்டும். அதில் 10ல் ஒரு பங்கு தர்ப்பணமும், அதில் 10ல் ஒரு பங்கு மார்ச்சானமும் செய்ய வேண்டும். அதன் பின் 40 தோலா எடையுள்ள சூரிய பகவான் மூர்த்தி செய்யவேண்டும். அதை தங்கம் வெள்ளி நகைகளால் அலங்கரிக்கவேண்டும். முறைப்படி பூஜை செய்ய வேண்டும்.

த்வம் ஜோதி சர்வ லோகானாம் பூஜ்யஸ்தவம் சர்வ தேஹினாம் !
பூர்வ ஜென்ம க்ருதம் பாபம் ஹரமே திரிராபஹ ! !

*(எல்லா உலகுக்கும் ஒளியாக இருக்கும் சூரிய பகவானே! எல்லா உயிர்களாலும் பூஜிக்கப்படுகின்றவனே ! இருளைப் போக்குபவனாகிய நீ என் முற்பிறவியின் பாபங்களைப் போக்கி அருள்வீராக !)*

அதன் பிறகு பின் கண்ட சூரியனின் நாமங்களை அர்ச்சிக்க வேண்டும்.

ஓம் சூர்யாய நம/ஓம் சவித்ரே நம/ஓம் சாக்ஷணே நம/ ஓம் த்ரிகுணாத்ம தாரிணனே நம/ ஓம் த்வாதச கலாத்மனே நம/ ஓம் கேயூர தாரிணே நம/ ஓம் தீக்ஷணாம்சு தாரிணே நம/ ஓம் கலாகாஷ்டாதி ரூபிணே நம/ ஓம் விஷ்ணவே நம/ ஓம் பரஹ்மணே நம/ ஓம் கலாகாஷ்டாதி ரூபிணே நம/ ஓம் விஷ்ணவே நம/ ஓம் ப்ரஹ்மணே நம/ ஓம் ருத்ராய நம/ ஓம் மார்த்தாண்டாய நம/ என்ற இந்த 12 மந்திரங்களாலும் முறைப்படி மூர்த்தியை பூஜிக்கவேண்டும்.

இந்த மூர்த்தியை உத்தம பிராமணனுக்கு தானம் செய்யவேண்டும். அதனுடன் வாகனம், வஸ்திரம் பலவகையான பாத்திரங்களை படுக்கை, தனம், ,தான்யம், வேலையாள் முதலியவற்றையும், கஞ்சத்தனம் பண்ணாமல் தாராளமாகத் தானம் பண்ணவேண்டும்.

இப்படிச் செய்வதால் இவன் பூர்வ ஜென்ம பாவங்கள் நசித்துப்போகின்றன. ஞாயிற்றுக்கிழமையில் வரும் சப்தமியில் விரதம் இருக்கவேண்டும். இதனால் இவன் மலடு நீங்கி குழந்தைகள் பிறக்கும் என்பதாம்.

**இனி புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் மகாதசை வருமாறு**

| | |
|---|---|
| குரு | 16 வருடம் |
| சனி | 19 வருடம் |
| புதன் | 17 வருடம் |
| கேது | 7 வருடம் |
| சுக்கிரன் | 20 வருடம் |
| சூரியன் | 6 வருடம் |
| சந்திரன் | 10 வருடம் |
| செவ்வாய் | 7 வருடம் |
| ராகு | 18 வருடம் |
| ஆக வயது | 120 வருடம் |

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்; 3ல் வலிப்பு; 5ல் வயிற்றுவலி; 6ல் ஆயுதத்தால் தாக்கப்படல்; 11ல் விஷத்தால் பாதிப்பு; 15ல் சத்துருவால் பாதிப்பு; 25ல் வைசூரியால் பாதிப்பு; 30 ல் அரையாப்பால் பாதிப்பு; 39ல் வாதத்தால் பாதிப்பு; 40ல் ராஜாவால் பாதிப்பு; 55ல் அக்கினி மகோதரம் இவற்றால் பாதிப்பு; 68ல் சனியால் பாதிப்பு, கண்டம் இவை ஏற்படும்.

இவை கடந்தால் 80 வயது சென்று வைகாசி மாதம் அமரபட்சம், பஞ்சமி, வெள்ளிக்கிழமை, புனர்பூசம் உதித்து 5வது நாழிகையில் வீக்கம் கண்டு மரணம்.

இவன் பிறந்த லக்கினம் சூரியன் சாரமானால் கோள் சொல்பவன் தரித்திரன். சந்திரன் சார உதயமானால் குணவான். தனவான். செவ்வாய் சார உதயமானால் கோபி, பண்டிதன். புதன் சார உதயமானால், வித்தையுடையவன். குரு சார உதயமானால், புத்திரர் உள்ளவன். சுக்கிரன் சாரமானால் ஒற்றைக்கண்ணன்.சனி சார உதயமானால், கள்ளன். இராகு சார உதயமாகில், பிறர் கோள் சொல்வதை கேட்டுக் கொள்ளாதவன். கேது சாரமானால் குருடன், ஆனால் பாடவல்லவன்.

இந்த நாளில் மாதம் பிறந்தால் தானிய உற்பத்தி குறையும். பெண் திரண்டால் நன்மை. சுரம் கண்டால் 20 நாளில் குணமாகும். குணமாகாவிட்டால் நெய்யும் பாலும் கலந்து சிவபெருமான் அல்லது இந்த நட்சத்திர தேவதையை நோக்கி ஓமம் பண்ணவேண்டும். சுரம் நீங்கிப் போகும்.

### *பிறர் மதப்படி புனர்பூசம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்*

### பொதுப்பலன் – ஆண்கள்

**உடல்அமைப்பு:** அழகானவன். நீண்ட தொடைகளும், நீண்ட முகமும் உடையவன். முகத்திலோ, தலையின் பின் பாகத்திலோ அடையாளக்குறி உடையவன்.

**குணம்:** இவன் கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கையும், பக்தியும் உடையவன். மதக்கோட்பாடுகளை பின்பற்றி நடப்பவன். ஆரம்ப காலத்தில் நல்ல நடத்தை கொண்டவனாகவே இருப்பான். போகப்போக, சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு தன் நடத்தையை, நடை முறைகளை மாற்றிக்கொள்வான். ஆதலால் மற்றவர்கள் இவனை அணுகும்போது ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். எவ்வளவு பழகினாலும், இவன் உள்மனத்தில் இருப்பதை யாராலும் கண்டறிய முடியாது. தன்னிடம் உள்ளது கொஞ்சமாக இருந்தாலும், அதைக்கொண்டு திருப்தி அடைவான். சீக்கிரத்தில் உணர்ச்சி வசப்படுவான். முன்கால பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும் அப்படியே கடைபிடிப்பான்.

சட்டத்திற்குப் புறம்பான செயல்களுக்குத் துணை போகாதவன். பிறரையும் அம்மாதிரி செய்வதை தடுப்பவன். இவன் உதவி தேவையானவர்களுக்கு தன்னால் இயன்றவரை உதவுவான். பிறருக்கு தொந்தரவோ துன்பமோ தராதவன். சாதாரணமான எளிய வாழ்க்கை வாழ்பவன்.

**கல்வி, தொழில், வருமானம்:** கூட்டு வியாபாரத்தைத் தவிர மற்ற எல்லா தொழில்களிலும் பிரகாசிப்பான். அத்துடன் வெற்றியையும் அடைவான். ஆசிரியர், நடிகர், எழுத்தாளர், டாக்டர் முதலிய தொழில்களில் ஈடுபட்டால் பெயரும் புகழும் கிடைக்கும். 32 வயது வரை எந்த ஒரு பெரிய பிசினஸ்ஸிலும் ஈடுபடக்கூடாது. இவர்கள் பொருளை, செல்வத்தை சேமிக்க முடியாத நிலையில் இருப்பார்கள். ஆனால் பொதுஜன செல்வாக்கும், கௌரவமும் பெற்றவர்கள். இவர்கள் பொருள் சேர்க்க முடியாமைக்குக் காரணம், தொழிலில் நேர்மையாக இருப்பதும், வியாபார தந்திரத்தை அறியாததுமே. இவர்கள் முகத்தில் எப்போதும் அறியாத, குழந்தைத் தனமான பாவமும், வெறுப்படைந்த அதாவது சலிப்பான முகபாவமும் குடிகொண்டிருக்கும்.

**குடும்ப வாழ்க்கை:** பெற்றோர்க்கு அடங்கி ஒடுங்கி நடப்பார்கள். இவர்கள் தங்களுடைய தாய், தந்தை, ஆசிரியர்களுக்கு மரியாதை அளிப்பார்கள். இவர்களுடைய மண வாழ்க்கை நன்றாக அமையாது. இவன் தன் மனைவியை விவாகரத்து செய்துவிடுவான். அல்லது முதல் மனைவி இருக்கும்போதே இரண்டாவது கல்யாணம் செய்து கொள்வான். அவ்வாறு இவன் இரண்டாவது கல்யாணம் ஏதாவது காரணத்தால் செய்துகொள்ளாவிட்டால், இவனது முதல் மனைவி, உடல்நிலை பாதிக்கப்பட்டு அதனால் பலவித பிரச்சினைகள் உடல்நிலை சம்பந்தமாக ஏற்படும். குடும்ப உறுப்பினர்களுடன் அடிக்கடி தகராறு, மோதல்கள் உண்டாகும். இந்த எல்லா பிரச்சினைகளும் ஒன்றாக உண்டாவதால் இவன் மனநிலை பாதிக்கப்பட்டு மனநோயாளியாக மாறுவான்.

**ஆரோக்கியம்:** தீராத வியாதிகள் ஒன்றும் ஏற்படாது. ஆனால் சிறு சிறு வியாதிகள் வந்து போவது இவனுக்கு மன சஞ்சலத்தை அளிக்கும். நிறைய தண்ணீர் அருந்துவான். நல்ல செரிமான சக்தி (ஜீரண சக்தி) இவனுக்கு உண்டு.

## பொதுத்தன்மை – பெண்கள்

**உடல் அமைப்பு:** இவர்கள் சிவந்த கண்களை உடையவர்கள். சுருட்டை முடியும், எடுப்பான மூக்கும் இவர்கள் அழகை அதிகப்படுத்தும். மற்றவர்களிடம் இனிமையாகப் பேசுவார்கள்.

**குணம்:** இவர்கள் பொதுவாக சாந்த குணம் உடையவர்கள். இவர்கள் பேச்சு எதிராளிக்கு எதிராகவும், கோபமாகவும் இருக்கும். இவளுடைய விவாதத்தனமான பேச்சினால், குடும்பத்தில் உள்ளவர்களுக்கும், பக்கத்து வீட்டில் உள்ளவர்களுக்கும் இவளுக்கும் அடிக்கடி மோதல்கள் ஏற்படும். இவ்வளவு இருந்தாலும் இவர்கள் மற்றவர்களுக்கு உரிய மரியாதையை கொடுப்பார்கள். ஏழை எளியவர்களுக்கு தான தர்மம் செய்பவர்கள். இவளிடத்தில்

அனேக வேலைக்காரர்கள் வேலை செய்வார்கள். மொத்தத்தில் இவள் சௌகரியமான வசதியான வாழ்க்கையை நடத்துவாள்.

**கல்வி:** இவளுக்கு சங்கீதம் என்றால் மிகவும் பிடிக்கும். நாட்டியத்தில் நிபுணத்துவம் பெறுவாள்.

**மண வாழ்க்கை:** இவளுடைய கணவன் மிகவும் அழகானவனாக இருப்பான். புனர்பூசத்தில் பிறந்த பெண்கள், ஹஸ்த நட்சத்திரத்தில் பிறந்த ஆணை திருமணம் புரிந்தால் அவள் தன் கணவனிடமிருந்து முழு சந்தோஷத்தைப் பெறுவதுடன், நல்ல குழந்தைகளையும் பெற்றெடுப்பாள்.

**ஆரோக்கியம்:** இவளது உடல் ஆரோக்கியம் நன்றாக இராது. இவள் தன்னுடைய உடல்நிலையை சரிவர பேணிப் பாதுகாக்காததினால் அடிக்கடி நோய் வாய்ப்படுவாள். மஞ்சட்காமாலை டி.பி. நிமோனியா, கழலை, காது மற்றும் வயிற்றுத் தொந்தரவுகள் இவளை வாட்டும்.

இந்தப் புனர்பூச நட்சத்திரத்தில் பெண், "பெரியவள்" ஆனால், அவள் நல்ல உண்மையான கணவனையும், செல்வத்தையும், மக்களையும் பெறுவாள். மத நம்பிக்கை உடையவள்.

## *புனர்பூச நட்சத்திரத்தில் நின்ற சூரியனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சந்திரன் பார்த்தால்:** தன்னுடைய உறவினர்களால் துன்புறுத்தப்படுவான். சொந்த ஊரை விட்டு வெளியூரில் வசிப்பாள். ஆனால் அங்கு இவனால் அதிகமாக சம்பாதிக்க முடியாது.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் சோம்பேறியானவன். இவனுடைய எதிரிகள் இவனுக்கும் பலவித பிரச்சினைகளை உண்டாக்குவார்கள்.

**புதன் பார்த்தால்:** இவன் எந்த விதமான நற்பலன்களை அனுபவிக்க முடியாது. ஆனால் இவனுடைய மக்களுக்கு அரசாங்க ஆதரவு கிடைக்கும். இவனுடைய குழந்தைகள் பெறும் நல்வாழ்க்கையைக் கண்டு அவனுடைய உறவினர்கள் இவன் மேல் பொறாமைப்படுவார்கள்.

**குரு பார்த்தால்:** விஞ்ஞான விநோதங்களை, அற்புதங்களை அறிந்த நிபுணன். சுதந்திரமாக இருக்கவே விரும்புவான். தன் மனைவி மக்களிடம் சரியான உறவு இருக்காது.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் வெளிநாடு சென்று நிறைய செல்வம் சம்பாதிப்பான். அந்த நாட்டு அரசாங்கத்துடன் இணைந்து செயல்படுவான். அங்கு நெருப்பு அல்லது ஆயுதத்தால் உடலில் காயம்பட வாய்ப்புண்டு.

**சனி பார்த்தால்:** இவன் அனாவசியமாகவும், கண்டபடியும் பணத்தைச் செலவு செய்யும் ஊதாரி. தன்னுடைய கடமையில் கண்ணாக இருப்பான். வேலைக்காரப் பெண்களுடன் உறவு கொள்வான்.

## புனர்பூசத்தில் நின்ற சந்திரனை மற்ற கோள்கள் பார்த்தபலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் கல்வி கேள்விகளில் தேர்ந்தவன். நன்றாகப் பழகுபவன். ஆனால் ஏழை.

**செவ்வாய்ப் பார்த்தால்:** எல்லோரிடமும் அன்பாக இருப்பான். தனவான். பல விஞ்ஞானத்துறைகளிலும் நிபுணத்துவம் பெற்றவன். அறிஞன்.

**புதன் பார்த்தால்:** இவன் தான் வேலை செய்யும் அதிகாரியிடமிருந்தோ அல்லது அரசாங்கத்திடமிருந்தோ தேவையான உதவியைப் பெறுவான்.

**குரு பார்த்தால்:** நன்கு படித்தவன். புகழ் மிக்கவன். சமூகத்துக்கு நல்ல சேவை செய்பவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** வாழ்க்கைக்குத் தேவையான சகலவித வசதிகளும் படைத்தவன்.

**சனி பார்த்தால்:** வாழ்க்கை வசதிகள், செல்வம், மனைவி அற்றவன்.

## *புனர்பூசத்தில் நின்ற செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்தபலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் கற்றறிந்தவன். தைரியசாலி, செல்வம் படைத்தவன். காடு மலைகளில் சுற்றித்திரிய பிரியம் உள்ளவன்.

**சந்திரன் பார்த்தால்:** போலீஸ் அல்லது பாதுகாப்புத் துறையில் உத்தியோகம் பார்ப்பவனாக இருப்பான். அழகிய இளம்பெண்களுடன் பொழுதைக் கழிப்பவன்.

**புதன் பார்த்தால்:** கணக்கில் புலி, கவிஞனாக இருக்கலாம். சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்ற மாதிரி பொய் சொல்வதில் வல்லவன்.

**குரு பார்த்தால்:** வெளிநாட்டுக்குச் சென்று, ஆரம்பத்தில் பலவித பிரச்சினைகளை எதிர்கொள்ள நேரும். ஆனால் 40 வயதிற்குப் பிறகு நல்ல தகுதியையும் வாழ்க்கையில் இன்பத்தையும் பெறுவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** பணக்காரன். தன் பெரும்பாலான நேரத்தை பெண்களுடன் பழகுவதில் செலவழிப்பான்.

**சனி பார்த்தால்:** சோம்பேறி, ஆனால் தந்திரசாலி, காட்டில் அல்லது மரம் தொடர்புள்ள இடங்களில் வேலை செய்வான்.

## புனர்பூசத்தில் உள்ள புதனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் அரசாங்கத்திடமிருந்து அனேக உதவிகளையும், நன்மைகளையும் பெறுவான். உயர்ந்த பதவியையும், நிலையையும் அடைவான். உண்மை உள்ளவனாக இருப்பான்.

**சந்திரன் பார்த்தால்:** வாயாடியாக இருப்பாள். ஆனால் அதே சமயம் இனிமையாக, பிறர் மனம் நோகாத வண்ணம் பேசுவான். அரசாங்க உத்தியோகம் புரிபவன். கோபம் அதிகம் உள்ளவன்.

**செவ்வாய் பார்த்தால்:** வசீகரமானவன். பல கலைகளையும் அறிந்தவன். தான் வேலை செய்யும் முதலாளிக்கு விசுவாசம் உள்ளவனாக இருப்பான்.

**குரு பார்த்தால்:** பணக்காரன். அரசாங்கத்துடன் தொடர்பு உள்ளவன். அறிவாளி.

**சுக்கிரன் பார்த்தால்:** தன் முதலாளியின் பிரதிநிதியாக செயல்படுவான். எதிரிகள் இவனிடம் தோல்வி அடைவர். விவகாரங்களை தீர்த்து வைப்பதில் மன்னன்.

**சனி பார்த்தால்:** தான் செய்யும் வேலைக்குத் தகுந்த பலனை உடனடியாகப் பெறுவான். எல்லோருக்கும் மரியாதை அளிப்பான். நடுத்தர பணக்காரன்.

## புனர்பூசத்தில் நின்ற குருவை மற்ற கோள்கள் பார்த்தபலன்

**சூரியன் பார்த்தால்:** அழகிய மனைவி, நல்ல மக்கள், செல்வம், எல்லாம் பெற்றவன். உறவினர்கள் இவனிடம் மரியாதை செலுத்துவார்கள்.

**சந்திரன் பார்த்தால்:** நல்ல தன்மையான பழக்கவழக்கம் உடையவன். பல ஊர்கள் அல்லது கிராமங்கள் இவன் கண்காணிப்பில் இருக்கும். நாளடைவில் பெரும் புகழை அடைவான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் பாதுகாப்புத்துறையில் உத்தயோகம் செய்வான். ஆரம்பத்தில் பல தோல்விகளை சந்தித்தாலும் பின்னால், தான் இருக்கும் வேலைத் துறையில் உன்னத நிலையை அடைவான்.

**புதன் பார்த்தால்:** சிறந்த குடும்பவாழ்க்கை அமையும். இனிமையாகப் பேசுவான். சோதிடக்கலையில் வல்லவனாக இருப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் ஏழை, பெண்களால் துன்பம் அனுபவிப்பான். ஆனால் சுக்கிரனுடன் புதன் பார்வையும் சேர்ந்தால் இவன் பெரும் பணக்காரன் ஆவதுடன், எல்லா வகையிலும் சிறப்பைப் பெறுவான்.

**சனி பார்த்தால்:** அரசாங்கத்திடமிருந்து எல்லாவிதமான உதவிகளையும், நன்மைகளையும், லாபங்களையும் பெறுவான். அரசியல் கட்சி சம்பந்தப்பட்ட வேலைகளை ஏற்று நடத்துவான்.

### *புனர்பூசத்தில் நின்ற சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்தபலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் தேசிய பாதுகாப்புப் படையில் சேர்ந்து பெரிய பதவியை அடைவான்.

**சந்திரன் பார்த்தால்:** நல்ல உணவு வகைகளை உண்பான். நல்ல அழகிய உயர்ந்த துணி வகைகளை அணிந்து கொள்வான். கருத்த நிறமும், அடர்த்தியான தலைமுடியும் உடையவன்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் எல்லா விதங்களிலும் அதிர்ஷ்டக்காரன்.

**புதன் பார்த்தால்:** கற்றறிந்தவன். பணக்காரன்.

**குரு பார்த்தால்:** உயர்ந்த கல்வித் தகுதியைப் பெறுவான். அனேக வேலையாட்களை உடையவன். ஆனால் குடும்ப வாழ்க்கை கஷ்டங்கள் நிறைந்ததாக இருக்கும்.

**சனி பார்த்தால்:** இவன் பலராலும் ஏமாற்றப்படுவான். பிறரால் துன்புறுத்தப்பட்டு மனக்கஷ்டத்தை அடைவான். எப்போதும் துக்ககரமான நிலையில் இருப்பான்.

## *புனர்பூசத்தில் உள்ள சனியை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் வாழ்க்கையை நன்கு அனுபவிக்க முடியாது. எப்போதும் தீயவர்களுடன் கூடி இருப்பதில் ஆர்வம் உள்ளவன்.

**சந்திரன் பார்த்தால்:** கவர்ச்சியான தேகக்கட்டு உள்ளவன். அரசாங்கத்திடமிருந்து புகழையும் அதிகாரத்தையும் பெறுவான்.. பல பெண்கள் இவனுடைய அதிகாரத்தின் கீழ் இருப்பார்கள்.

**செவ்வாய் பார்த்தால்:** அறிவாளி, சாஸ்திரங்களிலும், புராண விஞ்ஞானங்களிலும் பாண்டித்யம் உடையவன்.

**புதன் பார்த்தால்:** இவன் சண்டையிடுவதில் வல்லவன். அறிவாளி. தனவந்தன்.

**குரு பார்த்தால்:** தான் வேலை செய்யும் முதலாளியை (தனியாரோ, அரசாங்கமோ) நம்பி இருப்பான். நற்குணங்கள் கொண்டவன். பணக்காரன். பொது ஜனங்களின் மரியாதைக்கு உரியவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் பொற்கொல்லனாக இருப்பான். பொன் அல்லது பொன் ஆபரணங்களை வாங்கி விற்கும் பணியில் ஈடுபட்டவனாக இருப்பான்.

## புனர்பூச நட்சத்திர முதல் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** இவன் உயர்ந்த படிப்பு படித்தவன். பணக்காரன். நல்ல சோதிடன். சூரியனுடன் புதன் சேர்ந்து இருந்தால், ஜாதகன் தன் 28வது வயது வரை நாத்திகனாக இருப்பான். அதன்பின் திடீரென ஒரு மாற்றம் ஏற்பட்டு இவனை கடவுளிடம் பக்தி உள்ளவனாக மாற்றும்.

**சந்திரன் நின்றால்:** இவன் உடல் உறுப்பில் குறை இருக்கும். அல்லது ஒரு உறுப்பு அதிகப்படியாக இருக்கும். கலவையான குண விசேஷம் கொண்டவன். இவனுக்கு 2தாய்கள் இருக்கலாம். குருவும் இந்த அமைப்பில் சேர்ந்து இருந்தால் இவனுக்கு பெண்குழந்தைகள் அதிகம் இருக்கும். லக்கினம் உத்திரட்டாதி நட்சத்திரத்தில் இருந்தால் இவன் உன்னத நிலையை அடைவான். கணக்கில் வராத செல்வம் ஏராளமாக சம்பாதிப்பான்.

சகோதரர்கள் குறைவாக இருப்பர். எதிரிகளை அடக்குவான். ஒரே சமயத்தில் பல வேலைகளை எடுத்துக் கொண்டு எல்லாவற்றையும் நல்லமுறையில் பழுதில்லாமல் செய்து முடிப்பான். அறிவாளிகளால் மரியாதைபெறுவான்.

**செவ்வாய் நின்றால்:** புதனும் சேர்ந்து இருந்தால் மருந்துகள், எண்ணெய்கள் மூலம் பணம் சம்பாதிப்பான்.

பெண்ணாக இருந்தால் கடுமையான பேச்சுக்களைப் பேசுவாள். உணர்ச்சி வசப்படுவாள். கொடூரமான குணம் உடையவள். ஊதாரித்தனமாக செலவு செய்பவள். வாயு, கபம் சம்பந்தமான நோய்கள் உள்ளவள்.

**புதன் நின்றால்:** அரசாங்க உத்தியோகத்தில் அக்கவுண்டண்டாக இருப்பான். தான் தேர்ச்சி பெற்றுள்ள துறையில் உயர்ந்த நிலையை அடைவான். புகழ்பெற்றவனாக இருப்பான். மிகுந்த செல்வம் அடைவான். விஞ்ஞானத்திலும், கலைகளிலும் தேர்ச்சி பெற்றவன். நல்ல

மனைவியையும், பணத்தையும் அடைவான். பெரியவர்களிடம் மரியாதை காட்டுவான். சந்தோஷமாக எப்போதும் இருக்கப் பிரியப்படுவான்.

**குரு நின்றால்:** உலகில் உள்ள அனைத்து சுகங்களையும் வசதிகளையும் பெற்றவன். பெரிய கௌரவங்கள் இவனை வந்தடையும். இருந்தாலும் இவனுடைய குடும்ப வாழ்க்கை இவனது மத்திய வயது வரை சோதனை நிறைந்ததாகவே இருக்கும். இவன் மனைவி இவனைத் தவறாகப் புரிந்து கொள்வாள். இவன் தன்னுடைய நேரத்தை, வேலையிலும் பொது ஜனங்களுக்காகவும் செலவிடுவதே இதன் காரணம்.

**சுக்கிரன் நின்றால்:** அழகிய ஆடை ஆபரணங்கள், நல்ல பூந்தோட்டம் உடையவன். இவன் வம்சத்தில் இவன் சிறந்தவனாக இருப்பான்.

**சனி நின்றால்:** இங்கு சனி இருப்பது நல்லதில்லை. இவன் தன் செல்வத்தை ஷேர்மார்க்கெட்டில் போடுவதன் மூலம் இழப்பான். ஒரு மெக்கானிக்காக வேலை பார்ப்பான். சில கிரிமினல் கேசுகளில் சம்பந்தபடக்கூடும். பெரும் கடன் இவனை வாட்டி வதைக்கும். துன்பகரமான சூழ்நிலையில் வாழ்வான்.

**ராகு நின்றால்:** சரியான உள்ளுணர்வு உடையவன். வழக்குகளில் சரியான தீர்ப்பை வழங்குவான். நடை முறைக்குத் தகுந்தவாறு தன்னை மாற்றிக்கொள்வான். எழுத்தாளனாகவோ பிரசுரம் செய்பவனாகவோ அல்லது ஆசிரியனாகவோ தொழில் செய்து பணம் சம்பாதிப்பான். புதனும் ராகுவுடன் சேர்ந்து கொண்டால் இவன் ஆடிட்டராகவோ அல்லது அக்கவுண்டண்டாகவோ இருப்பான்.

கைகளில் வீக்கம், வலி ஏற்பட்டு உபத்திரவம் தரும். அல்லது "பல்மனரி அபோப்ளக்ஸி" ஏற்படும்.

**கேது நின்றால்:** புதன் இவனுடன் சேர்ந்து இருந்தால் இவன் பெரும் பணக்காரன் ஆவான். நீண்ட ஆயுளை உடைய குழந்தைகளைப் பெறுவான். சிறந்த அறிவாளி. கேது மட்டும் தனித்து இருந்தால், சகோதர சகோதரிகளின் அழிவு ஏற்படும். முகத்தில் பெரிய அடையாளக்குறி இருக்கும்.

## *புனர்பூச நட்சத்திரத்தின் இரண்டாம் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** கணக்கில் விற்பன்னன். நல்ல நிர்வாகி. இவனுக்கு நல்ல உள்ளுணர்வு உண்டு. முகம் மஞ்சள் நிறமாக இருக்கும். அரசியல் அல்லது கல்வித் துறையில் மிக உயர்ந்த இடத்தைப் பெறுவான்.

**சந்திரன் நின்றால்:** பெண்களிடம் பிரியம் உள்ளவன். செக்ஸ் விஞ்ஞானத்தில் சிறந்த ஞானம் உடையவன். சூதாட்டத்தில் ஈடுபடுவான். இவன் ஒரு விஞ்ஞானி. தூதர் அல்லது ரெப்ரசன்டேடிவ்வாக இருப்பான். 3 அல்லது 4 பெண்களை மணம் புரிவான். அல்லது பல பெண்களுடன் உடல் உறவு கொண்டவனாக இருப்பான்.

**செவ்வாய் நின்றால்:** மற்றவர்கள் நல்ல நிலையில் இருப்பதைக் கண்டு பொறாமைப்படுவான். சங்கீதத்திலும் யுத்த கலையிலும் வல்லவன். ஆண் பிள்ளைகள் சொற்பம். நிலம் அல்லது கட்டிடங்கள் சம்பந்தமான வேலைகளை இவன் எடுத்துக்கொண்டு அவற்றை வாங்கியும் விற்றும் தொழில் செய்வதால் நிறைய லாபத்தை அடையமுடியும். உஷ்ணமான சீதோஷ்ணத்தில் அதனால் ஏற்படும் வியாதிகளால் கஷ்டப்படுவான்.

**புதன் நின்றால்:** பெரிய அக்கவுண்டன்ட் பதவியில் இருந்த போதிலும், வேறு பலவித பொறுப்புகளை ஒரே சமயத்தில் சமாளிக்க வேண்டியிருக்கும். நல்ல சோதிடனாக இருப்பான். மேலதிகாரிகளின் நல்ல அபிப்பிராயத்தில் இருப்பான். தன்னுடைய கடமைகளை, வேலையை

பாரபட்சமில்லாமல் செய்வான். அதனால் இவன் பயமில்லாமல் பிறரை அதிகாரம் செய்யும் நிலையில் இருப்பான். இவனுடைய வார்த்தைக்கு மதிப்பும், மரியாதையும், கனமும் உண்டு.

**குரு நின்றால்:** பிறருக்கு உதவிகரமாக இருப்பான். மதகுருவாக இருக்கலாம். பணக்காரனாகவும், புகழ் பெற்றவனாகவும் இருப்பான். தன் மனைவியிடமிருந்து அன்பையும் பாசத்தையும், அவளுடைய அற்பகுணத்தால், பெறமுடியாவிட்டாலும் தன் குழந்தைகளிடமிருந்து அவற்றைப் பெற்று சந்தோஷப்படுவான். இவன் மக்கள் அரசாங்கத்திலோ அல்லது அரசியல் கட்சியிலோ மிக உன்னத நிலையை அடைவார்கள்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் ஒரு சரியான சோம்பேறி. வாழ்க்கையில் எந்த வித உற்சாகமும் இல்லாதவன். எது வந்தாலும் வரட்டும் எனக்கு கவலை இல்லை என்ற மனப்பாங்கு உடையவன். இந்த நிலையால் மிக துன்பகரமான வாழ்க்கையை நடத்துவான்.

**சனி நின்றால்:** நல்ல பொஸிஷன் உடையவன். பணம் கொடுக்கல்-வாங்கல் தொழில் நடத்தலாம். இரும்பு சம்பந்தப்பட்ட துறை, கட்டிடங்களை உருவாக்குதல் போன்ற துறைகள் இவனது வருமானத்துக்கு ஏற்றவை.

**ராகு நின்றால்:** அழகானவன், பரந்த மனப்பான்மை கொண்டவன். விஞ்ஞான ஆராய்ச்சித்துறையில் பிரபலமாக இருப்பான். அயோடின் குறைவினால் கழளை கட்டி ஏற்படலாம். சுக்கிரனும் இவனுடன் சேர்ந்து இருந்தால் இவன் ஒரு துணி வியாபாரியாகவோ அல்லது பண புரோக்கராகவோ தொழில் நடத்தமுடியும்.

**கேது நின்றால்:** ஒரு சில உடல்நிலைக் கோளாறுகள் ஏற்படும். பணக்கார குடும்பத்தில் பிறந்தவன். இவன் தந்தை மத நம்பிக்கை உடையவன். பணக்காரன். கௌரவமான

மனிதன். ஆனால் இவன் தன் தந்தையின் துக்கத்துக்கு காரணமாக இருப்பான். இந்த பலன் சுபகிரகம். கேதுவுடன் கூடாமலோ பார்க்காமலோ இருந்தால்தான் ஏற்படும். கேது தனியாக இருந்தாலோ அல்லது பாபகிரகம் கேதுவை பார்த்தாலோ அசுப பலன் நிச்சயம் நடக்கும்.

## *புனர்பூச நட்சத்திரத்தில் மூன்றாம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இந்த சூரியனுடன் குருவும் சேர்ந்து இருப்பின் இவன் ஒரு மந்திரியாகவோ, அரசியல் வாதியாகவோ உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பான். நண்பர்களால் லாபம் உண்டாகும்.ஆசிரியர் தொழில் செய்ய வாய்ப்புண்டு.

**சந்திரன் நின்றால்:** கெட்டிக்காரனாக இருப்பான். சூதாடும் குணம் உண்டு. சங்கீதத்திலும், பெண்களிடமும் பிரியம் உள்ளவன். புதனும் உடன் இருந்தால் இவன் பணிவுடன் பேசுவான். புரியாததை விளக்கிப்புரிய வைப்பதில் கெட்டிக்காரன். புகழ்பெற்றவன். பிரபலமான புள்ளி.

இவர்களுடன் சனியும் சேர்ந்தால் இவன் தன் தாயின் இரண்டாம் திருமணத்தின் மூலம் பிறந்தவன்.

**செவ்வாய் நின்றால்:** செவ்வாய்க்கு இந்த இடம் சிறப்பானது. இவன் செல்வத்தாலும், பெண்களாலும், மதுவாலும் வாழ்த்தப்பட்டவன். மனித சமூகத்திற்கு சேவை செய்வதில் தன் வாழ்நாளை அர்ப்பணிப்பான். பொதுஜனங்கள் மத்தியில் பிரபலமானவனாக இருப்பான். பலர் இவன் கீழ் பணிபுரிவார்கள். ஏழைகளின் வாழ்வுக்காக கணிசமான தொகையை செலவழிப்பான்.

**புதன் நின்றால்:** பல ஸ்தாபனங்களில் கௌரவப் பதவியை வகிப்பான். வரவு சொற்பம். செலவு அதிகம்.

**குரு நின்றால்:** சூரியனும் குருவுடன் இருந்தால் இவன் மந்திரி அல்லது அரசியல்வாதியாக உயர்ந்த அந்தஸ்தில் இருப்பான். நண்பர்கள் மூலம் சம்பாதனை ஏற்படும். செல்வந்தனாகவும், புகழ் பெற்றவனாயும் இருப்பான்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் கற்றறிந்தவன். பணக்காரன். அரசாங்க நிறுவனத்தில உத்தியோகம் பார்ப்பான். அடிக்கடி வேலையை மாற்றுவான். இன்ஜினியராக இருக்கலாம்.

இதை புதன் பார்த்தால் ஏதேனும் ஒரு ஸ்தபானத்தின் நிருவாக வேலை கிடைக்கும்.

இதை குரு பார்த்தால், இவன் ஒரு லெக்சரராக வேலை பார்ப்பான். இவன் மனைவியும் இவன் பார்க்கும் உத்தியோகமே பார்ப்பவளாக இருப்பாள்.

**சனி நின்றால்:** இவன் ஒரு கெமிக்கல் அல்லது மெக்கானிக்கல் இன்ஜினியராக இருப்பான். மிகவும் சுறுசுறுப்பானவன். இவன் தன் துறையில் பெரிய பதவியை அடைவான். இவன் கீழ் அனேகர் பணிபுரிவர்.

**ராகு நின்றால்:** இவன் அறிவாளி. சிறந்த ஞாபக சக்தி உடையவன். இவன் பேராசைக்காரன் அல்ல. சுலபமாக கிடைப்பதைக் கொண்டு திருப்திப்படுபவன். குடும்பத்தில் கசமுச இருக்கும். அரசாங்க உத்தியோகம் பார்ப்பவன். கணக்கு, நிதி அல்லது நீதித்துறையில் தலைமைப் பதவியைப் பெறுவான். இவனுக்கு காது, தொண்டையில் கோளாறுகள் ஏற்படலாம். அல்லது பிராங்கைடிஸ் அல்லது நிமோனியா வந்து கஷ்டப்படுவான்.

**கேது நின்றால்:** இவனுக்கு 3 மனைவிகள். எப்போதும் கடனில் இருப்பான். முதல் இரண்டு மனைவிகளும் இவனுக்கு தாங்கமுடியாத கஷ்டத்தைக் கொடுப்பார்கள். இவனுக்கு ஏராளமான குழந்தைகள் பிறக்கும். இவன் மாரடைப்பினால் காலமாவான். இரண்டு அல்லது அதற்கு

மேற்பட்ட பாபகிரகங்கள் கேதுவுடன் சேர்ந்தாலும் அல்லது கேதுவைப் பார்த்தாலும் இவன் தற்கொலை செய்து கொள்வான்.

## *புனர்பூச நட்சத்திரம் நான்காம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இந்த அமைப்பில் லக்கினமும் அமைய நேர்ந்தால் இவன் ஏதாவது குணமாக்க முடியாத நோயால் கஷ்டப்படுவான். ஏழ்மை இவனை வாட்டும். தீராத கடனால் அவதிப்படுவான். லாபம் அதிகம் தராத ஏதாவது ஒரு தொழில் கடைநிலையில் வேலை செய்வான். கண் பார்வை மந்தமாகும். மலச்சிக்கல் அல்லது பிஸ்டுலா நோயால் வருந்துவான்.

**சந்திரன் நின்றால்:** இவன் கண்சிவந்து இருக்கும் செக்ஸ் விஷயத்தில் கில்லாடி. அதன் முழு டெக்னிக்கையும் அறிந்தவன். சந்திரனுடன் செவ்வாயும் இருந்தால் பணத்திற்காக தன் மனைவியையும் விற்கத் தயங்கமாட்டான்.

சந்திரனுடன் குரு கூடி இருந்தால், இவன் தன் குடும்பத்தில் தலைவனாக. முக்கியமானவனாக இருப்பான். தனவந்தன்.

**செவ்வாய் நின்றால்:** இந்த செவ்வாயை சனி பார்த்தால் பெண்ணாக இருப்பின் இவளுக்கு பலமுறை கருச்சிதைவு ஏற்படும். ஆணாக இருந்தால் இவன் வாழ்க்கையை முழுமையாக அனுபவிப்பான். ஆனாலும் வண்டி வாகனங்களிடம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இவன் வாகனங்களை ஓட்டவே கூடாது. ஏனெனில் ஆக்ஸிடென்ட் ஏற்படும் அபாயம் உள்ளது. மஞ்சட்காமாலை அல்லது ரத்த சம்பந்தமான நோய்கள் இவனை தாக்க வாய்ப்புள்ளது.

**புதன் நின்றால்:** பணமும் புகழும் பெற்றவன். ஆளும் கட்சியினருக்கு மிகவும் வேண்டியவனாக இருப்பான்.

**குரு நின்றால்:** குரு மட்டும் தனித்து இருந்தால் இவன் புகழ் படைத்தவன், ஆனால் பணமும் சந்தோஷமும் வாழ்வில் இருக்காது. இவனுடைய உறவினர்களும் நண்பர்களும் இவனைத் துன்புறுத்திக்கொண்டே இருப்பார்கள். ஆனால் இவனை அறியாதவர்கள், இவனை கடவுள் போல கருதி மரியாதை செய்வார்கள்.

இந்த குருவை புதன் பார்த்தால் இவன் ராஜபோகத்தை அனுபவிப்பான். பல கட்டிடங்களுக்கும், வீடுகளுக்கும் எஜமானனாக இருப்பான். பலரை ஆதரிப்பான். பெண்கள் இவனுடைய தயவுக்காக வளைய வருவார்கள்.

**சுக்கிரன் நின்றால்:** வாழ்க்கையின் எல்லாவித தேவைக்கேற்ற சாமான்களும், வசதியும், சுகமும் அனுபவிப்பான். ஆனந்தமான திருமண வாழ்க்கை அமையும். இவன் குழந்தைகளே இவனுக்கு சொத்து.

இந்த சுக்கிரனை புதன் அல்லது குரு பார்த்தால் மேற்சொன்ன பலன் இரட்டிப்பாகும்.

இந்த சுக்கிரனை, சனி பார்த்தாலே வாழ்க்கையில் அனுபவிப்பது கொஞ்சமாக இருக்கும். பிறருக்காக பணிபுரிய நேரும்.

**சனி நின்றால்:** முகம் சிறிதாக இருக்கும். ஆனாலும் அழகு உள்ளதாக இருக்கும். பிள்ளைப் பிராயத்தில் இவனது ஆரோக்கியம் மிகவும் சீர்கெடும். பொதுவாகத் தாயின் கவனிப்பை அனுபவிக்கமாட்டான். மூக்கின்மேல் கோபம் இருக்கும். அதனால், மனிதனால் உண்டாக்கப்பட்ட பல தீர்க்கமுடியாத பிரச்சினைகள் தோன்றும்.

**இராகு நின்றால்:** பத்திரிகை, புத்தகபிரசுரம், ஜர்னலிஸம் அல்லது நாவலாசிரியர் இந்தத் துறைகளில் வெற்றி உண்டாகும்.

புதன் ராகுவுடன் சேர்ந்திருந்தால் இவன் சோதிடத்தில் கரை கண்டவனாக விளங்குவான். கணிதத்துறைக் கல்வியில் சிறந்து விளங்குவான். அனேக பெண்களிடம் உறவு கொள்வான்.

**கேது நின்றால்:** இவன் கடுமையான உழைப்பாளி, ஆனால் அதன்பலன் மிகக்குறைவாகவே இருக்கும். தொழிலாளர், போர்டர், கடைநிலை வேலை செய்பவர்கள், ஆகியோர் இந்த அமைப்பில் பிறந்தவர்களே. இருந்த போதிலும் இவனுடைய குழந்தைகள் அறிவாளியாக, பணக்காரனாக ஆகி, பெற்றோரை வயதான காலத்தில் காப்பாற்றுவார்கள்.

***குறிப்பு:*** புனர்பூசத்தில் பிறந்தவர்கள், பூசம், ஆயில்யம், சதயம், கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்தவர்களுடன் எந்தவிதமான உறவும் தொடர்பும் கொடுக்கல், வாங்கலும் வைத்துக்கொள்ளக்கூடாது.



# அத்தியாயம் - 10

## கடக ராசி பொதுக் குணங்கள்

**சொல்லும்நற் சொல்லும் செல்லும் துக்கமும் மெலிவும் பார்க்கும்**
**வெல்லுவர் பகைவர் தம்மை விரும்பியே கருமம் செய்யும்**
**நல்லனாய் நிறைந்து வாழும் நந்நுத லாளைப் பேணும்**
**மெல்லியல் கோதாய் மாதே ! அலவனாம் ராசி யாமே. (74)**

*(சுவடி எண். 1500)*

இவன் சொல்லுவதெல்லாம் நல்ல சொற்களாகவே இருக்கும். துக்கம் பிறர் தாழ்ச்சி இவற்றை தயவுள்ள மனதுடன் பார்ப்பவன் (உதவுபவன்). பகையை வெல்லுபவன். தான் எண்ணிய செயலை முயற்சியுடன் செய்து முடிப்பான். நல்லவற்றையே சேர்த்து நிறை வாழ்வு வாழ்வான். தன் மனைவியை கரிசனையுடன் பாதுகாப்பான். மென்மையுடையவளே! அழகியே! கடகமான (நண்டு) ராசியில் பிறந்தவன், இந்த தன்மைகள் உள்ளவன் ஆவான் என்பதாம்.

அந்த இராசி 4வது ராசி, சரராசி, பெண்ராசி: பஞ்சபூதத்தில் நீரைக் குறிக்கும் முதலாவது ராசி. இதைக் குறிக்கும் உயிரினம் நண்டு. நீரிலும் நிலத்திலும் வாழ்வது. ஆபத்து வரும்போது வளையுள் நுழைந்து கொள்வது. தன் ஓட்டுக்குள் நுழைந்து கொள்வது. அதுபோலவே இந்த ராசிக்காரர்கள் நெருக்கடியில் பின்வாங்கி விடுவார்கள். தலைமறைவாகி விடுவார்கள். இதன் அதிபதி சந்திரன். ஒரு மாதத்திற்குள் 12 ராசியையும் சுற்றி 15 நாள் வளர்ந்து ஒளிபெறுபவன். உணர்ச்சி வசப்படுபவர்கள். இது ப்ரஷ்டோதய ராசியாகையால் இவர்கள் காரியங்கள் எல்லாம் தலைகீழாக இருக்கும்.

**உருவம்:** நண்டுக்கால்கள் அமைப்பு போல் உடல் பெரிதாகவும், கால், கைகள் மெல்லியதாகவும், மூட்டை

கட்டி வைத்தது போன்ற உருவம், நிறம் மாநிறச் சிவப்பு, எப்பொழுதும் முணுமுணுக்கும் உதடு. உதட்டுக்கு வெளியில் குத்திக்கொண்டு வரும் பற்கள். இதனால் முக அழகு கெடும். அங்கங்கள் ஒரு சீராக அமையாமல் குச்சிகளை ஒட்ட வைத்தது போன்ற கால் கைகள். உருண்டு வரும் நடை, வயது ஆக ஆக இவர்களுக்கு தொந்தியும் விழுந்து விடும்.

சந்திரன் ராசியாதிபதி தேய்ந்து வளர்வது போல் வாழ்க்கையில் உயர்வும், தாழ்வும் மாறி மாறி வரும். பெண்களும் அப்படிதான். அவசரம், துடிதுடிப்பு அடிக்கடி முன்கோபம் இவை உண்டு. ஆனால் பகை இராது. பின் வயதில் நிதானப்படும். பெரும்பாலும் கடக ராசிகாரர்களுக்கு முன்னோர் சொத்து கிடைக்கும்.

**காதல் கல்யாணம்:** திடீர் காதல் வசப்படல், அதில் தன்னை இழத்தல், இவர்களுக்கு சகஜம். தண்ணீர் இராசியாகையால் இந்த ஆண்கள் மனைவி இழுத்த இழுப்புக்கெல்லாம் வருவார்கள். கடகராசி பெண்களை அடையும் ஆண்கள் ஒரு வகையில் அதிர்ஷ்டக்காரர்களே. தண்ணீர், தான் உள்ள பாத்திரத்தின் உருவத்தை அடைவது போல் கணவனுக்கேற்றபடி தங்களை மாற்றி அமைத்துக் கொள்வார்கள். இந்த ராசிப் பெண்கள் பெரும் செலவாளிகள். இவர்களுக்கு எவ்வளவு பணம் இருந்தாலும் போதாது.

சரச நிலையில் இந்த ராசிப்பெண்களுக்கு நிறைய நாணம் உண்டு. (நண்டு இந்த ராசி உயிரினம்) கால் கைகளைச் சுருக்கி உள்ளுக்கிழுத்துக் கொள்வது போல், கணவன் அருகில் வரும்போது மிகவும் நாணத்தால் முகத்தைக் கைகளால் புதைத்துக்கொள்வர். இதனால் எல்லாம் மறைந்து விட்டது என்ற பேதமை அடைவர். இந்த ராசிக்காரர்கள் இளமை வேகம் கொஞ்சம் குறைய ஆரம்பிக்கும். பிற்காலத்தில் லட்சியக்காதலர். கணவன் மனைவியாவார்கள். இந்த ராசிக்கு 7வது சனியினுடையது. ஆகையால் இவர்களுக்கு வயது கடந்தே பெரும்பாலும் திருமணம் கூடும்.

**தொழில்:** பெரும் வணிகத்துறை, ஓட்டல், காப்பி தேநீர் விடுதி நடத்தல், பழக்கடை ஜெனரல் ஸ்டோர்ஸ் நடத்தல், ஆண் , பெண் நர்சுகள், பெரிய உத்தியோகஸ்தர்கள், அதிகாரிகள் இவர்களுக்கு காரியதரிசிகள், வரலாற்று ஆராய்ச்சி, தொல்பொருள் ஆராய்ச்சி நிபுணர், கப்பல் அதிகாரிகள், மெரைன் இன்ஜினீயர்கள், கீழ் நிலையில் மீனவர் தொழில், முத்துக்குளிப்பு, கிளிஞ்சல் எடுப்பவர் போன்ற தொழில்களைச் செய்பவர். ஆனால் செவ்வாய் வலுத்து, பாக்கியாதிபன் குருவும் வலுத்திருந்தால், இவர்கள் இரண்டு ராசிகள் சம்பந்தப்பட்ட தொழில்களிலும் மேலோங்கி இருப்பர்.

**பொருளாதாரம்:** பெண்கள் ஊதாரிகள், ஆண்கள் தேவலாம். பிற்காலத்தில்தான் சிக்கனத்தில் கவனம் செல்லும். சம்பாதிக்கும் நாளில் வாரி இறைத்துவிட்டு கடைசி காலத்தில் அழுபவர்களும் அல்லர். கொஞ்சம் நிதானமும், சிந்தனையும் இருந்தால் நடுவயது முதல் இவர்களுக்குச் செல்வம் சேரும்.

| | |
|---|---|
| அதிர்ஷ்ட நாட்கள் | திங்கள், வியாழன், வெள்ளி. |
| அதிர்ஷ்ட நிறம் | வெள்ளை, க்ரீம் நிறம் (வெளிர் சந்தன நிறம்) |
| அதிர்ஷ்ட எண்கள் | 2. 7, 9, 3 |
| அதிர்ஷ்ட ரத்னம் | முத்து, கனக புஷ்பராகம் |

## *கடக லக்கினமாக வந்தால் அதன் பலன்*

தனவான், களத்திர சுகவீனன், கபடமுள்ள அவமான களத்திரமுடையவன். புத்தக ஆசையுள்ளவன். குரு விசுவாசி, அற்பபுத்திரருடையவன். வேசையர் மேலெண்ண முடையவன். அதிக காமி, சதா துக்கி, பிதாவுக்கடங்காமை, *5-18-14-16-20-25-40* இந்த வயதுகளில் சுரம் பேதிகளால் பீடை. நன்மையான கிரகம் பார்க்கில் 90 வயது வரையிலிருப்பான். வியாழனும், செவ்வாயும் சுபர்கள். செவ்வாய் ஒருவனே யோககாரகன். செவ்வாயும், வியாழனும் கூடியிருந்தால்

பிரபல யோகம். சூரியன் கொல்லான். சுக்கிரன் புதன் பாபிகள். புதன், சுக்கிரன், சனி மாரகர்கள். இவர்கள் மாரகஸ்தானமாகிய 2-3-7-8-12ல் இருந்தால் மாரகத்துக்குச் சமானமாகிய கண்டத்தைக் கொடுப்பார்கள்.

## *சத்தியாசார்ய மதப்படி கடக லக்கின பலன்*

சஞ்சல புத்தியுள்ளவன். மறைவான இடத்தில் வியாதியுள்ளவன். பயந்தவன். மார்பில் மருவுள்ளவன். கபவாதப்ரக்ருதி. பிடிவாதமுள்ளவன். கெட்டவர்களுடன் சேர்க்கையுடையவன். பிறர் திரவியத்தையும் செலவழிப்பவன். கர்வி. தன் சுற்றத்தாரால் அவமதிக்கப்படுவான். அழியக்கூடிய சந்ததிகளை உடையவன். பிறதேசத்தில் க்ருர காரியங்களைச் செய்பவன். தோல்வியடைபவன். சமூகத்தில் பூஜிக்கத்தக்கவன். சுறுக்கு போடுவதாலோ கபத்தால் அல்லது எலும்பு நொறுங்கல், மனவருத்தம், வெட்டுக்காயம், உதரரோகம் முதலியவைகளாலோ மரணம் ஏற்படலாம்.

இந்த லக்கினத்திற்கு நல்லவர்கள் கெட்டவர்கள் சந்திரன், கேந்திராதிபதி மற்றும் லக்கினாதிபதி ஆனதால் சுபன். புதன் 3, 12க்குடையவன் அதிக அசுபன். சுக்கிரன் 4, 11க்குடையவன் அசுபன். செவ்வாய் 5, 10க்குடையவன் வலுத்த யோக காரகன். குரு 6, 9க்குடையவன் சுபன். 9ம் ஆதிபத்தியத்தால் 6ம் ஆதிபத்திய அசுபம் குறைவு. சனி 7, 8க்குடையவன் அசுபன். சூரியனின் 2ம் பாவாதிபதி மத்திம பலன் தருகிறான். இவன் மாரகாதிபதியானாலும் பெரும்பாலும் கொல்வதில்லை.

சுபயோகங்கள்:

1) சந்திரன் + செவ்வாய்
2) சந்திரன் + குரு
3) செவ்வாய் + குரு



## அத்தியாயம் - 11

# பூச நட்சத்திரம்

இது எட்டாவது நட்சத்திரம். ராசி மண்டலத்தில் 93பாகை. 20 முதல் 106 பாகை 40 வரையுள்ள பரப்பில் கடக ராசியில் உள்ள நட்சத்திரம்.

| | |
|---|---|
| அரபுப்பெயர் | (Anathrah) (The Nose Gan of Lion) |
| கிரேக்கப்பெயர் | கன்கிரி (Cancri) |
| சீனப்பெயர் | கியுயிஜ |
| வடமொழிப்பெயர் | புஷ்யம் |
| தமிழில் | பூசம் |

இது மூன்று நட்சத்திரங்களைக் கொண்டது. பிறை வடிவு அல்லது அம்பு வடிவாக உள்ளது. சூரிய சித்தாந்தப்படி இது ஊட்டமளிக்கும் என்ற பொருளுள்ளது. இது சுப நட்சத்திரம் எனப்படும் சித்திய நட்சத்திரம். அதாவது வளம் பெருகும் என்ற பொருளுள்ளது.

இதன் அதிதேவதை பிரகஸ்பதி. இவன் தேவ குரு. இது பரதன் (இராமாயண ராமனின் தம்பி) பிறந்த நட்சத்திரம்.

### பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் பலன்

**வாசிய துடைய னாகும் வழக்கறிந் துரைக்க வல்லான்**
**மாசிலா மணியும் பொன்னும் மகிழ்ச்சியாய் அணிய வல்லான்**
**கூசரு கோப முண்டாம் குலப்புகழ் தன்னைப் பேணும்**
**பூசையும் உடைய னாகும் பூசநாள் தோன்றி னானே! (80)**

*(சுவடி எண். 1500)*

பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் நல்ல மதிப்பு உடையவன். வழக்கறிந்து வழக்காட வல்லவன். குற்றமற்ற இரத்தினங்களும் ஆபரணங்களும் அணிந்து மகிழ்பவன்.

இவனுக்கு முரட்டுக் கோபம் வரும். குலப்பெருமை புகழ் இவற்றை நன்கு காப்பாற்றுவான். இஷ்டதேவதா பூசை தவறாமல் செய்பவன் என்பதாம்.

இன்னானுக்குத் தெய்வம் அகத்தியன் அல்லது ஆதித்தன். பூதம்-அம்பு நீர், கோத்திரம்-அகத்தியம், சாதி-வைசியன், கணம்-தெய்வகணம், யோனி-செம்புலிக் கிடா, பட்சி-அண்டங்காக்கை, மரம்-பனை மரம் அல்லது அரசு, வாரம்-திங்கள்கிழமை, ஆடிமாதம் சூனியம். இந்த நட்சத்திரம் இருபது நாழிகைக்குமேல் நாலு நாழிகை விஷம்.

வெதுப்பு தோன்றில் ஏழுநாளில் தீரும். அப்படிக் குணமாகாவிட்டால் நெய்யினால் ஓமம் பண்ணுவது. மூக்கு உயர்ந்திருக்கும். கண்ணழகியன், வித்தைக்கு நல்லவன். அடைக்கலம் தருபவன். எல்லா வைதீக கருமங்களையும் செய்வான்.

### இனி, தமிழ் ஜாதக அலங்காரம் கூறுவது

வாசியுடையவன் வழக்கை உரைத்திடுவன் வன்சூத்ர வசன உள்ளன்.
நேசமுடன் மாதாவை தந்தையைரட் சித்திடுவன் நெடிய ரூபன்
தேக ஒழுக்கம் தனவான் கண் மூக்கழகன் பசிபொறான் திகழும் சாந்தம்
பூசிமுடிக்கப் பிரியன் குணவான் பாக்கியமுளன் பூசத்தி னானே. (81)

**(இதன் பொருள்)** பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் அசுவ வாகனமுடையவன். வழக்காட வல்லவன், கள்ளன், வஞ்சகச் சொல்லுடையவன், தாய் தந்தையரை அன்பாய்க் காப்பாற்றுவான். நீண்ட உருவமுள்ளவன், அழகு ஆசாரமுள்ளவன். தனவான், அழகிய நாசி கண்களை யுடையவன், பசி பொறுக்காதவன். சுகந்த வஸ்துக்களைத் தரித்துக்கொள்வதில் பிரியமுள்ளவன். நற்குணமுடையவுன், செல்வமுடையவன்.

**யவன ஜாதகப்படி:** பூச நட்சத்திரத்தில் பிறந்தவன், அதிக காமுகன், அதிக பலமுடையவன், தைரியமில்லாதவன்.

ஸ்த்திரபுத்தியுடையவன். பரிசுத்தன், சகல சாஸ்திரங்களும் அறிந்தவன் என்பதாம்.

**பிருகத் ஜாதகம்**: ஜிதேந்திரியன். சர்வ ஜனப்பிரியன், சாஸ்த்திரார்த்த ஞானம் நன்கு தெரிந்தவன், தனவான், தரும வழி நடப்பான் ஆவான் என்பதாம்.

## பெண்கள்

**வடமொழி யவன ஜாதகப்படி**: பூச நட்சத்திரத்தில் பிறந்த பெண், உருவம் -அழகியவள். நல்ல, பலரும் போற்றும் காரியங்களையே செய்வாள். மிகச்சிறந்தவள். பாக்கியசாலி. அவள் உடல் வாளிப்பாகவும் பிறரை ஈர்க்கும்படி மிக அழகாக அமைந்திருக்கும். தேவதா பக்தி பிராமண (அந்தணர்கள்) நல்லவர்களிடத்தில் விசுவாசம் உள்ளவள். பணிவான நல்ல வீடு வாசல் உள்ளவள். அதிக சுகம் போகம் உள்ளவள். தன் உடன்பிறந்தவர்களிடத்தில் அதிக பாசம் உள்ளவள்.

**தமிழ் மதன நூல்**: கருத்துப்படி இது பிசாசு தத்துவ லட்சணமுடைய நட்சத்திரமாகும். இதற்குச் செய்யுள்.

**ஊருவும் தொடைக்கால் மற்றும் உலர்ந்துமெய் மெலிந்து தோன்றும்**
**பேரிருள் அனைய கூந்தல் பெருவிழி நீள நோக்கும்**
**பூரண குடம்போல் கொங்கை புன்சொல்லாள் பொருந்தி வாழாள்**
**பேரெழி லுடைய கோதை பேசிய பூசத் தாளே. (82)**

*(சுவடி எண். 1500)*

**(இதன் பொருள்)** இவள் ஊரு உன்னும் தொடைகளும் திரட்சியின்றி கால்களும், உலர்ந்து மெல்லியதாக இருக்கும். இருள் போன்ற கரிய அடர்த்தியான கூந்தல் உள்ளவள். நீண்ட கண்ணும் பூரண குடம் அதாவது கலசம் போன்று உருண்டு திரண்ட அழகான கொங்கைகள் (மார்பகம்) உடையவள். அற்பமான விஷயங்களையே பேசுபவள். மிகுந்த அழகு உள்ளவள். பூச நட்சத்திரத்தில் பிறந்தவள் என்பதாம்.

தனக்கோடி மாதே சூலைநிட்டூரன்
தருமவான் கோபிபுத்தி யுள்ளான்
தாழ்வறும் தீர்க்க லாயுளன் தீயன்
தருபுகழ் பூச நாண் முதற்கால்
தினத்தினிற் பிரபு சர்வவியா பகனாம்
ஜெனங்களை தாபரித் திடுவான்
செப்பிய நிதானி அன்னியர் சினேகி
சேர்ந்திடும் இரண்டதாம் பாதம்
இனத்தினுக் கினியன் புத்திமான் ஞானி
இனிய சந்தோஷியாம் நேசன்
இனத்தினால் நல்ல காரியம் முடிப்பான்
எழில்பெரும் மூன்றதாம் காலன்
மனக்குறு சண்டை யுடையவன் கோபி
வாஞ்சையான் கரியர் தனக்கே !
மகிழ்த்திடும் நாமனன் பூசநன் நாற்கால்
வரும் பலன் அறிந்துணர் வீரே ! (83)

**1. முதற் பாதம்:** பூசம் முதற்பாதத்தில் பிறந்தவன் தருமம் செய்வான். கோபமுள்ளவன். மேலான அறிவாளி, பூரண ஆயுளுள்ளவன். துன்மார்க்க குணமுள்ளவன். கெட்ட குணமும் உள்ளவனாகும்.

**2. இரண்டாம் பாதம்:** என்றும் வற்றாத செல்வ முடையவன். பிரபு, நிறைந்த மேதாவி. எக்காரியம் எடுத்தாலும் முடிப்பவன். ஜனங்களுக்குத் தொல்லை கொடுப்பவன். நிதானி, அண்டை ஜன சிநேகிதன், நற்கீர்த்தியும் வாய்ந்தவன் என்பதாம்.

**3. மூன்றாம் பாதம்:** தன் உறவினர் நண்பர்களிடம் பிரியமுடன் பழகுபவன். எக்காலமும் நீங்காத செல்வமுடையவன் என்றும் சந்தோஷத்துடன் இருப்பவன். தன் இன மக்களுக்கு நல்லவன். எடுத்த காரியத்தை எளிதில் முடிப்பவன். அனேகர் விசுவாசத்திற்குப் பாத்திரமானவன். தந்திரம், சாதுர்யம் உடையவன் என்பதாம்.

**4. நான்காம் பாதம்:** மனத்தில் எப்பொழுதும் ஏதாவது கவலை இருந்துகொண்டே இருக்கும். அடிக்கடி கோபம் கொண்டு சண்டை போடுபவன். கோபமுள்ளவன். பெண் போகப்பிரியன். விசனமும், வேறு கவலையும் இல்லாதவன் என்றும் அறிக.

## மரண கண்டிகை சுவடி எண். 1500ல் கண்ட நட்சத்திர பாதப்பலன்

### *பூசம் 1ம் பாதத்தில் பிறந்தவன்*

**சீரியன் செய்ய சாலன் நிபுணனாம் ஞாயம் செய்யும்**
**மாளிகை மனையில் வாழும் மன்னனால் மகிழ்ச்சி யுண்டாம்**
**வாளிசேர் கண்ணி அன்பன் வலக்கையில் மருவு முண்டாம்**
**காளிசேர் வடிவு பேணும் கதிரவன் காலி னானே. (84)**

பூசம் 1ம் பாதத்தில் பிறந்தவன், நீண்ட உயர்ந்த நெட்டையான உருவமுள்ளவன். நேர்மையானவன். தந்திரயுக்தி தெரிந்தவன். பெரிய அரண்மனை போன்ற வீட்டில் வசிப்பவன். அரசனால், அரசாங்கத்தால் இவனுக்கு உதவியும் மகிழ்ச்சியும் உண்டாகும். அழகிய அம்பு போன்ற கூர்மையான முனை உள்ள கண்களுடைய இளம் பெண்ணுக்கு அன்புள்ளவன், கணவன். இவன் வலக்கரத்தில் மச்சம் அல்லது மரு இருக்கும். இவன் காளி உபாசகனாக இருப்பான். சூரியன் அங்கிஷத்தில் பிறந்தவன் இவன் என்பதாம்.

### இதற்குக் காலச்சக்கர தசைகள் வருமாறு

| | |
|---|---|
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| துலாம் வெள்ளி | 16 வருடம் |
| கன்னி புதன் | 9 வருடம் |
| கடக சந்திரன் | 21 வருடம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருடம் |
| மிதுன புதன் | 9 வருடம் |

| | |
|---|---|
| ரிஷப வெள்ளி | 16 வருடம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருடம் |
| மீன வியாழன் | 10 வருடம் |
| ஆக வயது | 100 வருடம் |

### பூசம் இரண்டாம் பாத பலன்

**மந்திர மறைகள் கற்கும் மாதரால் மருகு முண்டாம்**
**சுந்தரப் பலன்கள் சொல்லும் தொழிலினில் திறமை தோன்றும்**
**அந்தரம் பொய்கள் சொல்லான் மறைபொருள் அறிந்து வாழும்**
**புத்தியிற் பெரியோ னாகும் புதனினங் கிஷத்தி னானே ! (85)**

*(சுவடி எண். 1500)*

இவன் மந்திர சாத்திரத்தை நன்கு கற்றுத்தேர்வான். பெண்களிடம் மயக்கம் கொண்டு புத்தி கலக்கம் ஏற்படும். எதிர்காலப் பலன்களைச் சொல்லும் சோதிடத் தொழிலில் வல்லவனாவான். வேத சாத்திர நுணுக்கங்களை அறிந்துள்ளவன். நல்ல சத்புத்தியுள்ள பெரியோன். இவை புதனங்கிஷத்தில் பிறந்தவன் தன்மையாம் என்க.

**இதற்குக் காலச்சக்கர தசைகள் வருமாறு**

| | |
|---|---|
| கும்பச்சனி | 4 வருடம் |
| மகரச்சனி | 4 வருடம் |
| தனுசு குரு | 10 வருடம் |
| மேஷச்செவ்வாய் | 7 வருடம் |
| ரிஷப வெள்ளி | 16 வருடம் |
| மிதுன புதன் | 9 வருடம் |
| கடகச் சந்திரன் | 21 வருஷம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| ஆக வயது | 85 வருஷம் |

### பூசம் மூன்றாம் பாத பலன்

மார்பகன் றுயர்ந்த மெய்யன் மதிமுக உருவ முண்டாம்
சீர்தரும் முத்தி - யேனும் சேய்தருங் கடுங்க ணாளன்
ஆதரவு உடையான் மண்மேல் அறிவுடன் கல்வி கற்கும்
சார்வறு மனத்த னாகும் தருப்புகர் காலி னானே ! (86)

*(சுவடி எண். 1500)*

விசாலமான அகன்ற மார்புடையவன். சந்திரன் முகமும் குளிர்ந்த உருவமும் உடையவன். உயர்ந்த முத்தியளிக்கும், ஆன்மீகப் பயிற்சி செய்வோன். உலகில் உயர்ந்த சிறப்பான கல்வி கற்பவன். இது பூசம் 3ம் பாதத்தில் பிறந்தவன் தன்மைகளாகும்.

**இதற்குக் காலச்சக்கர தசைகள்**

| | |
|---|---|
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| தனுசு வியாழன் | 10 வருஷம் |
| மகரச்சனி | 4 வருஷம் |
| கும்பச்சனி | 4 வருஷம் |
| மீன வியாழன் | 10 வருஷம் |
| மேஷச்செவ்வாய் | 7 வருஷம் |
| ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| ஆக வயது | 83 வருஷம் |

### பூசம் நான்காம் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்

வெட்டெனப் பேச வல்லான் வெகுளிமுன் னுடைய னாகும்
சிட்டரைச் சேர்ந்து வாழும் சீர்குடி யான னாகும்
பட்டய மணிந்த தோளன் படைக்கெலாம் தலைவ னாகும்
வெட்டினை யோன்று மஞ்சான் செய்யபோற் காலி னானே ! (87)

*(சுவடி எண். 1500)*

வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று வெளிப் படையாகப் பேச வல்லவன். வெகுளித்தனம் அல்லது

கோபமுள்ளவன். பெரியோரை நல்லவர்களை அண்டி வாழ்பவன். அதற்கேற்ப உயர்ந்த குடியில் பிறந்தவன். தோள்வளை என்ற ஆபரணம் அணிந்தவன். படைக்குத் தலைவனாக இருப்பவன். எந்த கஷ்டத்திற்கும் அஞ்சாதவன். இதுவே குரு அங்கிஷத்தில் பிறந்தவன் தன்மைகளாகும்.

| | |
|---|---|
| கடகச்சந்திரன் | 21 வருஷம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருஷம் |
| மிதுன புதன் | 9 வருஷம் |
| ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| மீன வியாழன் | 10 வருஷம் |
| கும்பச்சனி | 4 வருஷம் |
| தனுசு வியாழன் | 10 வருஷம் |
| ஆக வயது | 86 வருஷம் |

## இனி ஜாதகசார தீபம் சொல்லும் பூச நட்சத்திர பாதபலன்

1ம் பாதத்தில் பிறந்தவன் தீர்க்காயுள் உள்ளவன்.

2ம் பாதத்தில் பிறந்தவன் களவுத்தொழில் நடத்திப் பிழைப்பவன்.

3ம் பாதத்தில் பிறந்தவன் சுக போகம் அனுபவிப்பவன்.

4ம் பாதத்தில் பிறந்தவன் புத்திமானாவன் என்பதாம்.

## இனி பூச நட்சத்திரத்தில் வேறு செய்திகள்

1. இந்த நட்சத்திரத்தில் காரகங்கள்: கோதுமை, பார்லி, அரிசி, வெல்லம் இவற்றிற்குக் காரகம். மந்திர சாத்திர ஞானி, அரசன், நீரினால் பிழைப்பவன். யாக காரியங்கள் செய்வதில் சமர்த்தன், இவை இந்த நட்சத்திரத்தின் காரகங்களாகும்.

2. இந்த நட்சத்திராதிபதி சனி-அதிதேவதை பிரகஸ்பதி. சர்வ வசதி உண்டு. சுய முயற்சியால் முன்னேற்ற முடையவர்கள். பெற்றவர்களை ஆதரிப்பவர்கள். எதையும் புரிந்துகொள்பவர்கள். இவர்கள் கையிலும் பாதத்திலும் மச்ச ரேகை உண்டு. பூசத்தில் திரளும் பெண் வெகுபாக்கியசாலி.

இவர்கள் வாகனாதி சௌகரியங்கள் உள்ளவர்கள். நீதிமன்றங்களில் ஈடுபாடு உடையவன். நடுத்தர கல்வி உண்டு. உயர்ந்த வாழ்க்கைத்தரமுண்டு. உத்தியோகத்தைவிட வியாபாரம் அமையலாம். பூர்வீக சொத்து உண்டு. அன்யோன்ய தாம்பத்தியம் இருப்பது கடினம்.

நல்ல சம்பாத்தியம் உண்டு. இந்த நட்சத்திர அதிதேவதை பிரகஸ்பதி. இது ஏழு நட்சத்திரங்களைக் கொண்டு, அம்பு வடிவமுடையதாம். இது அலி நட்சத்திரம்.

இந்த நட்சத்திரம் சனி வியாழக் கிழமைகளில் வந்தால், வார சூன்யம் எனப்படும்.

பூச நட்சத்திரம் 1ம் பாதமானால் பிதுர்நாசம். 2ம் பாதமானால் மாதுர் நாசம். 3ம் பாதமானால் ஜாதகருக்குக் கண்டம். 4ம் பாதமானால் மாதுர் நாசம்.

3. பூச நட்சத்திரத்திற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. இது சிங்கத்தைப் போல கம்பீரமாக விளங்குவது. பொதுவாக பிறந்த நட்சத்திரத்திற்கு 3வது விபத்து தாரை, 5வது பிரத்தியக்கு தாரை, 7வது வதைக்கு தாரை, எந்த நாளில் இந்த பூசம் வந்து மேற்கண்ட நட்சத்திரங்கள் அமைந்தால் மேற்கண்ட தோஷங்கள் இராது. மாறாக நன்மையே நடக்கும். இது குல நட்சத்திரம் எனப்படும். இது வானத்தில் புடலம் பூவைப்போலத் தோன்றும். இந்த நட்சத்திரத்திற்குச் சந்திராஷ்டம தோஷம் கிடையாது. இந்த நட்சத்திரத்தில் சூரியன் சஞ்சரிக்கும் போது, அகவிலை குறையும். தானிய விளைச்சல் அதிகரிக்கும்.

நாட்டியம் இசை கற்க நன்று. சீமந்தம், நாமகரணம் உபனயனம் இவையும் செய்ய நன்று. வேதாப்பியாசம், விவசாயம், ஆபரணங்கள் வாங்கவும் நன்று. வெற்றிலை, கரும்பு இவற்றைப் பயிர் செய்யவும் நன்று. மனை முகூர்த்தம், கிருகப்பிரவேசமும் செய்யலாம். எந்தக் காரியமும் வெற்றியாகும். ஆனால் இது திருமணத்திற்கு உகந்த நாள் அல்ல. யாத்திரை செய்ய நன்று.

இதில் 20 நாழிகைக்கு மேல் 5 நாழிகை விஷகடிகை, தேவதா பிரதிஷ்டை, அன்னப்பிராசனம், வாஸ்து கர்மம் இவை செய்யலாம். மாத சூன்யம் கார்த்திகை, தசமியுடன் கூட உக்கிரயோகம் திங்கள் ஞாயிறு கூடின் எமகண்ட யோகம். ஞாயிறு, வியாழனில் சித்தயோகம். இதில் பிரசவித்தால் மரணம். மூன்றாவது அம்சம் நல்லது. நாலாவது அம்சம் பந்து மரணம். சுரம் வந்தால் 7 நாள் பீடை கண்ட முண்டாகும். இதற்குப் பதில் மாவினால் ஆட்டின் வடிவத்தில் அப்பம் செய்து வெட்டி மாமிசமாக பாவித்து நைவேத்தியம் செய்யலாம். புஷ்பம் மல்லிகை.

குளத்திலிருந்தே உண்டான தாமரையால் பூஜை. குக்குலு (குங்கிலிய) தூபம் பிரகஸ்பதே அதி என்ற பூஜா மந்திரம். சாவித்திரி மந்திரத்தால் ஓமம், சந்தனம், புஷ்பம், தயிரன்னம் இவை இதன் அதிதேவதை. பிரகஸ்பதிக்கு பலி. மூன்று நாளிலிருந்து 7 நாளில் சுகம் உண்டாகும். இதில் மாதம் பிறந்தால் விளைச்சல் உண்டு.

## கர்ம விபாகப்படி இந்த நட்சத்திரம் நான்கு பாதங்களில் பிறந்தவர்களின் பூர்வ ஜென்மம், கர்மபலன் வருமாறு

### பூசம் முதல் பாதத்தில் பிறந்தவன் வரலாறு

**சிவபெருமான் சொல்லுகிறார்:** பாபம் செய்வதால் நோய்கள் உண்டாகின்றன. பாபங்கள் செய்ததனால்தான் சந்ததி ஏற்படுவது இல்லை. பாபங்களினால் தான் வறுமை ஏற்படுகிறது. சரீரம் படைத்தவர்கள் இந்தப் பிறவியில் புண்ணியம், பாவம் இரண்டையும் அனுபவிக்க வேண்டியுள்ளது. புண்ணியத்தினால் கல்வி வரும், புத்திர செல்வம் ஏற்படும். புண்ணியத்தினால் தான் செல்வம் ஏற்படுகிறது. இப்பொழுது பூச நட்சத்திர முதல் பாதத்தில் பிறந்தவன் கர்ம பலனைக் கூறுகிறேன்.

மத்திய தேசத்தில் ஹம்ச கேது என்ற பணக்கார இடையன் ஒருவன் இருந்தான். அவன் மனைவியின் பெயர் கேகயி என்பதாம்.

இவனுக்கு நிறைய எருமைகள், பசுக்கள் உண்டு. தர்ம காரியத்தில் ஈடுபாடு உடையவனாக இருந்தான். எருமை, பசு இவற்றை விற்று வாங்கிப் பிழைத்து வந்தான். இவன் தயிர், நெய் முதலியவற்றை விற்று அதிகப்பணம் சம்பாதித்தான். பெரிய பணக்காரனுமாவான். இவனுக்கு ஒரு பணக்கார வைசியன் நண்பனானான். அவனுடைய மாணிக்கம், ரத்தினம், வைரம் இவற்றின் மேல் பேராசை ஏற்பட்டது.

ஒருநாள் இவன் தூங்கிக்கொண்டிருக்கும்போது தன் கோடாலியால் அவனை வெட்டிக்கொன்றான். தினம் தன் பொருளில் ஆறில் ஒரு பாகத்தை செலவழித்து வந்தான். சிலகாலம் அவன் வாழ்ந்தான். அதன்பின் இறந்தான்.

இவனை எமதூதர்கள் கொடிய நரகத்தில் தள்ளினார்கள். அறுபதினாயிரம் வருடம் நரகவேதனை அனுபவித்தான். அதன்பின் ஒரு காட்டில் இவன் அரக்கனாகப் பிறந்தான். மனிதப்பிறவி ஏற்பட்டது. இவன் பணக்காரனாகவும் இருந்தான். ஆனால் அவன் மனைவி இவனுடைய பாப கர்மத்தால் மலடியானாள். இவளுக்கு குழந்தைகள் பிறக்கவில்லை. பெண் குழந்தைகள் தான் பிறந்தன. பூர்வ ஜென்ம பாபத்தால் இவனுக்குப் பல வகையான நோய்கள் தோன்றின.

இப்பொழுது இதற்குச் சாந்தி சொல்லுகிறேன். தேவீ, கேட்பாயாக ! முதலில் இவன் சொத்தில் 6ல் ஒரு பங்கைத் தானம் செய்யவேண்டும். (பிராமணனுக்கு) இதன் பின் ஜாதவேதசே என்ற இரு மந்திரங்களையும் 2 லட்சம் முறை ஜபம் செய்யவேண்டும்.

பிறகு போன ஜென்ம வைசியனின் சிலை ஒன்று 48தோலா எடையுள்ள பொன்னாலான மூர்த்தியை முறைப்படி செய்யவேண்டும். அதன் பின்னால் முன் சொன்ன மந்திரங்களால் அந்த சிலையைப் பூசிக்கவேண்டும். அதன்பின் அதனை ஒரு உத்தம பிராமணனுக்குத் தானம் பண்ணவேண்டும். அதன்பின் இவன் பாபம் நீங்கி இவனுக்குப் புத்திரப்ராப்தியும் ஏற்படுகிறது.

**இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் வரலாறு**

***சிவபெருமான் கூறுகிறார்***: பாவம் மற்றும் புண்ணிய பலனை மனுஷ்யனாகப் பிறந்தவன் அனுபவிக்க வேண்டியுள்ளது. புண்ணிய பலன் அனுபவிக்கும்போது அவன் தேவப்பிறவி, பாபபலன் அனுபவிக்கும்போது பல்வேறு யோனிகளில் தள்ளப்பட்டு மீண்டும், மனிதயோனியை அடைகிறான்.

இப்பொழுது பூச நட்சத்திரம் இரண்டாடம் பாதத்தில் பிறந்தவன் கர்மபலனைக் கேட்பாயாக.

அத்தினாபுரத்தில் ஒரு சிற்பி வாழ்ந்து வந்தான். இவன் பெயர் ஹேமநாத் என்பதாகும். இவனுக்கு இரண்டு மனைவிகள் உண்டு.

எப்பொழுதும் தன் பணியிலேயே குறியாக இருந்து இவன் ஒரு சமயம் காசியின் மேற்கு பகுதியில் இருந்த அரசமரங்கள் பலவற்றை வெட்டி அழித்தான்.

சில காலம் சென்று அவன் இறந்தான். அரச மரங்களை அழித்த பாவத்தால் 60 ஆயிரம் ஆண்டுகள் அவன் நரகத்தில் கஷ்டம் அனுபவித்தான். அதன்பின் இவன் தன் இரு மனைவிகளுடன் பறவை மற்றும் கிருமி யோனியிலும் பிறந்தான். அதன் பின் மத்திய தேசத்தில் நல்ல குலத்தில் உத்தம மனிதனாகப் பிறந்தான். போன ஜன்மத்தில் அரசமரங்களை அழித்த பாபத்தால் இப்பிறவியில் இவனுக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை. பெண் பிள்ளைகள் தான் பிறந்தன. ஆண் சந்ததி இல்லை. இவன் மனைவிக்கு தீராத நோய் ஏற்பட்டது. இவன் சரீரத்தில் தீராத வலி இருந்தது. இதற்கு சாந்தி சொல்கிறேன் கேட்பாயாக.

முதலில் தன் வீட்டில் உள்ள பணம் பண்டம் இவற்றில் 4ல் ஒரு பாகத்தைத் தானம் செய்யவேண்டும். (அந்தணர்களுக்கு) அதன் காயத்திரி மந்திரம் ஒரு லட்சம்

முறை ஜெபம் செய்விக்கவேண்டும். அப்புறம் 20 தோலா எடையுள்ள தங்கத்தாலான ஒரு அரசமர வடிவம் அமைக்க வேண்டும். அதை முறைப்படி பூசிக்கவேண்டும். அதை அந்தணர்களுக்குத் தானம் பண்ண வேண்டும். அதன் பின் 5பசுக்களையும் அலங்கரிக்கப்பட்ட எருது ஒன்றையும், அதே போல் தானம் பண்ணவேண்டும். அதன் 5வகை ரத்தினங்களை தேங்காயுடன் வெள்ளைத் துணியில் முடிந்து கங்கை ஆற்றுத் தண்ணீரில் உட்கார்ந்து கொண்டு அதே போல் தானம் பண்ண வேண்டும்.

இதனால் அவன் வியாதியெல்லாம் தீர்ந்து அவனுக்குப் புத்திர பாக்கியம் ஏற்படும் என்பதில் சந்தேகம் இல்லை.

## மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் வரலாறு

**சிவபெருமான் சொல்லுகிறார்:** தேவி ! மத்திய தேசத்தில் ஹேமசுரன் என்ற விஷ்ணு பக்தியுள்ள ஒரு கருமான் இருந்து வந்தான். அவனுக்கு பிரபாவதி என்ற பெயருடைய பதிவிரதையான மனைவியும் இருந்தாள். கருமான் மிகவும் பேராசை கொண்டவன். நிறைய பணம் சேர்த்தான். அதே ஊரில் ஒரு கிரேக்க நாட்டு பணக்காரன் இருந்தான். இந்த கருமான் இளமையிலிருந்தே ஒரு பசுவை வளர்த்து வந்தான். ஒரு நாள் அந்தப் பசு ஆழமான சேற்றில் சிக்கிக்கொண்டது. இது தெரிந்தும் கருமான் அந்த பசுவை விடுவித்து இட்டுச் செல்ல வரவில்லை. அந்த பசு அன்றிரவே இறந்து போயிற்று. பலகாலம் சென்று கருமான் இறந்தான். அவனுடன் அவன் மனைவி உடன்கட்டை ஏறி தன் உயிரையும் மாய்த்துக் கொண்டாள். இதனால் இருவரும் சுவர்க்கம் அடைந்தனர். புண்ணியம் தீர்ந்த பிறகு நல்ல குலத்தில் பணக்கார இல்லத்தில் மீண்டும் மனிதனாகப் பிறந்தான். போன ஜென்மத்தில் சேற்றில் சிக்கிய பசுவை உடனே காப்பாற்றாமல் போன பாவத்தினால் இவனுக்கு இந்த ஜென்மத்தில் இதுவரை குழந்தை இல்லை. ஆனால் பெண் குழந்தையே பிறந்தன. அதுவும் அற்ப வயதில் இறந்துவிட்டது.

**இதற்கு சாந்தி வருமாறு:** இதற்காகப் பலர் செல்லும் பாதையில், மக்கள் உதவியாகக் கிணறு ஒன்று வெட்ட வேண்டும். அங்கங்கே துறவுகளும் வெட்ட வேண்டும். தன் எடைக்கு எடை ஒரு ஜோடி பசுவை நெய் நிரம்பிய கலசத்துடன் தானம் பண்ணவேண்டும். ஒரு லட்சம் காயத்திரி மந்திரம் ஜபம் செய்விக்கவேண்டும். பிறகு எள்ளும் அரிசியும் கலந்து ஓமம் பண்ண வேண்டும். அதன் பின் பிராமணர்களுக்கு போஜனம் பண்ணி வைக்கவேண்டும். இதனால் இவன் பாவம் போகும். இவன் மனைவியின் மலட்டுத்தனம் நீங்கி குழந்தைகளும் பிறக்கும்.

## பூசத்தில் நான்காம் பாதத்தில் பிறந்தவன் வரலாறு

**சிவபெருமான் சொல்லுகிறார்:** தேவி ! அயோத்தியா நகரத்திலிருந்து கிழக்கு திக்கில் 14 மைல் தொலைவில் ஒரு கிராமம் உண்டு. அங்கு பைடும்பர் என்ற பெயருள்ள தோட்டக்காரன் ஒருவன் இருந்தான். அவனுக்கு விஷ்ணு பக்தியும், கணவன் சேவையும் செய்யும் பதிவிரதையான சித்ரா என்ற மனைவி இருந்தாள். இந்த தோட்டக்காரன் தினமும் தன் குருவுக்குப் பணிவிடை செய்வதில் கருத்தாய் இருந்தான். அவன் ஒரு வெள்ளைப் பூனையை வளர்ந்து வந்தான். அது கர்ப்பமாயிருக்கும்போது அந்த பூனை அந்தத் தோட்டக்காரன் கையால் இறந்துவிட்டது. அதன் வயிற்றில் இருந்த 4 குட்டிகளும் இறந்துவிட்டன. அதன்பின் வெகுகாலம் கழித்து தசமா நதி தீரத்தில் உள்ள க்ஷேத்திரத்தில் அவன் இறந்து போனான்.

விஷ்ணு பக்தியினாலும், புண்ணியதீர்த்த க்ஷேத்திரத்தில் உயிர் நீத்ததாலும் அவனுக்கு சுவர்க்கலோகம் கிடைத்தது. அங்கே பலவகை போகங்களை அனுபவித்தான். 60 ஆயிரம் வருஷம் சுவர்க்க போகம் அனுபவித்து இதன் பின் புண்ணியம் தீர்ந்ததால் மீண்டும் இவ்வுலகில் எருதாகப் பிறந்தான்.அதன்பின் தன தான்யாதிகள் நிறைந்த குடும்பத்தில் மனிதனாகப் பிறந்தான். விஷ்ணு பக்தனாக இருந்ததால்

அழகனாக இருந்தான். ஆனால் சந்ததி இல்லாதவனாக இருந்தான். போன ஜன்மத்தில் கற்பமுள்ள பூனையைக் கொன்ற பாவத்தால் இப்பொழுது இவன் மனைவி கற்பம் வரும் போதெல்லாம் அபார்ஷன் ஏற்பட்டுக்கொண்டே இருந்தது.

**இதற்கு சாந்தி**: வீட்டில் உள்ள பணத்தில் பாதியை பிராமணனுக்குத் தானம் பண்ண வேண்டும். அதன் பின் சிவபூஜை செய்யவேண்டும். பிறகு 400 தோலா எடையுள்ள அழகான பூனையின் உருவம் செய்யவேண்டும். அதையும் பூசித்து பிராமணனுக்குத் தானம் பண்ணவேண்டும். அதன் த்ரயம்பக மந்திரம் ஒரு லட்சம் தடவை ஜபம் பண்ண வேண்டும். இதனால் இவன் போன ஜென்ம பாவம் தொலைகிறது. அதனால் அவனுக்கு நோய் நீங்கி, மனைவியின் நோயும் நீங்கி, அவளுக்குப் புத்திர பிராப்தி உண்டாகும். இதில் ஐயமில்லை.

**பூச நட்சத்திரத்தின் விம்சோத்தரி தசாபுத்தி பலன்**

| | |
|---|---|
| சனி தசை | 19 வருடம் |
| புதன் தசை | 17 வருடம் |
| கேது தசை | 7 வருடம் |
| சுக்கிர தசை | 20 வருடம் |
| சூரிய தசை | 6 வருடம் |
| சந்திர தசை | 10 வருடம் |
| செவ்வாய் தசை | 7 வருடம் |
| ராகு தசை | 18 வருடம் |
| குரு தசை | 16 வருடம் |
| ஆக வயது | 120 வருடம் |

இவன் பிறந்த ஆண்டில் கண்டம், 3ல் கருவியால், 5 விஷத்தால், 7ல் வைசூரியால், 12ல் கிரந்தி நோயால், 16ல் சுரத்தால், 25ல் சத்துருவால், 35ல் கள்ளரால், 46ல் வாதத்தால், 59ல் நெருப்பால், 65ல் அரசு படையால், 66 வயதில்

ஆயுதத்தால், 76 வயதில் வெதுப்பும், வயிற்றுவலியும் காணும், 86 வயசு சென்று வைகாசி மாதம் பூர்வ பட்சத்து ஏகாதசி திதியும் வியாழக்கிழமை பூச நாளில் 20 நாழிகை சென்றபின் பெருவயிற்றால் இறைந்து இறைவனடி சேர்வான்.

### இவன் பிறந்த லக்கினம்

*ஆதித்தன் சாரமாகில் சிவந்த மேனியுடையவன்.*

*சந்திரன் சாரமாகில் தனவான் மந்திரியாவான்.*

*புதன் சாரமாகில் வித்துவான் ஆவான்.*

*வியாழன் சாரமாகில் மந்திரியாவான்.*

*வெள்ளி சாரமாகில் வாகனமுடையவன்.*

*சனி சாரமாகில் கலகப்பிரியன்.*

*ராகு சாரமாகில் கைராசிக்காரன்.*

*கேது சாரமாகில் இரப்பவன் அல்லது விஷ வைத்தியன் ஆவான்.*

*பூச நட்சத்திரப் பலன் முற்றிற்று*

## *பிறர் மதப்படி பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்*

### பொதுப்பலன் - ஆண்கள்

**உடல் அமைப்பு:** பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் உடல்வாகைப் பற்றி விவரிப்பதோ அல்லது விளக்குவதோ மிகவும் கஷ்டமான காரியம். ஏனெனில் பல பூச நட்சத்திரக்காரர்களை ஆராய்ந்ததில் உருவம், உயரம், நிறம் எல்லாம் வேறுபடுகின்றது. ஆனால் அடையாளக்குறியாக முகத்தில் மச்சமோ, வடுவோ காணப்படுகிறது. பூச நட்சத்திரக்காரர்களுக்கு என்று தனிப்பட்ட உருவ அமைப்பு குறிப்பாக இல்லை.

**குண நலன்கள்:** பலகீனமான இருதயத்தை உடையவன். எந்த ஒரு விஷயத்திலும் ஒரு தீர்மானமான முடிவு எடுக்க மிகவும் கஷ்டப்படுவான். எதற்கெடுத்தாலும் சந்தேகப்படும் குணமே இதற்கு முக்கிய காரணம்.

பிறருடன் பழகுவதில் திறமை மிக்கவன். தன் சுய லாபத்துக்காகவே இவ்வாறு பழகுவான். இதனால் அவன் தன் மனசாட்சிக்கு விரோதமாக பழகுவதாகவும் அவனுடைய செய்கை போலித்தனமானது என்பதையும் நாம் அறிய முடிகிறது. அதாவது இவன் வெளியில் ஒரு நோக்கத்தோடு பழகும்போது, இவனுடைய உள்நோக்கம் அதற்கு எதிரானதாக இருக்கும்.

பிறருக்கு மரியாதை கொடுப்பது என்பது இவன் அறியாதது. ஆனால் அதேசமயம், பிறர் இவனுக்கு மரியாதை தரவேண்டும் என்று எதிர்பார்ப்பான். பிறர் பாராட்டைக் கேட்டு மனம் தளர்வதும் இவனுடைய குணாதிசயத்தில் ஒன்று. பிறர் அன்பையும், பாசத்தையும் தான் பெறுவதில் உண்டான மகிழ்ச்சியும் ஆர்வமும், இவன் மற்றவரிடத்தில் அன்பை செலுத்துவதில் இருக்காது. எவரிடத்திலும் ஆழ்ந்த பிடிப்பு ஏற்படும்படி நடந்துகொள்ளமாட்டான்.

இவனுடைய பிறந்த சுதந்திர உணர்வு இவன் வாழ்க்கை முழுவதும் இவனை தீயவர் சேர்க்கைக்கு இட்டுச் செல்லும். ஆதலால் இவன் தன் நண்பர்களிடம் கவனாகப் பழகவேண்டும். இவனுக்கு நல்ல உடுப்புகளை அணிய கொள்ளைப்பிரியம் உண்டு.

**கல்வி, உத்தியோகம்:** தனக்கு வந்த வேலையை செய்ய முடியுமா, செய்யத் தகுதி உண்டா என்றெல்லாம் ஆராயாமல் எந்த வேலையையும் செய்யத் தொடங்கிவிடுவான். இதனால் இவன் செய்யும் எந்த வேலையும் தோல்வியிலேயே முடியும். இனிமையான வார்த்தைகள் இவனுடைய வெளிப்பாடே தவிர சொன்னபடி செய்யமாட்டான். ஆனால் சில வேலைகளில் இவன் சமர்த்தன். அதனால் இவன் தனக்கு

எந்த வேலையை நன்கு செய்யத் தெரியுமோ, எந்தத் தொழிலில் தனக்கு திறமை உண்டோ அந்தத் துறையில் வேலையை தேர்ந்தெடுத்து செய்தால் பிரகாசிக்கக் கூடிய வாய்ப்பு உண்டு. இப்படி இவன் செய்தால், உலகில் உள்ள எந்த சக்தியும் வெற்றி வாய்ப்பைத் தடுக்கமுடியாது. இவன் சுலபமாகத் தோல்வியைக் கண்டு துவளமாட்டான். பல தடைகளைக் கடந்து முன்னேறுவான். இது இவனிடம் பாராட்டப்படவேண்டிய குணத்தில் ஒன்று.

இவனுடைய அடிப்படைக் கல்வி குறைவுதான். இருந்தாலும்,விவாதத்தின் போது தன்னுடைய அசாதாரண மான அறிவாற்றலைக் காட்டி பிறரை திகைக்கவைப்பான். எந்த விஷயமானாலும் பரவாயில்லை. எல்லாம் அத்துபடி. மற்றொரு பாராட்டத்தக்க குணம் என்னவென்றால், இவன் சட்டத்துக்குப் புறம்பான எந்த யோசனையும், செயல் பாட்டையும், வேலையையும், திட்டத்தையும், பலமாக தடுத்து நிறுத்துவான். தன்னுடைய நண்பர்கள் ஆனாலும் சரி, உறவினர்கள் அல்லது எதிரிகள் ஆனாலும் சரி, இவர்கள் தவறான செயல்களைச் செய்தால் தண்டிக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் உடையவன். தன்னிடம் ஒப்படைக்கப்படும் எந்த வேலையையும் உண்மையுடனும், தீர்மானத்துடனும் செய்வான்.

இவனுடைய சுதந்திரமான மனப்போக்கினால் நன்றாக செய்து முடிக்கவேண்டும் என்ற உறுதியுடன் தொடங்கப் பட்ட எந்த வேலையும் கடைசியில் ஒழுங்காக செய்து முடிக்கப்படுவதில்லை. இவனுடைய திறமை பலதிறப் பட்டவை. ஆனால் இவன் வெற்றி பெறுவது என்பது கலை, வியாபாரம், தியேட்டர் ஆகிய துறைகளில்தான்.

பலரை ஆராய்ந்ததில் பூச நட்சத்திரக்காரர்கள் 15-16 வயது வரை ஏழ்மையில் வாடி இதன் பிறகு 32 வயது வரையில் நல்லதும் கெட்டதும் கலந்த வாழ்க்கையை அனுபவிப்பவர் களாக இருக்கிறார்கள். இதில் நன்மை குறைவாகவும், தீமை

அதிகமாகவும் இருக்கிறது. 33 ஆவது வயதிலிருந்து குறிப்பிடத்தக்கவாறு, பொருளாதாரம், சமூக வாழ்க்கை, ஆரோக்கியம், இவற்றில் முன்னேற்றம். நன்றாக வாழ்கிறார்கள். இதில் பூச நட்சத்திரம் முதல் பாதத்தில் பிறந்தவர்கள் இருந்தால் இவர்களுக்கு இடையில் மரணம் சம்பவிக்க ஏதுவுண்டு.

பெரும்பாலான பூச நட்சத்திரக்காரர்கள் பணம் சம்பாதிப்பதற்காகத் தன் ஊர், தன் குடும்பத்தை விட்டு வெளியூரில் பல வருடங்கள் தங்கிவிடுவார்கள். இவர்கள், பிரயாணம் அதிகம் செய்யும் வேலைகளையே ஏற்றுக்கொள்கிறார்கள்.

**குடும்ப வாழ்க்கை:** இவனது குடும்ப வட்டத்திற்குள் ஏராளமான பிரச்சினைகள் இருக்கும். இளம்பிராயத்தில் பிறரை அண்டி வாழ்ந்ததால், பிற்காலத்தில் இவன் வளர்ந்ததும் இவனிடம் சுதந்திர உணர்வு தலைதூக்கி நிற்கும்.

இவன் தன் மனைவி மக்களுடன் கூடி வாழ நினைத்தாலும், சூழ்நிலை சந்தர்ப்பத்தின் கட்டாயத்தினால், தன் மனைவி மக்களைப் பிரிந்து பல நாட்கள் சாமர்த்தியசாலியாக குடும்பத்தை நடத்தவேண்டும் என்றும், பழங்கால சம்பிரதாயங்களை அனுசரிப்பவளாக இருக்க வேண்டும். சரியாகவும் நம்பிக்கை உள்ளவராக நடந்து கொள்ளவேண்டும் என்றும் எதிர்ப்பார்ப்பான். ஜாதகப் பொருத்தம் பாராமல் இவனுடைய திருமணம் நடந்தால் நன்மைகள் ஏற்படும் போது, கண்டு கொள்ளாமல் இருந்துவிட்டு தீமைகள் ஏற்படும்போது தன் மனைவியால் தான் எல்லாம் வந்தது என்று மனைவிமேல் சந்தேகப்படுவான். இத்தகையை நிலையை ஜாதகப் பொருத்தம் பார்த்து திருமணம் செய்வதால் தடுக்கலாம். இவன் தன் பெற்றோர்களிடம் ஒட்டுதலாக இருப்பான்.

**ஆரோக்கியம்:** தன்னுடைய 15ஆவது வயது வரை இவன் ஆரோக்கியம் நன்றாக இருக்காது. மூத்திரப்பையில் கற்கள், காஸ்ட்ரிக் அல்சர், மஞ்சட்காமாலை, இருமல், எக்ஸிமா, கான்சர் ஆகியவை இவனை வந்தடையக் கூடிய வியாதிகளாகும்.

## பொதுப்பலன் - பெண்கள்

**உருவ அமைப்பு:** குட்டையான உருவம். மாநிறம் அளவான உடலும், முகமும் கொண்ட அழகியவள்.

**குணம்:** இவள் நிம்மதியாக இருக்கமுடியாது. அமைதியான மனமும் சினேகபாவமும் கொண்டவள். பெரியவர்களிடம் பணிவாக நடந்து கொள்வாள். ஆனால் எல்லோரும் இவளைக் கடுமையாக நடத்துவார்கள். எல்லோரிடமும் உண்மையுடனும் ஆசையுடனும் நடந்துகொள்வாள். ஆனால் சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி இவள் குணம் மாறும். கடவுளுக்கு பயப்படுவாள். மதக்கோட்பாடுகளை அனுசரிப்பாள். பெரியவர்களுக்கு மரியாதை காட்டுவாள். பழமையான பழக்க வழக்கங்களில் நம்பிக்கை உடையவள். எந்த வேலையையும் ஒரு வரைமுறையுடன் சிஸ்டமாடிக்காகச் செய்து முடிப்பாள்.

**கல்வி, உத்தியோகம்:** நிலம், கட்டிடங்கள் மூலமாக வருமானம் வரும். நம்பிக்கையும், நாணயமும் தேவைப்படும் இடங்களில் வேலைபார்ப்பாள். அதாவது பிரைவேட் செக்ரட்டரி, ரகசிய உளவாளி ஸ்தாபனம் போன்ற இடங்களில், விவசாயம் மூலம் வருமானம் வரும்.

**குடும்பவாழ்க்கை:** இவள் பதிவிரதையாகக் கணவனைத் தெய்வமாகத் தொழுபவளாக இருந்தாலும் கூட இவள் கணவன் இவள் ஒழுக்கத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளும்படியாக சந்தர்ப்பங்கள் அனேகம் ஏற்படும். இதைத் தவிர்க்க இவள் தன் கூச்ச சுபாவத்தை விட்டு விட்டு, தன் உள் எண்ணங்களை கணவனிடமும் மற்றவர்களிடமும்

தெளிவாக வெளிப்படுத்துவதுடன், தன்னையும் ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொண்டு, கணவனின் முழு நம்பிக்கையையும் பெறவேண்டும். இவள் என்ன நினைக்கிறாள், என்ன வெளிப்படையாக பேசுகிறாள் என்பதே இவள் வாழ்க்கையில் ஏற்படும் இந்த புயலுக்குக் காரணம், இவள் தன் மனதிலுள்ள பல எண்ணங்களை சொல்ல விரும்புவாள். ஆனால் இவளுடன் பிறந்த கூச்ச சுபாவம் இவளது முழு எண்ணத்தையும் சொல்லவிடாமல் தடுத்துவிடும். இந்து குணம் மற்றவர்களிடம் இவளைப்பற்றி தவறான கருத்து ஏற்பட வழி செய்துவிடும். இவளுக்கு கடமை மிகுந்த குழந்தைகள் பிறக்கும்.

**ஆரோக்கியம்:** சுவாச உறுப்பு சம்பந்தமான நோய்கள் ஏற்படும். காசநோய், அல்சர், மார்பு புற்றுநோய், எக்ஸிமோ, மஞ்சட்காமாலை, மார்பில் புண்கள், அல்லது காஸ்ட்ரிக் அல்சர் போன்ற நோய்களுக்கு ஆளாக நேரிடும். இந்தப் பூச நட்சத்திரத்தில் புஷ்பவதி ஆனால் இவளுக்கு நல்ல குணமுள்ள குழந்தைகள் பிறக்கும். தன் கணவனிடம் ஒட்டுதலாக இருப்பாள். பலவிதமான சந்தோஷங்களை அனுபவிப்பாள்.

## *பூச நட்சத்திரத்தில் இருந்த சூரியனை மற்ற கிரகங்கள் பார்த்த பலன்*

**சந்திரன் பார்த்தால்:** இவன் ஒரு தொழிலதிபன் அல்லது அரசாங்கத்தில் பெரும்பதவியில் உள்ளவன். அல்லது ஷிப்பிங் துறையிலோ, தண்ணீர் சம்பந்தப்பட்ட பிசினஸ் செய்வதிலோ பெரிய புள்ளியாக இருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** பணக்காரனாக ஆவான். தன் நெருங்கிய சுற்றத்தார், நண்பர்களால் பல பிரச்சினைகள் ஏற்படும். பிஸ்டுலா, காசநோய் போன்ற நோய்களால் கஷ்டப்படுவான்.

**புதன் பார்த்தால்**: உயர்படிப்பை பெற்றவன். அரசாங்க உத்தியோகத்தில் இருப்பான்.

**குரு பார்த்தால்**: பாதுகாப்புத் துறையிலோ அல்லது அரசியல் சம்பந்தப்பட்ட வேலையோ செய்வான்.

**சுக்கிரன் பார்த்தால்**: பிறருடைய தேவைகளை அறிந்து உதவுவான். பெண்கள் மூலமாக வருமானம் அடைவான். உலோக விற்பனையில் ஆர்வம் உள்ளவன்.

**சனி பார்த்தால்**: மனைவியின் ஆயுள் பலம் சந்தேகத்துக் கிடமானது. மிகவும் தந்திரசாலி ஆனவன். வாயு, கபம் சம்பந்தப்பட்ட நோய்களால் கஷ்டப்படுவான்.

## பூசநட்சத்திரத்தில் இருந்த சந்திரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்**: இவன் வீரம் பொருந்தியவன். அரசாங்கத்தில் பாதுகாப்பு அல்லது சட்டத்துறையில் உத்தியோகம் செய்வான்.

**செவ்வாய் பார்த்தால்**: தான் வேலை செய்யும் துறையில் நல்ல ஞானம் உள்ளவன். இவன் தாயாருக்கு அபாயம் ஏற்படும். சிலருக்கு உடலின் மேற்பகுதியில் ஊனம் ஏற்படும்.

**புதன் பார்த்தால்**: அரசியலில் புகழ் பெறுவான். சிறந்த மனைவி மக்களையும், செல்வத்தையும் புகழையும் அடைவான்.

**குரு பார்த்தால்**: மிகுந்த படிப்பைப் பெற்றவன். ஏதாவது கல்வி ஸ்தாபனத்தின் தலைமையைப் பெற்றிருப்பான். செல்வந்தன், ஆனால் தன் தாயின் அன்பையும் பாசத்தையும் அனுபவிக்க முடியாதவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** அளவுக்கதிகமான பெண் சுகத்தை அனுபவிப்பான். நிறைய செல்வம் சம்பாதிப்பான். ஆனால் அதை நல்ல காரியங்களுக்காக செலவிடமாட்டான். பால்வினை நோய் ஏற்பட்டு கஷ்டத்தை அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** இவன் ஒரு ஏழை. தந்திரசாலி, காசநோய், லங்க்ஸ் பாதிக்கப்படுவதால் ஏற்படும் நோய்களை அனுபவிப்பான்.

## பூச நட்சத்திரத்தில் இருந்த செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் ஒரு லாயராக இருப்பான். அல்லது சட்டத்துறையில் வேலை பார்ப்பவனாக இருப்பான். பித்த நோய்களால் அவதிப்படுபவன்.

**சந்திரன் பார்த்தால்:** தாயாரை நன்றாகப் பராமரிக்க மாட்டான். பலவிதமான நோய்களுக்கு ஆட்பட்டு கஷ்டப்படுவான்.

**புதன் பார்த்தால்:** இவன் பாப காரியங்களைச் செய்யும் பாபி. சந்தோஷமான குடும்ப வாழ்க்கையை அனுபவிக்க முடியாது. தன் தாய்க்கு அபாயத்தை உண்டாக்குவான்.

**குரு பார்த்தால்:** நன்கு படித்தவன். அரசியலில் புகழை அடைவான். தான தருமம் செய்யும் குணமுள்ளவன். இவன் தன் வாழ்க்கையில் சந்தோஷங்களை அனுபவிக்க முடியாது.

**சுக்கிரன் பார்த்தால்:** பெண்களின் விரோதத்தை சம்பாதித்துக் கொள்வான். செல்வத்தை நிறைய சம்பாதிப்பான். ஆனால் எல்லாவற்றையும் பெண்களால் இழப்பான்.

**சனி பார்த்தால்:** அரசாங்கத்தில் உயர்ந்த ஸ்தானத்தைப் பெறுவான். அல்லது அரசாங்கம் சம்பந்தப்பட்ட கம்பெனியில் உயர்பதவியை வகிப்பான். இவன்

கண்பார்வை பலகீனமானது. நல்ல பெயரை சம்பாதிக்க முடியாது.

## பூச நட்சத்திரத்தில் இருந்த புதனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** மற்ற கிரகங்களின் சேர்க்கை விசேஷத்தால் பலதரப்பட்ட உத்தியோகங்களில் இருப்பான். இந்த அமைப்பில் பல நல்ல பல் டாக்டர்கள் உருவாகி இருக்கிறார்கள். இவனது மனநிலை குழப்பம் நிறைந்ததாக இருக்கும்.

**சந்திரன் பார்த்தால்:** பொதுவாக இவனை வறுமை வாட்டும். செலவு அதிகமாகவும், வருமானம் குறைவாகவும் இருக்கும். பலவிதமான வியாதிகளால் பீடிக்கப்படுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** நல்ல கல்வி அறிவைப் பெறமுடியாது. சட்டவிரோதமான செயல்களைச் செய்து அரசாங்கத்தால் பிடிக்கப்பட்டு கஷ்டப்ப'டுவான்.

**குரு பார்த்தால்:** இவன் நன்கு படித்த அறிஞன். பலவித சாத்திரங்களையும் விஞ்ஞானங்களையும் கற்றறிந்தவனஅ. ஆட்சி செய்பவர்களின் நலனைக் கவனித்துச் செயல்பட்டு, அதனால் பெரும் செல்வத்தை அடைவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** இவன் கவர்ச்சிகரமான உடலமைப்பு கொண்டவன். சயன்ஸ் லெக்சரராக இருப்பான். அல்லது பௌதீக விஞ்ஞானத்தில் ஆராய்ச்சியாளனாக இருப்பான்.

**சனி பார்த்தால்** : வாழ்க்கையின் வசந்தங்களை இவன் காணாதவன். தன் உடன் பிறந்தவர்களுடன் நல்லுறவு இருக்காது. தன் மனைவி மக்களால் புறக்கணிக்கப்படுவான்.

## பூச நட்சத்திரத்தில் இருந்த குருவை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** எல்லாம் கற்றறிந்த அறிவாளி. உயர்ந்த கல்வியைப் பெற்றவன். ஏதாவது ஸ்தாபனத்தின் தலைமைப் பதவியைப் பெற்றிருப்பான்.

இந்த அமைப்பில் சுக்கிரன் நீச்சம் அடைந்திருந்தால், இவன் தன் முதல் மனைவியை இழந்து 2வது முறையாக திருமணம் செய்துகொள்வான்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் பணக்காரன். மனைவி மக்களுடன் சந்தோஷமாக வாழ்பவன். நிலங்களும், கட்டிடங்களும், வாகன வசதிகளும் நிறைந்தவன்.

**செவ்வாய் பார்த்தால்:** இளம் வயதிலேயே திருமணம் நடந்து விடும். நன்கு படித்தவனாகவும், பணக்காரனாகவும் இருப்பான்.

**புதன் பார்த்தால்:** குடும்பத்தில் உள்ளவர்கள் இவனுக்கு மரியாதை செலுத்துவார்கள். இவனும் அவர்களை நன்றாகப் பராமரிப்பான். சிலர் அரசியலில் புகழடைவர்.

**சுக்கிரன் பார்த்தால்:** செல்வம் எதிர்பாராத வகையில் இவனை வந்தடையும், பல மனைவிகள் இருப்பார்கள். அல்லது பல பெண்களிடம் உடல் இன்பம் பெற்று மகிழ்வான். இருதய நோயினால் கஷ்டப்படுவான்.

**சனி பார்த்தால்:** இவன் தன் ஊருக்கு அல்லது கிராமத்துக்குத் தலைவனாக இருப்பான்.

## பூச நட்சத்திரத்தில் இருந்த சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் ஒரு தொழிலதிபர். இவன் மனைவி மிகவும் அழகாக இருப்பாள். பணக்காரி, தன் மனைவியின் சொத்துக்களை இவன் அடைவான்.

**சந்திரன் பார்த்தால்:** அழகிய கவர்ச்சியான உருவம் கொண்டவன். பல குழந்தைகளுக்குத் தகப்பன். மிக சந்தோஷ மாக வாழ்வான்.

**செவ்வாய் பார்த்தால்:** பலவிதமான லலித கலைகளில் ஆர்வம் உள்ளவன். அந்த கலைகள் மூலம் பணம் சம்பாதிப்பான். தன் குடும்ப உறுப்பினர்கள், உறவினர்கள் தேவைகளைக் கவனித்துப் பூர்த்தி செய்வான்.

**புதன் பார்த்தால்:** இவன் மெத்தப் படித்தவன். இவன் மனைவி அரசாங்கம் அல்லது விஞ்ஞான ஸ்தாபனத்தில் லெக்சரராக மிக முக்கியமான பதவியில் இருப்பாள்.

**குரு பார்த்தால்:** இவன் வாழ்க்கையில் எல்லாவித வசதிகளையும், சந்தோஷங்களையும் அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** இவன் ஒரு ஏழை. கோரமான உருவம் உடையவன். முடக்குவாதம், இருதயநோய், ரத்த சம்பந்தமான நோய்கள் இவனைப் பீடிக்கும்.

## *பூசநட்சத்திரத்தில் இருக்கும் சனியை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவனுடைய குழந்தைப் பருவம் பரிதாபகரமாக இருக்கும். தன் தகப்பனின் பராமரிப்பை அனுபவிக்க முடியாது. தன் தாய் மாமன் தாய் வழி உறவினர்களால் வளர்க்கப்படுவான். தொழில் செய்து சுமாரான வருமபடியைப் பெறுவான்.

**சந்திரன் பார்த்தால்:** சுமாரான படிப்பறிவு உடையவன். தாய் இவனால் துன்புறுத்தப்படுவாள். தன்னுடைய சகோதரர்களால் விரட்டி அடிக்கப்படுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் பணக்காரன். ஆரோக்கிய மானவன். அசாதாரணமான வாழ்க்கை வசதிகளையும் சுகங்களையும் அனுபவிப்பான்.

**புதன் பார்த்தால்:** சமூகத்திற்கு நல்ல செயல்களைச் செய்வான். கோபக்காரன். எல்லோராலும் விரும்பப் படுபவனல்ல.

**குரு பார்த்தால்:** வீடு, நிலம், வாகன வசதிகள், நல்ல மனைவி, கடமையுணர்வு மிகுந்த குழந்தைகள் எல்லாம் பெற்ற அதிர்ஷ்டக்காரன்.

**சுக்கிரன் பார்த்தால்:** விகாரமான உருவமுடையவன். நல்ல பழக்க வழக்கங்கள் உடையவன். தாய்க்கு அபாயம் ஏற்படும். சந்தோஷமான வாழ்க்கை வாழ்பவன்.

### *பூச நட்சத்திரத்தின் முதல் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** எல்லோரும் விரும்பத்தக்க குணங்களைக் கொண்டவன். கபமும், பித்தமும் இவன் உடலில் சரியான விகிதத்தில் இல்லாததால் ஏற்படும் கோளாறினால் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படும். போதை மருந்துகளுக்கு அடிமையானவன்.

இந்த அமைப்பில் லக்கினம் மக நட்சத்திரத்தில் இருக்க நேர்ந்தால், இவன் ஒரு ஏழை அல்லது சாதாரண குடும்பத்தில் பிறந்தவன். ஆனாலும் இவனுடைய தந்தையின் நிலை உயர்வடைவதால் நாளடைவில் இவன் வசதிகளுடன் வாழ்வான்.

**சந்திரன் நின்றால்:** எடுப்பான அழகிய தோற்ற முடையவன். பெண்களிடம் பணிவுள்ளவனாக இருப்பான். இவனுக்கு 2 வீடுகள் சொந்தமாக இருக்கும். மார்பில் மச்சம் அல்லது குறி இருக்கும். வாயு, கபரோகமுடையவன்.

**செவ்வாய் நின்றால்:** எல்லாம் கற்று உணர்ந்தவன். வாகனங்கள் மூலமாகவோ அல்லது பிரயாணம் செய்வதாலோ நிறைய சம்பாதிப்பான். இவன் ராஜ வம்சத்தில் பிறந்தவன். விவாதம் செய்யும் திறமையும்,

மற்றவர்களை நம்பவைக்கும் சாமர்த்தியமும் உடையவன். உடல் சக்தியும் வளப்பமான கருத்துக்களும் உடையவன்.

இந்த அமைப்பில் லக்கினமும் அமைந்தால் இவனுக்கு கான்ஸர் ஏற்படும்.

**புதன் நின்றால்:** இந்த புதனுடன், லக்கினமும் சுவாதி அல்லது சித்திரை நட்சத்திரத்தில் இருக்குமானால் இவன் ஒரு கோடீஸ்வரன். பலர இவன் கீழ் பணிபுரிவார்கள். ஏராளமான வாகனங்களும், நிலங்களும், கட்டிடங்களும் இவனுக்குச் சொந்தமாக இருக்கும்.

இவள் பெண்ணானால், புதன் மட்டும் இந்த அமைப்பில் இருந்தால் அடிக்கடி கருச்சிதைவும், மாதவிடாய் கோளாறுகளும் உண்டாகும்.

**குரு நின்றால்:** இவன் தனவான். விஞ்ஞானத்தில் எல்லா பிரிவுகளையும் கற்றறிந்தவன். வேதங்கள் சாஸ்திரங்கள் எல்லாம் இவனுக்கு அத்துபடி. எப்போதாவது குடிக்கும் பழக்கம் உள்ளவன். செயின் ஸ்மோக்கர் தேவையான பணத்தைத் திரட்டுவான். நன்றாக அனுபவிப்பான்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் பிஸினஸ் லைனில் இருந்தால் சர்வதேச வியாபாரத்தில் ஈடுபடுவான். டிராவல் ஏஜண்டு அல்லது ஒரு நாட்டின் தூதுவராக, பிரதிநிதியாக செயல்படுவான்.

பெண்ணாக இருந்தால், நர்ஸ், ஏர்ஹோஸ்டஸ் அல்லது ஓவியராக இருப்பாள். இவர்கள் ஹிஸ்டீரியா, டிராப்ஸி, அல்சர் அல்லது வயிற்றுவலி நோய்களால் பாதிக்கப்படுவார்கள். ஆண் ஜாதகனுக்கு இரண்டு மனைவிகள் ஏற்படும்.

**சனி நின்றால்:** இதில் சனி இருப்பது நல்லதல்ல. இவன் சுயநலக்காரனாக மாறுவான். நடுத்தர உயரமுடையவன்.

ஒளியற்ற சக்தியற்ற கண்களை உடையவன். உறவினர் களுடன் சுமுகமான உறவை வைத்துக்கொள்ள மாட்டான். இருந்தாலும் இவன் தைரியசாலி, தன் சொந்த முயற்சியாலும், உழைப்பாலும் செல்வத்தைச் சம்பாதிப்பான்.

**ராகு நின்றால்:** பாடல்கள் இயற்றுவதில் வல்லவன். அதிக படிப்பறிவு இவனுக்குக் கிடையாது. பிள்ளைப் பிராயத்தில் மிகவும் கஷ்டப்படுவான். இதற்கு மருந்தாக இவனுடைய கற்பனை வளம் மிகுந்த பாடல்கள் அமையும். காதல் விவகாரத்தில் இவனுக்குத் தோல்வியே கிட்டும். ஆனால் இந்த வெறுப்பு நாளடைவில் மாறிவிடும். சந்தோஷமான குடும்ப வாழ்க்கை ஏற்படும்.

**கேது நின்றால்:** கேது இந்த இடத்தில் இருப்பது விரும்பத்தக்கதல்ல. இவன் வீட்டை விட்டு ஓடிப்போவான். மிகுந்த துக்கத்தை அனுபவிப்பான். ஆரம்ப காலத்தில் ஏதாவது ஒரு வீட்டில் எடுபிடி வேலை ஆளாக இருப்பான். பின் நாளடைவில் இந்த நிலைமை மாறி ஒரு கௌரவமான வேலையைச் செய்வான்.

### பூச நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் கிரகங்கள் நின்றபலன்

**சூரியன் நின்றால்:** தான் மேற்கொள்ளும் வேலைகளில் ஸ்டெடி மைண்ட் இல்லாதவன். கௌரவமானவன். பேச்சில் வல்லவன். இவன் ஏரோநாட்டிக் என்ஜினியராகவோ அல்லது ஸ்பேஸ் ரிஸர்ச்சிலோ பணிபுரிபவனாக இருப்பான்.

**சந்திரன் நின்றால்:** இவனுக்கு ஏராளமான நண்பர்கள் இருப்பர். சொந்தமாக நிலமும் வீடும் உள்ளவன். பெண்களுக்கு மரியாதை அளிப்பவன். ஒரு ஜோதிடனாகவும் திகழ்வான்.

**செவ்வாய் நின்றால்:** இவன் கடினமாக உழைத்தாலும் அதற்குரிய வெகுமானம் கிடைக்காமல் குறைந்த அளவே

கிடைக்கும். இவன்தன் பூர்வீக சொத்துக்களை இழக்க நேரும். ஸ்பெகுலேசனில் பெரும் தொகையை இழப்பான். சிலசமயம் கிரிமினல் நடவடிக்கைகளுக்காக கைது செய்யப்படவும் கூடும். காது செவிடாக ஆகும். காலதாமத மாக திருமணம் நடக்கும்.

பெண்ணாக இருந்தால், மனைவியை இழந்த ஆண்களுடன் செக்ஸ் விஷயங்களில் ஈடுபடுவாள்.

**புதன் நின்றால்:** பிரைவேட் செக்ரட்டரி, ரகசிய உளவாளி, பாதுகாப்புத்துறை, விஜிலன்ஸ் போன்ற நம்பிக்கையும், உண்மையும் தேவைப்படும் இடங்களில் முக்கியமான பதவியில் பணிபுரிவர். இவனுடைய சுவாச கோசம் பாதிக்கப்படலாம்.

சனியும் இங்கு இருந்தால் இவர் தண்ணீர் சம்பந்தப் பட்ட துறையில் என்ஜீனியராக இருப்பார்.

**குரு நின்றால்:** வாழ்க்கைக்குத் தேவையான எல்லா வசதிகளும் பெற்றவன். செல்வம், மனைவி, குழந்தை களுடன் இருப்பான். பிஸினஸ்மேனாக இருந்தால் பெட்ரோலியம், அதன் உபபொருள்களை ஏற்றுமதி இறக்குமதி வியாபாரத்தில் இருப்பான்.

**சுக்கிரன் நின்றால்:** அதிக காம இச்சை உடையவன். அதற்கு வடிகால் இல்லாமல் கஷ்டப்படுவான். ஆண்களும், பெண்களும் ஒருவரை ஒருவர் கவர்ந்து இழுக்கும் காந்த சக்தியைப்பெற்றவர்கள். இருந்தபோதிலும் இவர்கள் சிறந்த அறிவாளிகள். சிறந்த குணங்களை உடையவர்கள்.

**சனி நின்றால்:** இளம்பிராயத்தில் மெனிஞ்சிடிங் என்னும் நோயால் பாதிக்கப்பட்டு கஷ்டப்படுவான். சில கேசுகளில் உடல் ஊனம் ஏற்படுவதாக அறியப்படுகிறது. இவன் தாராளமானவனாகவும் உணர்ச்சிவசப்பட்டவ னாகவும் இருப்பான். வெளிப்பார்வைக்கு சிங்கம்போல் காணப்பட்டாலும், இவன் உண்மையில் ஒரு கோழை.

**ராகு நின்றால்:** பாலில் இருந்து தயாரிக்கப்படும் பொருட்கள், மாடுகள், இவற்றின் மூலமாகச் சம்பாதிப்பான். அசையாத சொத்துக்கள் உள்ளவன். இரண்டு மனைவி உடையவன்.

இதை செவ்வாய் பார்த்தால் உயர்ந்த படிப்பை பெற்றவன். அரசாங்க ஸ்தாபனங்களில் உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பவன். செவ்வாய் பார்ப்பதால் ராகுவால் ஏற்படும் எல்லா தீய பலன்களும் மறைந்து விடும்.

**கேது நின்றால்:** தீய நண்பர்களின் சேர்க்கையினால் இவன் பிதுரார்ஜித சொத்துக்களை அழிப்பான். தன்னால் சம்பாதிக்கப்பட்ட சொத்துக்களுக்கும், தன் தாய்க்கும் அபாயத்தை உண்டாக்குவான். தன்னுடைய குடும்ப நலனைப் பற்றிய கவலையில் மூழ்குவான். இரண்டுமுறை திருமணம் செய்துகொள்ள நேரிடலாம்.

## *பூச நட்சத்திரம் மூன்றாம் பாதத்தில் கிரகங்கள் நின்றபலன்*

**சூரியன் நின்றால்:** தன்னுடைய சிறந்த குணங்களுக்காக புகழ்பெறுவான். உயர்ந்த உருவமுடையவன். பார்வை மங்கல் உடையவன். கண் சரியாகத் தெரியாது. இந்த அமைப்பில் லக்கினமும் அமைந்தால் இவன் உடல் வியாதிகளால் கஷ்டப்படுவான். ஒற்றைக்கண்ணன் ஆகவும் இருப்பான்.

**சந்திரன் நின்றால்:** இவனை நல்ல வார்த்தைகளால் மட்டும் வசப்படுத்த முடியும். தோட்டம், துறவு இவற்றின் அருகில் வசிக்கப் பிரியப்படுவான். வெளிநாடுகளில் கஷ்டமான வேலைகளை செய்வான். பெண்ணாக இருந்தால் பலமுறை கருச்சிதைவு ஏற்படும். இந்த அமைப்பில் லக்கினமும் அமைந்து ஏழாமிடத்திற்கு நல்ல அல்லது தீய பார்வை ஏற்படாமல் இருந்தால் ஜாதகனின் மனைவி TBயினால் மரணமடைவாள்.

**செவ்வாய் நின்றால்:** இவன் தத்துவ மனம் கொண்டவன். ஜியோலஜி அல்லது மிரைலாஜி அல்லது மெடலர்ஜியில் ஆர்வம் கொண்டவன். அரசாங்க உத்தியோகத்தில் இருந்தால் மற்றவர்களை விட சீக்கிரம் பதவி உயர்வு பெறுவான். புண்ணிய ஸ்தலங்களை தரிசிப்பான். வெளிநாட்டில் செட்டிலாகும் வாய்ப்பு இவனுக்கு உண்டு.

**புதன் நின்றால்:** இவன் சங்கீதம், நாட்டியம் இவற்றில் ஆர்வம் உள்ளவன். அரசியல்வாதி அல்லது ஆட்சியாளர் களிடம் நெருங்கிய தொடர்பு உடையவன். வெளிநாடுகளில் வசிப்பவன். பெண் இன்பம் பெறுவதில் அளவுக்கதிகமாக ஈடுபடுவான்.

பெண்ணாக இருந்தால் நாட்டியம், சங்கீதம், நடிப்பு மூலம் பணம் சம்பாதிப்பாள். அதே சமயம் இவள் நடத்தை கேள்விக்குரியதாக இருக்கும்.

**குரு நின்றால்:** நம்பிக்கைக்குப் பாத்திரமான உத்தியோகத்தில் உயர்ந்த பதவியில் இருப்பான். மூத்திரப்பையில் கல் அல்லது சுவாச உறுப்புகளில் அல்சர் ஏற்பட்டு கஷ்டப்படுவான். கான்சரும் ஏற்படலாம். விவசாயத்தின் மூலம் பொருள் வரவு உண்டாகும். கட்டிடம் அல்லது அணைக்கட்டு கட்டும் இஞ்சினீயராகவும் இருப்பான்.

**சுக்கிரன் நின்றால்:** பயந்த சுபாவம் உள்ளவன். காதல் விவகாரத்தில் ஏமாற்றம் ஏற்படும். பிறந்த இடத்தில் துரதிர்ஷ்டம் துரத்தும். தடைப்பட்ட கல்வி உடையவன், பிராணிகள் அல்லது கோழி வளர்ப்பில் பெருத்த நஷ்டத்தை அடைவான்.

**சனி நின்றால்:** பார்ப்பதற்கு அழகனாக இருப்பான். ஆனால் பற்கள் எல்லாம் பலவீனமாக இருக்கும். பொதுவாக இவன் அரசாங்க உத்தியோகத்தில் பெரிய ஆபீசராக இருப்பான். பிஸினஸ் துறையில் இவன் இருந்தால், கல்,

மண், சிமெண்ட, இரும்பு போன்ற கட்டடம் கட்டும் பொருட்களில் வியாபாரம் செய்பவனாக இருப்பான். இவன் தந்திரமும், சாமர்த்தியமும் நிறைந்தவன்.

**ராகு நின்றால்:** எழுத்து, பிரசுரம், ஆராய்ச்சி மூலம் இவன் பொருளீட்டுவான். காலிலும் கையிலும் உடல் ஊனமாக இருக்கலாம். மூலம் ரத்த சம்பந்தமான நோய், நீரினால் ஏற்படும் வியாதிகளால் பாதிக்கப்படுவான். சிலருக்கு தோலில் வெள்ளைத் தழும்புகள் தோன்றும்.

**கேது நின்றால்:** இவன் தீராதவியாதிகளால் கஷ்டப் படுவான். எப்போதும் தீர்க்கப்படாத கடனில் இருப்பான். ஊர் ஊராகச் சுற்றித் திரிவான். வெளி ஊரில் பெரும் பொருள் சம்பாதித்து சுமார் 10 வருடங்கள் ராஜபோக வாழ்க்கை நடத்துவான். அதன் பின் இவன் செல்வத்தைப் பிறர் அபகரித்துக் கொள்வார்கள். பிறகு இவன் ஏழையாகி தன் சொந்த ஊருக்குத் திரும்பி வருவான். குரு மகரத்தில் இருந்தால் இவன் எல்லாப் பொருள்களையும் இழக்கமாட்டான்.

### *பூச நட்சத்திரம் நான்காம் பாதத்தில் மற்ற கிரகங்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இவன் மனைவி இவனுக்குத் தீராத பிரச்சினையாக இருப்பாள். வாழ்க்கையில் முன்னேற்றம் மனைவியால் தடைபடும். பரிகாரமாக இவன் சூரியனின் மந்திரத்தை தினசரி ஜபிக்க வேண்டும்.

**சந்திரன் நின்றால்:** பிறருடைய பணத்தை எடுத்து தனக்கு உபயோகப்படுத்திக்கொள்வான். தன்னுடைய குடும்பத்தினரால் விலக்கப்பட்டவன். பாபி. வெளியிலுள்ள ஜனக்கூட்டத்துக்குத் தலைவன்.

**செவ்வாய் நின்றால்:** இவனுடைய தாய் நிரந்தர நோயாளி. ஆதலால் அவளுக்கு வைத்தியத்திற்காக நிறைய

பணம் செலவழிப் ்ர். இவனுடைய கல்வி தடைபடும். 25வயது வரை காதல் விவகாரம் ஏமாற்றத்தைத் தரும். அதன் பிறகும் காதலிப்பதை நிறுத்தமாட்டான். 27 வது வயதில் ஏற்படும் காதல் வெற்றியைத் தந்து அவளையே மணந்து கொள்வான்.

**புதன் நின்றால்:** இவன் குறைந்த அளவே படித்திருந்தாலும் அறிவாளி. புத்திசாலி. புதன் மூன்றாவது பாதத்தில் தரும் பலன்கள் நான்காவது பாதத்திலும் தருவார்.

**குரு நின்றால்:** என்ஜினீயரிங் திறமை உள்ளவன். பெட்ரோல், அதன் உபபொருள்களை பிசினஸ் செய்வான். மார்புக் கூட்டில் காயம், காஸ்ட்ரிக் அல்சர் அல்லது பித்தப் பையில் கற்கள் போன்ற வியாதியால் கஷ்டப்படுவான்.

**சுக்கிரன் நின்றால்:** தத்துவ மனம் கொண்டவன். விஞ்ஞானி, தியானம் செய்வான். மெடலாஜியல் கல்வி அமையும். குடும்பவாழ்க்கை சிறப்பாக இராது. காலங்கடந்த திருமணம் நடக்கும். மனைவி நோயாளியாகவே இருப்பாள். குடும்பம் அழியும். ஆபத்தான நிலையில் வாழ்க்கை செல்லும்.

**சனி நின்றால்:** பெரும்பாலும் இவன் தன்னுடைய தந்தை வழி உறவினர்களால் வளர்க்கப்படுவான். சிறுவயதில் அனாதையைப் போல் வாழ்க்கை அமைந்ததால் இவனுக்கு பொருளாதாரம் அல்லது மன அளவில் எந்தவித பாதிப்போ பிரச்சினையோ இருக்காது. இவன் தாய் தந்தைக்குச் சொந்தமில்லாத வேறு உறவினர்கள் அல்லது நெருங்கியவர் களிடம் இருந்து பிஸினஸ் சொத்து இவனை வந்தடையும் சாதாரணமான பணக்காரன். பல் தொந்தரவு அடிக்கடி தொந்தரவைக் கொடுக்கும்.

**ராகு நின்றால்:** அசாதாரணமான புகழைப்பெறுவான். இவனால் சொத்து சேர்க்கமுடியாது. மணவாழ்க்கையில் கணவன் மனைவி ஒத்துப்போக மாட்டார்கள்.

பெற்றோர்களின் ஆயுட்காலம் குறைவாக இருக்கும். கண் கோளாறு லங்ஸ் மற்றும் சுவாச சம்பந்தமான கோளாறுகள் ஏற்படும்.

**கேது நின்றால்:** இயந்திரங்களில் வேலை செய்பவனாக இருப்பான். இவனால் சேமிக்கப்பட்ட செல்வத்தை தீய பெண்கள் அபகரித்துக்கொள்வார்கள். இதனால் இவன் மனைவி, மணமான ஆரம்ப காலத்தில் கஷ்டப்படுவாள். ஆனால் 40 வயதிற்குமேல் இவன் தன் மண வாழ்க்கையை சந்தோஷமாக அனுபவிப்பான்.

**குறிப்பு:** பூச நட்சத்திரக்காரர்கள், மகம், பூரம், சித்திரை, திருவோணம், சதய நட்சத்திரக்காரர்களுடன் எந்தவிதமான தொடர்பும் உறவும் வைத்துக்கொள்ளக்கூடாது.



# அத்தியாயம் - 12

## ஆயில்ய நட்சத்திரம்

கடுகவே நடக்க வல்லான் கன்னியர் மனத்த னாகும்
திடமுடன் பேசவல்லான் தந்தைதாய் தம்மைப் பேணும்
வடுகரைப் பேச வல்லான் வருந்தியே இருந்து வாழும்
அடுத்தவர்க் கன்ப னாகும் ஆயில்ய நாளி னானே. (88)

*(சுவடி எண். 1500)*

இவன் விரைந்து நடக்கவல்லவன். இவன் இளங் கன்னியர் மனத்தை மிகவும் கவர்வான். நறுக்குத்தறித்தாற் போல் உறுதியாகப் பேசவல்லவன். தன் தந்தை தாயாரை பாதுகாப்பவன். தன் பகைவரை எதிர்த்துப் பேசுவான். என்ன கஷ்டம் வந்தாலும் பொறுமையுடன் வாழ்வான். அல்லது வருத்தத்துடன் வாழவேண்டிய நிலைகள் ஏற்படும். தன்னைச் சேர்ந்தவர்களுக்கு சினேகிதமாக பாசமாக இருப்பான். இவை ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவன் குணங்களாகும்.

இன்னானுக்குத் தெய்வம் நாகராஜன். பூதம்-அப்பு. அதாவது தண்ணீர். சாதி-வைசியன். கோத்திரம்-அகத்தியன். யோனி-கடுவன் பூனை. பட்சி-விச்சுளி. விருட்சம்-புன்னை மரம். கணம்-ராட்சச கணம். இந்த நட்சத்திரக் கூட்ட வடிவம் அம்மி போன்றிருக்கும். இராசி கடக ராசி. வாரம் திங்கள்கிழமை. இதில் பெண் திரளில் பெண் பெறுவாள். இந்த நாளில் வருஷம் பிறக்கில் தானிய உற்பத்திக் குறையும். ஆடிமாதம் பகை. சித்திரை-சூனிய மாதம். 30 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷக்கடிகை. வெதுப்பு தோன்றில் 9ல் தத்து நீங்கும். மூன்று நாளில் தீரும். இது ஆயுசு விருத்திக்கும் உதவும். விருச்சிகமும் சத்தமியும் செவ்வாயும் கூடிய நாளில் வியாதி (ஆயில்யத்தில்) தோன்றினால் தீர நெடுநாள் செல்லும். உடுக்க புடவையும், கம்பளியும், ஆடும், சொர்ணமும் தானம் பண்ணவேண்டும். சிவபூஜை

பண்ணவும். இவன் சரீரம் மற்றும் கண்களும் அழகியன. உண்டி விரும்பி உண்பான். வெறுமை உடையவன். வலதுபக்கத்தில் மச்சம், மரு உண்டு. முகம் வட்டமாக இருக்கும். நெற்றி முன்னுக்குத் தள்ளி அகன்றிருக்கும். தண்ணீர் தாகம் அதிகமுடையவன். கண்ணியமுடையவன். வார்த்தையாட வல்லவன்.

இந்த நட்சத்திரத்தின் காரகங்கள் செய்து வைத்தது போன்ற கழுத்து கிழங்கு வகைகள், பழங்கள், கிருமிகள், பூச்சிகள், பாம்பு விஷம், தானியம் பிறருடைய தனத்தைக் கவர்தல், வைத்தியம் செய்பவன் இவையெல்லாம் ஆயில்யத்தில் குறிக்கப்பெறுபவை.

**இதர செய்திகள்:** இது 6 நட்சத்திரங்களைக் கொண்டது. இது பெண் இனம். அம்மி உருவம், ஆயில்யம் ஆறும் அம்மிபோலே என்ற பழமொழியும் உண்டு. சிட்டுக்குருவி இதன் பட்சி.

இதன் முதல் பாதத்திற்கும் கடைப்பாதத்திற்கும் குரு அதிபதி. ஆனதால் இவர்களிடம் நேர்மை அறம் வழுவாமை முதலியவை காணப்படும். இதில்தான் இராமாயண உபநாயகன் இலக்குவனும், பாரத நாயகன் தருமபுத்திரனும் பிறந்தார்கள்.

இதில் பெண் திரளில் சாந்தி செய்யவேண்டும். இல்லை என்றால் திருமண வாழ்க்கை சுகமாக இராது. ஆயில்ய மாமியார் ஆசந்தியிலே, இந்தப் பழமொழிக்கு, பெண் மாமியாருக்கு ஆகாது. ஆயுளைப் பாதிக்கும் என்பது தவறு. முதல் பாதத்தில் பிறந்த பெண்தான் மாமியாருக்கு ஆகாது.

இது உபயகுல நட்சத்திரம் பிறர் சம்பாத்தியத்தில் வாழ்வதில் மகா நிபுணர்.

இவர்கள் ஆடுகளின் குணம் கொண்டவர்கள். சாதுக்கள். ஆனால் மோதினால் கடுமையாகப் போராடக் கூடியவர்கள். இதற்குறிய மரம் அரசு.

இது கீழ்நோக்குநாள். தவிர்க்க முடியாத பட்சத்தில் பாயாசம் சாப்பிட்டு யாத்திரை செல்லலாம். இதன் மூன்றாவது பாகம் தின மிருத்யு வெள்ளிக்கிழமை மரண யோகம்.செவ்வாய், புதன் நேர்ந்தால் ஆகாது. செவ்வாய் நாசயோகம் என்று பெயர். சூரியோதய காலத்தில் இந்த நட்சத்திரத்தில் வானவில் தோன்றினால் 7 நாட்களில் மழை உண்டாகும். வியாழக்கிழமையும் ஆயில்யமும் உதயமானால் சர்வ காரியமும் சித்தியடையும். இந்த அமைப்பில் பொருளீட்டச் சென்றால் அதிகம் சம்பாத்தியம் ஏற்படும்.

ஞாயிறு ஆயில்யத்தில் கரும்பு பயிரிட நன்று. விவசாயம், நெல் விதைத்தால் விளைச்சல் அதிகம் உண்டு. இதில் கிணறு வெட்ட நன்று. இதில் மாதம் பிறந்தால் பயிர் குறையும்.

**சாந்தி:** குங்கிலிய தூபம், கட்டி நெய், ஹோமம், தயிர், நெய் சேர்ந்த அன்னம், காயத்திரி ஹோமம். அதே அன்னத்தினால் தேவதைக்கு பலியிடல் வேண்டும். சாந்தி செய்யாவிட்டால் 8 நாளில் மரணம்.

## இதில் பிறந்த பெண்கள் தன்மைகள்

**வடமொழி பெண் ஜாதகப்படி:** ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவள் துக்கப்பட்டுக் கொண்டிருப்பவள். தன் காரியமே கண்ணாய் இருப்பவள். கர்வ மிகுந்தவள். கெட்ட சுபாவம் உள்ளவள். பிறர் குற்றங்களைப் பெரிதுபடுத்திப் பேசுவாள். அதிகச் செலவாளி. வீண் கௌரவம் பேசுவாள். தான் மெத்தப் படித்தவள் போல் போலி தம்பட்டம் அடித்துக்கொள்பவள்.

பாப கர்மங்களில் ஆசையுள்ளவள். அழகற்றவள். இவளுக்கு யாராவது பகையாக இருந்து கொண்டிருப்பார்கள். இந்த நட்சத்திரத்திற்கு ருத்ரனும் அதிதேவதை (பெண்களைப் பொருத்தவரை). 11 மதன நூல் சொல்லும் ஆயில்யத்தின் தன்மை இந்த நட்சத்திரப் பெண் நாக தத்துவ லட்சணத்தைச் சார்ந்தவள். இந்த தத்துவம் பற்றி முன்னுரையில் காணவும்.

தாட்சியோவிடில் தண்ணொளி யொன்றில்லாள்
மாட்சி கூறி மனக்களவே செய்யும்
பேட்சிலாந்திடப் பெண்மையள றித்திடும்
மாட்சிபாடிடும் ஆயில்யப் பெண்ணே. (89)

யாருக்கும் அடங்காதவள், கருணை இல்லாதவள், வெளியே மெச்சப் பேசி உள்ளத்தில் கபடத் தன்மை யுள்ளவள். பெண் தன்மையில் உள்ள தன் மென்மையினை ஒத்துக்கொள்பவள். எதிலும் மேன்மையாய் இருக்க மாட்டாள். இவை ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவள் குணமாகும். இவள் தன் புகழையே பாடிக் கொண்டிருப்பவள்.

### *தமிழ் சாதகாலங்காரம் சொல்லும் ஆயில்ய நட்சத்திரத்திற் பிறந்தவன் பலன் (ஆண் பெண் பொது)*

செஞ்சொற்சா துரியன்சத் துருநேயன் மனதுக்கண் திரிவான் காட்டில்
பஞ்சைபோல் சிறுதிண்டி தின்பன் அன்னை பிதாக் கினியன் பக்தி உள்ளான்
வஞ்சமில்லா தேவர்க்கும் எளிதாஞ்சொல்வன் சுகவான் வலிமையோருக்கு
அஞ்சிடான் விழிபுருவம் உயர்ந்து ஒதுங்கி இருக்கும் ஆயிலியத்தானே.

ஆயில்ய நட்சத்திரத்திற் பிறந்தவன் செழுமையாய்ப் பேசும் சாமர்த்தியமுடையவன். விரோதிகளிடம் சினேகமாக்குவோன். மனத்தில் துக்கம் உடையவன். காட்டில் திரிபவன் தரித்திரனைப்போல் ஏதாவது சிறு திண்டி எப்பொழுதும் தின்றுகொண்டே இருப்பவன். தாய் தந்தையர்க்கு அன்புடைவன். தெய்வபக்தி உடையவன். வஞ்சமின்றி எல்லோரையும் ஏளனம் செய்பவன். சுகமுடையவன். தன்னிலும் பலசாலிகளுக்கும் பயப்படாதவன். கண்ணும் நெற்றியும் ஓங்கியும் உயர்ந்திருப்பவன் என்பதாம்.

## *யவன ஜாதகப்படி ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவன் தன்மைகள்*

ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவன், நல்ல வடிவமுடையவன். நல்ல சௌபாக்கியம் உள்ளவன். அன்னிய பெண்கள் மேல் விருப்பமுடையவன். இரகசியமாக பாபங்களைச் செய்பவன். நன்றாகப் பேச அறியாதவன். ஏதாவதொரு கவலையால் பீடிக்கப்பட்டவன் என்பது.

**பிருகத் ஜாதகப்படி**: குத்சித புத்தியுள்ளவன். பிறரை மோசம் செய்து பொருளைச் சம்பாதிப்பவன். பாபகாரியங்களைச் செய்பவன். செய்ந்நன்றியை மறப்பவன். பிறரை வஞ்சிப்பதில் சமர்த்தனுமாவான் என்றறியவும்.

## *ஆயில்ய நட்சத்திர பாத பலன்*

மின்னிய தனமும் பெண்வடி உள்ளவன்
மேன்புத்தி யுடையவன் சந்தோஷி
மிகுநல நாநா தொழில் புரிந் திடுவன்
வேண்டு மாயிலியத்தின் முதற்கால்
அன்னியர் ஏவல் தொழில் புரிந்திடுவான்
அழகுளன் ஏக்கமும் உள்ளான்
ஆசாரன் தீய நடையான் துர்புத்தி
உடையனாம் காலிரண் டதற்கே
நன்னிசற் கோபி நாரியை வதைப்பன்
ஞானியா லசியனான நிபுணன்
நலமிலா வார்த்தை பற்றவே உரைப்பன்
நலமிகு பாத மூன் றதற்கே
பொன்கொலை நாசம் புரிபவன் சுபன் பொல்
லாங்கு செய்பவர்க் கினியன்
புலைச்சியர் சங்கம் பண்ணுவன் நோயை
புணர்ந்திடும் நான்கெனும் காலே. (90)

அதாவது

**1-ம் பாதத்தில் பிறந்தவன்:** பொன் நாணயங்களைச் சம்பாதிப்பவன். முகத்தில் மீசை வைக்காதவன். மேன்மையான புத்தி உடையவன். நீங்காத சந்தோஷ முடையவன். யாவரும் புகழும்படி நாநா தொழில்கள் புரிந்து மேன்மையடைபவனும் ஆவானென்பதாம்.

**2-ம் பாதத்தில் பிறந்தவன்:** அன்னியரால் பிறரால் ஏவப்பட்ட அடிமைத் தொழில்களைச் செய்பவன். அழகுள்ளவன். தான் உத்தேசித்த காரியத்தில் கண்ணாக இருப்பவன். ஆசார சீலன். இருப்பினும் தீய வழிகளைப் பின்பற்றுபவன். வஞ்சகன், லோப குணம் உள்ளவன். பொருமையும் உள்ளவன் என்று கூறுக.

**3-ம் பாதத்தில் பிறந்தவன்:** பிறர்மேல் கோபமுள்ளவன். நல்ல காரியங்களில் ஈடுபடாதவன். கோபமுள்ளவன். பெண்களை இம்சிப்பவன். சன்யாசி, சோம்பல் குணமுள்ளவன். நிபுணன் என்று கொள்க.

**4-ம் பாதத்தில் பிறந்தவன்:** உபயோகமற்ற வார்த்தைகளைப் பொருந்தும்படி உரைப்பவன். வீண் செலவாளி, கொலை, நாசம் முதலிய தீய தொழில்களைச் செய்பவன். தீய காரியம் செய்பவர்களுக்குச் சினேகிதன். தணிக்கையாளன். ஈனஸ்திரீகளைச் சேர்பவன். இவர்கள் மூலம் நோய் பற்றிக்கொள்பவன் என்க.

## *ஜாதக சார தீபத்தில் பாத பலன்*

1. ஆயில்யம் 1 ம் பாதம் - சந்ததியற்றவன்
2. ஆயில்யம் 2ம் பாதம் - பிறர் காரியம் செய்பவன்
3. ஆயில்யம் 3ம் பாதம் - நோயாளி
4. ஆயில்யம் 4ம் பாதம் - அழகன், பாக்கியசாலி.

இந்த நட்சத்திர கண்டாந்தத்தில் பிறந்தவன் அல்பாயுள் உள்ளவன். (ஆயில்யத்தின் கடைசி 4 நாழிகை கண்டாந்தம் எனப்படும்)

## ஆயில்ய நட்சத்திரத்தின் நாழிகைகளில் பிறந்தவர்கள் பலன், அங்க பலன்.

| | |
|---|---|
| 1. முதல் 5 நாழிகை | சிரசு-ராஜ்யம் சம்பத்து |
| 2. 5 முதல் 12 நாழிகை | முகம்-பித்ருநாசம் |
| 3. 12 முதல் 14 நாழிகை | நேத்ரம்-மாத்ருநாசம் |
| 4. 14 முதல் 17 நாழிகை | புஜம்-பித்ருபக்தி |
| 5. 17 முதல் 25 நாழிகை | கைகள்-விசேஷ பக்தி |
| 6. 25 முதல் 37 நாழிகை | மார்பு-தன நாசம் |
| 7. 37 முதல் 42 நாழிகை | தொடை - சன்யாசம் |
| 8. 42 முதல் 51 நாழிகை | குதம்-சம்போகப்பிரீதி |
| 9. 51 முதல் 56 நாழிகை | பாதம்-தனம் சம்பத்து |

## ஆயில்யம் பாத பலன் வேறு நூல்களில்

*1ம் பாதம்-சுபம். ஆனால் பெண்ணானால் மாமியாருக்கு அரிஷ்டம்.*

*2ம் பாதம் - குடும்பத்துக்கு அரிஷ்டம்.*

*3ம் பாதம் - தாய்க்கு அரிஷ்டம்.*

*4ம் பாதம் - தகப்பனுக்கு அரிஷ்டம்.*

### சுவடி எண். 1500 மரண கண்டிகை சொல்லும் நட்சத்திர பாதபலன்

**1ம் பாதம்**

**சிறிதே உண்ணும் பொய் சொல்லான் சிவந்த கண்ணன் செறிகுழலான்**
**அறிவு மிகவும் பெருங்குணத்தான் அடைந்தோர்க் கன்பன் அழகியனாம்**
**பொறிசேர் மைந்தன் மனையாளை பொருளாய் எண்ணாப் புகழ் விளங்கும்**
**வெறிசேர் குழலின் மடமாதே வியாழன் காலில் பிறந்தானே ! (91)**

*(சுவடி எண். 1500)*

நறுமணம் வீசும் கூந்தல் உள்ள பெண்ணே. ஆயில்யம் முதல் பாதமான வியாழன் காலில் பிறந்தவன் குணங்கள் வருமாறு.

இவன் குறைவாகவே உண்ணுவான். பொய் சொல்லாதவன். சிவந்த கண்ணும் நெருங்கிய அடர்த்தியான

தலைமயிரும் உள்ளவன். அறிவாளி, நல்ல குணமுள்ளவன். தன்னை அண்டியவர்களுக்கு அன்பு செய்பவன். அழகானவன், திறமையான மனைவியையும் கூட மகளையும் கூட மதிக்காதவன், (அவர்களுக்கு அடிமைப்படாதவன்) என்க.

*இதற்குக் காலச்சக்கர தசை*

| | |
|---|---|
| மேஷச் செவ்வாய் | 7 வருடம் |
| ரிஷப வெள்ளி | 16 வருடம் |
| மிதுன புதன் | 4 வருடம் |
| கடகச் சந்திரன் | 21 வருடம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருடம் |
| கன்னி புதன் | 9 வருடம் |
| துலாம் வெள்ளி | 16 வருடம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| தனுசு வியாழன் | 10 வருடம் |
| ஆக வயது | 100 வருடம் |

**2ம் பாதம்**

**ஆரையும் அறிந்து பேசும் அரும்பொருட் கன்பன் சால**
**சீரியம் செய்ய வல்லான் சிந்தையில் செய்வ தெல்லாம்**
**வாரியே பொய்கள் சொல்லான் மனம்பிறர்க் கறிய ஒண்ணான்**
**காரியக் குசல னாகும் காரியங் கிஷத்தி னானே ! (92)**

(சுவடி எண். 1500)

யாரையும் நன்கு தெரிந்து வைத்துக்கொண்டுதான் பேசுவான். அரிய பொருளாகிய செல்வத்தை விரும்புபவன். அதிகமாக பொய் சொல்லாதவன். இவன் மனதை யாரும் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு அழுத்தமானவன். இவன் சனியின் அங்கிஷத்தில் பிறந்தவனாகும்.

**இதற்குரிய கால சக்கர தசைகள்**

| | |
|---|---|
| மகரச்சனி | 4 வருஷம் |
| கும்பச் சனி | 4 வருஷம் |
| மீன வியாழன் | 10 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| கடக சந்திரன் | 21 வருஷம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருஷம் |
| மிதுன புதன் | 9 வருஷம் |
| ஆக வயது | 85 வருஷம் |

**3ம் பாதம்**

ஊனம துடைய னாகும் உறவொடு பழியும் பாரான்
மேனியு முருவும் நல்லான் மிக்கதோர் அறிவு மில்லை
ஈனமேல் ஒன்றும் சாரான் இடரது புரிய வல்லான்
கானகந் திரிந்து வாழும் காரியங் கிஷத்தி னானே ! (93)

*(சுவடி எண். 1500)*

இவன் உடலில் ஏதாவது ஊனமிருக்கும். உறவினரிடம் பழிபாவம் உண்டாகும்படி எதுவும் செய்வான். இவனிடம் ஈனமான கீழ் தன்மையான குணம் ஒன்றும் இராது. இவன் பிறருக்கு இடர், அதாவது துன்பம் செய்யவல்லவன். காடுகளில் திரிந்து சுற்றி வாழ்பவன்.

**இதற்குக் காலச்சக்கர தசை**

| | |
|---|---|
| 1. ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| 2. மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| 3. மீன வியாழன் | 10 வருஷம் |
| 4. மகரச் சனி | 4 வருஷம் |
| 5. கும்பச் சனி | 4 வருஷம் |

| | |
|---|---|
| 6. தனுசு வியாழன் | 10 வருஷம் |
| 7. விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| 8. துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| 9. மிதுன புதன் | 9 வருஷம் |
| ஆக வயது | 83 வருஷம் |

**4ம் பாதம்**

மாந்துளிர் போல மேனி மனத்துடன் கல்வி கற்கும்
ஏந்திய குலத்துக் கெல்லாம் இசைந்ததோர் குருவு மாகும்
காய்ந்தபின் நடக்க மாட்டான் கனங்குழை யார்க்கு நல்லன்
சேர்ந்தவர்க் கன்ப னாகும் செய்யபொற் காலி னானே ! (94)

*(சுவடி எண். 1500)*

இவன் நிறம் மாந்துளிர் போன்று இளஞ்சிவப்பாக இருக்கும். மனம் வைத்து நன்றாக கல்வி கற்பவன். தான் பாதுகாத்து வரும் தன் குலம் முழுவதற்கும் ஏற்ற வழிகாட்டியான குருவாகவும் இருப்பான். வெயில் காயும் போது வெயிலில் நடக்கமாட்டான். பெண்களுக்கு இனியவன் தன்னைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம், அன்பு செய்பவன். இதுவே மீன குரு அங்கிஷத்தில் பிறந்தவன் குணங்களாகும்.

**இதற்குக் கால சக்கர தசை**

| | |
|---|---|
| கடகச் சந்திரன் | 21 வருடம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருடம் |
| கன்னி புதன் | 9 வருடம் |
| துலாம் வெள்ளி | 16 வருடம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| தனுசு வியாழன் | 10 வருடம் |
| மகரச் சனி | 4 வருடம் |
| கும்பச் சனி | 4 வருடம் |
| மீன வியாழன் | 10 வருடம் |
| ஆக வயது | 86 வருடம் |

# கர்ம விபாகம்

## *வடமொழி நூலில் சொல்லிய ஆயில்ய நட்சத்திரம் 1ம்பாதத்தில் பிறந்தவர் பூர்வ புண்ய சாந்தி வரலாறு*

**சிவபெருமான் சொல்லுகிறார்:** சுந்தரியான உமையவளே! ஆயில்யம் முதல் பாதத்தில் பிறந்தவர்களைப் பற்றிய செய்திகளைக் கேள். உலகப்புகழ் பெற்ற காசி நகரத்திற்கு மேற்கே மாண்டவ்யம் என்ற ஊர் உண்டு. அங்கு நிறைய மனிதர்கள் வாழ்கிறார்கள். அங்கே ஒரு வேளாளன் உப்பு உற்பத்தி பண்ணிக்கொண்டிருந்தான். அவன் டிண்டிமன் என்ற பெயரில் புகழ்பெற்று விளங்கினான். அவனுக்குக் கௌரி என்ற மனைவியுண்டு. இவன் நிறைய பணம் சேர்த்தான். ஆனால் தானம் எதுவும் செய்யவில்லை. ஒரு நாள் புண்ணிய வசத்தால் பிராமணர்களை அழைத்து உணவு உண்ண வைத்தான். அவர்கள் மகிழும்படி தட்சனையும் கொடுத்து அனுப்பினான். அதன் பின் அலங்கரித்த ஒரு காராம் பசுவையும் புரோகிதனுக்குத் தானம் பண்ணினான்.

இதைப் பார்த்த வேறு ஒரு பிராமணன் அந்த வேளாளனிடம் தனக்குத் தரவேண்டிய பசுவை வேறு ஒருவனுக்கு எப்படிக் கொடுக்கலாம்? என்று சண்டை செய்தான். தான் உயிரை விட்டு விடுவதாகவும் அவனைப் பயமுறுத்தினான். இதனால் சினங்கொண்ட வேளாளன், அந்த பிராமணனைத் திட்டித் தீர்த்தான். இதனால் மனம் நொந்த அந்தணன் விஷமுண்டு இறந்தான்.

அதன்பின் பல காலம் சென்று வேளாளனும் அவன் மனைவியும் இறந்தனர். இவன் கும்பிபாகம் என்ற நரகத்தில் தள்ளப்பட்டான். எமதர்மன் ஆணையால் வேளாளனை தூதர்கள் 5 லட்சம் ஆண்டுகள் நரகத்தில் வாட்டி வதைத்தனர்.

அதன்பின் பாம்பாகவும், அடுத்து கழுகாகவும் பிறவி எடுத்தான். அதன் பின் மத்திய தேசத்தில் மனிதனாகப் பிறந்தான். ஆனால் பூர்வ பாபத்தால் அவனுக்குப் புத்திரர்கள் இல்லை. இவன் உடலிலும் வியாதிகள் பற்றிக்கொண்டன.

தேவி ! இப்பொழுது பாபத்துக்குப் பிராயச்சித்தம் சொல்லுகிறேன் கேள் !

இவன் காயத்திரி மந்திரத்தையும் சூரிய மந்திரத்தையும் 5 லட்சம் முறை உருவேற்றி பூசை செய்விக்கவேண்டும். அதன்பின் எண் கோண ஓம குண்டம் செய்வித்து அதில் 10ல் ஒருபாகம் ஓமம் பண்ணி வைக்க வேண்டும். அதில் 10ல் ஒருபங்கு மார்ச்சனம் செய்யவேண்டும். அதன்பின் 6 பலம் எடையில் துர்க்கையின் மூர்த்தி ஒன்று பண்ணவேண்டும். முறைப்படி பூஜையும் செய்யவேண்டும். பிறகு துர்க்கையை நோக்கி பிரார்த்தனை செய்யவேண்டும்.

துர்கே தேவி நமஸ்துப்யம் ஸ்ர்வஸித்தி ப்ரதேஸ்வரி !
இமாம் பூஜாம் க்ருஹீத்வா துமம கார்யம் ப்ரஸாதய !!

என்ற சுலோகத்தைச் சொல்லி ஜபம் செய்து பூஜை செய்ய வேண்டும்.

ஹே துர்க்கா தேவி ! உன்னை நமஸ்காரம் செய்கிறேன். நீ எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றி வைப்பவள். என்னுடைய இந்த பூஜையை ஏற்றுக்கொண்டு இப்பொழுது நான் வேண்டும் இந்தக்காரியத்தை நிறைவேற்றித் தருவாயாக.

கீழ்க்கண்ட நாமங்களைச் சொல்லி துர்க்கையை அர்ச்சித்துப் பூசிக்கவேண்டும்.

ஓம் ஹ்ரீம் மஹேஸ்வர்யை நம / ஓம் தும் துர்காயை நம/ ஓம் காமப்ரதே துப்யம் நம /ஓம் ஈஸ்வர்யை நம /ஓம் தாபத்ரயபகாய நம / ஓம் விஷ்ணவே நம / ஓம் சர்வேஸ்வராய நம / ஓம் பைரவாய நம / ஓம் மார்த்தாண்டாய நம /

இந்த 10 மந்திரங்களையும் சொல்லி அந்த பதுமையை பூஜிக்கவேண்டும். அதன்பின் பக்தியுடன் அந்த மூர்த்தியை தகுந்த அந்தணனுக்குத் தானம் பண்ண வேண்டும்.

பாவம் நீங்கும் நிமித்தம் 5 பாத்திரங்கள் தானம் பண்ண வேண்டும். அதன்பின் புதிய துணி முதலியவற்றைத் தானம் பண்ணவேண்டும். அதன்பின் ஒரு தேங்காயை துளை போட்டு அதில் ஐந்து ரத்தினங்களை நிரப்பி கங்கை நடுவில் தானம் பண்ணவேண்டும். அப்படிச் செய்வதால் இவன் மனைவியினுடைய மலட்டுத் தன்மை நீங்கும். அதன்பின் அவளுக்குக் குழந்தைகள் பிறக்கும்.

## ஆயில்ய நட்சத்திரம் 2ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ புண்ய சாந்தி வரலாறு

**சிவபெருமான் சொல்லுகிறார்:** பழங்காலத்தில் அனகாபுரி என்று ஒரு நகரம் இருந்தது. அங்கு ஒரு வேளாளன் தன் காரியங்களை ஒழுங்காகக் கருத்துடன் செய்து வந்தான். இவன் பசு எருமை முதலியவற்றை வாங்கி விற்கும் தொழிலைச் செய்து வந்தான். இதில் நிறையப் பணம் சேர்ந்தது. ஆனால் அதைப் பாதுகாக்க முடியவில்லை. இவன் பெயர் துலம்பன். இவனுடைய பசுக்கள் மேயும் போது ஒரு தடவை மிகவும் கடுமையான மழை பெய்தது. இதனால் அவை கஷ்டப்பட்டு பெரும்பாலானவை இறந்து போயின. இந்த துலம்பன் அவைகளை வைக்கோல் கூறையாலோ அல்லது மற்றவைகளாலோ பாதுகாக்கவில்லை. அதன்பின் பலகாலம் சென்று இறந்தான். பசுக்களைக் காப்பாற்றாத பாவத்தால் 1000 ஆண்டுகள் நரகத்தில் கஷ்டம் அனுபவித்தான். அதன்பின் நாயாய்ப் பிறவி எடுத்தான். அதன்பின் அவனுக்கு மனிதப்பிறவி கிடைத்தது. அவன் செய்த பாவத்தால் அவனுக்கு மனிதப்பிறவி கிடைத்தது. அவன் செய்த பாவத்தால் அவனுக்குப் புத்திரப்பேறு ஏற்படவில்லை. அதனாலேயே அவனுக்குப் பல நோய்கள் உண்டாயின. இருந்தாலும் புண்ணிய காலங்களில் அவ்வப்பொழுது இவன்

தானம் பண்ணினான். இதனால்தான் இந்த பிறவியில் இவனுக்கு உணவு முதலியவை கிடைத்தது.

இவன் பாபத்துக்கு இப்பொழுது சாந்தி கருமத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக! இவன் தன் மொத்த பணத்தில் 20ல் ஒரு பாகத்தை எளியவர்களுக்குத் தானம் செய்ய வேண்டும். சந்தோஷ மனத்துடன் ஒரு லட்சம் முறை காயத்திரி ஜபம் செய்விக்கவேண்டும். அதில் 10ல் ஒரு பாகம் ஹோமம் பண்ணுவிக்கவேண்டும். அதில் 10ல் ஒரு பாகம் மார்ச்சனமும் செய்விக்கவேண்டும்.

அதன்பின் பிராமணனுக்குத் தகுந்த தட்சினை கொடுக்க வேண்டும். இதனால் அந்த வேளாளனின் ரோகங்களும் மலட்டுத் தன்மையும் நீங்கும். பின்பு சிறந்த ஆண் குழந்தை பிறக்கும். வீட்டில் மகிழ்ச்சி பொங்கும்.

## *ஆயில்ய நட்சத்திரம் 3ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வபூண்ய சாந்தி வரலாறு*

**சிவபெருமான் சொல்லுகிறார்:** கங்கையின் வடகரையில் ஒரு பூமாலை தொடுக்கும் தோட்டக்காரன் சந்திரன் என்பவன் இருந்தான். தன் கலையில் மிகச் சிறந்தவனாக இருந்தான்.

அவன் தன் காரியமும் கடமையும் கண்ணாக இருந்து வந்தான். அவன் மனைவி அகலமான கண்களுடைய அழகுள்ளவள். சந்திரவதி என்ற பெயருடையவளாக இருந்தாள்.

அங்கு குருதாஸ் என்ற பெயருடைய வைசியன் ஒருவன் இருந்தான். அவனும் தன் கடமை மறவாதவனாகவும், செல்வந்தனாகவும் இருந்தான். தோட்டக்காரனும் இவனும் நண்பர்களானார்கள். அப்பொழுது வைசியன் அவனிடம் பாதுகாக்கும்படி நிறைய பொற்காசுகள் கொடுத்திருந்தான். 3லட்சம் பொற்காசுகள் வைசியன் கொடுத்தான். அதைத் தோட்டக்காரன் புதைத்து வைத்தான்.

இருவரும் மாசி மகத்தில் புனித நீராட பிரயாகைக்குச் சென்றனர். அந்த தோட்டக்காரன் வீடு திரும்பினான். ஆனால் காசியில் வைசியன் இறந்துபோனான். காசியில் இறந்ததால் அவன் நேராக சிவபெருமானான என்னிடம் வந்தான். கைலாசம் கிடைக்கப்பெற்றான்.

தோட்டக்காரன் வைசியனின் மனைவியுடன் நன்கு அனுபவித்தான். பல வருடங்கள் கடந்து தோட்டக்காரனும் அவன் மனைவியும் இறந்தனர். அதன்பின் அவன் கந்தர்வ லோகத்துக்கு தன் புண்ணிய வசத்தால் சென்றான். மனைவியுடன் ஆயிரம் வருடங்கள் சுவர்க்க போகம் அனுபவித்து பின்னால் மனிதப்பிறவியாக பூவுலகில் பிறந்தான். நிறைய பணக்காரனாக இருந்தான். அந்தணர்களின் நம்பிக்கைக்கு பாத்திரமாக இருந்தான். பூர்வ ஜென்ம பாவத்தால் அவன் மனைவி குருடியானாள். ஆண் சந்ததி இன்றி பெண் குழந்தைகளே பிறந்தனர்.

அதற்கான சாந்தியைச் சொல்கிறேன்!

இவன் வீட்டில் உள்ள பணத்தின் 6ல் ஒருபங்கை பிராமணர்களுக்குத் தானம் பண்ணவேண்டும். 40 தோலா எடை தங்கத்தால் வைசியனுடைய மூர்த்தி ஒன்றைச் செய்ய வேண்டும். இதை பூஜை செய்து பிராமணனுக்குத் தானம் பண்ண வேண்டும். ஆறங்க வேதங்களைப் பாராயணம் செய்விக்க வேண்டும். ஜாத வேதசே என்ற மந்திரத்தை ஜபம் பண்ணுவிக்க வேண்டும்.

பிறகு பாழடைந்த கிணறு துறவுகளை மராமத்து செய்யவேண்டும். இந்த மாதிரி புண்ணியங்கள் செய்தால் அவனுக்கு ஆண் சந்ததி ஏற்படும்.

## *ஆயில்ய நட்சத்திரம் 4ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ புண்ய சாந்தி வரலாறு*

**சிவபெருமான் சொல்லுகிறார்:** அயோத்தி மாநகரம் மிகவும் பவித்திரமும் புண்ய பலன் கொடுக்கவும் வல்லது.

அயோத்தி நகரத்துக்கு மேற்கே 4 மைல்கள் தொலைவில் லட்சுமணபுரி என்றொரு நகரம் இருந்தது. அங்கு மால் என்ற பெயருடைய ஓடக்காரன் ஒருவன் பணக்காரனாகவும் தெய்வபக்தியுடையவனாகவும் இருந்தான். அவனுக்கு கேசவி என்ற பெயரில் மனைவி உண்டு. ஓடக்காரன் தன் தொழிலில் நிறைய சம்பாதித்தான். அவன் இரக்கமில்லாத வனாகவும் ஆமைகள்மேல் நிரம்ப பகையுள்ளவனாகவும் இருந்தான். பல காலம் சென்று அவன் இறந்தான். அதன் பின் மஹாகர் என்ற நரகத்தில் தள்ளப்பட்டான். 60 ஆயிரம் வருடம் அவன் நரகவேதனை அனுபவித்தான். பின் அவன் மரவெட்டை, தவளைப்பிறவி எடுத்துக் கடைசியில் மனிதனாகப் பிறந்தான். அவனுக்குப் போன ஜென்ம பாவத்தால் வெண்குஷ்டம் ஏற்பட்டது. அவனுக்கு பெண்களே பிறந்தன. அவர்களுள் சில அபாக்கியவதி களாகவும், விதவைகளாகவும் ஆனார்கள். சிலர் தாசித் தொழிலிலும் ஈடுபட்டனர். இளமையில் இவனுக்கு குழந்தை பிறப்பது நின்று விட்டது. இவன் பாவத்திற்கு உபாயம் சொல்கிறேன் கேள்.

தன் சொத்து பணம் இவற்றின் 6ல் ஒரு பங்கை தகுதியுள்ள பிராமணனுக்குத் தானம் பண்ண வேண்டும். விஷ்ணுவை பூசித்து விஷ்ணோரராப் என்ற மந்திரத்தால் ஒரு லட்சம் தடவை பூசிக்க வேண்டும். இதனால் அவன் பண்ணிய பாவம் நீங்கி ஆண் சந்ததி ஏற்படுகிறது. எல்லா நோய்களும் நீங்குகின்றன.

### இனி ஆயில்ய நட்சத்திரத்தின் விம்சோத்தரி தசைகள் விவரம்

| | |
|---|---|
| புதன் தசை | 17 வருடம் |
| கேது தசை | 7 வருடம் |
| சுக்கிர தசை | 20 வருடம் |
| சூரியன் தசை | 6 வருடம் |
| சந்திரன் தசை | 10 வருடம் |
| செவ்வாய் தசை | 7 வருடம் |

| | |
|---|---|
| ராகு தசை | 18 வருடம் |
| குரு தசை | 16 வருடம் |
| சனி தசை | 19 வருடம் |
| ஆக வயது | 120 வருடம் |

இவன் நோய் முதலியன

இவன் பிறந்த ஆண்டில் புதன் தசையால் தத்து 5 வயதில் வெதுப்பு சிலந்தியும், 16 வயதில் வெப்பம், அதனுடன் சனி நோய் தாக்கும். 23 வயதில் மீண்டும் சிலந்தியாலும், பெண்களாலும் தொல்லை. 30 வயதில் 4 கால் மிருகத்தால் தாக்கம். 38ம் வயதில் சத்துருவால் தொல்லை. 40 வயதில் ஆயுதத்தால், மீண்டும் மிருகத்தால், 55 வயதில் சுழல் வாதத்தாலும், 57 வயதில் உதரநோய் (மகோதரம்) என்ற நோயாலும் பாதிப்பு, 64 வயதில் அதிக நீர்போக்கால், 68வது வயதில் வாதத்தால், 76 வயதில் அக்கினியாலும் பாதிப்பும் கஷ்டமும் ஏற்படும்.

இவை கடந்து 81வது வயது சென்று, ஐப்பசி மாதம் ஞாயிற்றுக்கிழமை பூர்வபட்சம், ஏகாதசி தினம் 7நாள் கடந்து பித்தம் அதிகமாகி அஸ்தமித்து 3 நாழிகைக்கு மேல் மரணம்.

இவன் பிறந்த லக்கின சாரம் சூரியனாகில் சீமானாவான்.

இவன் பிறந்த லக்கின சாரம் சந்திரனாகில் பிரபு ஆவான்.

இவன் பிறந்த லக்கின சாரம் செவ்வாயாகில் நோயாளி.

இவன் பிறந்த லக்கின சாரம் புதனாகில் வித்துவானாம்.

இவன் பிறந்த லக்கின சாரம் குருவாகில் மந்திரியாம்.

இவன் பிறந்த லக்கின சாரம் சுக்கிரனாகில் வெள்ளாண்மை அதிகம்.

இவன் பிறந்த லக்கின சாரம் ராகு கேது சாரமானால் மணியக்காரன்.

## *பிறர் மதப்படி ஆயில்யம் நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்*

### *பொதுப்பலன் -ஆண்கள்*

**உடல் அமைப்பு:** ஆயில்யத்தில் பிறந்தவர்களின் உடலமைப்பு முரட்டுத்தனமானதாக இருக்கும். வெளித் தோற்றத்தில் கட்டான உடல் அமைப்பும், முரட்டுத்தனமான செய்கைகள் கொண்டவனாகத் தெரிந்தாலும், உள் உறுப்புகள் பலமானதாக இருக்காது.

**குண நலன்கள்:** இவனுக்காக தன் உயிரைக் கொடுத்தவர்களிடம் கூட, இவன் நன்றி உள்ளவனாக இருக்கமாட்டான். வெளிப்படையாக, தான் உண்மை உள்ளவனாகவும், பிறருடைய துன்பத்தில் பங்கு கொள்பவனாக பிறருக்குக் காட்டிக்கொண்டாலும், உண்மையில் இவன் குணம் அப்படிப்பட்டதல்ல. அவன் பெரிய வாய்ச்சொல் வீரன். தன் பொய் முகத்தை பிறருக்கு காண்பித்து, பொய்யான வார்த்தை ஜாலத்தால் பிறரை நன்கு கவர்ந்துவிடுவான். இதுவே இவனுக்கு மிகப்பெரிய சொத்து. இப்படிப்பட்ட குணங்கள் தேவைப்படும் ஸ்தாபனங்களில் இவன் வேலை செய்வது மிகப்பொருத்தம்.

இயல்பாகவே தலைமைப்பதவி பெறவேண்டும் என்ற ஆசை இருப்பதால் அரசியலில் ஈடுபட்டால் நன்கு பிரகாசிப்பான். உயர்ந்த இடத்தையும் அடைவான்.

மேற்சொல்லிய குணங்கள், நல்ல குணங்களாக தோன்றாவிட்டாலும், இவன் மிகவும் கெட்டிக்காரன். சாமர்த்தியசாலி, ஒரு நாட்டின் தலைவனாக இருந்து நாட்டை நடத்திச்செல்லக் கூடியவன்.

சில ஆயில்ய நட்சத்திரக்காரர்கள் மேற்சொன்ன குணங்களுக்கு மாறாக இருப்பார்கள். பணிவாகப் பேசுபவர் களாகவும், மன உறுதியற்ற பயந்தாங்கொள்ளிகளாகவும்

இருப்பார்கள். இவர்கள் இயற்கையில் முரடர்கள் அல்ல. ஆனால் இவர்கள் பேச்சும், நடந்துகொள்ளும் முறையால் உலகம் இவர்களை முரடர்களாகக் கருதும்.

இவர்கள் கண்மூடித்தனமாகப் பிறரை நம்பிவிட மாட்டார்கள். இருந்தாலும் திருடர்கள். கொலைகாரர்கள். கறுப்பு சந்தைக்காரர்கள் இவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. இவனுக்கு ஏழை பணக்காரன், நல்லவன், தீயவன் என்ற பாகுபாடு கிடையாது. இவன் தன்னுடைய சுதந்திரத்திற்கு குறுக்கீடு ஏற்படுவதை விரும்புவதில்லை. தன்னுடைய தலைமைப் பதவியை ஏற்கவும், தன் சொற்களுக்கு கட்டுப்பட்டு நடக்கவும் தயாராக இருக்கும் நபர்களை இவனுக்கு மிகவும் பிடிக்கும். அவர்களை நேர்வழி அல்லது குறுக்குவழியாக இருந்தாலும் சரி தான்சொன்னதை கேட்கவேண்டும். அதன்படி நடக்க வேண்டும். இவன் அப்படிப்பட்டவர்களையே விரும்பு வான். அப்படிப்பட்டவர்களுக்காக இவன் தன் உயிரைக் கூட தியாகம் செய்யத் தயாராக இருப்பான். இவன் எப்பொழுதும் பிறரை ஏமாற்றவோ அல்லது பிறர் சொத்தை அபகரிக்கவோ விரும்பியதில்லை. ஆனால் இவனை மற்றவர்கள் தவறாகப் புரிந்துகொள்வார்கள்.

ஆயில்ய நட்சத்திரக்காரர்களின், பலவீனம் என்ன வென்றால், இவர்கள் எப்போதும் தேவைப்படாதவர்களுக்கு உதவி செய்வார்கள். உண்மையில் தேவை இருப்பவர்களுக்கு உதவி செய்ய மறுத்துவிடுவார்கள். இப்படி ஒருவேளை உதவி தேவைப்படுபவர்களுக்கு உதவி செய்துவிட்டால் அதை பலருக்கும் சொல்லி தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளத் தயங்கமாட்டார்கள். அதாவது இவர்கள் பிறர் புகழ்ச்சிக்கு ஆசைப்படுவார்கள்.

எவ்வளவு குறை நிறைகள் இவர்களிடம் இருந்தாலும், பொதுவாக இவர்கள் அதிர்ஷ்டக்காரர்கள், பிரபல மானவர்கள், கோபக்காரர்கள், இவர்களைக் கூர்ந்து

கவனித்தால் இது புரியும். இவர்கள் தேவைப்படாத விஷயத்துக்கு கோபப்படுவதும், தேவையான சமயத்தில் கோபப்படாமல் அமைதியாக இருப்பதும் இவர்கள் குணம். ஒரு பக்கம் இவர்கள் அதிர்ஷ்டசாலியாக இருந்தாலும், அந்த அதிர்ஷ்டத்தின் பலனை இவர்களால் அனுபவிக்கமுடியாது. பெரும்பாலும் இவர்களுடைய உறவினர்களும், நண்பர்களுமே இவர்களுக்கு குழிபறிப்பார்கள். கடைசியில் இவர்களை காப்பாற்றுவது அன்னியர்கள் தாம். இவர்களை அறியாதவர்கள் தான்.

**கல்வியும் பொருளீட்டலும்:** இவன் கல்வி, பொருளாதாரம், வியாபாரம் அல்லது கலைத்துறையில் அமையலாம். சனி பார்வை ஏற்பட்டால் போலீஸ் அல்லது மிலிட்டரியில் வேலைபார்க்கலாம். பிஸினஸ் லைனாக இருந்தால், எண்ணை அல்லது திரவ சம்பந்தப்பட்ட பொருள்களில் வியாபாரம் அமையும். உத்தியோகமாக இருந்தால் திடீரென அடிக்கடி பிரமோசன் கிடைப்பது, திடீரென பதவி இறக்கம் ஏற்படுவதுமாக இருக்கும். 35, 36 வயதுகளில் அதிகமான பண இழப்பும், 40 வயதில் எதிர்பாராத பணவரவும் சம்பாதிக்காமலேயே வருமானங் களும் ஏற்படும்.

**குடும்ப வாழ்க்கை:** குடும்ப வாழ்க்கையின் மொத்த பொறுப்புகளையும் இவனே ஏற்கவேண்டி இருக்கும். இது அனேகமாக குடும்பத்தில் மூத்தவனாக இருப்பதால் நேரலாம். இவன் மனைவி சரியாகப் புரிந்துகொள்ள மாட்டாள். இவள் தன்னுடைய பங்கு சொத்தை அல்லது பணத்தை தன் மற்ற உறவினர்களுக்கு, அதாவது நாத்தனார், ஒன்றுவிட்ட சகோதரர்கள் இவர்களுக்குத் தர விரும்ப மாட்டாள். (பெண்ணானால்)

**ஆரோக்கியம்:** உடல் உறுப்புகள் உப்புதல், மஞ்சள் காமாலை, கால் முழங்கால்களில் வலி, வயிற்றுக் கோளாறுகள் போன்ற வியாதிகள் பாதிக்கப்படலாம். இவன் போதை மருந்துக்கு அடிமையானவன்.

## பொதுப்பலன் - பெண்கள்

ஆயில்ய நட்சத்திரத்துப் பெண்கள், ஆண்களுக்குச் சொல்லப்பட்ட பெரும்பாலான பலன்களையும் அனுபவிப்பர்.

**உடல் அமைப்பு:** இவர்கள் பெரும்பான்மையினர், பார்ப்பதற்கு அழகாக காணப்படமாட்டார்கள். செவ்வாயும் இந்த நட்சத்திரத்தில் இருந்தால் இவர்கள் உடல் அமைப்பு அழகாக இருக்கும்.

**குணங்கள்:** இவள் தன்னை கட்டுப்பாட்டில் வைத்திருப்பாள். எதைப்பற்றியும் கவலைப்படாதவள். வெட்கம் இவர்களின் உடன்பிறந்த குணம். ஒழுக்கமான நடத்தை உடையவள். தன் உறவினர்களிடம் நல்ல மரியாதையும் மதிப்பும் பெறுவாள். வார்த்தைகளை பிரட்டிப்பேசியே தன் எதிரிகளை தோற்கடித்துவிடும் திறமையைப் பெற்றவள்.

**தொழில் வருமானம்:** தன் அலுவலக வேலையில் திறமை உள்ளவள். நல்ல கல்வி பெற்றிருந்தால், அலுவலகத்தில் நிருவாகப் பொறுப்பில் இருப்பாள். கல்வி அறிவு இல்லாத பெண்கள், விவசாய வேலை அல்லது மீன் விற்பவளாகவோ தொழில் செய்வாள்.

**குடும்ப வாழ்க்கை:** வீட்டு நிருவாகத்தில் திறமை பெற்றவள். இவள் தன் கணவன் வீட்டு உறவினர்களிடம் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் சதி செய்து இவளுக்கும் இவள் கணவனுக்கும் இடையே மோதலை உருவாக்கிவிடுவார்கள்.

**ஆரோக்கியம்:** மூட்டு வலிகள், ஹிஸ்டீரியா, நீர்க்கோர்வை, மஞ்சள்காமாலை, அஜீர்ணம் போன்ற

வியாதிகள் பீடிக்கும். அடிக்கடி ஏற்படும், நரம்பு தளர்ச்சியால் அவதிப்படுவாள். இந்த நட்சத்திரத்தில் பெரியவள் ஆனால் ஜாதகி மற்றவர்களுடன் பிரியமாயிருப்பாள். நல்ல குழந்தைகளைப் பெறமாட்டாள். கருணை அற்றவளாக இருப்பாள்.

## *ஆயில்ய நட்சத்திரத்தில் இருந்த சூரியனை மற்ற கிரகங்கள் பார்த்த பலன்*

**சந்திரன் பார்த்தால்:** இவன் மற்றவர்கள் வேலையைச் செய்வான். தன்னுடைய பலம், தைரியம் இவற்றை தன்னுடைய உறவினர்கள் காரணமாக இழப்பான். அதனால் இவன் உடல் சித்திரவதையை அனுபவிக்கும்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் தன்னுடைய உறவினர்களை வெறுப்பான். மற்றவர்களுக்கு தொந்தரவு கொடுப்பான். நீர் சம்பந்தமான வியாதிகள் ஏற்படும்.

**புதன் பார்த்தால்:** இவன் நன்கு படித்தவன். கல்வித்துறையில் புகழ் பெறுவான். ஆட்சியாளர் களிடமிருந்து பல நன்மைகளைப் பெறுவான்.

**குரு பார்த்தால்:** குடும்பவட்டத்தில் இவனை எல்லோரும் மரியாதையுடன் நடத்துவார்கள். செல்வத்திற்காக எப்போதும் அரசாங்கத்தைச் சார்ந்திருப் பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** பெண்களுடன் பழகுவதன் மூலம், இவன் நல்ல துணிமணிகள், செல்வம் மற்ற பொருள்களை எல்லாம் பெறுவான். ஆனால் இவன் மனம் எப்போதும் துக்ககரமான நிலையிலேயே இருக்கும்.

**சனி பார்த்தால்:** இவன் ஏழையாக இருப்பான். மஞ்சள்காமாலை, பெராலிஸிஸ் போன்ற வியாதிகளால் துன்பப்படுவான்.

## ஆயில்ய நட்சத்திரத்தில் இருந்த சந்திரனை மற்ற கிரகங்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** கட்டிடம் கட்டும் தொழிலில் ஈடுபட்டவனாக இருப்பான். மற்றவர்கள் இவனிடமிருந்து எந்தவிதமான உதவியையும் பெற்றுவிட முடியாது. அரசாங்கத்தில் கடைநிலையில் ஊழியம் செய்பவனாக இருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் கொடூரமானவன். இவன் குடும்பத்திற்கு ஒரு கரும்புள்ளி. தன் தாய்க்குத் தீங்கிழைப்பான்.

**புதன் பார்த்தால்:** செல்வம், சிறந்த மனைவி மக்கள். நல்லபெயர் எல்லாம் பெற்றவன். பாதுகாப்பு அல்லது போலீஸ் டிபார்ட்மெண்டில் நல்ல அந்தஸ்தில் உத்தியோகம் பார்ப்பான்.

**குரு பார்த்தால்:** எல்லோரிடமும் நல்லமுறையில் பழகுவான். விவாதம் செய்வதில் சிறந்தவன். ஆனந்தமான திருமண வாழ்க்கையை அனுபவிப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** வாழ்க்கையில் எல்லாவிதமான சுகங்களையும் வசதிகளையும் சந்தோஷத்தையும் அனுபவிப்பான். நீர் சம்பந்தமான நோய் அல்லது பெண்கள் நோயினால் கஷ்டப்படுவான்.

**சனி பார்த்தால்:** இவன் ஏழை. பொய் சொல்பவன். தன் தாய்க்கு எதிராக இவன் செயல்பாடுகள் அமைந்து இருக்கும். அதிகமாக பிரயாணம் செய்வான்.

## ஆயில்ய நட்சத்திரத்தில் உள்ள செவ்வாயை மற்ற கிரகங்கள் பார்த்தால்

**சூரியன் பார்த்தால்:** மிகவும் தைரியமானவன், ஏதாவது கல்வி ஸ்தாபனத்தின் தலைமையாளனாக இருப்பான். மஞ்சட்காமாலையால் பாதிக்கப்படுவான்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் நிரந்தர நோயாளி. நிறைய பொருள் இழப்பான். இழந்ததை நினைத்துக் கவலைப் படுவான்.

**புதன் பார்த்தால்:** தன்னுடைய குடும்ப உறுப்பினர் களைக் காக்கும் பொறுப்பு உடையவன். குறுகிய மனப்பான்மையும், கீழ்மட்ட வேலைகளை செய்பவ னாகவும் இருப்பான்.

**குரு பார்த்தால்:** அரசியல் வட்டாரத்தில் மிக உயர்ந்த நிலையை அடைவான். நன்றாகப் பழகும் குணமுடையவன். கீர்த்தி உள்ளவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** நல்ல பணக்கார குடும்பத்தில் உயர்ந்தவனாக இருந்தாலும், செல்வம், அழிந்து மிகவும் ஏழ்மை நிலையை அடைவான். வாழ்க்கையில் அதிக தடங்கல்களை எதிர்கொள்வான்.

**சனி பார்த்தால்:** அதிக நிலபுலன்களை உடையவன். அரசாங்கத்திடமிருந்து அல்லது ஆட்சியாளர்களிடமிருந்து நன்மைகளைப் பெறுவான்.

## ஆயில்ய நட்சத்திரத்தில் உள்ள புதன் மற்ற கிரகங்களை பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** தன் மனைவி மூலம் நிறைய துன்பத்தை அனுபவிப்பான். சரியான ஊதாரி. ஒல்லியான தேகம் உடையவன்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் துணி நெய்பவனாகவோ, துணி வியாபாரியாகவோ அல்லது கட்டிடங்களை உருவாக்குபவனாகவோ இருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** நிறைய படித்தவன். சாஸ்திரங்களை கரைத்துக் குடித்தவன். செல்வத்தை சேர்க்கப்

பேராசைப்படுவான். பொல்லாதவன். இரும்பு சாமான்களை உற்பத்தி செய்பவனாகவோ அல்லது ஆயுதங்கள் உற்பத்தி செய்பவனாகவோ இருப்பான்.

**குரு பார்த்தால்:** நல்ல அறிவு படைத்தவன். நல்லது கெட்டது எது என்பதை அறிந்துகொள்ளும் சக்தி பெற்றவன். செல்வந்தன், இனிமையாகப் பேசுபவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** வாயாடி, வசீகரமான உருவ அமைப்பு உள்ளவன். சங்கீதத்திலும் நாட்டியத்திலும் விருப்பம் உடையவன்.

**சனி பார்த்தால்:** தன்னுடன் உறவாடும் நபர்களின் வெறுப்பையும், விரோதத்தையும் சம்பாதித்துக் கொள்வான். தன் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வெளியூரில் வசிப்பவன்.

## *ஆயில்ய நட்சத்திரத்தில் உள்ள குருவை மற்ற கிரகங்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் முதல்தர அரசியல்வாதியாக திகழ்வான். அல்லது அரசாங்க டிபார்ட்மெண்ட் ஏதாவதில் தலைமைப் பொறுப்பில் உள்ளவனாக இருப்பான்.

**சந்திரன் பார்த்தால்:** தன்னுடைய குடும்பத்துக்கு அபாயத்தை உண்டாக்கி, அதன் அழிவினால் கிடைக்கப் பெறும் செல்வத்தை அனுபவிப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் பெரிய பதவி, நல்ல குழந்தைகள், சிறந்த மனைவி, பெருஞ்செல்வம் எல்லாம் பெற்றவன். தன் உடல் முழுவதும் அடிபடுவதனால் ஏற்பட்ட காயங்களை உடையவன்.

**புதன் பார்த்தால்:** தன் உறவினர்களிடமிருந்து நிறைய சொத்துக்களையும், பணத்தையும் உயில்கள் மூலம் பெறுவான். அரசியலில் ஒரு நல்ல இடத்தை அடைவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** அனேக பெண்கள் இவனை சுற்றி வட்டமிடுவர். அவர்களால் அதிகப்படி சந்தோஷத்தை அனுபவிப்பான். மேலும் இவர்கள் மூலம் பணத்தையும் சம்பாதிப்பான்.

## ஆயில்ய நட்சத்திரத்தில் உள்ள சுக்கிரனை மற்ற கிரகங்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் ஒரு கோபக்கார பெண்ணிடம் மாட்டிக்கொண்டு அவளால் பல துன்பங்களை அனுபவிப்பான். இவனுக்கு ஏராளமான விரோதிகள் உண்டு.

**சந்திரன் பார்த்தால்:** தன் தாய்க்கு அபாயத்தை உண்டாக்குவான். இவனுக்கு முதலில் பிறப்பது பெண்ணாகவும், அடுத்து பிறப்பது ஆணாகவும் இருக்கும்.

**செவ்வாய் பார்த்தால்:** எல்லாக் கலைகளிலும் திறமை உடையவன். இவன் அறிவாளி.

**புதன் பார்த்தால்:** பெரியவர்களுக்கு மரியாதை தருபவன். தன்னுடைய குடும்பத்தை நேசிப்பவன். ஆனால் தன் மனைவி மக்களால் மனவேதனை அடைபவன்.

**குரு பார்த்தால்:** இவன் ரொம்ப தந்திரசாலி. ஆனால் எல்லோருக்கும் உதவிகரமாக இருப்பான். தன் குடும்ப வாழ்க்கையை பணம், பொருள், வசதிகளுடன் ஆனந்தமாக அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** இவன் ஏழை, தன்னுடைய வாழ்க்கையை நன்றாக அனுபவிக்க முடியாது. ஒழுக்கமற்ற நடத்தையை உடையவன்.

## ஆயில்ய நட்சத்திரத்தில் நின்ற சனியை மற்ற கிரகங்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** மனைவியிடமிருந்து சுகத்தைப் பெறமாட்டான். நல்ல உணவு கிடைக்கும். தன் தாயின் மன உளைச்சலுக்குக் காரணமானவன்.

**சந்திரன் பார்த்தால்:** குடும்பத்தில் ஏற்படும் துக்கங்களுக்கும் துன்பங்களுக்கும் இவனே பொறுப்பாளி ஆவான்.

**செவ்வாய் பார்த்தால்:** இவன் உடம்பு மிகவும் பலவீனமானது. அரசாங்கம் அல்லது ஆட்சியாளர் களிடமிருந்து தனம் பெறுவான்.

**புதன் பார்த்தால்:** பொல்லாத்தனமாகப் பேசுவான். அனாவசியப் பயணங்கள் செய்வதில் ஆர்வமுண்டு. முரட்டுத்தனம் உள்ளவன்.

**குரு பார்த்தால்:** விவசாயத்தின் மூலம் செல்வம் சேரும். நல்ல மனைவியும் மக்களும் அமைவார்கள். பெரும் பணத்தை சேமித்து வைப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** கவர்ச்சிகரமான அம்சங்கள் நிறைந்தவன். அதிகார பலத்தை அனுபவிப்பான். தண்ணீர் அல்லது தண்ணீரால் உண்டாக்கப்படும் பொருள்களின் வியாபாரத்தில் நிறைய செல்வம் சம்பாதிப்பான்.

## ஆயில்ய நட்சத்திர முதல் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** சூரியன் ஆயில்யம் 1ல் இருந்து லக்கினம் அனுசம் அல்லது கேட்டையில் இருந்தால், இவன் நாட்டின் ஒரு மூலையிலிருந்து மறு மூலை வரை பிரயாணம் செய்வான். இவன் சன்னியாசி ஆகி புனித தலங்களுக்குச் செல்வான். ஏழைகளை பராமரிப்பான். ஆனால் தன் சொந்த குடும்பத்தை கவனிக்கமாட்டான். பாதம், கணுக்காலில் வியாதி ஏற்படும்.

**சந்திரன் நின்றால்:** இவன் பணக்காரன். கனிவானவன். அறிவாளி, வாகனங்கள் மூலம் சம்பாதிப்பான். பல சமூகத்தவர்கள் இவனுக்கு மரியாதை செலுத்துவார்கள்.

**செவ்வாய் நின்றால்:** செவ்வாயும் லக்கினமும் ஆயில்யம் முதல் பாதத்தில் அமைந்தால், கூடவே சந்திரனும் இருந்தால் இவன் இரும்பு முனை ஆயுதத்தால் காயமடைவான். மேலும் தலை அல்லது கண்நோய் ஏற்படும். செவ்வாயுள் ராகுவும் ஆயில்யம் 1ல் இருந்தால் தம்பதிகளுக்குள் அடிக்கடி உரசல்கள் ஏற்படும்.

**புதன் நின்றால்:** இவன் புத்திசாலி, நடவடிக்கைகள் ஸிஸ்டமாடிக்காக இருக்கும். 2 குழந்தைகள் இருக்கும். இவனது 2 லங்ஸ்களும், நீர் நிறைதல் அல்லது ஓட்டைகள் ஏற்படுவதால் பாதிக்கப்படும்.

**குரு நின்றால்:** தேவைக்கு மேலேயே செல்வம் இருக்கும். சிறந்த மனைவி மக்களுடன் நன்றாக வாழ்க்கையை அனுபவிப்பான். ஆனால் சுக்கிரன் நீச்சம் அடைந்திருந்தால் இவன் தன் முதல் மனைவியை இழந்து 2வது முறையாக மணம் புரிந்து, அவள் மூலம் இரண்டு பெண்களைப் பெறுவான்.

**சுக்கிரன் நின்றால்:** இதில் சந்திரனும் கூடி இருந்தால் திருமணவாழ்வு நாசமடையும். தம்பதிகள் பிரிந்து வாழ நேரும். அதிருப்தியான மணவாழ்க்கை அமையும். இதனால் மூளை சமநிலையில் இராது. மனப்போராட்டம் இருந்து கொண்டே இருக்கும். இந்த சேர்க்கை மிகவும் மோசமானது.

**சனி நின்றால்:** இவன் தாயோ அல்லது மக்களோ இல்லாதவன் என்று ஜோதிடச் சுவடிகள் கூறுகின்றன. ஆனால் அனுபவத்தில், இவனுக்கு தாய் உயிருடன் இருப்பாள். ஆனால் இவன் இவளுடைய அன்பையும் பாசத்தையும் பெறமாட்டான். ஏனெனில் இவன் தாய் பொறுப்புள்ள வேலையில் இருப்பதால் எப்போதும் பிசியாக இருப்பாள். இவனுக்குத் தேவைப்பட்ட அன்பைத் தந்து, இவனை கவனித்து வளர்க்க முடியாத நிலையில் இழன் தாய் இருக்கலாம். அதனால் இவன் ஏறக்குறைய தாயற்ற பிள்ளையாக வளர வேண்டிய நிலையில் இருப்பான். இது

இவனுக்கு ஒரு வரப்பிரசாதம். ஏனெனில் இந்த சனி தாயில்லாத பிள்ளை போன்ற வாழ்க்கையை அளிப்பான். அல்லது தாய் பிசியான வேலையில் இல்லாவிட்டாலும் இவன் தாயின் மரணம் நிச்சயமான ஒன்று.

**ராகு நின்றால்:** இந்த அமைப்பில் லக்கினமும் அமையநேர்ந்தால் இவன் எல்லாவித தீமைகளிலிருந்தும் காக்கப்படுவான். நீண்ட ஆயுளை உடையவன்.

**கேது நின்றால்:** பெண்ணாக இருந்தால் நர்ஸ் உத்தியோகம் செய்பவள். ஆனால் குருவும் திருவோணம் நட்சத்திரத்தில் இருந்தால் இவள் ஒரு டாக்டராகவோ அல்லது கெமிஸ்டாகவோ ஆக முடியும். ஆணாக இருந்தால் டிபன்ஸ் டிபார்ட்மெண்டில் வேலைக்குச் சேருவான்.

## *ஆயில்யம் நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** இத்துடன் லக்கினம் கேட்டை நட்சத்திரத்தில் இருந்தால், இவன் தன் தகப்பனை சீக்கிரமாகவே இழப்பான். இவன் மனைவி இவன் முன்னேற்றத்துக்குத் தடைக்கல்லாக இருப்பான்.

**சந்திரன் நின்றால்:** இவனுடைய மரணம், கழுத்து கான்ஸர் அல்லது கிளான்ட் TB சம்பந்தப்பட்ட நோயினால் நேரலாம். சந்திரனும் செவ்வாய், சனி அல்லது ராகு சேர்த்து லக்கினம் சதயம் 2ம் பாதத்தில் இருந்தால் இவன் காக்கை வலிப்பால் கஷ்டப்படுவான்.

**செவ்வாய் நின்றால்:** ராகுவும் இதில் இருந்தால் வேலைக்காரர்களுடன் மிகவும் அன்யோன்யமாக இருப்பான். இதனால் இவன் பல அவமானங்களை சந்திக்க நேரும். தற்கொலை எண்ணம் அடிக்கடி தோன்றும். சுமாரான பணக்காரன்.

**புதன் நின்றால்:** இவன் கரஸ்பாண்டன்ட் அல்லது டிராவலிங் ஏஜண்டாக இருப்பான். பட்டு அல்லது பட்டு நூல் அல்லது பட்டுத்துணிகள் விற்பவராகவும் இருக்கலாம். வயிற்றில் வாயு தங்குவதால் கஷ்டப்படுவான். லங்ஸ் கோளாறும் வயிற்றுக் கோளாறும் உள்ளவன். ஹிஸ்டீரியா ஏற்படவும் ஏதுவுண்டு.

**குரு நின்றால்:** இவன் பெரிய ஸ்காலராக இருப்பான். தருமகுணம் உள்ளவன். உண்மை பேசுபவன். தபஸ் செய்வான். தீர்காயுளும், கடமை உணர்வுகளும் கொண்டவர்களாக இவனுடைய குழந்தைகள் இருப்பார்கள். எல்லோரும் இவனை கௌரவிப்பர். இதை செவ்வாய் பார்த்தால், இவன் ஆயிரத்தில் ஒரு ஸ்காலராக சிறப்பெய்துவான்.

**சுக்கிரன் நின்றால்:** இரண்டு மனைவிகள் ஏற்படும். அதீதமான காம இச்சை கொண்டவன். கடைசியில் இதனால் துக்கத்தை அனுபவிப்பான். இவனை கடைசி காலத்தில் கவனித்துக்கொள்ள யாரும் இருக்கமாட்டார்கள். இதயக்கோளாறு, மூட்டுவலி, பக்கவாதம் முதலியவை களால் வயதான காலத்தில் கஷ்டப்படுவான்.

**சனி நின்றால்:** உயர்ந்த படிப்பைப் படித்தவன். வெளிநாடுகளுக்குப் பயணம் செய்வான். விஞ்ஞானம் சம்பந்தமாக தொழில் அமையும். பலவீனமான உடல்கட்டு உடையவன். விஞ்ஞானம் அல்லது கெமிக்கல் சம்பந்தப் பட்ட தொழிற்சாலைகளில் இருக்கலாம்.

**ராகு நின்றால்:** சந்திரன், செவ்வாய், சனி மூவரும் கூடி இங்கு நின்று, லக்கினமும் ஆயில்யம் 2ல் இருந்தால் இவனுடைய ஆயுள் 7 வயது வரைதான்.

**கேது நின்றால்:** இவன் தைரியமானவன். மத சம்பந்தமான சடங்குகளைத் தவறாது செய்வான். இவனுடைய வாழ்க்கையில் ஏற்படும் பெரும்பாலான

துன்பங்களுக்கு இவன் தந்தையே காரணகர்த்தாவாக இருப்பார். இவனும் இவனுடைய தாயும் இவன் தந்தையால் புறக்கணிக்கப்படுவார்கள். இருப்பினும் இவன் தன் சுய முயற்சியால் வாழ்க்கையில முன்னேறி சம்பாதித்து தன் தாயை வீடும் வாசலுமாய் சௌகர்யமாக வாழவைப்பான்.

## ஆயில்ய நட்சத்திரம் மூன்றாம் பாதத்தில் கிரகங்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** சூரியன் இங்கு இருந்து லக்கினம் அபிஜித் அல்லது உத்திராடத்தில் இருந்தால், இவன் அன்பான மனைவியைப் பெறுவான். ஆனால் அவள் பித்த சம்பந்தமான ரோகத்தால் கஷ்டப்படுவாள்.

**சந்திரன் நின்றால்:** விபத்தால் எலும்பு முறிவதிலோ அல்லது கப சம்பந்தமான நோயினாலோ மரணம் ஏற்படும். உறவினர்கள் இவனை மிகவும் துன்புறுத்துவர். நோய் பட்ட பிறப்பு உறுப்பைக்கொண்டவன்.

**செவ்வாய் நின்றால்:** இது வெறுப்பேற்றும்படியான அமைப்பு. மணவாழ்வில் ஒற்றுமை இராது. இவன் பொல்லாதவனாக மாறுவான். கண்கோளாறு ஏற்படும். சிலர் தன் மனைவியைக் கொன்றுவிட்டு சிறையில் வாடுவர்.

**புதன் நின்றால்:** போதைப் பொருளுக்கு அடிமை ஆனவன். டிராப்ஸி, வயிற்றில் வாய்வு தொந்தரவு இவைகளால் கஷ்டப்படுவான். உத்தியோகத்தில் ஒரு நல்ல பொஸிசனில் இருப்பான். அடிக்கடி பிராயணம் செய்யும்படி நேரும். 40 வயது வரை தம்பதிகளுக்குள் ஒற்றுமையின்றி குடும்பம் நடக்கும். அதன் பிறகு நிலைமை மாறும்.

**குரு நின்றால்:** இவன் மனைவி தன் தந்தை வீட்டிலிருந்து ஏராளமான செல்வத்தைக் கொண்டுவருவாள். இங்கு லக்கினமும் அமைந்தால் இவன் சட்டம் மூலமாகவும் செல்வம் அடைவான். மேலும் தன் முன்வினைப் பயனால்

வாழ்க்கையில் சந்தோஷத்தையும் ஆரோக்கியத்தையும் பெறுவதுடன் இவனுக்கு மறுபிறவியும் கிடையாது.

**சுக்கிரன் நின்றால்:** இந்த நிலையில் லக்கினம் அமைந்து சந்திரனும் சுக்கிரனும் கூட இங்கிருந்தால், இவன் இளம் வயதிலேயே ஒழுக்கம் கெட்டவனாக இருப்பான். ஆதலால் பெற்றோர்கள், சிறுவயதிலேயே இவர்களுடைய நடவடிக்கைகளை கவனித்து ஒழுங்குபடுத்த வேண்டும்.

**சனி நின்றால்:** எதற்கெடுத்தாலும் சந்தேகப்படும் குணம் உண்டு. ஒன்றுமில்லாததற்கெல்லாம் முரட்டுத் தனமாக நடந்துகொள்வான். உடலெங்கும் வெட்டுகளும் காயங்களும் ஏற்படும். நேர்மையற்ற முறையில் இவன் பொருள்சம்பாதிப்பான். புரோக்கர் வேலை செய்வான்.

பெண் ஜாதகத்தில் சனியும் செவ்வாயும் இங்கிருந்தால் இவள் தன் தகப்பனால் ஒதுக்கப்பட்டவளாக- கைவிடப் பட்டவளாக இருப்பாள். சிலர் தாயும் மகளும் இருவருமே தந்தையால் கைவிடப்பட்டு வாழ்தற்குரிய வழியே இல்லாமல் மிகவும் ஏழ்மை நிலையில் இருப்பார்கள்.

**ராகு நின்றால்:** குடும்ப உறுப்பினர்களின் தடையையும் எதிர்ப்பையும் எதிர்நோக்க வேண்டி வரும். கடைசியில் இவன் விரட்டியடிக்கப்பட்டு தனியாக வாழ வேண்டி வரும். இவன் மனைவி கூட இவனை விட்டு விலகி விடுவாள்.

**கேது நின்றால்:** இவனுக்கு ஏராளமான நண்பர்கள் இருப்பார்கள். அவர்களால் இவனுக்கு எந்தவிதமான பிரச்சினையும் ஏற்படாது. அவர்களால் இவன் உயர்ந்த ஸ்தானத்தைப் பெறுவான். நிலம், கட்டிடம் போன்ற பிஸினசில் ஈடுபட்டு நல்ல லாபம் ஈட்டுவான்.

**குறிப்பு:** ஆயில்ய நட்சத்திரக்காரர்கள், பூரம், ஹஸ்தம், சுவாதி, சதயம், பூரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுடன் எந்தவித தொடர்பும் வைத்துக்கொள்ளக்கூடாது.

---

## அத்தியாயம் - 13

# சிம்மராசியின் பொதுக்குணங்கள்

நிலைபெறத் திரிந்து வாழும் நிரம்பிடுங் கல்வி கற்கும்
வலியுள மனத்த னாகும் வஞ்சக மொன்றுஞ் சொல்லான்
பலன்தனி யுடைய னாகும் பழிதனக் கஞ்சி வாழும்
சிலையது வல்ல னாகும் சிறப்புள சிங்கத் தானே. (95)

*(சுவடி எண். 1500)*

இவன் ஒரு இடத்தில் நிலையாக இருந்து கொண்டு அங்கிருந்து பல இடங்களுக்கும் போய் வந்து கொண்டிருப்பான். நிறைய படித்தவன். வலிவான அஞ்சாத மனமுள்ளவன். வஞ்சனை எதுவும் சொல்லமாட்டான். தனக்கே உரித்தான நல்ல குணங்கள் உள்ளவன். பழிக்குப் பயந்து வாழ்பவன். வில் மற்றும் (தற்கால துப்பாக்கி போல) ஆயுதங்களிலும் வல்லவன் ஆவான். சிம்மராசியில் பிறந்தவன் இந்த சிறந்த குணங்கள் உள்ளவன் என்பதாம்.

**உருவம்:** பொதுவாக இவர்கள் கட்டுமஸ்தான எலும்பு வலிமை உள்ள சரீரம் உள்ளவர்கள். அரச கம்பீரம் தோற்றத்தில் உண்டு. நிறைபுகை நிறத்தில் செம்மைகலந்தது. நடையில் மிடுக்கு, முகத்தில் கடுமை, உடல் அங்க பாவங்களில் ஆண்மை கலந்த துடிப்பு, இவையெல்லாம் இவர்கள் வாய் திறவாமலே ஆணை செய்யும். இவர்கள் சாமர்த்தியத்தைக் காட்டும்.

**குணங்கள்:** தைரியசாலி, முரடர், முன்கோபி, ஆனால் நியாயவாதி, அடக்குவார், அடங்கமாட்டார். இந்த ராசிப்பெண்கள் தம் கணவர்களை அடக்கி ஆட்டி வைத்துக்கொள்வர். அந்தக் கணவர்களும், இப்பெண்களின் நிருவாகத்திறன் சலியா உழைப்பு எதையும் சாதிக்கும் சாமர்த்தியம் இவைகளால் தொல்லை இல்லாமல் எல்லாம் இவர்களிடமே விட்டு விட்டு நிம்மதியாக இருந்து விடுவர்.

அசையாத நம்பிக்கை உடையவர். துக்கம் கவலை அவற்றின் குறிகள் இவரிடம் காணமுடியாது. நன்றியையும் மறக்கமாட்டார். எல்லையற்ற பொறுமையும் உண்டு. நண்பர்களை நம்புவர். நிருவாகத்திறன் அதிகம். சர்வாதிகாரத்துவம் இவர்கள் பிறப்புரிமை, புகழ், நம்பிக்கை, அயராத உழைப்பு எல்லாவற்றிற்கும் எடுத்துக்காட்டாக விளங்குவார்.

**காதல், கல்யாணம்:** தன் சொல் கேட்டு நடக்கும், நயந்து குழையும் பாவையே இவர்களுக்குத் தேவை. கடமை, மனைவியைக் கண்ணுக்குள் வைத்துக் காப்பவரும் இவர். கொஞ்சம் வஞ்சனை இருப்பது கண்டால் அஞ்சாமல் உறவை வெட்டிவிடுவார். பெண்களும் அப்படியே. சிம்ம ராசி ஆண் அல்லது பெண்ணிடம் அடங்கும். பெண் அல்லது ஆண் ஜோடியாக அமையுமானால் வாழ்க்கை சுவர்க்கமாகும். இவர்களில் சிலர், மனைவியர் நிரந்தரமாக நோயாளியாகி விட்டாலும், தங்கள் இச்சைக்காக மறுமணம் செய்து கொள்ளாமல் கடைசி வரை மனைவிகளுக்குச் சேவை செய்து பாதுகாக்கவும் செய்வார்கள்.

**நோய்கள்:** இருதயக்கோளாறு, முதுகுத்தண்டு வலி, மூட்டு வீக்கம், இதற்கு ஆளும் ராசியான மகரத்தின் அதிபதி சனிக்குரிய முடக்குவாதம், கீல் வாதம் முதலிய நோய்கள் காணலாம். ஆனால் சிங்கம் வலிவைக் குறிப்பதால் பெரும்பாலும் இவர்கள் நோயுறுவதில்லை.

**பொருளாதாரம்:** நிறைய சம்பாதிப்பர். சிங்கம் அரசனாகையால் தன் அந்தஸ்த்தை நிலை நாட்டும். கௌரவச் செலவாளியும் இவரே. பசித்தாலும் புலி புல் தின்னாது என்பது போல், வறுமையிலும் கௌரவச் செலவைக் குறைத்துக் கொள்ளமாட்டார்கள். தாராளச் செலவாளிகளும் இவர்களே. சில சமயங்களில் கடன் கொடுத்து ஏமாறுவதும் பொதுவாக தங்கள் தாராளத்தையும் கௌரவச் செலவையும் குறைத்துக்கொண்டால் இவர்கள் பொருளாதாரம் முன்னேறும்.

**தொழில்கள்:** பெரிய அரசாங்க ஐ.ஏ.எஸ், அதிகாரிகள், தொழிற்சாலை மானேஜர்கள், பெரிய நிறுவனங்களின் நிருவாக அதிகாரிகள், டைரக்டர்கள், சுரங்கப்பொருள் சம்பந்தமான, மலைகள் சம்பந்தமான தொழில்கள், காவல்துறை, படைத்துறை, வெளிநாட்டுத் தூதர்கள், கட்டடக் கலைஞர்கள், இன்ஜினியர்கள் முதலியவர்கள் சிம்ம ராசியைக் குறிப்பவர்களே.

**நண்பர்கள்:** இவர்கள் ஸ்திர ராசிக்காரர்கள். ஆகையால் யோசித்து நண்பராவர். நிலைத்த நண்பர்கள் இவர் களுக்குண்டு. நண்பர்களுக்காக எல்லா உதவியும் செய்யத் தயாராக இருப்பர். அவர்களுக்காக நிறைய செலவும் செய்வர்.

**சிங்க ராசிக் குழந்தைகள் வெறும் முரடுகள்:** வீட்டில் உள்ள சிம்ம ராசி குழந்தைக்கு மற்ற எல்லாமே அடங்கி நடக்கும். படிப்பிலும் சூடிகை. விளையாட்டிலும் வீரன். வெளியில் முறையற்ற வழிகளில் ஈடுபடுவர். பிள்ளைகளை அடித்துவிட்டு தம் தாய் தந்தையர்க்கு வம்பு தேடிக்கொண்டு வரும் குழந்தைகளும் சிம்மராசிதான். மொத்தத்தில் சிம்மராசிக்குக் கௌரவமும் கம்பீரமும் பெரிது.

| | |
|---|---|
| அதிர்ஷ்ட நிறம் | வெளிர் சிவப்பு; வெளிர் பச்சை; வெளிர்ரோஸ் ஏறக் குறைய சிங்கத்தின் செங்காவி நிறம். |
| அதிர்ஷ்ட ரத்தினம் | மாணிக்கம். |
| அதிர்ஷ்ட எண். | 1, 4, 5 |
| அதிர்ஷ்ட தினம் | ஞாயிற்றுக்கிழமை, புதன்கிழமை. |

### சிம்மம் லக்கினமாக வந்தால் அதன் பலன்

கம்பீர வசனமுள்ளவன், நல்ல ஆகாரமுடையவன். திடமானவன், பசியுடையவன், பாபகர்மி, மாத்ரு பித்ரு

துவேஷி, கோபி, தைரியவான்,தனவான், புத்திமான், கலைவல்லவன், ஜனவசியன், கபடி, நேத்திர சிரமுக ரோகி, வேலை செய்ய விருப்பமுடையவன், 5-10-27-30 இந்த வயதுகளில் ஜ்வரத்தால் பீடை, இந்த லக்கினத்தைச் சுபக்கிரகம் பார்த்தால் 80 வயது. இந்த லக்கினத்திற்கு நல்லவர்கள், கெட்டவர்கள், சந்திரன் 12க்குடையவன், சமப்பலன்.

செவ்வாய் 4, 9க்குடையவன், வலுத்த யோககாரகன், சூரியன்சுபாவ பாவி, ஆனால் லக்கினாதிபன் ஆதலால் சுபன்.

புதன் 2, 11க்குடையவன் மாரகன் அசுபன்.

சுக்கிரன் 3, 10க்குடையவன் அசுபன்

குரு 5, 8க்குடையவன் இவர்களுக்கு சுபன்.

5ம் அதிபத்தியத்தால் 8ம் ஆதிபத்திய அசுபம் குறைவு.

சனி 6, 7க்குடையவன் இருவகையும் அசுபனே.

**சுபயோகங்கள்:**

1) சூரியன் + செவ்வாய்
2) சூரியன் + குரு
3) குரு + செவ்வாய்

இந்த சிம்மத்திற்குக் காரகன் சூரியன், செவ்வாய்

சமன்-சனி, சந்திரன், குரு.
அசுபர் - புதன், சுக்கிரன்
மாரகர் - புதன், குரு.

9க்குடையவன் என்ற வகையில் செவ்வாய் இதற்கு பாதகாதிபதி

இந்த லக்கினத்தை சுபக்கிரகம் பார்த்தால் 80 வயது வரையிலிருப்பான். சூரியன், செவ்வாய் சுபர்கள், புதன் சுக்கிரன் பாபிகள். செவ்வாய், சுக்கிரன் யோகக்காரர்கள், செவ்வாயும் சுக்கிரனும் கூடியிருந்தால் தீய பலனைக்

கொடுப்பார்கள். செவ்வாய் யோககாரகனான போதிலும் சதுர்த்த கேந்திராதிபதி சம்பந்தத்தினால் தீய பலனைக் கொடுப்பான். இவர்கள் இருவரும், கூடியிருந்தால் நல்ல பலனைக் கொடுப்பார்களென்று கூறும் நூல்களும் சில உள. சனி - சுக்கிரன் மாரகர்கள், புதன் கொல்லான், மாரக ஸ்தானமாகிய 2-3-7-8-12ல் இருந்தால் மாரக சமானமாகிய கண்டத்தைக் கொடுப்பார்கள்.

சத்யாசார்ய மதப்படி சிம்ம லக்கின பலன்

பிரியவாதி, அல்பகாந்திமான், நீண்ட கைகால்களை உடையவன், புண்ணிய பாபகங்களுள்ளவன். பூசிக்க உரிய சரீரமுள்ளவன். விரணமுள்ளவன், தனவான், உலோபி, பந்துக்களிடம் ஸ்நேகமுடையவன். அதிக பெண் சந்ததிகளுடையவன். உடன் பிறந்தாரிடம் கலகம் செய்பவன். தர்மத்தில் பிரியமுள்ளவன். குறைந்த வருமானமுள்ளவன். புத்தியுடன் காரியத்தைச் செய்யக்கூடியவன். நாற்கால் ஜீவன், ஆயுதம், பித்தரோகம், சுற்றத்தார்களின் விரஹம், மலையிலிருந்து விழுதல் சுருக்கு முதலியவைகளால் மரணம் சம்பவிக்கலாம்.



## அத்தியாயம் - 14

# மகம்

**குறிப்பு:** சுவடி எண் 1500 மரண கண்டிகையில் மக நட்சத்திரத்திற்குரிய பாடல் குறையாகவும், சிதைந்தும் உள்ளது. எனவே பல ஆண்டுகட்கு முன் அச்சான நூலிலிருந்து இதற்குரிய செய்யுள் எழுதப்படுகிறது.

### *மக நட்சத்திரப்பலன்*

**தந்தைதாய் மிகவும் பேணும் சார்பொடும் புவியும் சேரும்**
**சிந்தைநூன் மிகவும் கற்கும் தேசம்போய்த் திரிய வல்லான்**
**வந்தனை உகந்து வாழும் மணமது முடிக்க வல்லான்**
**மந்திரம் பொய்கள் சொல்வான் மகத்திநான் தோன்றி னானே. (96)**

*(சுவடி எண். 1500)*

இந்த மகநட்சத்திரத்தில் பிறந்தவன் தன் தந்தை தாயாரைப் பரிவுடன் பாதுகாப்பான். சொந்தமாக மனை வீடு முதலியவை சேர்ப்பான். நன்கு சிந்தித்து படிக்க வேண்டிய உயர் கல்வியை உழைத்து நன்கு கற்பான். பெரியோரிடம் வணக்கமுடன் பணிவுடன் நடந்துகொள்வான். தன் விருப்பப்படி பிடித்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்வான். பல வெளிநாடுகளுக்குச் சென்று பல பயணங்கள் செல்வான். சாதுர்யமாகப் பொய்கள் சொல்வான். இவையே மகத்தில் பிறந்தவன் குணங்களாகும்.

இன்னானுக்குத் தெய்வம் ஆதித்தன். பூதம்-நட்பு; சாதி-நான்காம் வருணம்; யோனி-ஆண் எலி; பட்சி-கழுகு; விருட்சம்-ஆலமரம். கணம்-இராட்சச கணம். இந்த நட்சத்திரத்தில் வருஷம் பிறந்தால் தானிய உற்பத்தி குறையும். இராசி-சிங்கம்; வாரம்-ஞாயிறு; ஆவணி மாதம் சூனியம்; முப்பது நாழிகைக்கு மேல் 4 நாழிகைக்கு விஷகடிகை. இதில்

வெதுப்பு தோன்றில் பன்னிரண்டு நாழிகையில் தத்து. இதற்கு நெய்யினாலே ஓமம் பண்ணுவது, எள்ளு, அரிசியும் உளுந்தும், தயிரும், சோறும் பலியிடுவது. உடுத்த புடவையும், கம்பளியும், ஆடும் தானம் பண்ணுவது. மூன்று நாளில் சாந்தமடையும். இவன் தாய் தந்தைக்கும் நல்லவன். கணுக்காலும் பெருத்தவன். ஊர் வழிப்போக வேண்டு மானால் இலுப்பைப்பூ தின்று வழிப்போவது நல்லது.

திருமணம் பொருத்தம்-11 இருக்கவேண்டும். இவன் வீட்டிற்குக் கிழக்கு, தெற்கு வாசல் விடுவது, நாள், ஆண் தெய்வம்-சுப்பிரமணியம். யோகினி-கௌமாரி.

இந்நாளில் சுரம் தோன்றில் 10 அல்லது 15 நாழிகையில் விடும். விடாதிருந்தால் 20 நாழிகையில் மரணம். நீதியுடையவன், ஸ்திரீதள்ளன். புளித்த பதார்த்தப்பிரியன். வலது பக்கம் மருவுண்டு. பெண்பிள்ளை அதிகம் உண்டு. பூசை முடிக்கவல்லவன். பிறர் காரியத்தைப் பார்க்க அறிவுடையவன். இவனுக்கு கீழ்வாய், வயிறு பொருந்தி இருக்கும். சத்திய வாக்கியன்.

இந்த நட்சத்திரம் ஐந்து நட்சத்திரங்களாலானது.

மகமும் வெள்ளியும் கூடில் விஷயோகம். திங்கள் கூடில் சித்தயோகம். அரசர்களால் கொண்டாடப்படுபவன். நெற்றியிலோ, அல்லது விலாவிலோ மரு உண்டு. இவனுக்கு கால்நடைச் செல்வம் உண்டு.

**பிறநூல் செய்திகள்:** இவர்கள் செல்வம் மிகுந்தவர்கள். அவனுக்கென்ன குறை. மகவோட்டம் ஓடுகிறது என்ற பழமொழியும் உண்டு. இது உக்கிர சுபாவம் கொண்டது. பாண்டவர்களில் அர்ச்சுனன் இந்த நட்சத்திரத்தில் தான் பிறந்தான். மரம்-ஆலம் என்பதாம். பட்சி-காகமும் ஆகும்.

இதில் பிறந்தவர்கள் தேவி உபாசகர்களாகவும் ஸ்ரீவித்யா நுணுக்கம் தெரிந்தவராகவும் இருப்பார்.

மனைவிமேல் மோகமும் அதிக காமமும் உண்டு. என்ன சிறப்பாக இருந்தாலும், பிற்காலத்தில் மன நிம்மதி இராது.

இது குலநட்சத்திர வகையைச் சேர்ந்தது. இதில் உத்பாதம் தோன்றினால் பஞ்சம், தீ உண்டாகும். இதில் சூரியன் நடந்தால் விலைவாசி நடுத்தரமாக இருக்கும்.

இதில் மழை தோன்றினால் அடைமழையாக தொடர்ந்து பெய்யும். மக ஓட்டம் என்பது மகத்தில் ஓடும் மேகம் என்று பொருள்படும்.

திருமணம், மந்திரப் பிரயோகம், குளம், கிணறு வெட்டுதல் இவை இதில் செய்யலாம்.

பெண் இதில் பெரியவளானால் மகிழ்ச்சியான இல்வாழ்க்கை அமையாது. சாந்தி செய்யவேண்டும்.

இதில் விவசாயம், அதாவது ஏரு உழ முதலியவற்றிற்கு நல்லது.

பெரிய மனிதர்களைப் பார்க்கவும் இசை நடனம் பயிலவும் நன்று.

இந்த நட்சத்திரத்தைப் பிப்ரவரி மாதத்தில் நள்ளிரவில் காணலாம்.

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் அசகாய சூரர். பிறரைக் கட்டுப்படுத்தி தனக்குள் உட்படுத்துபவர். இவர்கள் பிறருக்கு அடங்கமாட்டார்கள். இதில் பிறந்தவர்களால் தாய்மாமனுக்கு அரிஷ்டம் உண்டு. ஆனால் இதற்கு நூலாதாரம் இல்லை. சதா பிரயாணம் உண்டு. சுகந்த பரிமளப் பிரியர்கள். திருமணம், உத்தியோகம் அடுத்தடுத்து கிடைக்கும். இரண்டாந்தார யோகமுண்டு.

மகம் பெண் நட்சத்திரம், சமான நாடி கீழ்நோக்கு நட்சத்திரம். அபசவ்ய நட்சத்திரம் இவர்களுக்கு 75 வயது வரை ஆயுளிருக்கலாம். ஞாயிற்றுக்கிழமை மகம்-சூனியம்.

மகத்தில் பிறந்தவன் ஜெகத்தை ஆள்பவன் என்ற பழமொழி. இவன் பெரிய நிலை உள்ளவன் என்பது தெரிகின்றது. குலதெய்வம், இஷ்ட தெய்வம் இரண்டினிடத்திலும் மிக பக்தி உள்ளவர்கள்.

**மக நட்சத்திரத்தில் காரகங்கள்:** தானியம் வைக்கும் களஞ்சியம், கிடங்கு முதலியன, வீடுகள், தன தானியங்கள் உள்ளவர்கள். பித்ரு பக்தி உள்ளவர்கள், வியாபாரி, சூனியன், காவியப்பிரியன், வேகாத மாமிசத்தையும் உண்பவன். பெண்களிடம் விரோதம் உள்ளவன்.

## *தமிழ் சாதகாலங்காரத்தில் மக நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன் குணம்*

**இலவுமுருக்கு அலர்விழியும் தொண்டை தூதுளைபோல் செவ்விதழார் மாதே**
**பல திசையில் சஞ்சாரம் பிரியன் சௌந்தரியன் பாண் மிகுந்த**
**புலவன் முழுக்குப் பிரியன் சுகந்த பரிமளப் பிரியன் பொன்னும் உள்ளான்**
**வலப்புறம் மருவுடையான் நியாயன் அற்பநித்திரையான் மகத்தினானே ! (97)**

மக நட்சத்திரத்தில் பிறந்தவன் பல திக்குகளிலும் பிரயாணம் செய்வதில் விருப்பமுள்ளவன். சிறந்த அழகன், இசை வல்லவன். படித்த வித்துவான். சதா நீரில் நீராடுவதில் பிரியன். நல்ல சுகந்த பரிமளாதிகளைப் பூசி மணப்பவன். செல்வச்சீமான். வலது பக்கத்தில் மச்சமுள்ளவன். நித்திரை குறைவுள்ளவன் என்பதாம்.

**யவன ஜாதகம்:** மக நட்சத்திரத்தில் பிறந்தவன் குரூர சுபாவமுள்ளவன். தடித்த சரீரமுள்ளவன். கோபமுள்ளவன். குருவுடன் வாதம் பண்ணுபவன். சமர்த்தன் ஆனாலும் தெய்வபக்தி, குரு பக்தியும் உள்ளவன் என்பதாம்.

**பிருகத்ஜாதகம்:** அனேக பரிவாரங்களும் நல்ல ஐஸ்வர்யமும் உள்ளவன். போகவந்தன், தெய்வம், பித்ருக்களிடம் பக்தியுள்ளவன். அதிக உற்சாகமுடையவனும் ஆவான்என்பதாம்.

## இனி நட்சத்திர பாத பலன் வருமாறு

காலனைப் போல பயமுள சிவந்த
கண்ணன்பே ராசையாளன் யூகி
கருதிடு சிவந்த மெய்யினன் செவந்த
குஞ்சியான் மகமுதற் காலோன்
போலியான் புத்தி யலன்வடு வுடையான்
பொருட் செலவான் சந்தோஷி
பொன்னிறக் கண்ணன் மாது நோயுடையான்
பொருந்தியே காலிரண்டதற்கே
சாலவும் பலவான் மிக்கநோய் உள்ளோன்
சாது பொல்லாதவன் கடினன்
தாமிகவாசை யுடையவன் தூயன்
தகுதிகாண் மூன்றினில் உதித்தான்
சீலவன் நாரி பேச்சினைக் கேட்போன்
சிரங்குடன் நோயுமுற் றிடுவான்
சிந்தைநோ யுடையான் மதுரவா சகனாம்
தெளிந்துரை நாற்பத மதானமே. (98)

மகம் நட்சத்திரம் முதற்பாதத்தில் பிறந்தவன் எமனைப் போன்ற சிவந்த கண்களும், யாவரும் பயந்தோடத்தக்க சரீரமுள்ளவன். பேராசையுடையவன். புத்திசாலி, சிவந்த மேனியுடையவன். நெருங்கிய மயிர் உள்ளவன் என்றறிக.

இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் யாரும் இகழ்ச்சி செய்யும் பெருமை இல்லாதவன், பொருட்செலவு செய்வதில் சந்தோஷமுள்ளவன். மஞ்சள் நிறமுள்ள கண்கள் உள்ளவன். காது நோயுள்ளவன் ஆவான் என்பதாம்.

மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் மிகுந்த பலவான். அதிக நோயுள்ளவன். துர்க்குணம், சன்மார்க்கம் இவை இரண்டும் உள்ளவன். கட்டுப்பட்ட பேச்சும், வைராக்கிய சீலன். பேராசையுள்ளவன். நல்லவனும் அதே சமயம் பொல்லாப்பு வாய்ந்தவனும் ஆவானென்றறிக.

நான்காம் பாதத்தில் பிறந்தவன் பரிசுத்த மனமுள்ளவன். பெண்கள் பேச்சைக்கேட்டு நடப்பவன். சிரங்கு முதலிய உஷ்ண வியாதிகள் உள்ளவன். மன விசாரமுள்ளவன். நன்மார்க்க விஷயங்களில் பிரவேசிப்பவன். ஆக இந்த குணங்கள் உள்ளவன் என்றறிக.

### *ஜாதக சார தீபத்தில் சொல்லிய பாத பலன்*

முதல் பாதம் - சந்ததியற்றவன்.

இரண்டாம் பாதம் - சந்ததியுள்ளவன்.

மூன்றாம் பாதம் - தீராத நோயுள்ளவன்.

நான்காம் பாதம் - மகா பண்டிதன், மெத்தப்படித்தவன்.

## வடமொழி பெண் ஜாதகப்படி பிறந்த பெண்களின் குணங்கள்

1. மக நட்சத்திரத்தில் பிறந்த பெண் மிகவும் மதிக்கப்படுபவள், சாத்திரங்கள் அறிந்தவள். குருபக்தி உள்ளவள். பிராமணர்களிடத்தில் விசுவாசமுள்ளவள். செல்வம் மிகுந்தவள். பாபமற்றவள். எல்லாவித சௌக்கியங்களும் உள்ளவள்.

2. சாப்பிடுவதில் அதிகப் பிரியமுள்ளவள்; இளமையாக, கன்னியாக இருப்பவள், போகங்கள் அதிகம்.

3. பித்ருபத்தியுள்ளவள். தந்தையிடம் பற்றுள்ளவள்.

தமிழ் கொக்கோக மதன நூல் சொல்லும் இந்த மக நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணின் குணங்கள் வருமாறு

**இந்த நட்சத்திரத்தில் பிறந்தவள் இயக்கி தத்துவத்தைச் சார்ந்தவள்**

**சீரியள் சேர்ந்தார்க் கெண்ணும் சிறுபணி செய்யும் சிந்தை**
**கூரிய குறளைச் சொல்லாள் குணமெனிற் கூடி வாழ்வாள்**
**சூரியன் அன்ன மோக நடையொரு வல்லி யாகும்**
**மாரனை வசிக்க வல்லாள் மகநாட் பிறந்து ளாளே ! (99)**

இந்த நட்சத்திரத்தில் பிறந்தவள் தன்னைச் சேர்ந்தவர்களைச் சிறப்பாக எண்ணுபவள்; அவர்கள் இட்ட வேலைகளைச் செய்பவள். யாரைப் பற்றியும் கோள் சொல்ல மாட்டாள். நல்ல குணவந்தர்களால் அவர்களுடன் கூடி வாழ்பவள். கண்டோர் மோகிக்கும்படி கொடிபோல் ஆடி நடப்பவள். மனம் தனையும் வசப்படுத்தும் பேரழகியாவாள் இவள் என்பதாம்.

## *மரண கண்டிகையில் சொல்லிய மக நட்சத்திர பாத பலன்*
## *முதல் பாதம்*

**வெட்டெனப் பேச வல்லான் வெகுளிமுன் னுடைய னாகும்**
**சிட்டரைத் தெரிந்து வாழும் சிறுதாடி யான னாகும்**
**பட்டயம் அணிந்த தோளான் படைக்கெலாம் தலைவ னாகும்**
**எட்டென என்றும் பேசான் எரியின்அங் கிஷத்தி னானே. (100)**

*(சுவடி எண். 1500)*

இவன் நறுக்குத் தெறித்தாற்போல வெட்டு ஒன்று, துண்டு இரண்டு எனத் தெளிவாகப் பேசவல்லவன். மிகவும் முன் கோபமுண்டு. நல்ல உயர்ந்தவர்களைப் புரிந்து அவர்களுக்கேற்ப வாழும் தன்மையவன். இவன் குடும்பம் சிறியதேயாகும். தோள்வளையம் என்ற அணிகலன் அணிந்தவன். வீரன், படைக்குத் தலைமை தாங்கும் தலைவனாகவும் பணிசெய்வான். (தற்காலத்தில் முப்படையில் ஏதாவது ஒன்றில் கேப்டன் என்று சொல்லும் அல்லது அதுபோன்ற பெரும் பதவி வகிப்பவன்) யாரையும் எடுத்தெறிந்து பேசமாட்டான். இவனே மேஷச்செவ்வாய் அங்கிஷத்தில் பிறந்தவன் ஆவான் என்பதாம்.

**இதற்குக் காலச்சக்கர தசை**

| | |
|---|---|
| தனுசு வியாழன் | 10 வருஷம் |
| மகரச் சனி | 4 வருஷம் |
| கும்பச்சனி | 4 வருஷம் |
| மீன வியாழன் | 10 வருஷம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| மிதுன புதன் | 9 வருஷம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருஷம் |
| கடகச்சந்திரன் | 21 வருஷம் |
| ஆக வயது | 86 வருஷம் |

## மகம் இரண்டாம் பாதம்

மார்பகன் றுயர்ந்த மெய்யன் மதிமுக மருஉண் டென்றும்
சீர்தரும் உண்டி பேணும் செய்யதோர் கொடுங்கண் ணாளன்
ஆரையும் அறிந்து கூறும் அறிவொடு நன்று கற்கும்
சார்வது மாதர் தம்பால் தரும்புகர் காலி னானே. (101)

*(சுவடி எண். 1500)*

இவன், மார்பகன்று உயர்ந்த கம்பீரத் தோற்றமுள்ளவன். சந்திரன் போன்ற இவன் அழகு முகத்தில் மரு ஒன்று இருக்கும். சிவப்பான சினத்தை வெளிப்படுத்தும் கண்களையுடையவன். நல்ல உணவையே விரும்பி உண்பவன். இவன் யாவரையும் அறிந்து வைத்திருப் பவனாவான். அறிவுடன் கவனமாகக் கல்வியை நன்கு சிறப்பாகக் கற்பான். இவன் எப்பொழுதும் பெண்கள் கூட்டத்தின் நடுநாயகமாகவே இருப்பான். இந்த குணங்கள் உள்ளவனே சுக்கிரன் அங்கிஷத்தில் பிறந்தவன் என்பதாம்.

**இதற்குக் காலச்சக்கர தசை**

| | |
|---|---|
| கன்னி புதன் | 9 வருடங்கள் |
| துலாம் வெள்ளி | 16 வருடங்கள் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடங்கள் |

| | |
|---|---|
| *மீன வியாழன்* | *10 வருடங்கள்* |
| *கும்பச் சனி* | *4 வருடங்கள்* |
| *மகரச் சனி* | *4 வருடங்கள்* |
| *தனுசு வியாழன்* | *10 வருடங்கள்* |
| *மேஷச் செவ்வாய்* | *7 வருடங்கள்* |
| *ரிஷப வெள்ளி* | *16 வருடங்கள்* |
| *ஆக வயது* | *83 வருடங்கள்* |

## மகம் மூன்றாம் பாதம்

**மந்திர மறைகள் கற்கும் மாதர்கள் அருளு முண்டாம்**
**சுந்தரப் பலன்கள் சொல்லும் தோளிலே இசைந்து தோன்றும்**
**மந்திரப் பொய்கள் சொல்லான் அரும் பொருள் உடனே வாழும்**
**புத்தியே பெரிய னாகும் புதனின் அங் கிஷத்தி னானே. (102)**

*(சுவடி எண். 1500)*

*மகம் நட்சத்திர மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் மந்திரங்கள் மற்றும் வேதங்களைக் கற்றுத் தேர்பவன். பெண்களால் இவனுக்கு நேசமும் உதவியும் உண்டு. எதிர்காலப் பலன்களை அழகாகச் சொல்லுபவன். அகன்றுயர்ந்த தோள்களுடன் இவன் தோற்றம் கம்பீரமாக இருக்கும். பொய் சொல்லாதவன். அதுவும் தெய்வீக சம்பந்தமான விஷயத்தில் பொய்கள் சொல்லாதவன். கிடைத்தற்கரிதான செல்வத்துடன் வாழ்பவன். நிறைந்த அறிவு உள்ளவன். இவன் புதன் அங்கிஷத்தில் பிறந்தவன் என்க.*

### இதற்குரிய கால சக்கர தசைகள்

| | |
|---|---|
| *கன்னி புதன்* | *9 வருடங்கள்* |
| *சிம்ம ஆதித்தன்* | *5 வருடங்கள்* |
| *கடகச் சந்திரன்* | *21 வருடங்கள்* |
| *மிதுன புதன்* | *9 வருடங்கள்* |
| *ரிஷப வெள்ளி* | *16 வருடங்கள்* |
| *மேஷச் செவ்வாய்* | *7 வருடங்கள்* |

| | |
|---|---|
| தனுசு வியாழன் | 10 வருடங்கள் |
| மகரச் சனி | 4 வருடங்கள் |
| கும்பச் சனி | 4 வருடங்கள் |
| ஆக வயது | 85 வருடங்கள் |

## மகம் நான்காம் கால் பிறந்த பலன்

நீளியன் செய்யன் நல்லான் நிபுணனாய் நீதி சொல்லும்
மாளிகை மனையில் வாழும் மன்னரால் மகிழ்ச்சி யுண்டாம்
வாளிசேர் கண்ணி னாள்மேல் மனமது சார நிற்பான்
காளிசேர் வடிவும் பேணும் காரியங் கிஷத்தி னானே ! (103)

(சுவடி எண். 1500)

இவன் நெட்டையானவன். சிவப்பு நிறம் உள்ளவன். நீதி வழங்குவதில் நிபுணன். மாளிகை போன்ற பெரிய வீட்டில் வாழ்பவன். அரசர்களாலும் அரசாங்கத்தாலும் இவனுக்கு உதவியும் மகிழ்ச்சியும் உண்டு. அம்பு போன்ற முனை மெல்லியதாயுள்ள அகன்ற கண்ணுடைய அழகிய தன் மனைவி மேல் பாசத்துடன் இருப்பான். இவன் காளியை வழிபடுவானாவான். இவனே சனியின் நவாம்சத்தில் பிறந்த மகம் நான்காம் பாதக்காரரின் குணங்களாகும் என்பதாம்.

**இதற்குரிய கால சக்கர தசை வருமாறு**

| | |
|---|---|
| மீன வியாழன் | 10 வருடங்கள் |
| கும்பச் சனி | 4 வருடங்கள் |
| மகரச் சனி | 4 வருடங்கள் |
| தனுசு வியாழன் | 10 வருடங்கள் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடங்கள் |
| துலாம் வெள்ளி | 16 வருடங்கள் |
| கன்னி புதன் | 6 வருடங்கள் |
| சிங்க ஆதித்தன் | 5 வருடங்கள் |
| கடகச் சந்திரன் | 21 வருடங்கள் |
| ஆக வயது | 86 வருடங்கள் |

# கர்ம விபாகம்

## மகம் முதல் பாதத்தின் பூர்வ புண்ணிய சாந்தி விவரம்

**சிவபெருமான் சொல்லுகிறார்:** முன்னொரு காலத்தில் மங்களபுரி என்ற ஊரில் அதன் அருகில் சுந்தரம் என்ற ஊரும் உண்டு. அங்கு தனதான்யம் முதலியவற்றுடன் ஒரு வைசியன் இருந்துவந்தான். அந்த வைசியன் பெயர் மங்கனன் என்பதாகும். அவனுக்கு விசாலாட்சி என்ற பெயருடைய அழகிய மனைவி இருந்தாள். இவள் விஷ்ணு பக்தி உடையவளாகவும், குரு, பிராமணர்கள், பெரியவர்கள், சேவையில் ஈடுபட்டவளாகவும், ஆசாரம் ஒழுக்கம் இவற்றுடன் வசித்து வந்தாள். ஒரு சமயம் வைசியனுடைய நண்பனான பிராமணன் ஒருவன் அவனிடம் வந்தான். அவனை விருந்தினனாக எண்ணி உணவு உண்பித்தான். தன் சாந்திக்காக அவனும் சுவர்ணதானமும் 1லட்ச ரூபாயும் தானமாகக் கொடுத்தான். இந்தப் பிராமணன் இந்த தனம் மொத்தத்தையும் வீட்டில் வைத்துவிட்டு தீர்த்த யாத்திரையாக பல இடங்களுக்குச் சென்று காசி நகரம் சென்றடைந்தான். தன் வினைப்பயனால் காசியில் அந்த பிராமணன் இறந்து போனான். வெகு நாட்கள் சென்று இங்கே வைசியனும் வறுமையாகி மிகவும் கஷ்டப்பட்டான். மகம் நட்சத்திரம் 2ம் பாதத்தில் பிறந்தவர்கள் பூர்வ கர்ம பலனுடன் இந்த வைசியன் தன் மனைவியுடன் பிராமணனின் தனத்தைத் தானே அனுபவித்து வந்தான். கடைசியில் கிழவனாகி இறந்தான். (அயோத்தியிலேயே) புண்ய நகரத்தில் இறந்ததால் சுவர்க்கத்தை அடைந்தான். ஆயிரக்கணக்கான வருஷங்கள் சுவர்க்கம் அனுபவித்தபின், மனிதனாகப் பிறந்தான். போன ஜென்மத்தில் பிராமணனின் தனத்தை அனுபவித்ததால் இப்பொழுது இவனுக்குப் பிறந்த ஆண் பிள்ளை இறந்து போயிற்று. இவள் இதன் பின் மலடியானாள். நோயாளி ஆகிவிட்டாள்.

**இதற்கு சாந்தி பரிகாரம் கேட்பாயாக !**

தன் சொத்தில் 6ல் ஒரு பங்கைத் தானம் பண்ண வேண்டும். காயத்திரி மந்திரம் ஒரு லட்சம் முறை ஜபம் பண்ணி வைக்க வேண்டும். அதற்குப் புரஸ் சரணமும் செய்விக்கவேண்டும். பொற்பூண் கட்டிய செங்காவி நிறப் பசுவையும் தானம் பண்ண வேண்டும். பின்னால் எள், பாத்திரம், துணி இவை தானம் பண்ண வேண்டும். பிறகு மனைவி இருவரும் ஹரிவம்ச புராணம் பாராயணம் பண்ண வைத்துக் கேட்கவேண்டும். அதன் பின் இவர்களுக்கு வயாதன போதிலும் நல்ல குழந்தைகள் பிறக்கும்.

## மகம் இரண்டாம் பாதத்தில் பூர்வ புண்ணிய சாந்தி விவரம்

**சிவபெருமான் சொல்லுகிறார்:** அயோத்தி நகரத்திற்குத் தெற்கில் 4 மைல் தொலைவில் நந்தி என்ற கிராமம் இருக்கிறது. அந்த நகரில் பல பணக்காரர்கள் இருந்தார்கள். அங்கு ஒரு பிராமணன் குடிகாரனாகவும் ஸ்திரீ லோலனாகவும் பரஸ்திரீ கமனம் பண்ணுபவனாகவும் இருந்தான். இந்த பிராமணன் பெயர் மித்ர சர்மா என்பதாம். இவன் மனைவியின் பெயர் கர்கஷா என்பதாம். இவளும், தினமும் அளவுக்கு மீறி செலவு செய்து வந்தாள். பல காலம் கடந்து முதலில் இந்த பிராமணன் இறந்தான். அதன்பின் அவனுக்கு கஷ்டம் கொடுத்து வந்த அவன் மனைவியும் இறந்தாள்.

இவனை மனைவியுடன் எமதர்மராஜன் கோர நரகத்தில் தள்ளினான். 70 ஆயிரம் வருடங்கள் நரக தண்டனை அனுபவித்தார்கள். பாபம் தீர்ந்த பின், அவர்கள் குதிரைப் பிறவியை அடைந்தார்கள். இதிலும் பல கஷ்டங்களையும் அனுபவித்து, அதன்பின் நர மனுஷ்ய பிறவியடைந்தார்கள். மத்திய தேசத்தில் இருந்து வந்தான். நந்தி கிராமத்தில் இறந்த புண்ணியத்தால் இந்த ஜென்மத்தில செல்வச் சீமானாக இருந்தான். பிறர் மனைவியரை அனுபவித்ததால் இந்த பிறவியில் துன்பம் அனுபவிக்கிறான். கள் குடித்ததாலும், பல பெண் தொடர்பு கொண்டதாலும் இவன் மனைவிக்கு கர்பம் தங்காமல் நழுவி வந்தது. தங்கவில்லை. பெண்கள்தான்

பிறந்தன. இவன் தாசிகளுடன் தொடர்புகொண்டதால் இவனுக்கு என்ன பாவ புண்ணியங்கள் செய்தாலும் அதன் பலனை இவ்வுலகில் பிறந்துதான் அனுபவிக்க வேண்டும். இப்பொழுது இவர்களுக்கு சாந்தி முறை சொல்லுகிறேன். கேள்.

அவன் தன் வீட்டில் உள்ள தனத்தின் 8ல் ஒரு பாகத்தைப் பிராமணர்களுக்குத் தானம் பண்ணவேண்டும். அதன்பின் பாழடைந்த கிணறுகள், துறவுகள், குளம், ஏரி, முதலிய வற்றைச் சீர் செய்யவேண்டும். அதன் பின் ஆண்டுதோறும் மாசி, கார்த்திகை, வைகாசி, ஆவணி ஆகிய மாதங்களில் மக்களுடன் அந்த பிராமணனின் பொன்னையும், பொருளையும் செலவழித்து வந்தான். அதாவது தானம் பண்ணிய தனத்தையே செலவழித்தான். முதுமை அடைந்த அந்த வைசியன் அயோத்யா நகரம் சென்று அங்கு இறந்தான். இதனால் இவனுக்கு சுவர்க்கலோகம் கிடைத்தது. அதன் பின் விஷ்ணு லோகம் சென்றான். அங்கே பல ஆயிரம் வருடங்கள் சுகபோகம் அனுபவித்தான். புண்ணியம் தீர்ந்தவுடன் இந்த பூவுலகில் பிறந்தான். நல்ல செல்வமுடன் விஷ்ணு பக்தனாகவும், பிராமணர்களிடம் விசுவாசம் உள்ளவனாகவும் இருந்தான்.

இவன் தான் கொடுத்த தானத்தையே மீண்டும் அபகரித்து செலவழித்து விட்டதால் அந்த பாவத்தால் முதலில் இவனுக்கு ஆண்குழந்தை பிறந்து இறந்துவிட்டது. அதன்பின் இவனுக்கு புத்திரனே பிறக்கவில்லை. இவன் மனைவி காகவந்த்யை (ஒரு குழந்தை பெற்றவள்) இவளும் கிழவியானாள். கபவாதம் முதலிய நோய்களும் பற்றிக் கொண்டன. இந்த பாவங்கள் விலக சாந்தி முறை வருமாறு.

வீட்டில் மிஞ்சியுள்ள தனத்தில் 6ல் ஒரு பங்கைத் தானம் பண்ணி விடவேண்டும். அதன்பின் ஒரு லட்சம் தடவை காயத்திரி மந்திரம் ஜெபம் செய்யவேண்டும். அதன்பின் ஹோமம் மார்ச்சனம் முதலியவற்றை முறைப்படி செய்ய

வேண்டும். அதன் பின் ஒரு காராம் பசுவை அதன் கொம்புகளுக்கு தங்கப்பூண் கட்டி பல வஸ்த்ரங்களால் அலங்கரித்துத் தானம் பண்ணவேண்டும். அதன்பின் எள், பசு, பாத்திரம், துணி முதலியவற்றை தானம் பண்ணவேண்டும். பின் இருவரும் (கணவன் மனைவி) ஹரிவம்ச புராணத்தைப் பாராயணம் பண்ணவேண்டும். இப்படி சாந்தி செய்வதால் இவர்கள் நோய்கள் விலகும். முதுமையானாலும் குழந்தை மீண்டும் பிறக்கும். அதன்பின் அவர்கள் மகிழ்ச்சியாய் இருப்பார்கள்.

வித்துவான்களான அந்தணர்களை உணவு உண்பிக்க வேண்டும். காயத்திரி, ஜாதவேதசி இந்த மந்திரங்களை லட்சம் முறை ஜெபம் செய்விக்கவேண்டும். அதன் பின் பத்தில் ஒரு பங்கு ஓமம் மார்ச்சனம், தர்ப்பணம் முதலியவை செய்யவேண்டும். இதனால் இவன் பாவங்கள் எல்லாம் நாசமாகும். இதனால் இவர்கள் நோய்கள் விலகும். அதன்பின் இவர்களுக்கு ஆண் குழந்தையும் பிறக்கும். இதனால் இவர்கள் பூரண சுகமாகவும் சந்தோஷமுடனும் திருப்தியுடனும் வாழ்வார்கள்.

## மகம் மூன்றாம் பாதத்தில் பூர்வ புண்ணிய சாந்தி விவரம்

**சிவபெருமான் சொல்லுகிறார்:** தேவீ! அயோத்தி நகரத்தின் அருகில் மந்தராதி கிராமம் என்ற ஊர் இருந்தது. அங்கு தன் தொழிலையே தெய்வமாக எண்ணி கடமையுணர்வுடன் ஒரு குயவன் இருந்து வந்தான். அவன் மண்ணில் குடம் முதலிய பாத்திரங்கள் செய்து விற்று பிழைத்து வந்தான். ஒரு சமயம் அவன் நண்பனான வேதம் முழுவதும் நன்கு தெரிந்த அந்தணன் ஒருவன் இவனைக் காணவந்து சேர்ந்தான்.

அந்த பிராமணனின் மனைவி மிகவும் துஷ்டையாகவும், விபசாரியாகவும் இருந்தாள். இவளுக்கும் குயவனுக்கம் இடையில் அன்பு வளர்ந்து அவள் அந்தக்

குயவனுடன் தினமும் உடலுறவு கொண்டு வந்தாள். அப்படி அதிக போகத்தால் பாதி வயதிலேயே குயவன் இறந்துவிட்டான். அதன் பின் அந்த விபசாரி பிராம்மணத்தியும் இறந்துபோனாள். யமதர்மன் கட்டளையால் அந்த குயவன் மற்றும் பிராம்மணத்தியும் கர்தமம் என்ற நரகத்தில் 3 லட்சம் வருடங்கள் தள்ளப்பட்டார்கள். 3 லட்சம் வருடங்கள் கழிந்தபின் அந்த இருவரும் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தனர். போன ஜன்ம பாவத்தால் அதாவது குயவன் பிராம்மணத்தியுடன் போகம் பண்ணிய பாவத்தால் இப்பிறவியில் சந்ததி இல்லாமல் போயிற்று. ஹே! உமையே இதற்கு சாந்தி பரிஹாரம் கேட்பாயாக.

முதலில் இவன் தன் சொத்து தனம் முதலிய எல்லாவற்றையும் தானம் பண்ணிவிட வேண்டும். அதன் பின் புத்ர ஜபம் செய்விக்க வேண்டும். களிமண்ணாலான சிவலிங்க உருவில் சிவபெருமானை பூசிக்கவேண்டும். ஒரு தோட்டம் அமைக்க வேண்டும்.

அதன்பின் காயத்திரி மந்திரத்தை ஒரு லட்சம் தடவை ஜபம் செய்விக்க வேண்டும். பின்பு நாற்சதுர வடிவான ஓம குண்டம் அமைத்து எள், தானியம், அட்சதை முதலியவற்றால் ஓமம் செய்விக்க வேண்டும். அதன் பின் 10 வண்ணம் உள்ள பசு ஒன்றை அலங்கரித்துத் தானம் பண்ணவேண்டும். அதற்கு முன் ஜப எண்ணிக்கையில் 10ல் ஒரு பங்கு மேற்சொன்ன பொருட்களால் ஓமம் பண்ணவேண்டும். அதன் பின் நிறைய பொற்காசுகளையும், சர்க்கரை கலந்த பால் பாயாசத்தை 60அந்தணர்களுக்கு உண்பிக்க வேண்டும். அதன்பின் பூமி தானம் பண்ணவேண்டும். இப்படிச் செய்வதால் இவன் பாவங்கள் விலகுகின்றன. எல்லா நோய்களும் தீரும். பெண் குழந்தைகளாகப் பிறந்தபின். ஆண்குழந்தை பிறக்கும் அதன் பின் வாழ்க்கை நல்லபடி நடக்கும்.

## மகம் நான்காம் பாதத்தில் பூர்வ கர்மா, சாந்தி விவரம்

**சிவபெருமான் சொல்லுகிறார்:** காஞ்சிபுரத்தில் மகரந்தன் என்றொரு வைசியன் இருந்தான். அந்த வைசியன் யானை, குதிரை, அபூர்வ பறவைகள் முதலியவற்றை வாங்கல் விற்றல் இதனால் பிழைத்து வந்தான். இவன் தெய்வத்தையோ, பித்ரு தேவதைகளையோ நம்புவதோ வணங்குவதோ கிடையாது. வெகுநாள் சென்று இவன் பெற்றோர்கள் இறந்துவிட்டனர். அவன் மிகவும் கஞ்சனாக இருந்ததால் தன் பெற்றோர்களுக்கு காரியங்கள் திதி முதலிய காரியங்களை செய்யவில்லை. மிகவும் காலம் கடந்து அந்த வைசியன் கிழவனாகி இறந்தான். எமதூதர்கள் இவனை சங்கிலிகளால் பிணைத்து கும்பீபாக நரகத்தில் தள்ளினார்கள். இதில் இவன் 15 யுகங்கள் கொடுமையான கிருமிக்கூடிகளால் துன்பம் மிகவும் அனுபவித்தான். இந்த தண்டனை தீர்ந்தபின் மனிதனாகவும் பின்பு புலியாகவும் பிறந்தான். அதன் பின் காகம், அதன்பின் யானையாகவும் பிறந்தான். அதன்பின் கடைசியாக சுபதேசம் என்ற இடத்தில் மனிதனாகப் பிறந்தான். தான் செய்த பாவத்தால் அவன் நோயாளி ஆனான். பெண்ணோ ஆணோ, குழந்தை எதுவும் இல்லை. இந்த நிலையிலும் ஒரு குழந்தையும் பிறந்து இறந்தது. இதனால் இவள் காகவந்த்யையானாள். (ஒரு பிள்ளைப் பெற்ற மலடி) இப்பொழுது இவன் பாப நிவர்த்தியாக சாந்தி முறைகளைச் சொல்லுகிறேன் கேள்.

மாசி மாதத்தில் இவன் பிரயாகையில் நீராட வேண்டும். அதன் பின் காயத்திரி மற்றும் ஜாதவேதசே என்ற இரண்டு மந்திரங்களையும் இணைத்து லட்சம் முறை ஜபம் பண்ண வேண்டும். அதன்பின் அவன் மனைவியும் மலட்டுதோஷம் நீங்கப்பெறுகிறாள். அதன்பின் அதிக காலம் வாழக்கூடிய தீர்க்காயுள் உள்ள ஆண் குழந்தை அவனுக்குப் பிறக்கும்.

## மக நட்சத்திரத்தின் விம்சோத்தரி தசைகளின் விளக்கம்

| | |
|---|---|
| கேது தசை | 7 வருஷம் |
| சுக்ர தசை | 20 வருஷம் |
| சூரிய தசை | 6 வருஷம் |
| சந்திர தசை | 10 வருஷம் |
| செவ்வாய் தசை | 7 வருஷம் |
| ராகு தசை | 18 வருஷம் |
| குரு தசை | 16 வருஷம் |
| சனி தசை | 19 வருஷம் |
| புதன் தசை | 17 வருஷம் |
| ஆக வயது | 120 வருஷம் |

## இவன் நோய், கண்டம் முதலியவை

இவன் பிறந்த ஆண்டில் இவனுக்குக் கண்டம். 3வயதில் ஜல கண்டம், 5 வயதில் விஷ பயம். 7 வயதில் வைசூரியால் பயம். 9 வயதில் மிருகத்தாலும், 15 வயதில் மீண்டும் விஷத்தாலும், 20 வயதில் அரையாப்பாலும், 24 வயதில் வயிற்று வலியாலும், 40 வயதில் மிருகத்தாலும், 47 வயதில் பாம்பு தீண்டலால், 50 வயதில் கள்ளராலும், 56 வயதில் நெருப்பாலும், 80 வயதில் வயிற்று நோயாலும் கண்டம்.

இவை கடந்தால் 90 வயது சென்று ஆவணி மாதம் பூர்வபட்சத்து பிரதமையும் சனிக்கிழமையும் கூடிய மக நட்சத்திரம் உதித்த நாளில் 8 நாழிகையான பின் வயிற்று வலியால் மரணமடைவான்.

இவன் பிறந்தபோது லக்னம்
சூரியனின் சாரமானால் கள்ளன்
சந்திரனின் சாரமானால் நன்மையுடையவன்
செவ்வாய் சாரமாகில் தேசாந்திரியாவான்
புதன் சாரமாகில் வித்தையுடையவன்
குருவின் சாரமாகில் வேளாண்மை பலிக்கும்
வெள்ளி சாரமாகில் வியாபாரி

சனி சாரமாகில் யோகியாவான்
ராகு சாமாகில் உளைச்சலுடையவன்
கேது சாரமாகில் விஷ வைத்தியன் துஷ்டன்

இந்த நாளில் போசனம் செய்ய, மாடு கொள்ள, விதை தெளிக்க, நெற்போர் கட்ட, சாந்தி பண்ண அகமெடுக்க நன்று. கடன் கொடுக்க ஆகாது.

பெண் திரனில் மாதம் பிறக்குமுன்னே மரணம். மாதம் பிறக்கில் தானிய உற்பத்தி குறையும். இந்த நட்சத்திரத்தில் ஊர் பிரயாணம் போக வேண்டுமானால் மானிறைச்சி உண்டு கிளம்ப வேண்டும்.

*மக நட்சத்திரப் பலன் முற்றிற்று.*

## *பிற மதப்படி மகம் நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்*

### *பொதுப்பலன்-ஆண்கள்*

**உருவ அமைப்பு:** எடுப்பான கழுத்தும், உரோமம் அடர்ந்த உடலும் உடையவன். கைகளிலும், தோள் பட்டையின் கீழேயும் மச்சம் உடையவன். நடுத்தரமான உயரம் உள்ளவன். முகத்தோற்றம் அட்பாவியாகத் தோன்றும்.

**குண நலன்கள்:** எந்த வேலையையும் செய்ய விருப்பமும் அதை முடிக்க தைரியமும் உள்ளவன். பெரியவர்களுக்கு மரியாதை கொடுப்பவன். தன்னுடைய வாழ்க்கையை நன்றாக அனுபவிப்பான். நிதானமாக அமைதியாக பேசுபவன். பல்வேறு விஞ்ஞானங்களில் நிபுணன். ஆரவாரமற்ற அமைதியான வாழ்க்கை வாழ விரும்புவான். கற்றறிந்த பெரியவர்களிடமிருந்து கௌரவத்தையும், நல்ல தகுதியையும் பெறுவான். பலவிதக் கலைகளிலும் பரந்த ஞானம் உடையவன். தன்னுடைய பொன்னான நேரத்தை கலையிலும், கல்சுரல் செயல்பாடு களிலும் செலவழிப்பான்.

மற்றவர்களிடம் இவனது தொடர்புகள் நன்கு யோசித்து திட்டமிட்டு அதன்படி நடப்பதாக இருக்கும். மற்றவர் களுடைய உணர்ச்சிகளை புண்படுத்துவது போல் நடந்து கொள்ளமாட்டான். எப்பொழுதாவது இவனது செயல்களால் மற்றவர்கள் உணர்ச்சி பாதிக்கப்பட்டால் இவன் உடனே அதை நீக்குவதற்கான பரிகாரத்தை தேடுவான். அதே போல் எந்த மனிதனும் பிறருக்கு தொந்தரவு கொடுத்தாலோ அல்லது அவர்கள் செயல்களுக்கு பாதகம் விளைவித்தாலோ அதனை இவன் விரும்பமாட்டான். அதனாலேயே இவனுடைய வாழ்க்கையில் அனேக மறைமுக எதிரிகள் தோன்றுவர். இவன் கோபக்காரன். உண்மைக்கு புறம்பான செயல்களை இவனால் பொறுத்துக்கொள்ளமுடியாது. ஆனால் இந்த மனநிலை அவனை பல தோல்விகளைச் சந்திக்க செய்யும். இவனுக்கு சுயநல சிந்தனையே கிடையாது. தன்னுடைய மன ஆறுதலுக்காக, சமூகத்திற்கு பிரதிபலனை எதிர்பாராமல் பல நன்மையான காரியங்களை செய்து வருவான். இதன் காரணமாகவே மகத்தின் கண்களில் ஒரு சிறந்த மனிதனாக ஜொலிப்பான்.

**கல்வி, உத்தியோகம்:** நிறைய செல்வமும் பல வேலையாட்களும் உள்ளவன். உத்தியோகத்துறையில் நேர்மையாக இருப்பதனால் அதிக வெற்றியையும், பணத்தையும் பெறமுடியாது. இவன் வியாபார நோக்கமற்ற வனாக இருப்பதும் மற்றொரு காரணம். எனினும் கடின உழைப்புக்கும், உண்மைக்கும் பொருத்தமான உதாரணமாக இருப்பான். இந்த குணம் இவனுக்கு சில வெற்றிகளையும் உயர்வையும் கொடுத்தாலும் அதன் பலனாக இவன் அடையும் வெகுமானம் குறைவாகவே இருக்கும். சில சமயம் உத்தியோகம் பார்ப்பான். சில சமயம் அதை விட்டுவிட்டு பிசினஸ் செய்வான். ஒரு முறை முடிவெடுத்து விட்டால் கடைசிவரை அதிலிருந்து மாறமாட்டான். இவன் தன் மேல்அதிகாரிகளிடமும் தனக்கு கீழே வேலைசெய்பவர் களிடமும் சுமுகமான உறவும் சாமர்த்தியமான செயல்பாடும்

கொண்டவனாக இருப்பான். அதனால் இவன் தன் கீழ் வேலை செய்பவர்களுக்கும், மேலதிகாரிகளுக்கும் இடையில் ஒரு பாலமாக இருப்பான்.

**வாழ்க்கை:** பெரும்பாலான மக நட்சத்திரக்காரர் களுக்கு சந்தோஷமும் ஒற்றுமையும் உள்ள குடும்ப வாழ்க்கை அமைகிறது. இதற்கு விதி விலக்கு சனி. இந்த நட்சத்திரத்தில் இருந்து செவ்வாய் பார்க்கும்போது ஏற்படுகிறது. சந்திரன் இந்த நட்சத்திரத்தில் இருந்து அவனை சுக்கிரன் அந்த சந்திரனை பார்க்காமல் இருந்தால், குணமான பிள்ளைகளும் பெறும் பாக்கியசாலியாக இருப்பான். இவன் அனேக பொறுப்புக்களை சுமக்க நேரிடும். அவைகளில் ஒன்று இவன் தன் உடன்பிறப்புக்களின் சுமையை தாங்க நேரும்.

**ஆரோக்கியம்:** மாலைக்கண், ஆஸ்துமா, வலிப்பு போன்ற நோய்கள் ஏற்படும். சனியும் செவ்வாயும் சேர்ந்து கூட்டாக மகத்தில் உள்ள சந்திரனைப் பார்த்தால் கான்சர் ஏற்படும் அபாயம் உண்டு.

## *பொதுப்பலன் - பெண்கள்*

**உருவ அமைப்பு:** அழகான கவர்ச்சிகரமான உருவ அமைப்பு கொண்டவர்கள். மகத்தில் உள்ள சந்திரனை, சனி பார்த்தால் அழகான அடர்த்தியான நீண்ட கூந்தல் உடையவள்.

**குண நலன்கள்:** கடவுளுக்கு பயந்தவள். தரும குணம் உள்ளவள். சச்சரவு செய்ய பிரியம் உடையவள். கோபம் இவள் மூக்கு மீது குடி கொண்டிருக்கும். அரச போகத்தை அனுபவிப்பாள். வீட்டு வேலைகளிலும் உத்தியோக வேலைகளிலும், மிகத்திறமையானவள். மத சம்பந்தமான கோட்பாடுகளைகடைபிடிப்பாள். பிறருக்கு ஏதாவது துன்பம் ஏற்படும் போது பிரதிபலனை எதிர்பாராமல் ஓடிச்சென்று அவர்களுக்கு தானாகவே உதவி செய்வாள்.

**கல்வி, உத்தியோகம்:** குரு மக நட்சத்திரத்தில் இருந்தால் உத்தியோகத்தில் உயர்ந்த பதவியில் இருப்பாள். அல்லது மகாராணி போல வாழ்வாள். இவளுடைய திருமணம் பெரிய செல்வத்துடன் நடைபெறும்.

**குடும்ப வாழ்க்கை:** இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்களுடைய குறைபாடு என்னவென்றால் குடும்பத்தில் உரசல்களை வருவித்துக்கொள்வாள். கணவனுக்கும் புக்கக உறவினர்களுக்கும் இடையே மோதல்களை உருவாக்குவாள். இதனால் குடும்பத்தில் உள்ள எல்லோருக்கும் மன வேதனையை உண்டாக்குவாள். நல்ல குடும்பம் அமைய வேண்டுமானால் அவள் இந்த குறைபாட்டை நீக்க வேண்டும். குணமான குழந்தைகளை பெற்றெடுப்பாள். இதில் முதல் ஆணாகவும் பின்னிரண்டும் பெண்ணாகவும் இருப்பார்கள்.

**ஆரோக்கியம்:** சந்திரனுடன் செவ்வாய் கூடினால் பாலாரிஷ்டம். இவளுடைய கண்கள் பாதிக்கப்படும். ரத்தம், கருப்பை கோளாறுகள் ஏற்படும். ஹிஸ்டீரியாவும் ஏற்படலாம். மகத்தில் உள்ள சனியை செவ்வாய் பார்த்தால் மஞ்சள் காமாலை ஏற்படும். மகத்தில் இவள் ருதுவானால் இவள் கௌரவமானவள். பெற்றோரிடம் சொத்து கிடைக்கும். தாராள மனது உடையவள்.

## மகத்தில் நின்ற சூரியனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சந்திரன் பார்த்தால்:** இவன் ஊதாரித்தனமாக செலவு செய்வான். அரசனைப் போன்ற அதிகாரத்துடன் புகழுடன் வாழ்வான்.

**செவ்வாய் பார்த்தால்:** பெண்களுக்கு சேவை செய்வான். ஊதாரியாக இருப்பான். ஜாண்டிஸ் வந்து கஷ்டப்படுவான். கடின உழைப்பாளி. கொடூரமானவன்.

**புதன் பார்த்தால்:** ஊதாரி. சமூகத்தில் சட்ட திட்டங்களுக்கு கீழ்படியமாட்டான். அரசாங்க விதிகளை மீறுவான். கவர்ச்சியான பர்சனாலிட்டி உடையவன். சிறந்த எழுத்தாளன்.

**குரு பார்த்தால் :** கோயில்களை நிருமாணிக்கும் கட்டிடக் கலை நிபுணன், தோட்டம், ஏரி, குளம் அமைப்பதில் கெட்டிக்காரன். தன் சொந்த மனிதர்களுடன் வாழ பிரியப்படுவான்.

**சுக்கிரன் பார்த்தால் :** இவன் கோபக்காரன். தன்னுடைய அடாவடி நடவடிக்கைகளால் தனக்கு கெட்ட பெயரை சம்பாதித்துக்கொள்வான்.

**சனி பார்த்தால் :** பிறரைக்கண்டு பொறாமைப் படுவான். பிறருடைய காரியங்களுக்கு தடை ஏற்படுத்துவான்.

## மகத்தில் நின்ற சந்திரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் நல்ல பணக்காரன். புகழ் பெறுவான். அரசனைப் போன்ற அதிகாரங்களைப் பெறுவான். திருமணமாகி பல வருடங்கள் கழித்தே குழந்தைகளைப் பெறுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** அரசியல் வட்டத்தில் நல்ல இடத்தைப்பெறுவான். தன்னுடைய ஊருக்கு நன்மை தரும் பல செயல்களைச் செய்வான்.

**புதன் பார்த்தால்:** மது, மங்கை, செல்வம் பெற்றவன்.

**குரு பார்த்தால்:** அதிக புகழ்பெறுவான். அரசாளும் கட்சியுடன் நெருங்கிய தொடர்புகொண்டவன். மந்திரியாகவும் ஆகலாம்.

**சுக்கிரன் பார்த்தால்:** மெத்தப்படித்தவன். அறிவாளி பெண்களுடன் கூடி இருப்பதில் ஆனந்தம் அடைவான். (பெண்களின்) பெண்மைக் குணம் கொண்டவன்.

**சனி பார்த்தால்:** தன்மனைவியைப் பிரிந்து வாழ்வான். ஏழையாக இருப்பான். விவசாய விஷயங்களில் கெட்டிக்காரன். பாதுகாப்பு ஸ்தாபனத்தின் பொறுப்பாளியாக இருப்பான்.

## *மகத்தில் நின்ற செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** தன்னுடைய எதிரிகளை அழிப்பான். சமூகத்துக்கு நல்லது செய்வான். காடுகளிலும், மலைகளிலும் அலைந்து திரிய விருப்பம் உடையவன்.

**சந்திரன் பார்த்தால்:** கட்டான உடலமைப்புக் கொண்டவன். தோற்றத்தில் ஒரு கொடூரம் தெரியும். தன்னுடைய தாயிடம் மரியாதை உள்ளவன்.

**புதன் பார்த்தால்:** லலித கலைகளிலும், சாஸ்திரங் களிலும் விற்பன்னன். அறிவாளி. கெட்டிக்காரன். புத்திசாலி. இதமாகப் பேசுபவன்.

**குரு பார்த்தால்:** அதிகார பலமுள்ள வசதிமிக்க பெரும் புள்ளிகளுடன் நெருங்கிய தொடர்புள்ளவன். பல மனிதர்களின் ஆசைகளைப் பூர்த்தி செய்யும் வல்லமை பெற்றவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** தன்னுடைய கவர்ச்சிகரமான உருவ அமைப்பில் பெருமை கொண்டவன். அதனால் பிறரிடம் முரட்டுத்தனமாகவே நடந்துகொள்வான். பல பெண்களிடம் பழகுபவன். அவர்களுடன் கொண்ட உறவால் பெண் நோய் ஏற்பட்டு கஷ்டப்படுவான்.

**சனி பார்த்தால்:** தன் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வெகுதூரத்தில் உள்ள ஓரிடத்தில் ஏழையாக வாழ்வான்.

## *மகத்தில் நின்ற புதனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** இவன் மிகவும் கொடூரமானவன். மற்றவர்களுக்குத் தன்னால் முடிந்த அளவு உபத்திரவங்கள் தருவான். பிறருடைய வளப்பத்தைக் கண்டு பொறாமை கொள்பவன்.

**சந்திரன் பார்த்தால்:** எல்லோரையும் கவரும்படியான உடலமைப்புக்கொண்டவன். சங்கீதம் மற்றும் லலித கலைகளில் ஆர்வம் உடையவன்.

**செவ்வாய் பார்த்தால்:** செக்ஸில் அதிகமாக ஈடுபடுவான். ஆயுதங்களால் காயம் ஏற்படும். அதன் காரணமாக உடலில் நிரந்தரமான காயவடு பெறுவான்.

**குரு பார்த்தால்:** அழகான உடலமைப்பு கொண்டவன். சுத்தமான மனத்தை உடையவன். தன் குடும்ப வட்டாரத்தில் மிக உயர்ந்த மரியாதையையும் அவர்களின் உயர்ந்த அபிப்பிராயத்தையும் பெற்றவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** தன்னுடைய அன்றாட தேவைகளுக்கு அரசாள்பவரை சார்ந்து இருப்பவன். செல்வந்தன்.

**சனி பார்த்தால்:** தோற்றத்தில் பொல்லாத்தனம் தெரியும். அதனால் உடலில் இருந்து ஏராளமாக வியர்வை வெளியாகும். அதனால் உடலில் ஒருவித கெட்டவாடை வீசும்.

## மகத்தில் நின்ற குருவை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் அதிர்ஷ்டக்காரன். ஏராளமான செல்வம் படைத்தவன். புகழ்மிக்கவன்.

**சந்திரன் பார்த்தால்:** அருவருக்கத்தக்க பழக்க வழக்கங்கள் உடையவன். தன் மனைவியின் வாயிலாக நிறைய செல்வத்தைப் பெறுவான். கவர்ச்சிகரமான மனிதன்.

**செவ்வாய் பார்த்தால்:** தன்னுடைய சமூக ஜனங்களுக்கு குறிப்பிடும்படியான நல்ல சேவைகளைச் செய்வான். கட்டிடங்களை உருவாக்கும் என்ஜினியராக இருப்பான்.

**புதன் பார்த்தால்:** நவீன விஞ்ஞான அறிவுடன் பலவகை சாஸ்திரங்களையும் அறிந்தவன். இனிமையான வாழ்க்கை உடையவன்.

**சுக்கின் பார்த்தால்:** பெண்கள் இவனை மிகவும் விரும்புவார்கள். அரசாங்கத்திடமிருந்து கௌரவங்களையும் பெறுவான்.

**சனி பார்த்தால்:** மிகச் சிறந்த பேச்சாளி. பெரிய குடும்பத்தினால் வாழ்க்கையில் சந்தோசத்தைப் பெறமுடியாதவன்.

## *மகத்தில் நின்ற சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** பெண்கள் மூலம் பலவித நற்பலன்களைப் பெறுவான். பிறர் நன்றாக இருப்பதைக் கண்டு பொறாமைப்படும் குணம் உடையவன்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் பணக்காரன். இருந்த போதிலும் தனக்கு கிடைத்த பூர்வீக செல்வங்களைக் கெட்ட பெண்களின் சகவாசத்தால் அழித்துவிடுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** பிரபலமானவன். அதிர்ஷ்டக் காரன், ஏராளமான செல்வம் படைத்தவன். இருந்தாலும் மாற்றான் மனைவியை சுற்றி அலைவான்.

**புதன் பார்த்தால்:** பணக்காரன். ஆனால் கருமி.

**குரு பார்த்தால்:** நிறைந்த செல்வமும், வேலைக்காரர் களும் உடைய இவன் தன் மணவாழ்க்கையை சந்தோஷமாக அனுபவிப்பான்.

**சனி பார்த்தால்:** அரசனுக்கு சமமாக வாழ்வான். விதவைகள் அல்லது விவாகரத்து செய்த பெண்களுடன் தகாத உறவு வைத்திருப்பான்.

## மகத்தில் நின்ற சனியை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** இவன் ஒரு ஏழை. குடிகாரன், பொய்யன்.

**சந்திரன் பார்த்தால்:** இவன் அதிர்ஷ்டக்காரன். ஏராளமான செல்வத்தையும் அழகிய மனைவியையும் பெற்று சுகமாக வாழ்வான்.

**செவ்வாய் பார்த்தால்:** விஸ்தாரமாக பிரயாணம் செய்வான். தன்னுடைய மனைவி மக்களைப் பிரிந்து தனியான ஒரு இடத்தில் வாழ்வான்.

**புதன் பார்த்தால்:** இவன் ஒரு சோம்பேறி. ஏழை, மிகவும் கஷ்டமான நிலையில் வாழ்க்கை நடத்துவான்.

**குரு பார்த்தால் :** இவனுடைய ஊரில் பணக்காரனாகவும் தலைவனாகவும் வாழ்வான். நம்பிக்கையானவன். நல்ல மனைவி மக்களைப் பெற்றவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** தன்னுடைய நடுவயதில் உயில் மூலம் நிறைய சொத்துக்களைப்பெறுவான்.

## மக நட்சத்திரத்தின் முதல் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** இவன் ஏழை. ஒரு வேலைக்காரனாக இருப்பான். லக்கினமும் இதில் அமைந்திருந்தால், மாலைக்கண் நோயால் அவதிப்படுவான்.

**சந்தின் நின்றால்:** கண்கள் கறுப்பு இல்லாத வேறு நிறத்தில் அமைந்திருக்கும். வெகு குறைவான புத்திர பாக்கியம் உடையவன். தன்னுடைய நேரத்தை சமூக சேவையில் செலவிடுவான். ஒரே சமயத்தில் பல வித அமைப்புகளை கவனித்துக்கொள்வான். இவன் உத்தியோகத்தில் இருந்தால், இவன் கீழ் வேலை பார்ப்பவர்கள் இவனைத் தெய்வம்போல்

கொண்டாடுவார்கள். இவனுடைய வார்த்தையில் கனம் இருக்கும். இவனுடைய மேலதிகாரிகள் கூட இவனுக்கு மரியாதை தருவார்கள்.

**செவ்வாய் நின்றால்:** இந்த அமைப்பில் லக்கினமும் இருந்தால் இவனுக்கு புற்று நோய் வரும். சனி இதைப் பார்த்தால் அல்லது இவனுடன் சேர்ந்தால் புற்றுநோய் இவனைப்பீடிப்பதற்கு அதிக சாத்தியக்கூறுகள் உண்டு. இல்லாவிட்டால் இவன் அரசாங்க உத்தியோகத்தில் சேர்ந்து தன் வாழ்க்கைக்குத் தேவையான பணத்தை சம்பாதிப்பான். இவனுடைய குடும்ப வாழ்வில் சந்தோஷம் இருக்காது.

**புதன் நின்றால்:** இந்த புதனுடன் சூரியனும், குருவும் சேர்ந்திருந்தால் ஒரு பாக்டரியில் தன் சக தொழிலாளிகளை கடந்து ஒரு சிறந்த இடத்தைப் பெறுவான். புத்திசாலியான குழந்தைகளைப் பெற்றவன்.

இவன் ஜாதகத்தில் எங்காவது சனியும் செவ்வாயும் சேர்ந்து இருந்தாலும், அல்லது ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டாலும் இவன் தான் செய்யும் வேலையை விட்டுவிட்டு, வெறுப்புடன் அலைந்து கொண்டிருப்பான்.

**குரு நின்றால்:** பெருஞ்செல்வந்தன். அறிவாளி, நல்ல மனைவியையும், குழந்தைகளையும் பெற்றவன். ஒரு ஸ்தாபனத்திற்குத் தலைமை வகிப்பான். பாதுகாப்புத் துறையில் சேர்ந்து உயர்நிலையை அடைவான்.

**சுக்கிரன் நின்றால்:** செவ்வாய் இவனுடன் சேர்ந்து இருந்தால் இவன் உணர்வுகள் தீவிரமாக இருக்கும். அல்லது தன் மனைவி/கணவனின் ஒழுக்கக்கேட்டினால் பாதிக்கப் படுவான் / அதாவது இவனது / இவளது, மனைவி/கணவன் எதிர்பாலருடன் கள்ளத்தொடர்பு வைத்திருப்பார்கள்.

சில கேசுகளில் சுக்கிரனும் செவ்வாயும் சேர்ந்து இருந்தாலோ அல்லது ஒருவரை ஒருவர் பார்த்துக்

கொண்டாலோ இவன் மணவாழ்க்கை மரணம் அல்லது விவாகரத்து அல்லது பிரிவினால் முறிந்துபோகும்.

**சனி நின்றால்:** நடுத்தரமான உயரமும் உடற்கட்டும் கொண்டவன். அகன்ற மார்பு கொண்டவன். கவர்மெண்டில் வேலை பார்க்கலாம். நல்ல மகன், மகள்களை உடையவன். இவனுடைய பிடிவாத குணத்தால் மணவாழ்க்கை சந்தோஷமானதாக அமையாது. உத்தியோகத்திலும் இவனால் பாதிக்கப்பட்டவர்கள் இவனைப் பழிவாங்க சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள். உடலில் ஊனம், பராலிஸிஸ், பேசுவதில் கோளாறு முதலியன ஏற்படலாம்.

**ராகு நின்றால்:** லக்கினம் பூரட்டாதியில் இருந்தால் இவனுக்கு 2 திருமணம் நடைபெறும். இவன் உயர்ந்த ஜாதியில் பிறந்தவன். செல்வமும் இதர வசதிகளும் படைத்தவன்.

**கேது நின்றால்:** பல வகையிலும் இழப்புகள் உண்டாகும். சூதாட்ட குணம் உண்டு. குதிரையின்மேல் பணம் கட்டி தோற்பான். நவீன சமூகத்தால் தடை செய்யப்பட்ட சட்ட விரோதமான செயல்களில் ஈடுபடுவான்.

## மக நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** பிரயாணம் செய்து செய்து களைத்துப்போவான். ஏழ்மையும், பசியும் உள்ளவன். இவனது கண்கள் பாதிப்படையும். தன் உடல் உறுப்புக்களில் கோளாறு உள்ளவன். இந்த சூரியனை சனி பார்த்தால் இவனது உறவு இவன் தந்தையுடன் சுமுகமாக இராது. அதனால் இவன் தன் பெற்றோரை விட்டுப்பிரிந்து வெளியில் தங்க நேரும்.

**சந்திரன் நின்றால்:** பெண் வர்க்கத்தை வெறுப்பான். 28வயது வரை வறுமை இவனை வாட்டும். அதன் பிறகு

திடீரென சூழ்நிலையில் மாற்றம் ஏற்பட்டு எல்லாக் காரியங்களிலும் வெற்றிபெறுவான். இந்த சந்திரனுடன் சனியும் சேர்ந்து இவர்களை செவ்வாய் பார்த்தால் இவன் காக்கை வலிப்பு வந்து கஷ்டப்படுவான்.

**செவ்வாய் நின்றால்:** திருமணப் பொருத்தத்தைப் பொறுத்தவரை இந்த நிலையில் இருக்கும் செவ்வாயால் ஏற்படும் செவ்வாய் தோஷம் நீங்கி விடுகிறது. இந்த செவ்வாயுடன் குரு கூடி இருந்தால் இவன் சிறு வயதிலிருந்தே புத்திசாலியாக இருப்பான். கல்வியில் ஏற்படும் பலவித பிரச்சினைகளை தன் அசாதாரணமான திறமையால் தீர்ப்பான். வாழ்க்கையில் முதல் நிலைக்குப் போவான். இவனுடைய வயிற்றுக்கு அருகில் அனேக கறுப்பு அடையாளக்குறிகள் இருக்கும்.

**புதன் நின்றால்:** அமைதியான பிரச்சினை உள்ள குடும்பவாழ்க்கையை அனுபவிப்பான். இந்த புதனை குரு பார்த்தால் இவன் கல்வி போதிக்கும் ஆசானாக இருப்பான். அதிக தீவிரமில்லாத மனநோயாளியாகவோ அல்லது நரம்பு தளர்ச்சி நோயோ உள்ளவன்.

**குரு நின்றால்:** உயர்பட்ச கல்வியைப் பெற்றவன். அயல் நாட்டில் அனுபவ அறிவு பெறுவான். கவர்மெண்ட் வேலையில் சேரலாம். சந்திரன் திருவோண நட்சத்திரத்தில் இருந்தால் இவன் தன் தொழிலில் பல பிரச்சினைகளை சமாளிக்க நேரும். இவனுக்கு பிசினஸ் செய்வதே பொருத்தமாகும்.

**சுக்கிரன் நின்றால்:** செல்வத்தையும் சந்தோஷத்தையும் அனுபவிப்பான். செக்ஷுவல் பவர் குறைவான அதாவது ஆண்மை குறைவாக இருக்கும். இவன் வாழ்க்கை சந்தோஷமானதாக அமைந்தாலும் கூட கற்பனையான பிரச்சினைகள் ஏற்பட்டு ஒன்றுமில்லாததற்காக துன்பமடைய நேரும்.

**சனி நின்றால்:** இரண்டு மனைவிகள் உடையவன். ஒன்றை மணந்துகொள்வான். இன்னொன்று கள்ள மனைவியாக அதாவது மணந்துகொள்ளாத வைப்பாக இருக்கும். இவனது குடும்பப் பிரச்சினைகள் ஏகப்பட்டதாக இருக்கும்.

**ராகு நின்றால்:** இந்த ராகுவை செவ்வாய் பார்த்திருந்தால் இவனுக்கு மனைவி மக்களிடமிருந்து சுகம் கிடைக்காது. ராகு மட்டும் தனித்து இருந்தால் சட்டவிரோத நடவடிக்கைகள் மூலம் சம்பாதிப்பான்.

**கேது நின்றால்:** எல்லோரையும் பிரிந்து தனியாக வாழ்வான். எந்த இடத்திலும் இவன் சந்தோஷத்தைப் பெறமுடியாது. சந்தோஷம் தன் குடும்பத்திலேயே கிடைக்கும்போது அதை விட்டு வேறிடங்களில் தேடி அலைவான். சன்னியாசியாக மாறி பலநாள் இருந்துவிட்டு தன்னுடைய மத்திம வயதில் அதை உதறித்தள்ளி தன் வீட்டுக்குத் திரும்பிவருவான். லக்கினம் இருந்தாலும், இந்த இடத்தில் இருக்கும் கேது மட்டுமே அவள் கணவனின் மரணத்தை அளிப்பான்.

## மக நட்சத்திரம் மூன்றாம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** இங்கு சூரியனுடன் சனியும் செவ்வாயும் கூடி இருந்தால் இந்தக் குழந்தை ஒரு மாதமே உயிருடன் இருக்கும். அப்படி கிரகங்கள் இல்லாவிட்டால் இவன் மத்யாயுசு உடையவன். ஹெர்னியா அல்லது லங்க்ஸில் நீர்சேர்வதால் உபத்திரவத்தை அனுபவிப்பான்.

**சந்திரன் நின்றால்:** குடும்ப வாழ்க்கையில் ஆரம்பத்தி விருந்து இவன் 35 வது வயது வரை சச்சரவுகளும், அதிருப்தியும் காணப்படும். அதன் பிறகு இவன் மனைவி இவனது சிறந்த குணங்களைப் புரிந்துகொண்டு தன் நடவடிக்கைகளை மாற்றிக்கொள்வாள். பின் வாழ்க்கை

இன்பகரமாகச்செல்லும். இந்த நிலையில் லக்கினமும் அமைந்தால் இவனுக்கு புற்றுநோய் ஏற்படும்.

**செவ்வாய் நின்றால்:** எல்லோருடைய சுமைகளையும் இவன் சுமப்பான். அதாவது எல்லோருடைய பொறுப்பு களையும் இவன் ஏற்று நடத்தவேண்டியிருக்கும். அதனால் இவனுக்கு பைசா பிரயோசனமில்லை. இவன் எல்லாவற்றையும் வரவேற்பான். பொதுஜனங்கள் இவன் தாங்கமுடியாத அளவிற்கு பொறுப்புகளை இவன் மீது சுமத்துவார்கள். ஆனால் இவன் எந்த பொறுப்பையும் தட்டி கழிக்கமாட்டான். இதனால் இவன் பெறுவது சபாஷ் என்ற பாராட்டுதான். பணம் ஒன்றும் கிடைக்காது. சில சமயங்களில் தான்சம்பாதித்த பணத்தைக்கூட இதற்காக செலவழிப்பான்.

**புதன் நின்றால்:** இவனுடன் செவ்வாய் சேர்ந்திருந்தால் இவனுடைய பார்ட்னர் பொல்லாதவனாக இருப்பான். குறைந்த செல்வம் உடையவன். தங்க நகைகள் செய்வதில் நிபுணன். மருந்துகள் தயார் செய்வதில் வல்லவன். தன் தோழமைக்காக வயதான பெண்களை விரும்புபவன்.

**குரு நின்றால்:** இவன் பலவான். படித்தவன், தைரியசாலி, பணக்காரன், அரசகுடியில் பிறந்தவன். எந்தக் கூட்டத்திலும் இவனை அடையாளம் கண்டுகொள்ள முடியும். தன்னுடைய எதிரிகளை அழிப்பவன்.

**சுக்கிரன் நின்றால்:** தன் தாயாரின் உடல்நிலை இவனுக்கு எப்போதும் கவலையைத் தந்து கொண்டிருக்கும். சாஸ்திரங்களை அறிந்தவன். கணக்கில் கெட்டிக்காரன். இவனுடைய கண்கள் கோளாறு உள்ளதாக இருக்கலாம். தன் உடன்பிறப்புக்களின் பொறுப்புகளைச் சுமப்பவன். இவனுக்குத் தந்தையிடமிருந்து உதவிகள் கிடைப்பது அரிது.

**சனி நின்றால்:** சனிக்கு இது நல்ல அமைப்பல்ல. திருமண தாம்பத்திய வாழ்க்கையின் சுகங்களைப்பெற முடியாது. மனைவி இவனுக்கு ஓயாத பிரச்சினைகளைத்

தருவாள். அவளிடம் அவமானப்பட நேரும். சந்திரன் இந்த சனியுடன் சேர்ந்திருந்தால் இவன் வயதான பெண்கள் பின்னால் ஓடுவான். நல்ல வாகன வசதிகள் உடையவன். மத நூல்களைப் படிப்பதில் ஆர்வம் உண்டு. ஆட்களைக் கட்டிக்காக்கும் திறமை உள்ளவன். ஆனால் எல்லோராலும் ஒடுக்கப்படுவான்.

**ராகு நின்றால்:** செவ்வாய் ராகுவுடன் சேர்ந்தாலும் அல்லது ராகுவுக்கு ஏழாமிடத்தில் இருந்தாலும் உடலில் கட்டிகள், சிரங்குகள் தோன்றும். அது ஆபத்தையும் விளைவிக்கலாம். புதன் இங்கு ராகுவுடன் சேர்ந்திருந்தால் இவனுக்கு பெண் வியாதி ஏற்படும். பின்னால் இது புற்றுநோயாகவும் மாறலாம்.

**கேது நின்றால்:** தொழிலில் அனாவசியக் கவலைகள் ஏற்படும். லக்கினம் சதயத்தில் இருந்தால் பெண்கள் தங்கள் கணவனைத் தன் 37வது வயதில் இழப்பார்கள். ஆணானால் தன் மனைவியைத் தனது 40வது வயதில் இழப்பான்.

## மக நட்சத்திரம் 4-ம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** சூரியன் உடன் சனியும் இங்கு இருந்து அவர்களை செவ்வாய் பார்த்தால் இவன் ஒரு மாதம் தான் உயிர்வாழ்வான். சூரியன் மட்டும் இங்கு தனித்து இருந்து பிற கிரகங்களின் பார்வை இல்லாமலிருந்தால், இவன் தன்னுடைய மத்திய வயதிற்குமேல் வசதியான வாழ்க்கையை அனுபவிப்பான். மத்திய வயது வரை வேலை யில்லாமல் திண்டாடி, வறுமையில் வாழ்வான்.

**சந்திரன் நின்றால்:** இவன் 33 வயதிற்கு மேல் உயிர் வாழ்வானா என்பதே சந்தேகம். அப்படி உயிருடன் இருந்தால் அரசியலில் மிக உன்னத நிலையை அடைவான். பிரதம மந்திரி, ஜனாதிபதி அல்லது அதற்கு இணையான தகுதியைப் பெறுவான். இவன் தன் எதிரிகளைக் கூண்டோடு அழிப்பான்.

**செவ்வாய் நின்றால்:** ஏறக்குறைய செவ்வாய் மகம் 3ல் கொடுக்கும் பலனையே தருவான். அத்துடன் தன் உடல் ஆரோக்கியம்,பொருளாதாரம் இரண்டிலும் பல ஏற்றத் தாழ்வுகளை சந்திக்க வேண்டி வரும். ஆஸ்துமா அல்லது ஜாண்டிஸ் ஏற்பட ஏதுவுண்டு.

**புதன் நின்றால்:** சாதாரணமான மத்தியதர வாழ்க்கை அமையும். காய்கறி, பூக்கள், துணிமணிகள், வெண்ணை, நெய், எண்ணை முதலியன விற்பதின் மூலம் வருமானம் வரும். கண் வியாதிகள், ஆஸ்துமா, எபிலப்ஸி வியாதிகளால் கஷ்டப்பட நேரும்.

**குரு நின்றால்:** தலைவனாகும் தகுதியும் இவனுடன் பிறந்த குணம். அதிகாரத்தை அனுபவிப்பான். சமூக சேவை செய்வதால் புகழை அடைவான். தன்னுடைய இள வயதிலிருந்தே தலைவனாக இருக்கும் தகுதியை வெளிப்படுத்துவான். வெற்றியின் உச்சியை அதிக முயற்சி இல்லாமலேயே எட்டிப்பிடிப்பான்.

**சுக்கிரன் நின்றால்:** அதிக அறிவு. அறிவாற்றல் உள்ளவன். அரசாங்கத்திடமிருந்து பல நன்மைகளை அடையும் சக்தி படைத்தவன். காதருகில் மச்சம் அல்லது வடு இருக்கும். தன் மனைவியின் வித்தியாசமான நடவடிக்கைகளால் இவனுடைய திருமண வாழ்க்கையில் சந்தோஷத்தை அனுபவிக்க முடியாது.

**சனி நின்றால்:** நடுத்தரமான உருவ அமைப்பு கொண்டவன். அகன்ற மார்பு உடையவன். கடின உழைப்பாளி. பிடிவாதக்காரன். ஆனாலும் உண்மை யானவன். தன் முதலாளியின் கௌரவத்தைக் காப்பவன். வாகனங்கள் மூலம் வருமானம் ஏற்படும். நிலபுலன்களும், கட்டிடங்களும் சொந்தமாக உள்ளவன்.

**ராகு நின்றால்:** இந்த அமைப்பு ராகு இருப்பதற்குச் சிறந்த இடம். இவனுக்குச் சிறந்த மனைவி, மக்கள் செல்வம்

எல்லாம் நன்கு அமையும். ஆராய்ச்சி ஸ்தாபனம் அல்லது கல்வி ஸ்தாபனத்தின் தலைமைப்பதவியில் இருப்பான். தூக்கத்தில் நடக்கும் வியாதி அல்லது ஆஸ்துமா நோயுள்ளவன். வினோதமான பழக்க வழக்கங்கள் இவனிடம் அதிகமிருக்கும். ஒரு நிமிடத்திற்கு முன்னால்தான் என்ன பேசினோம் என்பதைக்கூட இவனால் ஞாபகத்தில் வைத்திருக்கமுடியாது. ஒரே சமயத்தில் பலவித வேலைகளில் ஈடுபடுவதால், இவனுடைய நினைவாற்றல் குறைவாகவே இருக்கும்.

**கேது நின்றால்:** இதில் லக்கினமும் கூட அமைந்து குருவும் அவிட்ட நட்சத்திரத்தில் இருந்தால், இவன் பாதுகாப்புத் துறையில் சேர்ந்து மிக உயர்ந்த பதவியில் இருப்பான். அன்யோன்யமான தாம்பத்ய வாழ்க்கை அமையும். செல்வமும் கௌரவமும் உடையவன்.

**குறிப்பு:** மக நட்சத்திரத்தில் பிறந்தவர்கள், உத்தரம், சித்திரை, விசாகம், உத்திரட்டாதி, ரோகிணி நட்சத்திரக்காரர் களுடன் எந்தவிதமான தொடர்பும், உறவும், கொடுக்கல்-வங்கலும் வைத்துக்கொள்ளக்கூடாது.



## அத்தியாயம் - 15

# பூர நட்சத்திர பலன்கள்

இது *11*-வது நட்சத்திரம், ராசி மண்டலத்தில் சிம்ம ராசியில் *133* பாகை *20* முதல் *146* பாகை வரை பரப்பாகக் கொண்டுள்ளது.

| | |
|---|---|
| வடமொழிப்பெயர் | பூர்வ பல்குனி |
| தமிழ்ப்பெயர் | பூரம் |
| அரபுப் பெயர் | அன் ஸீப்ரா |
| கிரேக்கப்பெயர் | லியோனிஸ் |
| சீனப்பெயர் | சேங் |

இது கட்டில் கால் போல் சதுரமாக ஒவ்வொரு காலுக்கு *2* நட்சத்திரங்கள் கொண்ட *8* நட்சத்திரக்கூட்டம் இது.

பூர நட்சத்திரத்தின் தேவதை பகன். இவள் அதிதியின் *12*பிள்ளைகளில் ஒருவள். இவளே சூரியனுக்கும் தாயாவாள். சூரியனுக்குப் பிறந்த *12* மக்களில் ஒருவள் பெண். இவள் மகள்தான் தாய்.

**மரணகண்டி ஏட்டுச்சுவடி 1500ல் கூறியது**

### பூரத்தின் பலன்

வருந்திய கருமம் செய்யும் வாணிபம் பலவும் செய்யும்
விரும்பிய கல்வி கற்றும் வெட் டெனப் பேச வல்லான்
கரும்பிசைக் குழலி னாரின் சூழ்ச்சியை வெல்ல வல்லான்
பொருந்தியே உரைக்க வல்லான் பூரநாள் தோன்றி னானே !

*(சுவடி எண். 1500)*

எந்த கடினமான காரியத்தையும் செய்ய வல்லவன். பலவகை வாணிபம் செய்ய வல்லவன். கல்வியில் சுய நாட்டம் அதிகமுண்டு. இதனால் கல்வியை விரும்பி கற்பவன்.தெளிவாகவும்,வெளிப்படை அல்லது வெட்டியும் பேச வல்லவன். வண்டுகள் மொய்க்கும் இயற்கை மணம் வீசும் கூந்தலுள்ள பெண்கள் செய்யும் சூழ்ச்சியை வெல்ல வல்லவன். பல நூல்களை விரும்பியும் விடாமலும் படிக்க வல்லவன் என்க.

இந்த நட்சத்திர யோனி பெண் எலி. பட்சி பெண் கழுகு. விருட்சம் பலாசு. மனித கணம். ஞாயிற்றுக்கிழமை பூரம் வந்தால் சுபம் (சுபகாரியம் பண்ண நன்று) பொருத்தமும் பார்த்து பண்ண வேண்டும். கிழக்கு தெற்கு வாசல் இருக்க வீடு கட்ட நன்று. தெய்வம் விஷ்ணு என்று சொல்வாரும் உளர். பூதம்-அப்பு. சாதி-அனுலோமன். இதன் கோத்திரம் அகத்தியன். யோனி-வராகி. பன்றி.

இந்த நட்சத்திரத்தில் 33 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷகடிகை எனப்படும். இதில் வருஷம் பிறந்தால் உணவு உற்பத்திக்குறையும்.

இதில் பிறந்தவன் அழகியவன். கண் செவ்வரி யோடி இருக்கும். கல்வியுடையவன். விசனமுடையவன். கொடியவன், கோபத்திற்கு ஆளாவான். ஆனால் உடனே தணிவான். பலபேர் சொன்ன காரியத்தைச் செய்வான். நடிக்க வல்லவன்.

இந்த நாளில் வெதுப்பு தோன்றில் 12 நாளைக்கு விடாது. இதற்கு நெய்யாலே ஓமம் பண்ணவேண்டும். அடர்ந்த மரங்கள் உள்ள சோலையிலோ அல்லது நீர்க்கரையிலோ ஓமம் பண்ணவும். பஞ்ச திரவியமும் பூவும் சாந்தும் பலியிடுவது. திக்பந்தனம் செய்து ஓமம் பண்ணுவது. 3 நாளில் நோய் குணமாகும். ஒரு புடவை, கம்பளி தானம் பண்ண நன்று. வேகமாக நடக்க வல்லவன். வலது பக்கம் மரு

அல்லது மச்சம் உண்டு. வெள்ளிக்கிழமை இந்த நட்சத்திரம் வந்தால் அமிர்தயோகம். பொன், வெள்ளி இந்த நாளில் வாங்க நல்லது.

இவன் குணம்: தானதர்மம் செய்வான். தன தானியம் உடையவன். கண்களில் லட்சுமிகரம் உண்டு. (ஸ்ரீ கண்ணன்) பசி பொறுக்கமாட்டான். தைரியம் உடையவன். புத்திசாலி.

இந்த நட்சத்திரக்காரனுக்கு பங்குனி மாதம் சூனியம், ஆனி என்பாரும் உண்டு.

இதில் பிரயாணம் போக வேண்டுமானால் பால் குடித்து செல்லவேண்டும்.

## தமிழ் ஜாதகாலங்காரம்படி பூரம் நட்சத்திரத்தில் பிறந்தவன் தன்மைகள்

**இதமான வதனம் உள்ளான் கல்விமான் சிவந்திருக்கும் இருகண்ணாளன்**
**நிதியதனை வருத்தமதாய்த் தேடுவான் வரும்கருமம் நினைவில் காண்பான்**
**விதமான வியாபாரி கடினமொழி பலநினைவை விரும்பு நெஞ்சன்**
**பொதுமாதர் தமைவெல்வன் நகைதந்த அழகன்பூ ரத்தி னானே. (105)**

பூர நட்சத்திரத்தில் பிறந்தவன் பிரியமாய்ப் பேசுவான். கல்வியுடையவன். இரண்டு கண்களும் சிவந்திருப்பவன். கஷ்டப்பட்டு சம்பாதிப்பவன். பின்னால் நடக்கப்போகும் செய்திகளை நடப்புகளை முன்னாடியே அறிந்து சொல்பவன். பலவிதமான வியாபாரம் செய்பவன். கடினமாகப் பேசுபவன். பல நினைவுகளுடன் இருப்பவன். தாசிகளை மதனலீலையால் வெற்றிகொள்பவன். சிறப்புடனிருக்கும் வரிசைப் பல் பளீச்சிடுபவன். அழகனும் ஆவான் என்பதாம். இந்த நட்சத்திரம் மார்ச்சு மாதம் இரவில் 12 மணியளவில் தெரியும் (நடு உச்சியில்)

தன் தாய் தந்தையர் தனக்குச் சொத்து சேர்த்து வைக்கவில்லையே என்று குறைபட்டுக் கொள்வார்கள்.

தானே பொருள்தேடும் ஊக்கம் சற்றுக் குறைவுதான். சஞ்சலப்புத்திக்காரர்கள்.

காலம் கடந்த திருமணம் அல்லது பிரச்சினை தரும் மனைவி அமையலாம். இதனால் நல்ல பொருத்தம் பார்த்துத் தான் திருமணம் செய்விக்கவேண்டும்.

இவன் கோயிலில் திருப்பணிகள் செய்வான். பலவித சாத்திரப் பயிற்சியுள்ளவர்கள்.

இந்த நட்சத்திரத்திற்கு அதிதேவதை பார்வதி என்று கொள்வாருமுண்டு இது கீழ்நோக்குநாள். அபசவ்ய நட்சத்திரம்.

**பூர நட்சத்திரத்தின் காரகங்கள்:** நடனம் தெரிந்தவன். இளம்பெண், பாக்கியவான், பாடகன், தொழில் தெரிந்தவன். பருத்தி, உப்பு, தேன், எண்ணெய், கம்பளி முதலியவை வியாபாரம் செய்பவன்.

இது அதோமுகி நட்சத்திரம், பெண் நட்சத்திரம், தீர்க்க யோனி, உக்ரம், ஆடிமாசம் சூன்யம் என்பது சிலர் கருத்து. பொன் வாங்கல் வித்தியாரம்பம் பிரியமானவர்களைக் காணவும் நல்லது.

**பெண்களைப் பற்றி:** இதில் பெண்ணின் தன்மை. பூரத்தில் பிறந்தவள் பூத தத்துவ லட்சணத்தைச் சார்ந்தவள்.

**மதன நூல் சொல்வது:-**

நூறடியுயர்ந்து நெடு முழந்தாள் கறுத்து
அறல் எனும் கூந்தல் மிக நீண்டுள்ளாள்
நறவு வேட்டுண்ண நசையினள் அன்றியும்
புறமு ரைத்திடும் பூர நாள் மங்கையே. (106)

பூர நட்சத்திரத்தில் பிறந்தவள் பாதம் உயர்ந்திருக்கும். முழங்கால் கறுத்து நீண்டிருக்கும். வரிசை வரிசையாக

நெருங்கிய கூந்தலுடையவள். கூந்தல் மிக நீண்டு முழந்தாள் வரை தொங்கும். கள்குடிக்க மிகவும் ஆசை உள்ளவள். மற்றும் கோள் சொல்லுதலும் புறங்கூறுதலுமே இவள் தொழிலாக இருக்கும்

**வடமொழி பெண் ஜாதகப்படி**: சத்துருக்களை வெல்லக் கூடிய வீரனின் மனைவியாவாள். அதிக பாக்கியவதி. உத்தம ஆண் சந்ததி உள்ளவள். வணக்கப் பணிவான சுபாவ முள்ளவள். எல்லாக் காரியங்களிலும் வியவஹார ஞானம் அதிகம் உள்ளவள். இனிமையாகப் பேசுபவள். இவள் முன் ஜென்ம புண்ணியத்தால் இப்போது மேலான வாழ்க்கை வாழ்பவள்.

தியாகபுத்தி சிறிதும் இல்லாதவள். போராசையும் கோபமும் அதிகம் உண்டு. தான் விரும்பியதை அடைந்தே தீர வேண்டும் என்ற பிடிவாத மனவெறி உள்ளவள்.

பூரத்தில் பிறந்தவள் ஜெயித்துக் காட்டுபவள். புத்திர சந்தானம் உள்ளவள். சாத்திரப் பற்றுள்ளவள். ஆன்மீக புத்தியுடையவள். நேர்மையான குணம் உள்ளவள். பிடிவாதமும் செருக்கும் உண்டு. தருக்க புத்தி உண்டு. இவர்களுக்கு அடங்கிப்போகும் கணவன் அமைந்தால் வாழ்க்கை மகோன்னதமாக இருக்கும்.

### *தமிழ் ஜாதகாலங்கார பாதபலன்-பூர நட்சத்திரப் பாத பலன்*

ஆமெனும் தீரன் இன்சொலான் கோபி
ஆசாயன் சௌரியன் சிறுவீடு
ஆக்கமல்லாது தான் வியாபாரஞ் செய்வான்
ஆனபூரம் முதற் காலான்
தாமெனும் உழவுத் தொழில் புரி குடிஞன்
தாகமும் கிலேசமும் உள்ளான்
தானுன்று சகாயம் பிரபல மில்லா
தவனென்பார் இரண்டாங் காலதற்கே

**நாமெனும் கனவான் ஆகும் செய்பவன்**
**நலமுறும் கீர்த்தி மானாகும்**
**நாடிய மூன்றாம் பாதமெனும் பொருளை**
**நாட்டினில் உரைப்பவர்நல் லவரே**
**தோமுறு துக்கம் குருவடு உள்ளான்**
**சொற்றிடு நிந்தையே புரிவான்**
**சோர்வது மறையோர் தேவதூஷணத்தைச்**
**சொல்லுவன் நான் கெனக் கருதே ! (107)**

*1)* பூரம் நட்சத்திரம் முதல் பாதத்தில் பிறந்தவன் எவ்வித ஆபத்துக்கும் தான் முன்னே சென்று தலையிடும் தீரமுள்ளவன். சந்தோஷத்துடன் இனிய வார்த்தைகளைப் பேசும் சற்குணவான். கோபி, பரிசுத்தன், தாழ்ந்தவன், வியாபாரம் செய்து ஜீவிப்பவனும் ஆவான் என்பர்.

*2)* பூரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பயிர்த் தொழில் செய்து ஜீவிப்பவன், குடும்பவாசி, அடிக்கடி தாகமுள்ளவன். மனசந்தோஷமுள்ளவன். பிறருக்கு உதவி செய்ய விருப்பமுள்ளவன். பலசாலி, பிரபலமில்லாதவன் என்பதாம்.

*3)* மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பெருமையும் கீர்த்தியு முள்ளவன். உயிர்களிடத்தில் அன்புள்ளவன். அவர்களைக் காக்கும் முயற்சியில் உள்ளவன். புகழ்பெற்றவனும் ஆவான் என்பதாம்.

*4)* நான்காம் பாதத்தில் பிறந்தவன் எக்காலத்திலும் நீங்காத விசனமுள்ளவன். உடலில் மச்சமுள்ளவன். பிறருக்கு நிந்தையையும் துன்பத்தையும் செய்பவன். குற்றமற்ற வேதியர் மற்றும் தெய்வங்களையும் தூஷித்து நிந்தனை செய்பவன் என்று கூறுவர்.

**ஜாதக சார தீபம் கூறும் பூர நட்சத்திரத்தின் பாத பலன்:** முதல் பாதத்தில் பிறந்தவன் சாமர்த்தியசாலி. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் அரசனாகவும் இருப்பவன். மூன்றாம்

பாதத்தில் பிறந்தவன் எப்பொழுதும் வியாதிஸ்தனாக இருப்பான். நான்காம் பாதத்தில் பிறந்தவன் குரூர குணமுள்ளவனும், அல்பாயுசு உள்ளவனும் ஆவான்.

**மரணகண்டிகை சுவடி எண். 1500ல் சொல்லிய பூர நட்சத்திர பாத பலன்கள்**

## பூரம் முதல் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்

தலையறு கரண்டி யாகும் தன்மனம் பெரிய னாகும்
மலைதரும் வாலி பத்தில் வடிவுடன் சிறந்த மேனி
கலைபல நன்கு கற்கும் கடிமதக் காளை யாகும்
மலையென வளர்ந்த தோளான் மதியினங் கிஷத்தி னானே. (108)

இவன்தலை பெரிதாக இருக்கும். இவன் விரிந்த தாராள மனப்பான்மையுள்ள பெரியவன். அலைகின்ற வாலிப வயதில் நல்ல அழகிய வடிவுடன் கூடிய உடலமைப்பு உள்ளவன். பலவிதமான துறைகளில் கலைகளும் கல்வியும் நன்கு கற்றுத் தேர்வான். முரட்டுக்காளை போன்ற உடலமைப்பும் வலிமையும் உள்ளவன். இவன் அகன்றுயர்ந்த தோள்களையுடைய தோற்றப் பொலிவுடையவன்.

**இதற்குரிய காலச்சக்கர தசைகள்**

| | |
|---|---|
| மீன வியாழன் | 10 வருஷம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| மிதுன புதன் | 9 வருஷம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருஷம் |
| கடக சந்திரன் | 21 வருஷம் |
| கன்னி புதன் | 9 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| ஆக வயது | 100 வருஷம் |

## பூரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தவர்களின் பலன்

**மேதையன் அநங்கன் சால வேந்தரால் விருப்ப முண்டாம்**
**மாதுமால் உருவ மாகும் மனம்பிறர்க் கறிய வொண்ணான்**
**தாதுசேர் குழலாள் தன்மேல் தனம்பொருள் சார நில்லான்**
**மீதுறு அலக்கண் எண்ணான் மிதுனஅங் கிஷத்தி னானே. (109)**

*(சுவடி எண். 1500)*

இவன் அறிவாளி மன்மதன் போன்ற அழகன். இவனை அரசர்கள் மிகவும் விரும்புவார்கள். பெண்களும் மயங்கும் உருவ அழகுடையவன். இவன் மனதை பிறரால் அறிந்துகொள்ள முடியாது. பெண்கள் அல்லது தன் மனைவியிடம் கை செலவுக்காக பணம் எதிர்பார்க்க மாட்டான். அல்லது அவளுக்காக அதிகம் செலவழிக்க மாட்டான். வரும் துன்பங்களை உதாசீனப்படுத்தாமல் பொறுத்துக்கொண்டு அவற்றை வெல்ல முயற்சி செய்வான். இவனே பூரம் இரண்டாம் பாதத்தில் பிறந்த மிதுன அங்கிஷத்தின் குணங்கள் உள்ளவன் என்பதாகும்.

### இதற்குக் காலச் சக்கர தசை

| | |
|---|---|
| மிதுன புதன் | 9 வருஷம் |
| ரிஷப வெள்ளி | 16 வருஷம் |
| மேஷச் செவ்வாய் | 7 வருஷம் |
| தனுசு வியாழன் | 10 வருஷம் |
| மகரச் சனி | 4 வருஷம் |
| கும்பச் சனி | 4 வருஷம் |
| மீன வியாழன் | 10 வருஷம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருஷம் |
| துலாம் வெள்ளி | 16 வருஷம் |
| ஆக வயது | 83 வருஷம் |

## பூரம் மூன்றாம் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்

**தெள்ளியன் செய்ய நல்லன் சேயிழை யாரைப் பேணும்**
**ஒள்ளிய கண்ணி னாள்மேல் ஒண்பொருள் சார நில்லான்**
**பள்ளியும் பலவும் கற்கும் பாக்கிய முடைய னாகும்**
**வெள்ளியங் கிஷத்தில் வந்த விருப்புடைக் காளை தானே. (11)**

*(சுவடி எண். 1500)*

தெளிவான சிந்தனையுள்ளவன். தனக்குப் பிடித்த பெண்களை நன்கு பராமரிப்பான். ஆனால் மனைவி இடத்திலோ வேறு அழகிய கண்ணுடைய பெண்ணிடத்திலோ தன் செலவுக்குப் பணம் எதிர்பார்க்க மாட்டான். பல கல்விச்சாலைகள் கல்லூரிகளிலும் பயின்று பெரிய படிப்பாளியாவான். இவன் வாழ்க்கை முழுவதும் பாக்கியசாலியாக இருப்பான். இவனே பூரம் மூன்றாம் பாதத்தில் பிறந்த வெள்ளி அங்கிஷத்தின் குணங்கள் உள்ளவன்.

### இதற்குக் காலச் சக்கர தசை

| | |
|---|---|
| மிதுன புதன் | 9 வருடம் |
| சிங்க ஆதித்தன் | 5 வருடம் |
| கடகச் சந்திரன் | 21 வருடம் |
| கன்னி புதன் | 9 வருடம் |
| துலாம் வெள்ளி | 16 வருடம் |
| விருச்சிகச் செவ்வாய் | 7 வருடம் |
| மீன வியாழன் | 10 வருடம் |
| மகரச் சனி | 4 வருடம் |
| கும்பச் சனி | 4 வருடம் |

## பூரம் நான்காம் பாதத்தில் பிறந்தவர்கள் பலன்

**குறுகிய உருவன் பொய்யன் குறளை சேர்தலை வாயன்**
**மறுகிய மனத்தன் பெண்மேல் மனமது சார நில்லான்**
**குறுகிய கொடுமை செய்யும் முதுகினில் குழியு முண்டாம்**
**செறிதரு கூந்தல் பேணும் சேயின் அங் கிஷத்தி னானே.(111)**

பூரம் 4ம் பாதத்தில் பிறந்தவன் உயரம் குறைவாக குட்டையான வடிவமுள்ளவன். புறம் சொல்லுபவன். குளறுபடி செய்யும் திருந்தாத பேச்சுடையவன். மிகவும் அதிகமாகக் கொடுமை செய்யும் தன்மை உடையவனாகும். இவன் முதுகில் சுழி இருக்கும். தன் மனைவியை நன்றாகப் பாதுகாப்பான். இவனே செவ்வாயின் அங்கிஷத்தில் பிறந்தவன் குணம் என்று கொள்க.

**இதற்குக் காலச் சக்கர தசை**

| | |
|---|---|
| *தனுசு வியாழன்* | *10 வருடம்* |
| *விருச்சிகச் செவ்வாய்* | *7 வருடம்* |
| *துலாம் வெள்ளி* | *16 வருடம்* |
| *கன்னி புதன்* | *9 வருடம்* |
| *சிங்க ஆதித்தன்* | *5 வருடம்* |
| *கடகச் சந்திரன்* | *21 வருடம்* |
| *மிதுன புதன்* | *9 வருடம்* |
| *ரிஷப வெள்ளி* | *19 வருடம்* |
| *மேஷ செவ்வாய்* | *7 வருடம்* |
| *ஆக வயது* | *100 வருடம்* |

## பூர நட்சத்திரம் 1ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம விவரம் மற்றும் சாந்தி முறை

***சிவபெருமான் சொல்லுகிறார்:*** தேவீ ! சௌராஷ்ட்ர தேசத்தில் சோபனம் என்ற ஊர் இருக்கிறது. அங்கு செல்வந்த தன தான்யம் எல்லாம் நிரம்பிய மோகன் என்றொரு சத்திரியன் வசித்துவந்தான். அழகிய லட்சணங்களெல்லாம் பொருந்திய சதி என்ற பெயருடைய மனைவியும் அவனுக்கு இருந்தாள். அவன் தினமும் வைசியர்களுக்குரிய வியாபாரத் தொழிலையே செய்து பிழைப்பு நடத்தி வந்தான். இவன் பெரும்பாலும் எருதுகளை வளர்த்து விற்று வந்தான். அவன் ஒரு கிணற்றிலிருந்து எருதுகளால் தண்ணீர் இரைத்து வந்தான். அந்த எருதுகள் கிணற்றில் விழுந்து விட்டன. அவன் அவைகளை மீட்காததால் அந்தக் கிணற்றிலேயே அவை

இறந்து போயின. இவன் இதனால் தனக்கு ஏற்பட்ட பாவத்தை உணரவில்லை. அந்த மோகன் என்பவன் பண்ணிவந்த சில சுபகாரியங்களும் தர்மகுணத்தை அடிப்படையாகக் கொண்டவைகள் தான்.

வெகு காலம் சென்று அந்த சத்திரியன் இறந்தான். அதன் பின் பேராசைக்காரியான மனைவியும் இறந்தாள். எமதர்மன் ஆணையால் எமதூதர்கள் அவனை கோர நரகத்தில் 60 ஆயிரம் வருஷங்கள் தள்ளி தண்டித்தார்கள். அதன்பின் பச்சோந்தியாகப் பிறந்தான். ஹே அழகான முகம் கொண்டவளே ! இதன் பின் அவன் மனிதனாகப் பிறந்தான். போன ஜென்மத்தில் எருதுகளை, கிணற்றிலிருந்து காப்பாற்றாத பாவத்தால் அவனை நோய்கள் பற்றிக்கொண்டன. போன ஜென்ம இவன் மனைவியே இந்தப் பிறவியிலும் இவனுக்கு மனைவியானாள்.

இவன் பாவம் விலக பரிகாரம் கேள். தன் வீட்டிலுள்ள தனத்தில் 6ல் 1 பாகத்தைத் தானம் செய்யவேண்டும். அதன் பின் 5 லட்சம் முறை காயத்திரி மந்திரம் ஜெபம் செய்விக்க வேண்டும். இதனால் இவன் பாவங்கள் விலகி நோய்கள் தீர்ந்தன. இதனால் இவன் மனைவிக்கு சத்புத்ர யோகம் ஏற்படும். ஹே பார்வதி ! இந்த மாதிரி பரிகாரம் செய்தால் மற்ற மலடிகளும், காகவந்த்யை (ஒரு பிள்ளை பெற்றவள்) மருத வந்யை (குழந்தையை சாகக்கொடுத்தவள்) ஆண் பெண் யாராயிருந்தாலும் அவர்கள் பாபம் நீங்கப்பெற்று புத்திரப் பேறு பெறுகிறார்கள்.

## பூர நட்சத்திரம் 2ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம விவரம் மற்றும் சாந்தி முறை

சிவபெருமான் சொல்லுகிறார்: கர்நாடக தேசத்தில் ஒரு தச்சன் இருந்துவந்தான். அவன் மரம் வெட்டிப் பிழைத்து வந்தான். இவன் தன் குலக்கன்னிகை ஒருத்தியுடன் உடலுறவு கொண்டான். இவன் அவளை கல்யாணம் பண்ணிக்

கொள்ளாமல் இறந்துபோனான். அவளும் பல வழிகளிலும் கெட்டு விபசாரியாகி விட்டாள். பின்னால் அவளும் இறந்தாள். இவன் பண்ணிய பாவத்திற்காக யமதர்மராஜன் ஆணையால் 60 ஆயிரம் வருஷம் அக்கினி நரகத்தில் வெந்து தவிக்கச் செய்ய வைத்தான். அதன்பின் கோழியாகப் பிறந்தான். அதன் பின் அன்னமாகப் பிறந்தான். அதன் பின் மனிதனாகப் பிறந்தான். உயர்ந்த குடும்பத்தில் பிறந்தான். அதன்பின் ஒரு வேளாளனுடன் சினேகம் கொண்டான். அவனுக்கு அடிமைத் தொழில் செய்துவந்தான். தாய் தந்தையரைப் பகைத்துக்கொண்டான். அவனுடன் எருமைகள் விற்றுப் பிழைத்து வந்தான். இவன் போன ஜன்மத்தில் மரங்களை வெட்டிய பாவத்தால் இவனுக்கு பல நோய்கள் பற்றிக்கொண்டன. பின் நிரந்தரமாக கூன் முதுகனாகி விட்டான். போன ஜென்மத்தில் ஒரு கன்னிப் பெண்ணை (தன் சாதி) கற்பழித்ததால், இந்த ஜென்மத்தில் பிறந்த புத்திரன் இறந்துபோனான். இந்த ஜென்மத்தில் இவன் மனைவிக்குத் தொடர்ந்து கற்பச்சிதைவே ஏற்படுகிறது. இப்பொழுது பரிகாரம் சொல்லுகிறேன் கேட்பாயாக. தன் வீட்டில் உள்ள தனத்தில் எட்டில் ஒரு பங்கை உத்தம பிராமணர்களுக்குத் தானம் பண்ணவேண்டும். காயத்திரி மந்திரம் ஒரு லட்சம் முறை ஜபம் செய்விக்க வேண்டும். இதன்பின் கோதானம் பண்ணவேண்டும். அதன்பின் பிரதான சாலைகள் ஓரங்களில் பயணிகள் இளைப்பாற தோட்டங்கள் அமைக்கவேண்டும். அதன் பின் வீடு கட்டி தானம் பண்ண வேண்டும். இதனால் இவன் எல்லா பாவங்களும் விலகின. அதன்பின் இவனுக்கு பெண் குழந்தை பிறக்காது. நிச்சயம் ஆண் சந்ததி ஏற்படும்.

## பூரநட்சத்திரம் 3ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம விவரம் மற்றும் சாந்தி முறை

**சிவபெருமான் சொல்லுகிறார்:** சிம்ஹல தேசத்தில் சிம்மபுரம் என்ற ஊர் உண்டு. அங்ககாராம் என்ற பெயருடைய காயந்த வைஷ்ணவன் ஒருவன் இருந்தான்.

அவனுக்கு சூர்யா என்ற பெயருடைய அழகிய மனைவியுண்டு. அவள் மிகவும் உத்தமி. தினமும் தேவ, பித்ரு, அதிதி பூஜை முதலியவற்றைச் செய்துவந்தாள். அவள் கார்த்திகை, வைகாசி, மாசி மாதங்களில் தினமும் தீப தானம் செய்துவந்தாள். அதன் பின் அவர்கள் தீர்த்த யாத்திரை சென்றார்கள். அதன் பின் அந்த சிம்மபுரிக்கு நிறைய தங்கத்துடன் ஒரு பொற்கொல்லன் வந்து சேர்ந்தான். அந்த பொற்கொல்லனுக்கு கமலம் போன்ற முகமுள்ள ஒரு கன்னிகை இருந்தாள். கர்ம வசத்தால் அவள் முன்சொன்ன (காயஸ்தனின்) மனைவியானாள். நாளடைவில் அவள் தன் தகப்பனான பொற்கொல்லனின் பொன் பொருள் பூராவையுமே அபகரித்துக்கொண்டாள். தன் ஆஸ்தி அழிந்த கவலையில் அந்த பொற்கொல்லன் இறந்துபோனான். இந்த காயஸ்தன் தன் முதல் மனைவி, குழந்தைகளைத் தவிக்க விட்டு, இந்த புது மனைவியுடன் தினமும் போகத்தில் ஆழ்ந்தான். பல காலம் சென்று அந்த காயஸ்தனும் இறந்தான். தான் செய்த பாவத்தால் அந்த காயஸ்தன் 3 லட்சம் வருடங்கள் கும்பீபாக நரகத்தில் தள்ளப்பட்டுத் தண்டிக்கப்பட்டான். அவன் மனிதப் பிறவி அடைந்தான். ஆனால் முன் ஜென்ம பாவத்தால் அவனுக்கு வம்சம் விளங்கவில்லை. பல நோய்களும் தீராத காய்ச்சலும் அவனைப் பற்றிக்கொண்டன. அம்மை, வைசூரி நோய்களாலும் மிகவும் அவதிக்குள்ளானான்.

போன ஜென்ம பெண்டாட்டி பிள்ளைகளைக் கைவிட்டு வேறு பெண்ணுடன் இருந்த பாவத்தால் இந்த ஜென்மத்தில் மனைவி காகவந்த்யை ஆனாள். (ஒரு பிள்ளை பெற்றவள்) இவன் மனைவியை போகம் செய்யக்கூடிய சக்தி இல்லாமல் பலஹீனனானான். படிப்பும் இல்லை. இதற்கு சாந்தி சொல்லுகிறேன் கேள்!

முதலில் காயத்திரி மந்திரத்தை ஒருலட்சம் முறை ஜெபம் செய்விக்கவேண்டும். அதில் பத்தில் ஒரு பாகம் ஹோமம், அதில் 10ல் ஒரு பாகம் மார்சனமும் செய்ய வேண்டும். அதன் பின் தினமும் ஹரிவம்ச புராணம்

பாராயணம் செய்யவேண்டும். அதன் பின் 10 வண்ணங் கொண்ட பசுவை உரிய பிராம்மணனுக்குத் தானம் செய்ய வேண்டும். சுவர்ண தானமும் செய்யவேண்டும். 60 பிராமணனர்களுக்குப் போஜனம் பண்ணி வைக்கவேண்டும். அவர்களுக்குத் திருப்தியான தட்சணை கொடுக்கவேண்டும்.

இப்படிச் செய்தபின் இவன் பாவங்கள் எல்லாம் தொலைகின்றன. இவனுக்குப் புத்திர சந்தானமும் ஏற்படுகிறது.

## பூர நட்சத்திரம் 4ம் பாதத்தில் பிறந்தவர்களின் பூர்வ கர்ம விவரம் மற்றும் சாந்தி முறை

**சிவபெருமான் சொல்லுகிறார்:** நர்மதை நதியின் தெற்குக் கரையில் பிராம்மணத் தொழிலையும் எப்பொழுதும் வேதமே கண்ணாக ஓதி வந்த பிராம்மணன் ஒருவன் இருந்தான். இவன் தினமும் மஹாருத்ரம் பாராயணம் பண்ணி வந்தான். பிராம்மணச் சிறுவர்களுக்கு வேதபாடமும் சொல்லி வந்தான். இவனுக்கு 2 மனைவியர் உண்டு. பிராம்மணன் இளையவள் மேல் மிகவும் மோகமாக இருந்தான். மூத்தமனைவி தள்ளிவைக்கப்பட்டாள். இப்படி பல காலம் வாழ்ந்த பின் பிராம்மணன் இறந்தான். அதன்பின் இந்த பிராம்மணனின் மூத்த மனைவி கணவனுடன் உடன்கட்டை ஏறி உயிரை விட்டாள். பிராமணன் தன் மனைவியுடன் சத்யலோகம் சென்றான். அங்கு பல காலம் போகம் சந்தோஷம் அனுபவித்து புண்ணியம் தீர்ந்தபின் பூவுலகில் மீண்டும் உத்தம குலத்தில் மனிதனாகப் பிறந்தான். இப்பிறவியில் மிகவும் அதிக தன தான்யம் முதலியவற்றுடன் பெரும் பணக்காரனாக இருந்தான். போன பிறவியில் முதல் மனைவியைத் தள்ளி வைத்த தோஷத்தால் இப்பிறவியில சந்ததி இல்லாமல் போயிற்று. வயிற்று வலியாலும் மேலும் பல நோய்களாலும் இவன் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான்.

இந்த பாவம் போகத் தன் முழுதனத்தின் 6ல் ஒரு பங்கைத் தானம் பண்ண வேண்டும். அதன்பின் "காயத்திரி", ஜாதவேதசே என்ற 2 மந்திரங்களையும் இணைத்து 1 லட்சம்

முறை ஜபம்பண்ணவேண்டும். அதன்பின் எள், மற்றும் அரிசி பாயாசத்தால் 10ல் ஒருபங்கு ஓமம், அதன் 10ல் ஒருபங்கு தர்ப்பணம், அதில் 10ல் ஒருபங்கு மார்ச்சனம் முதலியவற்றை முறையாகச் செய்யவேண்டும்.

சாலை ஓரங்களில் பயணிகளுக்காக கிணறு, பொய்கைகள், துறவுகள் கட்ட வேண்டும். இப்படிச் செய்வதால் நிச்சயமாக வம்ச விருத்தி ஏற்படுகிறது. ஆண் சந்ததியும் உண்டாகும்.

**இதற்கு மகா தசை விவரம்**

| | |
|---|---|
| சுக்கிரன் | 20 வருஷம் |
| சூரியன் | 6 வருஷம் |
| சந்திரன் | 10 வருஷம் |
| செவ்வாய் | 7 வருஷம் |
| ராகு | 18 வருஷம் |
| குரு | 16 வருஷம் |
| சனி | 19 வருஷம் |
| புதன் | 17 வருஷம் |
| கேது | 7 வருஷம் |
| ஆக வயது | 120 வருஷம் |

**இவனுக்கு ஏற்படும் கண்டம் நோய் முதலியன**

பிறந்த ஆண்டில் இவனுக்குப் பிள்ளைப் பிணியால் கண்டம் உண்டு. 3 வயதில் வெதுப்பு, 7 வயது சிலந்தியால் வெதுப்பு, உதர நோய், 12 வயதில் உயர ஏறி விழுதலால் காயம், 16 வயதில் ஜலகண்டம், 25 வயதில் சிலந்தியாலும் பெண்கள் தொடர்பாலும் நோய் உண்டு. 33 வயதில் விஷத்தால் கஷ்டம், 48 வயதில் 4 கால் மிருகத்தால் கண்டம், 50 வயதில் மீண்டும் காய்ச்சல், சிலந்தி நோயாலும் கஷ்டம், 60 வயதில் வாத ஜன்னியாலும், 83 வயதில் வெதுப்பும் வீக்கமும், 88 வயது சென்று அமரபட்சத்து சஷ்டியும், ஞாயிற்றுக்கிழமையும் சேர்ந்த பூரநாளில் வயிற்று நோயால் இறைவனடி சேர்வான்.

## பிறந்த சாரம்

1) இவன் பிறந்த லக்கின சாரம் சூரியனாகில் - வேளாண்மை செய்வான்.

2) இவன் பிறந்த லக்கின சாரம் சந்திரனாகில் - பல தேச சஞ்சாரம் செய்வான்.

3) இவன் பிறந்த லக்கின சாரம் செவ்வாயானால்- தரித்திரன்.

4) இவன் பிறந்த லக்கின சாரம் புதனாகில்-புத்திமான்.

5) இவன் பிறந்த லக்கின சாரம் குருவானால்-வியாபாரி.

6) இவன் பிறந்த லக்கின சாரம் சுக்கிரனாகில் - யாவர்க்கும் நல்லவன்.

7) இவன் பிறந்த லக்கின சாரம் சனியாகில் - விசுவாசன், பிடிவாதக்காரன்.

8) இவன் பிறந்த லக்கின சாரம் ராகுவாகில் - கலகம் செய்பவன்.

9) இவன் பிறந்த லக்கின சாரம் கேதுவானால் - கன்னக்கோல் வைத்துத் திருடுபவன்.

இந்த நாளில் சுரம் தோன்றில் 20 நாழிகையில் அல்லது 20 நாளில் விடும். அப்படித் தீராவிட்டால் நெல், பால், பொரி இவைகளை பலி இட்டு வேத மந்திரங்களால் ஓமம் செய்து மரத்தடி அல்லது குளக்கரையில் பூர நட்சத்திர தேவதையை நோக்கி பூசை செய்யவும்.

இந்த நாளில் வானவில் தோன்றினால் 8 நாழிகையில் மழை பெய்யும்.

இந்த நாளில் பிறந்தவன் செந்நெல் (காரரிசிச்சோறு) தின்று ஊர்வழி போகவும்.

**பரிகாரம்:** "பில்வப்பழம் தூபம்" "சூர்ய மணம் தேவம்" என்பது பூஜை மந்திரம், நெய் சேர்த்து பிரியங்கு திரவியம் சூரியனுக்கு சந்தனம் புஷ்பம், சாவித்திரி 108 தடவை ஓதவும். 6 நாள் முதல் 8 நாளைக்குள் சுகமாகும். இதில் மாதம் பிறந்தால் பயிர் மத்திபம்.

## *பிறர் மதப்படி பூரம் நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்*

### *பொதுப்பலன் - ஆண்கள்*

**உடலமைப்பு:** பிறரைக் கவரும் உருவ அமைப்பு உடையவன். கட்டுமஸ்தான உடல், நிறம் கருப்பும் சிவப்பும் கலந்த நிறமாக இருக்கும். அடிக்கடி உடல் வியர்க்கும். மூக்கு தட்டையாக இருக்கும்.

**குண நலன்கள்:** முழு சுதந்தரத்தையும் விரும்புவான். இவன் ஏதாவது ஒரு துறையில் புகழ்பெற்றவனாக இருப்பதைக் காணமுடிகிறது. இவனது மனம் பல விஷயங்களால் பாதிக்கப்பட்டிருக்கும். பிறருடைய பிரச்சினைகள் என்னவென்று ஊகித்து அறியும் சக்தி இவனுக்குப் பிறவியிலேயே உண்டு. அதனால் பாதிக்கப் பட்டவர்கள், இவரை உதவிக்கு அணுகுவதற்கு முன்பாகவே தானே அவர்களுக்கு உதவிக்கரத்தை நீட்டுவான். இனிமையாகவும், இதமாகவும் பேசுபவன். பிரயாணம் செய்வதில் விருப்பம் உடையவன்.

**கல்வியும், தொழிலும்:** இவன் யாருக்கும் அடிமையாக இருப்பதை விரும்பமாட்டான். இந்த குணத்தினால் இவன் எவர் கீழும், உண்மையிலேயே அடிமையாக இருக்கும் வேலையை ஏற்றுக்கொள்ள மாட்டான். இந்த நிலை வாழ்க்கையில் இவனைப் பல பிரச்சினை நெருக்கடிகளுக்கு உள்ளாக்கும். ஆனால் அவைகளைத் தைரியமாக எதிர்நோக்க எப்பொழுதும் தயாராக இருப்பான். உத்தியோகத்தில் இருப்பவனாக இருந்தால் தன் மேலதிகாரிகளுக்கு ஆமாம் சாமி போட

மாட்டான்.அதனால் மேலதிகாரிகளின் தயவு' இவனுக்கு கிடைக்காது.

இவன், தான் மேற்கொள்ளும் வேலைகளிலும் உண்மையாக உழைப்பான். சட்ட புறம்பான எந்த வேலைகளையும் செய்யமாட்டான். அதற்குத் துணை போகாததுடன், அத்தகைய நடவடிக்கைகளை பிறர் செய்யும்போது பொருத்துக்கொண்டு போகும் அல்லது கண்டும் காணாததுபோல் இருக்கும் சக்தி இவனுக்குக் கிடையாது.

இந்தக் குணம் இவனைப் பல பிரச்சினைகளில் ஆழ்த்தினாலும் அவைகளை எதிர்த்து நிற்க ஆயத்தமாகவே இருப்பான். பிறருடைய செலவில் தான் எந்த ஆதாயமும் தேடாதவன். இதனால் இவனுக்கு பல முறை எதிரிகள் இருப்பார்கள். அவர்கள் இவனுடைய முன்னேற்றத்துக்குப் பெரும் தடையாக இருப்பார்கள். இருந்தாலும் இவன் இந்தத் தடைகளை தகர்த்தெரிந்து, எதிரிகளை ஒடுக்கி தான் எடுக்கும் எந்த வேலையையும் வெற்றியுடன் செய்து முடிப்பான். அதிகார வியாபாரி. பணத்தைவிட பதவிக்கும், பொசிசனுக்கும் அதிகாரத்துக்கும் முன்னுரிமை தருபவன். தன் முன்னேற்றத்திற்கு நேர் சரியான வழியிலேயே செல்வான். அதற்குத் தன் பெரும்பான்மையான நேரத்தைச் செலவிடுவான்.அவன் தகுதியும், அறிவாற்றலும் பெற்றவனாக இருந்தாலும் கூட, தான் எந்த பொஸிசனில் இருக்கவேண்டும் என்று நினைக்கிறானோ அந்த இடத்தை இவனால் அடையமுடியாது. இதற்கு இவன் வாழ்க்கையில் முன்னேற மாட்டான் என்பது பொருளல்ல.

உத்தியோகத்துறையில் இவன் அடிக்கடி முக்கியமாக தன் 22, 27, 30, 32, 37, வயதுகளில் தன் வேலையை மாற்றிக் கொண்டிருப்பான். ஆனால் இவன் விரும்பும் வேலையையும், ஸ்தானத்தையும் 45வது வயதிற்குப் பிறகு தான் அடையமுடியும்.

பிறருடைய பணத்தைப் பெற இவன் விரும்பாதவனாக இருந்தாலும் பொருளாதார சிக்கல்கள் பிறரால் இவனுக்கு அடிக்கடி ஏற்படும். அதாவது இவனிடம் கடன் வாங்கியவர்கள் ஒழுங்காக திருப்பித் தரமாட்டார்கள்.

இவ்வளவு எதிர்மாறான நிலைகள் இவனுக்கு ஏற்பட்டாலும், 45 வயதுக்கு மேல் இவன் விரும்பியபடி அதிகாரம் செய்யும் பொஸிஷனை இவன் அடைவான். பிஸினஸ் துறையில் நன்கு பிரகாசிப்பான்.

**குடும்ப வாழ்க்கை:** சந்தோஷமாக குடும்பவாழ்க்கை நடக்கும். நல்ல குணவதியான மனைவியையும் மக்களையும் அடைந்து அவர்களால் சந்தோஷமும் பெருமையும் அடைவான். சிலர் தன்னுடைய விருப்பத்திற்கு ஏற்ற பெண்ணை மணக்க இயலாமல் போகலாம்.

செவ்வாயை சனி தன் ஏழாம் பார்வையால் பார்த்திருந்தால் சிலருடைய மனைவி இறந்துபோகலாம். அல்லது விவாகரத்தினால் பிரியலாம். தன்னுடைய மனைவி மக்கள் மற்ற உறவினர்களைப் பிரிந்து சொந்த ஊரை விட்டு வெகுதூரம் வாழ்வான்.

**உடல் ஆரோக்கியம்:** ஆரோக்கியம் பொதுவாக நன்றாகவே இருக்கும். இருந்தாலும் பல் நோய்கள், வயிற்றுக்கோளாறுகள், டயபிடிஸ் முதலியவை இவனைச் சுலபமாகப் பீடிக்கும். எனினும் நிரந்தரமான நீண்டகால நோய்கள் எதுவும் கிடையாது.

## பொதுப்பலன் - பெண்கள்

பழங்கால முனிவர்கள் பூர நட்சத்திரத்தில் பெண்களுக்கு கெடுதலான பலன்களையே சொல்லி இருக்கிறார்கள். ஆனால் அனுபவத்தின்படி பார்த்தால் இப்பெண்கள் அன்பான கணவனையும் அடையும் அதிர்ஷ்டசாலிகளாகவே இருக்கிறார்கள்.

**உருவ அமைப்பு:** நடுத்தர உயரமும், நீண்ட நாசியும், உருண்டையான முகமும் கொண்டவள். முகவாயில் பள்ளம் விழுந்திருக்கும். பொதுவாக கவர்ச்சியானவள்.

**குண நலன்கள்:** அடக்கமானவள். எல்லோரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய குணங்கள் கொண்டவள். எல்லோரிடமும் ஒத்துப்போவாள். மேன்மையானவள். கலைகளைப் பற்றிய அறிவு உண்டு. தருமகாரியங்கள் செய்பவள். சரியான செயல்களையே செய்வாள். சந்தோஷமனம் கொண்டவள். இவ்வளவு நல்ல குணங்கள் கொண்ட இவளிடம் ஒரு வினோத குணமும் உண்டு. தன்னை ஒரு சிறந்த கற்பனை உருவமாகப் பிறரிடம் காட்டிக்கொள்வாள். தன்னைவிட மிஞ்சியவர் யாருமில்லை என்று நினைப்பாள். இந்த குணம் இவர்களுடைய முன்னேற்றத்தை தடைசெய்யும்.

**கல்வி-தொழில்:** விஞ்ஞானசம்பந்தமான விஷயங்களில் இவள் கல்வி அமையும். கல்வியில் டிகிரி வாங்குவாள். இவள் ஒரு லெக்சரராக வேலை செய்யலாம். தேவைக்கேற்ற செல்வம் உள்ளவள்.

**குடும்ப வாழ்க்கை:** அன்பான கணவனையும் நல்ல குழந்தைகளையும் பெறுவாள். கடமை உணர்வுள்ள மனைவியாக இருப்பாள். தன் குடும்ப நல்வாழ்வுக்காக எதையும் தியாகம் செய்யத்தயாராக இருப்பாள். தேவையான சமயத்தில் உதவி செய்தவர்களை எப்போதும் மறக்க மாட்டாள். ஆனால் இவளை மற்றவர்கள் பிடிவாதக்காரி என்று சொல்வார்கள். இவள் எண்ணப்படி தன் குடும்பத்தில் இவள் தான் புத்திசாலி மற்றவர்கள் முட்டாள் என்ற எண்ணத்தால் இவளுக்கும் குடும்ப உறுப்பினர்களுக்கு மிடையே அடிக்கடி சச்சரவுகள் உண்டாகும். பக்கத்து வீட்டுக்காரர்களுடன் சுமுகமான உறவு இருக்காது. இதற்குக் காரணம் இவளுடைய கணவனின் பொஸிஷனும் பணமும் இவளை பெருமைப்பட வைப்பதுதான்.

**ஆரோக்கியம்:** அடிக்கடி மாதவிடாய்க் கோளாறுகள் ஏற்படும். ஆஸ்துமா, ஜாண்டிஸ், சுவாசக்கோளாறுகள் முதலியன இவளைக் கஷ்டப்படுத்தும். பெண் பூர நட்சத்திரத்தில் புஷ்பவதி ஆனால், வாழ்க்கையில் துயரம் உடையவள். பொல்லாதவள். பழிவாங்கும் குணம் கொண்டவளாக இருப்பாள். மேலும் அன்னிய புருஷர்களுடன் சுகம் அனுபவிப்பாள்.

## பூர நட்சத்திரத்தில் உள்ள சூரியனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சந்திரன் பார்த்தால்:** எதிரிகளாலும் உறவினர்களாலும் துன்புறுத்தப்படுவான். பணம் இல்லாதவன் வெளி யிடங்களில் அலைந்து திரிவான்.

**செவ்வாய் பார்த்தால்:** மூளை சுரம் அல்லது மன நோயால் கஷ்டப்படுவான். சோம்பேறியானவன். எப்போதும் தன் எதிரிகளை நினைத்து பயந்து கொண்டிருப்பான்.

**புதன் பார்த்தால்:** அருமையான குழந்தைகள் குடும்பத்திற்கு ஆபரணம் போல் இருப்பார்கள். அரசாள்பவரிடமிருந்து சப்போர்ட் கிடைக்கும்.

**குரு பார்த்தால்:** சுதந்திரமான மனப்போக்கு உடையவன். மந்திர வித்தையில் கைதேர்ந்தவன். மனைவி மக்களுடன் நல்ல உறவு இருக்காது.

**சுக்கிரன் பார்த்தால்:** அயல்நாட்டில் வசிப்பான். ஆயுதம் தீ அல்லது விஷத்தால் காயம் அல்லது அபாயம் உண்டு.

**சனி பார்த்தால்:** அனேக வேலையாட்களை உடையவன். சூதாரி, சட்டவிரோத செயல்களில் ஈடுபடுவான்.

## பூர நட்சத்திரத்தில் உள்ள சந்திரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** பலவித குணமுள்ள மனிதர்களைக் கையாள்வதில் சமர்த்தன். இவன் பலருக்கும் உதவியாக இருப்பான். ஆனால் இவனுக்கு தேவைப்பட்ட சமயத்தில் யாரும் உதவமாட்டார்கள். சுமாரான பொருளாதார நிலையை உடையவன்.

**செவ்வாய் பார்த்தால்:** கெட்டிக்காரன். தந்திரக்காரன். செல்வந்தன்.

**புதன் பார்த்தால்:** தைரியசாலி, நீதி, நேர்மை உள்ளவன். ஆட்சியாளர்களுக்கு வேண்டியவன். பரோபகார குணம் உண்டு.

**குரு பார்த்தால்:** மத சம்பந்தமான கோட்பாடுகள் எல்லாம் இவனுக்கு அத்துபடி. இதை வைத்தே பொருள் சம்பாதிப்பான்.

**சுக்கிரன் பார்த்தால்:** உலகிலுள்ள அத்தனை சுகங்களையும் அனுபவிப்பான். ஆனால் பூரம் 1 & 2ம் பாதங்களில் சந்திரனை சுக்கிரன் பார்த்தால் சொல்லமுடியாத கஷ்டங்களையும் துரதிர்ஷ்டங்களையும் அனுபவிக்க நேரும்.

**சனி பார்த்தால்:** செல்வம், மனைவி, உணவு etc இல்லாதவன்.

## பூர நட்சத்திரத்தில் உள்ள செவ்வாயை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** டாக்டராக தொழில் செய்வான். வாழ்க்கையில் சுகங்கள் இருக்காது.

**சந்திரன் பார்த்தால்:** அறிஞனாக இருப்பான். நீர் சம்பந்தப்பட்ட நோய்கள் உள்ளவன். பாதுகாப்பு ஸ்தாபனத்தில் வேலை செய்வான். அல்லது ஒரு சத்திர பாதுகாவலனாக இருப்பான்.

**புதன் பார்த்தால்:** கணக்கில் வல்லவனாக இருப்பான். செய்யுள், பாடல் இவற்றில் ஆர்வம் உடையவன். பேசுவதெல்லாம் பொய்யாக இருக்கும்.

**குரு பார்த்தால்:** சாதாரணமாக அயல் நாட்டில் வசிப்பான். ஆரம்பத்தில் மிகவும் கஷ்டப்படுவான். போகப் போக நல்ல நிலையை அடைவான்.

**சுக்கிரன் பார்த்தால்:** ஏகப்பட்ட சொத்து சுதந்திரம், செல்வம், துணிமணிகள், உணவு எல்லாம் உள்ளவன். செக்சில் மிகவும் அதிகமாக ஈடுபடுவான்.

**சனி பார்த்தால்:** அருவருக்கத்தக்க பழக்க வழக்கம் உடையவன். மிகவும் தைரியசாலி.

## பூர நட்சத்திரத்தில் உள்ள புதனை மற்ற கோள்கள் பார்த்த பலன்

**சூரியன் பார்த்தால்:** உண்மையானவன். லலித கலைகளில் விருப்பம் உள்ளவன். அரசாங்கத்திடமிருந்து கௌரவம் பெறுவான்.

**சந்திரன் பார்த்தால்:** எதற்கெடுத்தாலும் விவாதம் செய்வான். அதிகம் பேசுபவன். கோபக்காரன்.

**செவ்வாய் பார்த்தால்:** அழகிய உருவம் பெற்றவன். கொடுமை நிறைந்தவன். அரசாங்கத்தில் வேலை செய்பவன்.

**குரு பார்த்தால்:** செல்வத்தையும் இதர சுகங்களையும் வசதிகளையும் பெற்றவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** அரசாங்கம், அல்லது ஆட்சியாளர்களின் பிரதிநிதியாக இருப்பான். எதிரிகளை அழிப்பான். அரசாங்கத்தால் கௌரவிக்கப்படுவான். புகழ்பெறுவான்.

**சனி பார்த்தால்:** அதிக முயற்சி இல்லாமல் செய்யும் காரியங்களில் பலனை அடைவான். மரியாதைக்குரியவன். நல்ல ஆடைகளை அணிவதில் கருத்தாக இருப்பான்.

## *பூர நட்சத்திரத்தில் உள்ள குருவை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** தன் கிராமத்தின் தலைவனாக இருப்பான். இவனிடம் செல்வம் அதிகமாக இராது.

**சந்திரன் பார்த்தால்:** தன் தாய்க்குப் பிரியமானவன். அதிர்ஷ்டக்காரன். தன் மனைவி மக்களிடம் அன்பாயிருப்பான்.

**செவ்வாய் பார்த்தால்:** வெற்றி இவனுக்கு விரைவில் கிட்டும். நிறைய பணம் சம்பாதித்து அதனால் நிலபுலன்களும் வீடுகளும் வாங்குவான்.

**புதன் பார்த்தால்:** பிறரைச் சுலபமாகக் கவர்ந்து விடுவான். ஜோதிடத்தில் தனித்திறமை பெற்றவன். இனிமையான பேச்சாளன்.

**சுக்கிரன் பார்த்தால்:** கட்டிடங்கள் கட்டும் தொழிலில் (என்ஜினியர்) ஈடுபட்டு நிறைய சம்பாதிப்பான்.

**சனி பார்த்தால்:** தன் குடும்பத்தில் தலைவனாக இருப்பான். செல்வந்தன். தன் சமூக ஜனங்களுக்குத் தலைவன்.

## *பூர நட்சத்திரத்தில் உள்ள சுக்கிரனை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** நன்றாகப் படித்தவன். அரசாங்கத்தில் பணிபுரிபவன்.

**சந்திரன் பார்த்தால்:** மிகவும் கவர்ச்சிகரமான உருவப் பொலிவு உள்ளவன். செல்வமும் வசதிகளும் சுகமும் பெற்றவன்.

**செவ்வாய் பார்த்தால்:** கெட்ட பழக்க வழக்கம் உடையவன். பூர்வீக சொத்துக்களை பெண்களுக்காக அழிப்பான்.

**புதன் பார்த்தால்:** வாகன வசதிகள் கொண்டவன். நல்ல குழந்தைகள் பிறக்கும். தான் பணிபுரியும் ஸ்தாபனத்தின் தலைமைப் பதவியைப் பெறுவான். பணக்காரன்.

**குரு பார்த்தால்:** எல்லா வகையிலும் அதிர்ஷ்டக்காரன். தைரியசாலி.

**சனி பார்த்தால்:** துயரமான வாழ்க்கை அமையும்.

## *பூர நட்சத்திரத்தில் உள்ள சனியை மற்ற கோள்கள் பார்த்த பலன்*

**சூரியன் பார்த்தால்:** வாழ்க்கையில் எந்தவிதமான சந்தோஷத்தையும் அனுபவிக்க இயலாது கடைநிலை ஊழியங்களைச் செய்வான். சூடான மனநிலையை உடையவன்.

**சந்திரன் பார்த்தால்:** சிரித்த முகத்துடன் எப்போதும் இருப்பான். அரசாங்கத்தில் பணிபுரிபவன். அல்லது பிரபல அரசியல்வாதியாக இருந்து அதன் மூலம் பணம் திரட்டுவான்.

**செவ்வாய் பார்த்தால்:** மிகவும் அறிவாளி. மரியாதைப் பட்டவன்.விஞ்ஞானத்தின் பல பிரிவுகளிலும் நிபுணன்.

**புதன் பார்த்தால்:** சண்டை புரிவதில் கில்லாடி விஞ்ஞானத்துறையில் பல பிரிவுகளிலும் ஞானம் உடையவன். திரண்ட செல்வம் படைத்தவன். புதன் இங்கு இருப்பது ஆயுள் பாவத்துக்கு நல்லதல்ல.

**குரு பார்த்தால்:** உன்னதமான ஜெண்டில்மேன். நல்ல குணங்கள், நடத்தைகள் உடையவன். தேவைப் பட்டவர்களுக்கு உதவுவான். அரசியலில் இருப்பான். அல்லது கவர்மெண்ட் ஊழியம் செய்பவன்.

**சுக்கிரன் பார்த்தால்:** பொற்கொல்லனாகவோ அல்லது உலோகங்களை விற்கும் வியாபாரியாகவோ இருப்பான். மத கோட்பாடுகளில் வழியில் மனம் செல்லும்.

## பூர நட்சத்திர முதல் பாதத்தில் கோள்கள் நின்ற பலன்

**சூரியன் நின்றால்:** இதில் இருக்கும் சூரியனை சனி அல்லது செவ்வாய் பார்த்தால் இவன் மூளைசுரம் அல்லது மெனிஞ்ஜிடிஸ் வியாதியால் கஷ்டப்படுவான். மெடிகல்லைன் அல்லது அரசாங்கத்தில் ஊழியனாக சில சமயம் வன்முறையில் ஈடுபடுவான்.

**சந்திரன் நின்றால்:** மிகவும் தைரியசாலி, தன் தாயைத் தெய்வமாக மதிப்பவன். தாயைத் தவிர மற்ற பெண்களை வெறுப்பவன். பரம ஏழை. பட்டினி கிடப்பதால் ஏற்படும் வியாதிகளை அனுபவிப்பான். கெமிக்கல் மூலம் வருமானம் ஏற்படும் அல்லது ஆஸ்பத்திரி தொடர்பான பொருள்கள் மூலம் சம்பாதனை வரும். நல்ல மனைவியை உடையவன். இவன் மக்கள் கடமை உணர்வு மிகுந்தவர்களாக இருப்பார்கள்.

**செவ்வாய் நின்றால்:** ஒருவன் மெடிக்கல் தொழிலில் இருப்பதற்கு செவ்வாய் இதில் இருப்பது மிகச்சிறந்த நிலை. இவன் ஆஸ்பத்திரி தொடர்புள்ள சாதனங்களை விற்பதிலும் பொருளீட்டுவான். எபிலெப்ஸி, தவறான மருந்து உட்கொள்வதால் உடலில் விஷம் பரவுதல், முதுகுத் தண்டில் உள்ள சதைகள் பாதிக்கப்படுதல் போன்ற நோய்கள் ஏற்பட வாய்ப்புண்டு.

**புதன் நின்றால்:** பணக்காரனாகவும், புகழ்மிக்க வனாகவும் இருப்பான். ஞாபகசக்தி குறைவாக இருக்கும். பலவீனமாக உடலைப்பெற்றவன். இந்த புதனை குரு சேர்ந்து அல்லது பார்க்காதிருந்தால் இழிவான நடத்தைகள் உடையவன். பெண்டாட்டி பிள்ளைகள் இல்லாதவன்.

இவன் எந்த வேலையை மேற்கொண்டாலும் அது மற்றவர்களுக்கு சாதகமாக இருக்குமே தவிர இவன் குடும்பத்துக்கோ அல்லது வம்சத்துக்கோ அதனால் எந்த பிரயோஜனமும் ஏற்படாது.

**குரு நின்றால்:** உடல் வலிமையும், தைரியமும் மிக்கவன். சிறந்த நட்பை நண்பர்களிடம் காட்டுவான். விஞ்ஞானத்தின் பல பிரிவுகளிலும் சிறந்த ஞானத்தை உடையவன். பணக்காரன்.

**சுக்கிரன் நின்றால்:** இவன் திரண்ட செல்வத்தையும் சந்தோஷத்தையும் வாழ்க்கையில் அனுபவிப்பான். இவனை உறவினர்கள் அனைவரும் விரும்புவார்கள். கஷ்டத்தில் உள்ளவர்களுக்குத் தேவையான உதவியைத் தயங்காமல் அளிப்பான். இவன் அரச குடியில் பிறந்திருந்தால் தன் மூதாதையர் சொத்து முழுவதையும் ஏழைகளுக்கும், தேவைப்பட்டவர்களுக்கும் வாரி வழங்குவான்.

**சனி நின்றால்:** இளம்பருவம் மிகவும் பரிதாபகரமான நிலையில் கழியும். இந்த சனியை குரு பார்க்காமல் தனியாக இருந்தால், மூளைக்கோளாறு, பாரிசவாயு, காக்கை வலிப்பு அல்லது மயக்கத்தைத் தரும் வலிப்புகள் போன்ற பயங்கர நோய்கள் ஏற்படலாம்.

**ராகு நின்றால்:** மிகப்பெரிய ஸ்தாபனத்தை தலைமை தாங்கித் திறமையாக நிருவகிக்கும் திறமை பெற்றவன். இந்த இடத்து ராகு ஒருவனை தொழிற்சாலைகளுடன் சம்பந்தப்படுத்துவான். தன் மேலதிகாரிகளிடம் தன் வேலைகளை எப்படி முடித்துக்கொள்ள முடியும் என்ற தந்திரம் இவனுக்குத் தெரியும். அன்பானவன்.

**கேது நின்றால்:** இது கேதுவுக்கு ஒரு நல்ல பொஸிஷன். வாழ்க்கைக்குத் தேவைப்படும் பொருட்கள், வசதிகள், சௌகரியங்கள், திரண்ட செல்வம்,புகழ், ஆரோக்கியம் , ஆனந்தமான மணவாழ்க்கை எல்லாம் பெறுவான்.

## *பூர நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் கோள்கள் நின்றபலன்*

**சூரியன் நின்றால்:** சூரியனுடன் சந்திரனும் இதில் சேர்ந்து இருந்து, சனியும் செவ்வாயும் ஆயில்ய நட்சத்திரத்தில் இருந்தால், உயர்ந்த ரேங்க் உள்ள ஆபீசராக இருப்பான். இவனுடைய மனைவியும் ஆயுளும் நீண்ட நாட்களுக்கு சொல்வதற்கில்லை. இரண்டாவது கல்யாணமும் இவனுக்கு ஏற்படாது.

**சந்திரன் நின்றால்:** கோபக்காரன். தன் மத்திய வயதில் தன்னுடைய ஆசாபாசங்களை கட்டுப்படுத்திக் கொள்வான். அமைதியானவன்.எதுவானாலும் வரட்டும் என்ற மனப் பான்மை முது வயதில் ஏற்படும். வயிற்றுக்கோளாறு, பல்வலி போன்றவைகள் ஏற்படும்.

**செவ்வாய் நின்றால்:** டிபன்ஸ் அல்லது போலீஸ் டிபார்ட்மெண்டில் பணிபுரிவான். இவனுக்கு வேண்டாத வர்கள் பில்லி சூனியம் போன்றவை வைத்து, சில குணமாக்க முடியாத வியாதிகள் ஏற்பட்டு கஷ்டப்படுவான். இதன் காரணத்தை யாராலும் கண்டுபிடிக்க முடியாது.

**புதன் நின்றால்:** கடமை உணர்வு உள்ள மக்களைப் பெற்றவன். பெண்களிடம் விருப்பம் உண்டு. இவன் லாயர் தொழிலுக்கு பொருத்தமானவன். இந்த புதனுடன் செவ்வாய் சேர்ந்திருந்தால், எப்பொழுதாவது ஒருமுறை ரத்தம் இவன் உடலில் செலுத்தும்படியாக இருக்கும். ஹார்ட் டிரபுள் அல்லது வலிப்புகள் அடிக்கடி வரும்.

**குரு நின்றால்:** புதனுடன் சேர்ந்து குரு இருந்தால் இவன் சட்டத்தொழிலில் இருப்பான். லாயராக செவ்வாய் சேர்ந்து இருந்தால் அரசாங்கத்தில் உயர்பதவியில் நிருவாகியாக இருப்பான். பலரை வாழவைப்பான். இதமாகப் பேசுபவன் எல்லோரும் இவனை விரும்புவர்.

**சுக்கிரன் நின்றால்:** புதனுடன் சுக்கிரனும் இருந்தால் இவன் ஒரு லாயர். அல்லது கோட்டில் வேலை செய்யும் ஊழியர். இதற்கு மற்ற கிரகங்களும் துணை செய்ய வேண்டும்.

**சனி நின்றால்:** தாராளமானவன். பெருந்தன்மை உள்ளவன். உணர்ச்சி வசப்பட்டவன். எழுத்தாளனாக பணம் சம்பாதிப்பான். 50வது வயதில் உலகத்தாரால் அங்கீகாரம் பெறுவான். சந்தோஷமான வாழ்க்கை அமையும். ஒரே ஒரு பெண்ணும் ஒரு ஆணும் பிறப்பார்கள். மனைவிக்கு சில கருச்சிதைவுகள் ஏற்படும். சுக்கிரனுடன் சூரியனும் சேர்ந்து இருந்து செவ்வாய், சனி இருவரின் பார்வையும் பெற்றால் இவன் பிறவிக்குருடன் இல்லை. ஆனால் இவன் கண்கள் கோளாறு உள்ளதாக இருக்கும்.

**ராகு நின்றால்:** இவன் தன்னைத்தானே உருவாக்கிக் கொள்வான். இவன் சாதாரண குடும்பத்தில் பிறந்தவன். உயர்ந்த பதவியை எட்டிப் பிடிப்பான். நல்ல மனைவியும், குழந்தைகளும் அமைவர்.

**கேது நின்றால்:** கேது பூரம் முதல் பாதத்தில் கொடுத்த பலனையே இங்கும் தருவான்.

## *பூர நட்சத்திரம் மூன்றாம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்ற பலன்*

**சூரியன் நின்றால்:** கவர்மெண்ட் அல்லது மெடிக்கல் லைனில் உத்தியோகம் அமையும். இருதய வியாதியும்,

மயக்கமும் தலைசுற்றலும் இவனுக்கு ஏற்படும். வியாதிகள், இளம்பிராயத்தில் நிறைய நிதிப்பிரச்சினைகளை சமாளிக்க வேண்டிவரும். 33வது வயதிற்குப் பிறகே வருமானத்தில் ஸ்திரத்தன்மை ஏற்படும்.

**சந்திரன் நின்றால்:** அனேக பொறுப்புகளை சுமப்பான். பற்களிலும் கால் முட்டியிலும் வலிகள் தோன்றும். ஆக்கிரமிப்பு குணமும், எதைப்பற்றியும் வருத்தப்படாத குணமும் கொண்டவன். இவன் வீட்டில் பொருட்கள் திருட்டுப் போகும். ஆனால் நஷ்டம் அதிகமாக இருக்காது. திருட்டுப்போன பொருட்கள் திரும்ப கிடைத்துவிடும்.

**செவ்வாய் நின்றால்:** ஒரு மெக்கானிக்காகவோ என்ஜினியராகவோ உத்தியோகம் பார்க்கலாம். திருமண வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்ததாக இருக்கும். செவ்வாயுடன் குருவும் இதில் கூடி இருந்தால் இவன் சிறந்த பேச்சாளன். செல்வந்தன், மந்திரி அல்லது அதற்கு சமமான அந்தஸ்தில் இருப்பான். இந்த குரு செவ்வாய் சேர்க்கையில் சிலர் ராணுவத்தின் தலைமைப்பதவியோ அல்லது நீதிபதியாகவோ இருப்பதைக் காணமுடிகிறது.

**புதன் நின்றால்:** இவனத் தவறாகப் புரிந்துகொண்டு மனஸ்தாபம் அடைந்து தங்கள் சமூகத்திலிருந்தே தள்ளி வைப்பார்கள். இவனுக்கு புத்திசாலித்தனம் கிடையாது. தன் உடன்பிறப்புகளுக்கு உதவியாக இருக்கமாட்டான். மனைவியும், மக்களும் இவனுக்கு சந்தோஷத்தைத் தரமாட்டார்கள். பிள்ளை பாக்கியமே இல்லாமல் இருப்பதற்கும் ஏது இருக்கிறது. குறைந்த ஞாபக சக்தியுடைய இவனுக்கு அதனால் அடிக்கடி விரும்பத்தகாத சம்பவங்கள் ஏற்படும்.

**குரு நின்றால்:** வாழ்க்கையில் வெற்றி, புகழ், பெயர், உயர்ந்த ஸ்தானம் எல்லாம் கிடைக்கும். செவ்வாய் சேர்ந்தால் இவன் புகழின் உச்சகட்டத்தை எட்டிப்பிடிப்பான். ஏராளமான செல்வத்திற்கு அதிபதியாவான். ஆண் குழந்தைகள் மட்டுமே இவனுக்குப் பிறக்கும்.

**சுக்கிரன் நின்றால்:** பெண்களால் அதிகபட்ச ஆதாயமும், பணமும் பெறுவான். இவன் மனைவி அழகியாகவும், குழந்தைகள் கடமை உணர்ச்சி மிக்கவர்களாகவும் இருப்பார்கள். அதிகபட்சம் 2 ஆண் குழந்தைகள் இருக்கும். கண்நோய் ஏற்படும். ரகசிய உறுப்பில் எரிச்சல் தோன்றும்.

**சனி நின்றால்:** எல்லோருடைய கஷ்டங்களையும் சுமப்பான், அதாவது ஆதாயம் எதையும் பெறாமல் பல பொறுப்புகளை ஏற்றுக்கொள்ள வேண்டிவரும். இருந்தாலும், முகம் சுளிக்காமல் எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்வான். பொதுஜனங்கள் இவனால் தாங்க முடியாத அளவுக்கு பல பொறுப்புகளை திணிப்பார்கள். இருந்தாலும் இவன் யாருக்கும் முடியாது என்று சொல்ல மாட்டான். இதன் பலன் இவனுக்கு பாராட்டைத் தவிர வேறொன்றும் கிடைக்காது. செய்யும் சேவையால் பணம் கிடைக்காவிட்டாலும் கூட தன் சொந்தப் பணத்தை பொது ஜன சேவைக்காக செலவிடுவான். தன்னுடைய உண்மை, நேர்மை திறமைகளுக்காக இவன் அறியப்பட்டவனாக இருப்பான். இவன் இல்லாமல் எல்லா நடவடிக்கைகளும் நின்றுவிடும். எதுவும் நடக்காது என்ற எண்ணம் எல்லோர் மனதிலும் இருக்கும்.

**ராகு நின்றால்:** கஷ்டமான வேலைகளையும் சுலபமாகச் செய்து முடிக்கும் சாதுர்யம் உண்டு. வெளிநாடுகளில்

விஸ்தாரமான பயணத்தைச் செய்வான். வெளிநாட்டுத் தொடர்பினால் செல்வத்தைச் சேமிப்பான்.

**கேது நின்றால்:** கடவுள் பக்தி அதிகம் உண்டு. பல புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று வருவான். கடவுளின் கிருபை இவனுக்கு பரிபூரணமாகக் கிடைக்கும். மனைவியின் உடல்நிலை இவனுக்கு கவலையைக் கொடுக்கும். பாரபட்ச மில்லாத நேர்மையாளன். கண்ணுக்கும் மூக்கிற்கும் இடையில் 3வது கண் போன்ற அடையாளம் தெரியும்.

## பூர நட்சத்திர நான்காம் பாதத்தில் மற்ற கோள்கள் நின்றபலன்

**சூரியன் நின்றால்:** தண்ணீரில் உற்பத்தியாகும் பொருட்களைக் கொண்டு தொழிற்சாலை நடத்தியோ அல்லது ஆஸ்பத்திரியிலோ பணி செய்து பணம் சம்பாதிப்பான். வீக்கம், சன்ஸ்ட்ரோக், கண் உபத்திரவம் போன்ற வியாதிகள் இவனை தஞ்சம் அடையும். கேதுவும் சூரியனுடன் இருந்தால் இவன் ஆட்டோமொபைல் என்ஜீனியர் அல்லது மெக்கானிக்.

**சந்திரன் நின்றால்:** பலவித கருவிகள், டெக்னிக்குகளை உபயோகித்து வேலையில பரிமளிப்பான். பொதுஜன சேவைக்காகப் பெரும்புகழ் பெறுவான். இவன் காரணமாக பலவித அமைப்புகள் தோன்றி இயங்கும். என்னதான் இருந்தாலும் இவற்றினால் இவனுக்கு பண வரும்படி இருக்காது. மனதிருப்தி ஒன்றுதான் கிடைக்கும்.

**செவ்வாய் நின்றால்:** மற்ற கிரகங்களின் சேர்க்கை அல்லது பார்வை இன்றி செவ்வாய் மட்டும் இதில் தனித்து இருந்ததால், இவன் பிறருடைய செல்வத்தையும் குழந்தை

களையும் அபகரிப்பான். தன் முதல் மனைவியை இழப்பதுடன், பிள்ளைப்பேறும் இருக்காது. ஆனாலும் இவன் தொழிலில் நேர்மையும் உண்மையும் உள்ளவன். நிறைய செல்வம் சம்பாதிப்பான்.

**புதன் நின்றால்**: இவன் பணக்காரன். ஆனால் கஞ்சன், பிறருக்கு உதவுவது என்றாலே இவனுக்கு அலர்ஜி. தன் தீய செயல்களுக்காக சபிக்கப்பட்டவன். இனிமையான இல்லறத்தை இவனால் அனுபவிக்க முடியாது. சட்டவிரோதமான செயல்களிலும் அளவுக்கதிகமான செக்சிலும் ஈடுபடுவான். சர்க்கரை வியாதி, சுவாச கேசத்தில் நீர் உற்பத்தியாதல், இருதய நோய்கள் இவனை வந்தடையும்.

**குரு நின்றால்**: ஆரோக்கியம், செல்வம், புகழ் எல்லாம் பெற்றவன். வயிற்றுக்கருகில் பெரிய கறுப்பு, பிறப்பு அடையாளக்குறி இருக்கும். அப்படி இருந்தால் ஜாதகன் ஆத்ம விசாரம் உடையவன். உலகப்புகழ் பெருவான். தன் சொந்த மதத்தைக் கண்டு கொள்வான். உலகெங்கிலுமிருந்தும் மரியாதையும் கௌரவமும் இவனைத் தேடிவரும்.

**சுக்கிரன் நின்றால்**: கவர்ந்திழுக்கும் உடல் வாகு பெற்றவன். இனிமையான தாம்பத்திய வாழ்க்கையும், தேவையான அளவு செல்வமும் பெற்றவன். ஊதாரித்தனமாக செலவு செய்பவன். தன்னுடைய அனாவசிய அதிக ஊதாரித்தனமான செலவினால் 40வது வயதில் நிதி நெருக்கடி ஏற்படும்.

**சனி நின்றால்**: தன்னைவிட வயது முதிர்ந்தவளை மணப்பான். தன் தொழிலில் உண்மையுள்ளவன். கடின உழைப்பாளி. நீண்ட நாட்கள் காத்திருந்து பிறகு வாழ்க்கையில் வெற்றிபெறுவான்.

**ராகு நின்றால்:** இவன் திறமை மிக்கவன். அறிவாளி, புத்தி கூர்மை உள்ளவன். அரசாங்க கௌரவங்கள் பெறுவான். நீண்ட நாள் கழித்தே பிள்ளைப்பேறு உண்டாகும். பிறர் இவனை பிளாக்மெயில் செய்யும் வாய்ப்பு இருப்பதால் இவன் தன் மனைவியைத் தவிர வேறு பெண்டிருடன் தொடர்பு வைத்துக்கொள்ளக்கூடாது.

**கேது நின்றால்:** 35வது வயதிற்குப் பிறகு இவனது ஸ்தானம் படிப்படியாக உயரும். குருவும், செவ்வாயும் கூட இங்கு இருந்தால் இவன் புத்திசாலி. குட்டையான உருவமும், ஒழுக்கமான நடவடிக்கையையும் உடையவன்.

**குறிப்பு:** பூரம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள், ஆயில்யம், சுவாதி, ஹஸ்தம், மிருகசீர்ஷம் நட்சத்திரத்தில் பிறந்தவர்களுடன் எந்தவிதமான உறவும் தொடர்பும், கொடுக்கல் வாங்கலும் வைத்துக்கொள்ளக் கூடாது.



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.